# சங்க இலக்கியத்தில் தொன்மங்களின் நோக்கும் போக்கும்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்
மு. கோமதிவள்ளியம்மை




நெறியாளர்
முனைவர் சூ. நிர்மலாதேவி எம்.ஏ., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் (ஓய்வு)
சமூகவியல் கலை மற்றும் பண்பாட்டுத் துறை
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113

2011

முனைவர் சூ. நிர்மலாதேவி
இணைப்பேராசிரியர்
சமூகவியல் கலை மற்றும் பண்பாட்டுத் துறை
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 600 113

# நெறியாளர் சான்றிதழ்

'***சங்க இலக்கியத்தில் தொன்மங்களின் நோக்கும் போக்கும்***' *என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்குச் செய்யப்பட்ட இந்த ஆய்வு* ***திருமதி மு. கோமதிவள்ளியம்மை****யால் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 2009-2011ஆம் கல்வியாண்டுகளில் எனது மேற்பார்வையில் எழுதப் பெற்றதாகும். இவ்வாய்வேடு அவரது தனி முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அனுப்பப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.*

இடம் : சென்னை
நாள் : 29/12/2011

சூ. நிர்மலாதேவி
**(சூ. நிர்மலாதேவி)**
மேற்பார்வையாளர்

முனைவர் சூ. நிர்மலா தேவி, எம்.ஏ., பிஎச்.டி.,
கல்வெட்[illegible] தொல்பொருளியல் &
[illegible]
சமூகவியல் [illegible]
உல[illegible]
சி.பி.டி. வளா[illegible]

**மு. கோமதிவள்ளியம்மை**
முனைவர்பட்ட ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – **600 113**

# ஆய்வாளர் உறுதிமொழி

'**சங்க இலக்கியத்தில் தொன்மங்களின் நோக்கும் போக்கும்**' என்னும் தலைப்பில் முனைவர் பட்டம் பெறுவதற்காக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானது. இதற்குமுன் வேறெந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

மு. கோமதிவள்ளியம்மை

இடம் : சென்னை
நாள் : 29/12/2011

**(மு. கோமதிவள்ளியம்மை)**
ஆய்வாளர்

சூ. நிர்மலா தேவி

முனைவர் சூ. நிர்மலா தேவி, எம்.ஏ., பிஎச்.டி.,
கல்வெட்டு ... தொல்பொருளியல் ...
– 113.

# நன்றியுரை

'**சங்க இலக்கியத்தில் தொன்மங்களின் நோக்கும் போக்கும்**' என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பளித்து, ஆய்வு மாணவராக என்னைப் பதிவு செய்துகொண்ட சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய இந்நிறுவனத்தின் மேனாள் இயக்குநர் முனைவர் கரு.அழ. குணசேகரன் அவர்களுக்கும், தற்போதைய இயக்குநர் முனைவர் கா.மு. சேகர் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்வு நெறியாளராக அமைந்து ஆய்வு தலைப்பு முதல் ஆய்வு முழுவதும் என்னை நெறிப்படுத்தி, இந்த ஆய்வு நல்ல முறையில் நிறைவுபெற பெரிதும் காரணமாயிருந்த, நான் குருவாக மதிக்கும் இந்நிறுவன சமூகவியல் மற்றும் பண்பாட்டுத் துணை இணைப்பேராசிரியர், முனைவர் சூ. நிர்மலாதேவி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைக் காணிக்கையாக்குவதோடு ஆய்வின் வெற்றியை அவருக்கு சமர்ப்பணம் செய்கிறேன்.

இந்த ஆய்வேடு உருவாவதற்கு தக்க துணையாக அமைந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், நூலகர், நூலகப் பணியாளர்கள் மற்றும் இந்நிறுவனப் பணியாளர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவ்வாய்வேட்டை தக்க நேரத்தில் நன்முறையில் பிழையின்றி தட்டச்சு செய்துகொடுத்த திருமதி எ.ம. லட்சுமி அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன். அவ்வப்போது ஆய்வு முன்னேற்றத்தை கேட்டு என்னை ஊக்கப்படுத்திய இந்நிறுவன பேராசிரியர்கள், அலுவலக ஊழியர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் ஆய்வு மேற்கொள்ள அனுமதியும், ஆய்வுக்கான ஆலோசனைகளையும் அறிவுரைகளையும் நல்கிய என் வாழ்க்கைத் துணைவர் திரு. இராஜா அவர்களுக்கும், ஆய்வு பணி எந்தவித தேக்கமும் இன்றி செவ்வனே சிறக்க என்னை ஊக்கப்படுத்திய

எனது மகன் முத்துஇராமலிங்கத்திற்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்குக் கல்விச் செல்வத்தை நல்கிய என் பெற்றோர் திரு. ச. முத்தையா பிள்ளை, மு. உண்ணாமலை அம்மாள் அவர்களுக்கும் என் நன்றியை காணிக்கையாக்குகிறேன்.

என் ஆய்வின் மேல் ஆர்வம் கொண்டு என்னை ஊக்கப்படுத்திய என் மாமியார் இரா. காந்திமதி அம்மாள் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வுப் பணியை ஊக்கப்படுத்திய என் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**மு. கோமதிவள்ளியம்மை**

ஆய்வாளர்

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| குறுந். | - | குறுந்தொகை |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறள். | - | திருக்குறள் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| திருமுரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டின. | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |

# முன்னுரை

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாய்மொழியாகப் பாடப்பட்ட பாடல்கள் தொகுக்கப்பட்டு, பின் வந்த காலங்களில் எழுத்துருவில் இலக்கியமாகப் படைக்கப்பட்டன. சங்க காலத்தில் இலக்கியமாக ஆக்கப்பட்டதால், இவை சங்க இலக்கியம் எனப்பட்டன. சங்க இலக்கியம் என்றால் அவை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்ற நூல்களாகும். பதினெண் மேல்கணக்கு நூல்கள் சங்க இலக்கியத்தை அகம் புறமாகப் பாடுகிறது. பதினெண் கீழ்கணக்கு நூல்கள் - அற இலக்கியத்தைப் பாடுகிறது. எட்டுத்தொகை பத்துப்பாட்டின் பாடல்கள் மூலமாக அன்றைய காலக்கட்டத்தின் வாழ்க்கை முறை, சிந்தனைத்திறம், பழக்கம் போன்றவற்றை அறியமுடிகிறது. சங்க காலப் புலவர்களின் தனித்திறனை அறியச் சங்க இலக்கியம் உதவுகிறது.

இதேபோன்று 'தொன்மம்' எனப்படும் புராணம், இதிகாசம், பழமரபுக் கதை போன்றவை வாய்மொழியாகப் பேசப்பட்டு பின்பு எழுத்து வடிவில் இலக்கியத்தில் இடம்பெற்றன. இவற்றைப் புலவர்கள் பெரும்பாலும் உவமைகளாகப் பயன்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியத்தில் கதை வடிவில் தொன்மம் உவமையாக இடம்பெற்றுள்ளதை ஆராய்ந்து, அதன் வழி புலவரின் நோக்கத்தையும் தொன்மம் பாடலின் கருத்தோடு எத்தகைய போக்கைக் கொண்டுள்ளது என்பது, தொன்மம் மனித சமுதாயத்திற்குத் தரும் செய்திகள் எவையெவை என்பதும் ஆராயப் படுகின்றன.

"சங்க இலக்கியத்தில் தொன்மங்களின் நோக்கும் போக்கும்" என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

சங்க இலக்கியம் என்பதால் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றை எல்லைகளாகக் கொண்டு, இவற்றில் கதை வடிவில் வந்த தொன்மங்கள்

ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றன. தொன்மம் இலக்கியத்தில் இடம்பெற்ற விதம் ஆய்வின் ஆரம்பமாகவும், அது மனிதனுக்கு எவ்விதம் பயன்பட்டது என்பது முடிபாகவும் கொண்டு இந்த ஆய்வு அமைந்துள்ளது.

"தொன்மம்" என்பது கதை என்ற கருத்து இருந்தாலும், இத்தொன்மம் அக்காலத்திலிருந்து இக்காலம் வரை மனித சமுதாயத்திற்குத் தரும் செய்தி எத்தகையது? மனித இனத்தை எப்படிக் கொண்டு செல்கிறது? என்பதை ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

இந்த ஆய்வுக்கான முதன்மை ஆதாரமாக பேராசிரியர் வே.அண்ணாமலை அவர்கள் தொகுத்தளித்த 'சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்' என்ற நூலும், எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் எடுத்தாளப்பட்டுள்ளன. சான்றுகளாகச் சங்க இலக்கியம் சார்ந்த நூல்கள், இலக்கியத் திறனாய்வு நூல்கள், இராமாயணம், மகாபாரதம் ஆகியவை எடுத்துக் கொள்ளப்பட்டன.

இவ்வாய்வு, கருத்து விளக்கமுறை, பகுப்பாய்வு முறை, ஒப்பீட்டு ஆய்வு முறை போன்ற அணுகுமுறைகளைக் கொண்டுள்ளது. கருத்துவிளக்க முறையில் தொன்மம் பற்றியும் அவை உவமைகளாகப் பயன்பட்ட விதம் பற்றியும் விளக்கப்படுகின்றது.

பகுப்பாய்வு முறையில் உவமைகளுக்கும் தொன்ம உவமைகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடுகள் விளக்கப்படுகின்றன. இலக்கியத்தில் தொன்மம் உவமையாகப் பயன்பட்டதின் நோக்கம் பகுப்பாய்வு செய்யப்படுகின்றது.

ஒப்பீட்டு ஆய்வு முறையில் மூன்று வகைத் தொன்மங்களை (புராணம், இதிகாசம், பழமரபுக் கதை) ஒப்பீட்டு முறையில் அணுகி அவற்றின் வேறுபாட்டு ஒப்புமை அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன.

சங்ககாலப் புலவர்கள் தொன்மத்தைப் பயன்படுத்திய காரணமும், அதனால் சமுதாயத்திற்கு ஏற்படும் நன்மைகளைக் கண்டறிதலும். அன்றைய தமிழனின் பண்பு

நலனைத் தொன்மம் வழி அறிதலும், மனிதக் கூட்டு முயற்சியால் உருவான தொன்மம் மனிதனுக்கு எத்தகைய பண்பாட்டை வளர்க்க உதவியது என்பதை அறிதலும் இவ்வாய்வின் பயனாகும்.

டாக்டர் மாதையன் அவர்களின் 'வரலாற்று நோக்கில் சங்க இலக்கியப் பழமரபுக் கதைகளும் தொன்மங்களும்' என்ற நூலும், திரு. வே. அண்ணாமலை தொகுத்தளித்த 'சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்' (பகுதி 1, பகுதி 2) என்ற நூலும் இந்த ஆய்வின் முன்னோடி நூற்களாகும்.

நான்கு இயல்கள் இவ்வாய்வேட்டின் அமைப்பு முறையாக அமைந்துள்ளது.

**1. உவமைகள் – தொன்ம உவமைகள் – பயன்பாட்டுச் சிறப்புகள்**

**2. தொன்ம உவமைப் பயன்பாடுகள் – நோக்கம்**

**3. தொன்ம உவமைகளின் போக்குகள்**

**4. தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள்**

என முன்னுரை முடிவுரை நீங்கலாக இந்நான்கு இயல்களுடன் துணைநூற் பட்டியல் அகர வரிசையில் கொடுக்கப்பட்டுள்ளது.

**இயல் ஒன்று:** தொன்மம் பற்றியும் அவை இலக்கியத்தில் இடம்பெற்ற முறைப் பற்றியும் உவமைகளும் தொன்ம உவமைகளுக்குமுள்ள பயன்பாட்டுச் சிறப்புகள் போன்றனவும் விரிவாக ஆராயப் படுகின்றன. உவமைகள் பாடல்களின் கருத்து விளக்க உத்திகளாகப் பயன்படுகின்றன. அவையே தொன்ம உவமைகள் ஆகி பாடலின் கருத்து விளக்க உத்தியுடன் அறத்தைப் போதிக்கின்றன.

**இயல் இரண்டு:** தொன்மம் உவமைகளாக வரும்பொழுது அவற்றைப் புலவர்கள் பயன்படுத்தியதன் நோக்கம் ஆராயப்படுகின்றது. பாடலின்

கருத்தோடும், பாத்திரங்களுடனும் தொன்மம் ஒப்புமைப் படுத்திப் பார்க்கப்பட்டதின் மூலமாக அது பயன்பட்ட நோக்கத்தை அறிய முடிகிறது.

**இயல் மூன்று :** பாடலின் கருத்தோடு தொன்மம் கொண்ட போக்குகள் மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டு, அவை இலக்கியப் போக்கு, உணர்ச்சிப்போக்கு, சமூகப் போக்கு என்ற உட்தலைப்பின் கீழ் ஆராயப்படுகின்றது.

**இயல் நான்கு:** தொன்மம் இலக்கிய வழியாக அறிவிக்கும் பண்புகள், தொன்ம வழி அறிவிக்கும் பண்புகள், தொன்ம வழி அறியும் மனிதர்கள் ஆராயப்படுகின்றன. தொன்ம வழி அறியும் அறங்கள், தற்காலத்தில் மாறுபட்ட விதம் பற்றி அறம்இல் செய்திகள் என்ற தலைப்பில் ஆராயப்படுகின்றன. தொன்மம் கூறும் அறிவியல் செய்திகள் இன்று அறிவியல் கண்டுபிடிப்பாக ஆகியிருத்தல் ஆராயப்படுகின்றன. புராணம், இதிகாசம், பழமரபுக் கதை ஆகியவை பயன்பட்ட விதத்தில உள்ள வேறுபாடுகள் ஆராயப்படுகின்றன. இவை அட்டவணையில் காட்டப்படுகின்றன.

# தொன்மங்கள் – தொன்ம உவமைகள் பயன்பாட்டுச் சிறப்புகள்

சங்க காலம் பொற்காலம் எனச் சொல்லப்படுவதற்கு முக்கிய காரணம் சங்க காலத்தில் ஏற்பட்ட இலக்கிய வளர்ச்சி என்று கூறலாம். சங்க இலக்கியத்தின்வழி தமிழ்ச் சமுதாயத்தின் அன்றைய நிகழ்வுகள், பழக்கவழக்கம், நாட்டுவளம், சமுதாய முறை, இயற்கை வளம், எனப் பல செய்திகளை அறிய முடிகின்றது. சங்க இலக்கியம் கவிதைவழி நாட்டுநடப்பு பற்றி தெரியப்படுத்துகிறது. மக்களின் வாழ்க்கை முறையையும் சங்க இலக்கியம் படம்பிடித்துக் காட்டுகின்றது.

சங்க இலக்கியத்தின் சிறப்பு, அகம், புறம் என்ற இரு பிரிவுகளைக் கொண்ட பாடல்கள் ஆகும். சங்கப் பாடல்களுக்கு உயிர் நாடியாய் விளங்குவது அதிலுள்ள கருத்துச் செறிவும், படிப்பவர் மனதில் பதிவு செய்யப் புலவர்கள் கையாளும் உத்திகளும் ஆகும். இப்படிப்பட்ட சங்கப் பாடல்களுக்கு மேலும் அழகூட்ட தொன்மம் பயன்படுகிறது எனலாம். தொன்மம் ஆங்கிலத்தில் மித் (Myth) என்று அழைக்கப்படுகின்றது. இச்சொல்லுக்கு ஆக்ஸ்போர்ட் ஆங்கில அகராதி ‘இயற்கை அல்லது வரலாற்றுக் கூறு தொடர்பான செய்திகளை உட்கொண்டதும், இயற்கையிகந்த நிகழ்ச்சி, செயல், மனிதர் பற்றியதுமான பொய்யான புனைந்துரை’ எனப் பொருள் தருகின்றது.

தொன்மம் இயற்கைக்குப் புறம்பான ஒன்றாக, நடக்கமுடியாத நிகழ்வாக, மனிதருக்கு அப்பாற்பட்டு இருப்பதாகக் கொண்டு தமிழில் புராணக் கதை அல்லது பழமை கூறும் கதை என்று தொன்மத்தைக் குறிப்பிடலாம்.

**தொன்மம் – ஒரு பார்வை**

*தொன்மை தானே சொல்லுங் காலை*
*உரையொடு புணர்ந்த பழமை மேற்றே*

என்றார் தொல்காப்பியர். இதையே பேராசிரியர், 'தொன்மை என்பது உரை. விராஅய்ப் பழமையவாகிய கதைப்பொருளாகச் செய்யப்படுவது என்றவாறு, அவை பெருந்தேவனாரால் பாடப்பட்ட பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன' என்கிறார். இதை இளம்பூரணர் தன் உரையில் 'தொன்மையாவது உரையோடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய பொருள் மேல் வருவன. அவை இராம சரிதமும், பாண்டவ சரிதமும் முதலாகியவற்றின் மேல் வருஞ்செய்யுள்' என்கிறார்.

வாய்மொழிக் கதைகளாக வழிவழியாய் வந்து பின் எழுத்துருவைப் பெற்றிருக்கலாம். **பழமையானது இம்மொழியும் நாகரிகமும் என்றால், பழமைக்குரிய அடையாளமாகப் பல்வேறு செவிவழிக் கதைகள் இம்மொழி இலக்கியத்தில் இடம்பெறுவது இயற்கைதான். சங்கப் பாடல்களில் பல்வேறு கதைகள் இடம்பெற்றிருக்கின்றன என்பதும் நாம் அறிந்த ஒன்றே. அவற்றுள் பலவற்றை இத்துணைக் காலம் கழித்து வாழும் நாம் இன்னதைத்தான் குறிக்கின்றது என்று புரிந்துகொள்ள முடிகிறது.**[1] இவ்வாறான தொன்மம் என்பது உண்மையாக நடந்தவையா? இல்லை புனையப்பட்டதா என்ற விவாதம் ஒரு புறமிருக்க, தொன்மத்தின் நோக்கம் நல்வழியைப் போதிப்பதாக உள்ளதை அறியமுடிகின்றது.

**ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டிருக்கும் விதிமுறைகளில் பாமர மனிதர்களும் எளிதாக விளங்கிக் கொண்டு அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடிக்கும் நோக்கத்தில் கதைவடிவில் உருவாக்கப்பட்டவைதான் இதிகாசங்களாகும். சமய உணர்வை சாமானிய மக்களுக்கு ஊட்டி அவர்களை ஆன்மிகப் பாதையில் வழிநடத்திச் செல்லும் நோக்கத்தில் எழுந்த கதைகள்தான் புராணங்கள் ஆகும்.**[2] ஆகவே தொன்மம் கீழ்கண்டவாறு பகுத்து ஆராயப்படுகிறது.

**தொன்மம்**



இதிகாசம் எனும்பொழுது அது மகாபாரதத்தையும், இராமாயணத்தையும் குறிக்கின்றது. இதில் இடம்பெறும் காட்சிகளடங்கியக் கதைகள் சங்க இலக்கியத்தில் உவமைகளாக வந்துள்ளன. இதிகாசம் என்பதற்கான விளக்கம் கீழ்க்காணுமாறு அமையக் காணலாம்.

'உள்ளது உள்ளபடியே' என்று பொருள். அதன் உட்பொருள் சாத்திரம் - வரலாறு என்பதாகும். வேதகாலத்துச் சமயம் பற்றிய உண்மைகளும், புனித நூல்களான "ஸ்மிருதி" தந்துள்ள சட்டதிட்டங்களும் அந்தந்தக் காலகட்டங்களில் வாழ்ந்த மாமுனிவர்கள், தவயோகிகள், சிரேஷ்டர்கள், ஆச்சார்யர்கள் மூலமும், அவர்களது வாழ்வு மூலமும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அவர்கள் தங்கள் சமயக்கொள்கைகளை, கருத்துகளை, கோட்பாடுகளை எடுத்துரைக்க, உவமானங்களையும் உவமைகளையும் கதை கூறும் முறைகளையும் பயன்படுத்தி அவற்றின்மூலம் அனைத்துத் தரப்பு மக்களுக்கும் தங்களது கருத்துகளும், எண்ணங்களும் போய்ச் சேர வழி வகுத்தனர். இவற்றைப் படிக்கும் மக்களுக்கு அல்லது வாசிக்கச் சொல்லி கேட்கும் மக்களுக்கு ஏற்படும் நன்மை யாது? தீமை யாது? என்பதை அவர்களால் எளிதில் அறியமுடிந்தது. தாங்கள் நல்வாழ்வு வாழ என்னென்ன செய்ய வேண்டும்? எவை எவையெல்லாம் தவிர்க்க வேண்டும் என்று முடிவெடுக்கவும் அவர்களுக்கு வசதி பிறந்தது. இதிகாசங்கள் இவ்வாறு அனைத்து மக்களுக்கும் அறநெறிச்சார வாழ்வு வாழத் துணை நின்றன.[3]

புராணம் எனும்பொழுது அது கடவுளரின் கதைகளையும், திருவிளையாடல் களையும் கூறுகிறது. **மனதின் மேலான எண்ணங்களைக் கற்பனை பண்ணு வதற்கே புராணக்கதைகள் அமைக்கப்பட்டுள்ளன. புராணங்களின் சாரம் பிறருக்கு உதவி செய். எவருக்கும் துன்பம் செய்யாதே என்பதாகும்.**[4]

பழமரபுக் கதைகள் பழங்கால மன்னர்கள், வள்ளல்கள் பற்றி வழிவழியாய் வந்த கதைகளாகும். பெரும்பாலும் மன்னர்களின் வீரமும், கொடைச் சிறப்பும் சிறப்பித்துப் பாடப்படுவது இத்தொன்மத்தின் (பழமரபுக் கதைகள்) இயல்பாகும். இத்தொன்மத்தின் மூலம் சங்ககால அரசியல் செய்திகளை அறிய முடிகின்றது.

***தொல்பழங்காலத்தில் மனிதர்கள் தம்மைச் சுற்றி நிகழும் இயற்கை நிகழ்வுகளைக் கண்டு வியந்தனர். அவற்றின் வரையறையான ஒழுங்குமுறை பற்றிய பல வினாக்களை எழுப்பினர். இத்தகு வினாக்களுக்கான விடைகளாகத் தொன்மங்கள் உருவாக்கப்பட்டன எனத் தொன்மங்களின் தோற்றம் பற்றிக் கருத்துரைப்பர்.***[5]

தொன்மம் சங்க இலக்கியத்தில் கையாளப்பட்ட விதம் பெரும்பாலும் உவமைகளாக அமைந்துள்ளன எனக் கூறுலாம். தொன்மம் செய்திகளாக வந்த இடங்களும் உண்டு. அவை பெரும்பான்மையாக பரிபாடலில் பதிவு செய்யப் பட்டுள்ளன. இத்தொன்மம் பற்றி வரலாற்று அறிஞர்கள் கூறும் கருத்துகளாவன:

***தொன்மம் கடவுளர்களையோ கடவுளையொத்த மனிதர்களையோ பாத்திரங்களாகக் கொண்ட கதை யென்றும் அது வரலாற்று காலத்திற்கு அப்பாற்பட்டது என்றும் இயற்கையிகந்த நிகழ்ச்சிகளைக் கொண்ட தாகவும் அமைந்திருக்கும்*** என்கிறார் நார்த்ராய் ஃபிரை.

***மனிதனுடைய ஆளுமைத் தன்மையினையும் அது அமையும் பாங்கினையும் ஆராயுங்காலைத் தொன்மத்திற்கு இன்றியமையா இடம்தந்துள்ளார்*** என்கிறார் அறிஞர் சி.ஜி. யுங்.

***தொன்மங்களைப் புனை கதைகளின் சுருட்டு என்றோ கட்டுக் கதைகளின் உரை என்றோ தள்ள முடியுமேயானால் அவை தொன்மங்களே அல்ல*** என்கிறார் கதிர்மகாதேவன்.

***தொன்மம் என்பது இலக்கியங்களின் ஆன்மாவாகும்*** என்கிறார் அரிஸ்டாட்டில்.

வாய்மொழியாகப் பேசப்படும்பொழுது எடுத்துக்காட்டிற்குப் பயன்பட்ட தொன்மம், இலக்கியத்தில் இடம்பெற்றபோது உவமையாகப் பயன்படுகின்றது. அதனால் இலக்கியத்தில் உவமையின் பங்கு பற்றிய சில கருத்துளைக் கூறிவிட்டு

அதன்பின் தொன்மம் உவமையாகச் செயல்பட்ட வகையும், அதன் சிறப்பும் இவ்வியலில் சொல்லப்படுகின்றது.

**உவமையின் இயல்பு**

'புலன் அல்லாதன புலனாதலும் கேட்டவர்க்கு இன்பம் பயத்தலும்' என்று உவமையின் பயனை இளம்பூரணர் மதிப்பிடுவார். உவமை சுட்டும்பொழுது உவமிக்கப்படும் பொருள் சிறப்படைகிறது. சான்று:

> ***அறுகுளத்து உகுத்தும் அகல்வயல் பொழிந்தும்***
> ***உறுமிடத்து உதவாது உவர்நிலம் ஊட்டியும்***
> ***வரையா மரபின் மாரிபோலக்***
> ***கடாஅ யானைக் கழற்கால் பேகன்***

என்று வள்ளல் பேகனைப் பரணர் பாடுகிறார். மழையானது எப்படி குளத்திற்கும், வயலுக்கும் எதற்கும் பயன்படாத உவர் நிலத்துக்கும் பொழிகிறதோ அதுபோல, பேகன் இன்னார்க்கு இது ஏற்றது, இவருக்கு இது உற்றது என்று பாராது கொடை நல்குவான் என்று புலவர் பாடுகிறார். இப்பாடலில் பேகனுக்கு மழையை உவமை கூறுகிறார் புலவர். இதையே,

> ***உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை*** (உவமயியல்: நூற்பா. 3)

என்று தொல்காப்பியம் கூறுகின்றது. கவிஞனுக்குத் தோன்றியதெல்லாம் உவமை யாகாது.

> ***உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும்***
>
> (பொருளதிகாரம் - உவமையியல் - நூற்பா. 8)

எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்றது என உலகம் ஒத்துக் கொள்ள வேண்டும். அதுவே சரியான உவமையாகும் என வெள்ளைவாரணார் இந்நூற்பா பற்றி கூறுகிறார். சங்க இலக்கியங்கள் சிறந்த குறிக்கோளுடன் தோன்றியவை எனலாம்.

மனிதன் தன்னைத்தானே அவ்வழியே செப்பனிட்டுக் கொள்ள உதவுகிறது. மனிதனுக்குச் சொல்ல வேண்டிய பண்புகள் உவமை வழியாகச் சொல்லப் புரிதல் எளிதாகிறது. சான்று: **கலித்தொகையில் ஒரு பாடல்: ஒரு பெண் பிறந்த இடத்திற்குப் பயன் தருவதைவிட, தன் புகுந்த வீட்டிற்கே பெருமை சேர்ப்பாள் என்பதை விளக்க பல உவமைகள் சொல்லப்படுகின்றன. பெண்ணை சந்தன மாகவும், முத்தாகவும், யாழின் இசையாகவும், குறிப்பிட்டு உவமையாகவும் கூறுகிறார் புலவர்.**

*பலவுறு நறுஞ்சாந்தம் பருப்பவர்க்கு அல்லதை*
*மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என் செய்யும்*
*நினையுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கு அணையனே*

*(கலி. 9: 1-3)*

சந்தனம் மலையில் தோன்றினாலும் அம்மலைக்கு அச்சந்தனம் மணம் தருவதில்லை. அதைப் பூசிக் கொள்பவர்களுக்கே அது மணத்தைத் தருகின்றது. அதுபோல முத்துக்கடலில் உருவானாலும், கடலுக்கு அது அழகு சேர்ப்பதில்லை அதை அணிபவர்க்கே அழகு தரும்.

யாழில் வெளிப்படும் இசை அதற்கு எந்த இன்பத்தையும் தராது. அதைக் கேட்பவர்க்கே இன்பம் தரும். அதுபோல பெண்ணும் தன் புகுந்த வீட்டிற்கே பயன்படுவாள் என்று பெண்ணின் தன்மைக்கு உவமை கூறுகிறார். இதன்மூலம் உவமை என்பது பண்பு நலனை விளக்க உதவுகின்றது என அறிய முடிகின்றது. தொல்காப்பியர் கூற்றின்படி வினை, பயன், மெய், உரு ஆகிய தன்மைகளை உவமைகள் சிறப்பிக்கின்றன.

*வினை பயன் மெய் உரு என்ற நான்கே*
*வகைபெற வந்த உவமைத் தோற்றம்* (தொல். சூ. 272)

என்கிறார். அதாவது ஒரு செயலை விவரிக்க உவமை பயன்படுகின்றது. இது வினை உவமை எனப்படும்.

பயன் என்றால் விளைவு ஆகும். ஒரு நிகழ்வின் விளைவிற்கு உவமை சொல்லப்பட்டால் அது பயன் உவமை எனப்படும்.

மெய் எனின் வடிவம் ஆகும். வடிவத்தை விளக்க உவமை சொல்லப்படுவது மெய் உவமை ஆகும்.

உரு என்பது நிறமாகும். நிறத்திற்கு உவமை கூறும்போது அது உரு உவமை எனப்படும்.

இது போக ஐம்புலன்கள் கொண்டு அறியப்படும் உவமையும் உண்டு. எடுத்துக்காட்டாக:

**தேன்போல் இனிக்கும்** – இது நாவால் உணர முடியும்.

**தீயினாற் சுட்ட வடு** – இது மெய்யால் அறிவது.

**ஆம்பல் நறுந்துவர் வாய்** – இது மூக்கால் உணரப்படும் உவமை.

ஆக உவமைக்குக் களனாக அமைவது செயல், அதன் விளைவு, தோற்றம் போன்றவற்றோடு ஐம்புலன்களும் களனாக அமைகின்றன. உவமையில் மறைமுகமாய் பொருளைக் கூறுகின்ற வகை ஒன்று உ.ண்டு. அதாவது உள்ளுறை உவமமாகும். தான் கூறவந்த பொருளை நேரிடையாகக் கூறாமல் மறைமுகமாய் உவமை வழிக் கூறுவது உள்ளுறை ஆகும்.

உவமையின் நிலைக்களனாக தொல்காப்பியர்,

**சிறப்பே நலனே காதல் வலியோடு**
**அந்நாற் பண்பும் நிலைக்கள மென்ப**

என்கிறார். ஒரு பொருளையோ ஒரு நபரையோ அல்லது நிகழ்வையோ சிறப்பாய்ச் சொல்ல உவமை பயன்படுகின்றது. ஒரு பொருளை ஆழமாகவும், நுட்பமாகவும், தெளிவாகவும் உணர்த்துவதற்கு உவமை பயன்படுகிறது. இவற்றின் அடிப்படையிலேயே தொன்மம் உவமையாக வருகின்றது.

தொன்மம் என்பது உவமையாக இலக்கியத்தில் இடம்பெறுவதால் உவமை பற்றி மேலோட்டமான கருத்துகள் மட்டும் கொடுக்கப்பட்டுள்ளன. ஆய்வின் களன் தொன்மம் என்றாலும் தொன்ம பயன்பட்ட விதத்தை மனதில்கொண்டு உவமை பற்றி ஆழமாக போகாமல் உவமைக்கு விளக்கம் மட்டும் கூறப்பட்டுள்ளறது. உவமை பற்றி கூறும்பொழுது ஒரு வரைபடம் மூலம் விளக்க முடியும்.




இறுதியாக உவமையை பின்வருமாறு நான்கு வகைகளாக பிரித்துக் கொள்ள இயலும்.

1. காட்சி உவமை
2. அடுக்கு உவமை
3. வினை உவமை
4. கருத்து உவமை

**காட்சி உவமை :** நாடகக் காட்சி போல ஒரு நிகழ்ச்சியைச் சொல்ல வரும்போது அதனை உவமையோடு கூறுவது.

**அடுக்கு உவமை :** ஒரு பொருளுக்கு ஒரு உவமையை மட்டுமல்லாது பல உவமைகளை அடுக்கிக்கூறுவது.

**வினை உவமை :** விரைவு, ஆற்றல், செயல்திறம் ஆகியவற்றைக் குறிப்பது.

**கருத்து உவமை :** ஒரு பொருளை அல்லது நிகழ்ச்சியை கருத்து வடிவில் விளக்க உதவுவது.

மேற்குறிப்பிட்ட உவமையின் இவ்வகைகள் தொன்மம் உவமைகளாகப் பயன்படுவதற்கு அடித்தளமாகின்றது. அதேபோன்று உள்ளுறை உவமத்தின் பயன்பாடு தொன்ம உவமையின் வழி கிடைக்கின்றது.

தொன்மம் இலக்கியத்தில் பயின்று வந்துள்ளதின் அடித்தளம் உவமையாகும். உவமை என்பது பற்றி சிறிதான அறிமுகம் இருந்தால்தான் தொன்மம் உவமையாகப் பயன்பட்ட விதம் முழுமையாகப் பதிவு செய்ய இயலும் என்ற அடிப்படையில் மேற்கண்ட கருத்துகள் எடுத்துரைக்கப்பட்டன.

### தொன்ம உவமைப் பயன்பாடுகள்:

சங்க இலக்கியத்தில் தொன்மம் என்ற இந்த ஆய்வின் களமாக பத்துப்பாட்டு, எட்டுத்தொகை எடுத்துக்கொள்ளப்பட்டன. தொன்மம் மூன்று பிரிவுகளாக இதிகாசம், புராணம், பழமரபுக்கதை என்று பகுக்கப்பட்டு அதன் கீழ்வருவனவற்றை ஆராயும்போது கீழ்க்கண்டவாறு பகுக்கப்படுகின்றது.




மேற்கண்ட தொன்மங்கள் புறநானூறு, கலித்தொகை, அகநானூறு, சிறுபாணாற்றுப்படை, நற்றிணை, மதுரைக்காஞ்சி, பெரும்பாணாற்றுப்படை,

பதிற்றுப்பத்து, இவற்றில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. மற்ற நூல்களில் குறைவாகவே தொன்மம் உவமைகளாக வந்துள்ளது. இக்கணிப்பு பேராசிரியர் வே. அண்ணாமலை அவர்களின் "சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்" என்ற நூலை அடிப்படையாகக் கொண்டு கணித்த கணிப்பாகும். தொன்மம் அதிகமாக உவமைகளாகப் பயின்று வந்ததை மட்டும் கணக்கில் எடுத்துக் கொண்டு சங்க நூல்களில் தொன்ம உவமை இடம்பெற்ற எண்ணிக்கை கீழே கொடுக்கப்படுகின்றது.

| | |
|---|---|
| கலித்தொகை | 77 |
| புறநானூறு | 53 |
| அகநானூறு | 31 |
| சிறுபாணாற்றுப்பபடை | 13 |
| நற்றிணை | 11 |
| பெரும்பாணாற்றுப்படை | 11 |
| பதிற்றுப்பத்து | 5 |
| **மொத்தம்** | **201** |



எல்லாப் பாடல்களும் கடவுள் வாழ்த்தாக கடவுளர் தொன்மங்களைக் கூறினாலும், பரிபாடல், திருமுருகாற்றுப்படை முதலியவற்றில் கடவுள் பற்றிய செய்திகள் வருகின்றன. தொன்மங்கள் உவமையாக அதுவும் கதைவடிவில் வந்தவற்றை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றது. பரிபாடலில் சிவன், திருமால், முருகன் பற்றிய செய்திகள் ஏராளம் வந்துள்ளன. திருமுருகாற்றுப்படை முருகன் பற்றிய செய்திகளைத் தருகிறது. குறுந்தொகை, ஐங்குறுநூறு, பொருநராற்றுப்படை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் போன்ற நூல்களில் ஒரு சில பாடல்களில் மட்டும் தொன்மம் உவமையாக வந்துள்ளன. செய்தி என்பது ஒன்றை தெரியப்படுத்துவது எனலாம். ஆனால் உவமை என்பது ஆராய ஆராய பல தகவல்களைத் தருவது ஆகும்.

சங்கப் பாடல்களில் புராணத் தொன்மம் உவமைகளாக நூற்றியென்பத் தோரு இடங்களில் பாடப்பட்டுள்ளன. இதிகாசம் எனும் பிரிவில் பாரதம், 12 இடங்களில் சங்கப் பாடல்களில் உவமையாக வருகின்றது. இராமாயணம் நான்கு இடங்களில் உவமையாக கையாளப்படுகின்றன. கலித்தொகை, புறநானூறு, சிறுபாணாற்றுப்படை இவற்றில் மிகுதியாக இதிகாசத் தொன்மம் கதை வடிவில் உவமையாக இடம்பெறுகின்றது.

பழமரபுக்கதைகள் அரசனின் சிறப்பைக் கூறுகின்றது. சங்கப் பாடல்களில் பதினாறு இடங்களில் உவமையாகப் பயன்படுத்தப்படுகின்றன. அந்தக் காலத்தில் புலவர்கள் இதிகாசத் தொன்மத்தை அறிந்ததுபோல, அரசர் பற்றிய தொன்மத்தையும் அதே அளவு அறிந்திருந்தனர். இதிலிருந்து அரசர்கள் அக்காலத்தில் மிகச் சிறப்புற்று ஆட்சி புரிந்திருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

சங்கப் பாடல்களில் தனித்தனியாக இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் இடம்பெற்ற அளவு கீழ்க்கண்டவாறு வரைபடம் மூலம் விளக்கப்படுகின்றன.




சங்கப் பாடல்களில் இடம்பெற்ற புராணத் தொன்மம் பற்றியும், அதன் எண்ணிக்கை பற்றியும் வரைபடத்துடன் விளக்கப்படுகின்றது. புராணத் தொன்மத்தைப் பொறுத்தவரை முருகன், சிவன், திருமால் போன்ற கடவுளர்களின் தொன்மம் உவமையாக வந்துள்ளன. அதில் முருகன் தொன்மம் உவமையாக அறுபத்தி நான்கு இடங்களில் கையாளப்படுகின்றன. அடுத்ததாக சிவன் தொன்மம் அறுபத்து மூன்று இடங்களிலும், திருமால் தொன்மம் ஐம்பத்தி நான்கு இடங்களிலும் உவமையாக வருகின்றது. இதிலிருந்து வழிபடும் கடவுளர் வரிசைமுறைத் தெரிகிறது.

புராணத் தொன்மம் (சிவன், திருமால், முருகன் போன்ற கடவுளரின் தகவல்கள்) சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற அளவை கீழ்க்கண்ட வரைபடத்தில் காணலாம்.




புராணத் தொன்மத்தைப் பொறுத்தவரை தமிழ்க் கடவுள் என்று புகழப்படும் முருகன் பற்றிய தொன்மங்களாக உவமைகளாக அதிக அளவு வந்துள்ளன. அதற்கு அடுத்த அளவில் சிவன் தொன்மங்கள் உவமைகளாக இடம்பெறுகிறது. திருமால் தொன்மங்கள் உவமைகளாக மூன்றாவது இடத்திலுள்ளது. இதேபோன்று இதிகாசத் தொன்ம எண்ணிக்கையை நோக்கும்போதுப் பாரதத்தொன்மம் பன்னிரெண்டு இடங்களிலும் இராமாயணத் தொன்மம் நான்கு இடங்களிலும் உவமையாகின்றன. கீழே பாரதம், இராமாயணம் சங்க இலக்கியத்தில் இடம்பெற்ற அளவு வரைபடமாகக் காட்டப்படுகின்றது.



சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை பாரதத் தொன்மம் அதிக அளவில் உவமையாக இடம்பெற்றுள்ளது. தமிழ் பண்பாட்டிற்கு நேர் எதிரான (ஒரு பெண் ஐந்து ஆண்களுக்கு மனைவியான) நிகழ்வைக் கொண்டிருந்தும், இலக்கியத்தில் உவமையாக அதிகம் கையாளப்பட்டிருக்கிறது. ஒருவனுக்கு ஒருத்தி என்ற கருத்தைக் கொண்டிருந்த இராமாயணம் மக்களால் நன்கு அறியப்பட்டிருந்தாலும் இலக்கியத்தில் பாரதம் அளவிற்கு உவமையாகப் புலவர்கள் கையாளவில்லை எனலாம். இரு இதிகாசங்களும் வடமொழியிலிருந்து தமிழில் எழுதப்பட்டவை. இருந்தும் பாரதம் தமிழிலக்கியத்தில் இடம்பெற்ற விகிதம் அதிகமாகும். இதற்கான காரணத்தை ஆராய்ந்தால் மக்களிடையே பேச்சுவழக்கில் பாரதம் அதிகம் பேசப்பட்டிருக்க வேண்டும். அதனாலேயே இலக்கியத்திலும் பாரதம் அதிக எண்ணிக்கையில் கையாளப்பட்டிருக்கலாம்.

இவ்வாறு உவமைகளாக வந்த தொன்மம் மனிதகுலத்திற்குப் பயன்பட்ட விதம் எடுத்துக்காட்டுடன் ஆராயப்படுகின்றது. உவமைக்கும், தொன்ம உவமைக்கும் உள்ள வேறுபாடுகள் பட்டியலிடப்பட்டு அலசப்படுகின்றன. இறுதியாகத் தொன்மம் உவமையாகப் பயன்பட்டதின் சிறப்புகள் சொல்லப்படுகின்றன.

### தொன்ம உவமைப் பயன்பாடுகள்

**1. தொன்மங்கள் கடந்த காலச் செய்திச் சுரங்கங்கள்:** பொதுவாய், தொன்மம் உவமைகளாகப் பயன்படும்பொழுது சமுதாயத்தையும், மானிடத்தின் தன்மையையும், சமூகத்தோடும், உளவியலோடும் தொடர்புடையதாகின்றது. தொன்மம் பலவகைப் பொருள் பொதிந்து இயங்கும் சொல்லாக வருகிறது. காலங் கடந்து வருவதுதான் தொன்மம் என்றாலும், உவமையாகப் பயன்தரும்போது செய்திகளைத் தருகிறது.

*. . . . . . . . . . நீயிரும்*

***இருநிலம் கடந்த திருமறு மார்பின்***

*முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்*

*திரைதரு மரபின். . . . . .* (பெரும்பாண். 28-31)

என்ற பாடல் வரிகள் சோழ மன்னன் தொண்டைமான் இளந்திரையன் சிறப்பைக் கூறும் பொழுது, பெரிய நிலத்தை அளந்தவனும் திருமகளாகிய மறுவினை அணிந்த மார்பை உடையவனும் கடல் வண்ணனுமாகிய திருமால் மரபினன் இச்சோழ மன்னன் என்று கூறுகிறது. இவ்விடத்தில் திருமாலின் தொன்மங்களாக திருமால் வாமன அவதாரத்தில் நிலத்தை அளந்த கதையும், திருமகளை மார்பிலே பெற்ற செய்தியும் தெரியவருகின்றது.

*வளைமீக் கூறும்*

*வலம்புரி அன்ன, வசை நீங்கு சிறப்பின்* (பெரும்பாண். 34-35)

அதோடு தொண்டைமான் இளந்திரையன் கடலில் மிதந்து வந்தவன் என்ற செய்தி வருகிறது. கூடவே கடலில் பிறந்த வலம்புரிச் சங்கைப் போல் உலகம் புகழுமாறு புகழப்பட்டவன். மறம் போக்கி அறந்தை நிலைநிறுத்திய செங்கோலையும், பலவாகிய வேற்படையும் உடையவன் தொண்டைமான் இளந்திரையன் என்பதில் ஒரு அரசன் எப்படி வாழ்ந்தான்? என்பதை உவமை கூறி விளக்குகிறது. இதில் தொன்மம் உவமையாகச் செயல்பட்டு அரசனின் பெருமையைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது என்றோ சொல்லப்பட்ட தொன்மம் காலம் கடந்தாலும் இன்றும் கண்முன் காட்சிபடுத்தப்படுகின்றது. கூடவே பல தகவல்களையும் தருகின்றன எனலாம்.

**2. தொன்மங்கள் கவிஞரின் அழகுணர்வின் வெளிப்பாடுகள் :** தொன்ம உவமைகள் அதைக் கூறும் கவிஞரின் அழகுணர்வை வெளிப்படுத்தும் களமாகின்றது. இவை பழமையின் புனைவுகள் என்று கூறுவதைவிட, அன்றைய வாழ்க்கை அனுபவத் திரட்டுகள் எனலாம். இதற்குச் சான்றாக கலித்தொகையில் (101: 29-32) உள்ள பாடலைக் கூறலாம். முல்லை நில மரபான ஏறுதழுவுதல் நிகழ்வில் தன்னை எதிர்த்து அடக்க விளையும் இளைஞர்களை தனது கொம்பால் குத்திக் குலைக்கின்றது காளை. அக்காளையின் சீற்றத்திற்குப் புலவர் பாரத தொன்மத்தை உவமை கூறுகிறார்.

நுதி நுனைக் கோட்டால் குலைப்பதன் தோற்றம்காண்
ஆர் இருள் என்னான் அருங்கங்குல் வந்து தன்
தாளின் கடந்து அட்டு, தந்தையைக் கொன்றானைத்
தோளின் திருகுவான் போன்ம்

என்று காளையின் கோபத்திற்கு பாரதத்தில் வரும் அசுவத்தாமனை உவமை காட்டுகிறார். இதிகாசத்தில் அசுவத்தாமன் சினத்தின் குறியீடாகச் சித்தரிக்கப் பட்டிருக்கிறானா என்றால் இல்லை என்றே சொல்லவேண்டும். ஆனாலும் கவிஞர் காளையின் சினத்திற்கு அசுவத்தாமனைக் கூறுகிறார். கூடவே ஒரு குறிப்பும் அளிக்கிறார். அதாவது தன் தந்தையைக் கொன்றவனைப் பழிதீர்க்கும் பொருட்டு நடு இரவு என்றும் பாராது சென்று தன் வலிமையினால் அவன் தலையைத் திருகும் அசுவத்தாமன் போல காளையின் தோற்றம் இருந்தது என்கிறார்.

இயல்பான சினத்திற்கும், பாதிக்கப்பட்டு பழிவாங்க வேண்டும் என்ற சினத்திற்கும் வேறுபாடு உண்டு. பழிவாங்கும் சினம் கனன்று எதிர்ப்பவர் யாராயிருப்பினும் அடித்து வீழ்த்தும் திறனுடையதாக இருக்கும். அதுபோல காளை ஏறுதழுவுதலில் நிற்கிறது என்கிறார். காளையின் சினத்தின் தன்மையை படிப்பவர் புரிந்துகொள்ள அதற்குச் சரியான உவமையை கவிஞர் கையாண்டது கவிஞரின் மனதின் அழகுணர்வைக் காட்டுகின்றது. மனம் அழகுணர்வைப் பெற்றபோதுதான் ஒரு கவிஞனால் பொருத்தமானவற்றை உவமையாக அளிக்க இயலும். ஆகவே தொன்மம் கவிஞரின் அழகுணர்வை வெளிப்படுத்தும் கருவியாக இருந்தும் இருபதாம் நூற்றாண்டுகளில் தமிழில் நிலவிய பகுத்தறிவு இயக்கம் தொன்மங்களை மூடநம்பிக்கை என்று புறக்கணித்தது. இருந்தும் இன்றைய புதுக்கவிதைகள் வரை தொன்மம் உவமையாக வந்து கவிஞனின் மன அழகை வெளிப்படுத்துகின்றது.

**3. தொன்மப் பயன்பாட்டில் உளவியல்:** உவமைகளைப் பாட்டில் பயன்படுத்துவது கவிஞரின் உளவியல் வெளிப்பாடாகும். அதிலும் தொன்மத்தைப் பயன்படுத்தும் விதத்தைக் கூர்ந்து நோக்கினால் உளவியல் வெளிப்பாடு புரியும். தொன்ம

உவமைகளின் பயன்பாடு பெரும்பாலும் அகப்பாடல்களில் உளவியல் கோட்பாட்டை உறுதி செய்வதாக உள்ளன. சங்கப் பாடல்களைப் பொறுத்தவரை புலவர் கூற்றாகச் சொல்லப்படாமல் பாட்டில் இடம்பெறும் பாத்திரங்களின் கூற்றாக இவை வெளிப்படுகின்றன. அன்றைய காலகட்டத்தினரின் உளப்பாங்கு எவ்வாறு இருந்தது என்பதை இதன்மூலம் அறிய முடிகிறது.

எ.கா. ***இந்திரன் பூசை இவளக லிகையிவன்***
***சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு***
***ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்*** (பரிபா. 19: 50-52)

என்ற வரிகளில் அகலிகைக் கதை தொன்மமாய் வருகிறது. அதுவும் உவமையாக வராமல் செய்தியாக வந்து உளவியலை வெளிப்படுத்துகிறது. திருப்பரங்குன்றத்து மலையில் அகலிகைத் தொன்மம் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன என்ற செய்தியைப் பரிபாடல் தருகிறது. இராமாயணத்தில் வரும் அகலிகைக் கதை இரு விதமாகச் சொல்லப்படுகிறது. ஒன்று இந்திரன்தான் எனத் தெரிந்தும் அகலிகை அவனுடன் இன்பம் துய்த்தாள் என்பது. இரண்டாவது, தன் கணவன் என நினைந்து அகலிகை தவறு செய்தாள். அச்செயல் அவளே அறியாதது எனவும் பல்வேறு உரையாசிரியர்கள் கருத்துச் சொல்கின்றனர். எது எப்படியிருந்தாலும் அகலிகை சாபம் பெற்று, பின் இராமன் திருவடிபட்டு சாபவிமோசனமும் பெற்றாள் என்பது இதிகாசச் செய்தி.

இதை திருப்பரங்குன்றம் கோவிலில் ஓவியமாய் தீட்டியுள்ளார்கள் என பரிபாடல்வழி அறியலாம். கோவிலுக்கு புதிதாய்த் திருமணமானவர்களும், குடும்ப பெண்களும் அடிக்கடி போகும் பழக்கத்தை கொண்டிருப்பார்கள். அவர்கள் இவ் ஓவியங்களைக் காண்கின்ற போதெல்லாம் அகலிகைக்கு நடந்த கதை மனதில் எழும். தெரிந்தோ தெரியாமலோ தவறு செய்தால், தண்டனை உண்டு. குடும்பப் பெண்கள் மனதைக் கட்டுப்படுத்தி வாழ்ந்தாலே சிறப்பு என்பதை உணருவர். மனதில் எழும் சபலங்களை அடக்குவதற்கு உளவியலின் வழியாக இந்த அகலிகைத் தொன்மம் பயன்படுகிறது. இறைவனை வணங்கவரும் பக்தர்கள்,

மனத்தூய்மை பெறவேண்டியே கோவில்களில் அகலிகை கதையை ஓவியமாய் தீட்டியுள்ளனர் என்று கூறலாம். இதை இலக்கியத்தின் வாயிலாய் வெளிப்படுத்தியது கவிஞரின் சிறப்பு எனலாம்.

**4. தொன்மம் காலம் கடந்த பண்பாட்டுச் சின்னம்:** தொன்ம உவமைகள் அகப்பாடல்களில் உள்ளுறையின் களனாகப் பயன்படுகிறது. அப்படிப் பயன்படும் பொழுது உலகம் எப்போதும் ஏற்றுக் கொள்ளும் கருத்துக்களையுடையதாக இருக்கின்றன. எ.டு.

*துறக்கம் எய்திய தொய்யா நல்லிசை*
*முதியர்ப் பேணிய உதியஞ் சேரல்*
*பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை* (அகம். 233: 7-9)

என்ற பாடல் வரிகளில் வீரஞ்செறிந்த வலிமையுடைய உதியஞ்சேரலாதன் தன் முன்னோர்களுக்கு தென்புலக்கடன் ஆற்றினான். அவர்கட்குப் பெருஞ்சோறு அளித்தான் எனக் கூறப்படுகிறது. இது அரசனின் செய்தியைச் சொல்வதால் வரலாற்றுத் தொன்மம் என்று கொள்ளலாம். இறந்துபட்ட முன்னோர்க்கு உணவளித்தான் என்பது இக்காலத்தும் இறந்த முன்னோர்களுக்கு படையல் என்ற பெயரில் உணவு படைக்கப்படுகிறது. உதியன் இட்ட உணவை உண்பதற்கு கூலிச் சுற்றங்கள் கூடியிருந்ததைப் போன்று குட்டையும், நெடியவுமான குன்றுகள் காணப்படும் சுரத்தினைக் கடந்து சென்றான் தலைவன். தலைவன் பொருள் தேடிப் போகும் போது இப்படிப்பட்ட சுரத்தைக் கடக்கிறான் எனப் பாடல் கூறுகிறது.

அகப்பாடலில் காடு எப்படிப்பட்டது? என்று கூறும்போது வரலாற்றுத் தொன்மம் உவமையாக வந்து முக்காலத்து மட்டுமல்லாது இக்காலத்தும் ஏற்றுக் கொள்ளும் உயர் கருத்தைக் கூறுகின்றது. புறப்பாடல் ஒன்றும் இதற்கு கிட்டதட்ட ஒட்டிய கருத்தை சிறிது வேறுபாடுடன் சொல்கிறது. மேற்கண்ட இத்தொன்மத்திலிருந்து, தொன்மம் என்பது காலம்கடந்து நிற்கும் ஆற்றல் படைத்தது எனலாம்.

எ.டு. **அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ**
**நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை**
**ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்**
**பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்**

(புறம். 2: 13-16)

என்ற பாடலில் பாண்டவர்க்கும், கௌரவர்களுக்கும் நடந்த போரில் இரு படைகட்கும் போர் முடியும்வரை பெருஞ்சோறாகிய உணவை அளித்தான் உதியஞ் சேரலாதன். அதனால் இவன் பெருஞ்சோற்று உதியன் எனப் பெயர் பெற்றான் என்கிறது பாடல். உதியஞ்சேரலாதன் சிறப்பைக் கூற வந்த புலவர் அதோடு வரலாற்றுத் தொன்மத்தைக் கூறி, அக்கால அரசர்கள் வடக்கே சண்டையிட்ட பாண்டவ கௌரவர் படைகளுக்கு பாரபட்சம் பார்க்காமல் உணவளித்தான் என்ற பண்பாட்டையும் இதன்வழி அறியமுடிகிறது. உதியஞ்சேரலாதன் என்ற சேர அரசன் பாரதப் போரில் ஈடுபட்ட வீரர்களுக்கு பெருஞ்சோறு அளித்துள்ளான். ***பெருஞ்சோறு என்றால் பலருக்கு ஒரே சமயத்தில் இடும் அன்னதானத்துக்குப் பெயர்.***[6]

அன்றைய காலகட்டத்தில் அன்னதானம் எனும் சோறிடல் பண்பு இருந்திருக்கின்றது. இன்றும் அன்னதானம் எனும் உயரிய செயல் நடந்து கொண்டிருக்கின்றன என்பதை அறியலாம். இதன்மூலம் கடந்தகாலம் பண்பாட்டை விளக்கும் சின்னமாய் தொன்மம் பயன்படுகிறது.

## 5. தொன்மம் காலத்தைக் காட்டும் கண்ணாடி

சங்க இலக்கியம் அத்துணையும் முன்னோர்களின் வாழ்வுமுறையைக் கூறுவது என்று கூறலாம். அதிலும் தொன்மம் அவ்வரலாற்றினை உள்ளார்த்தமாய் அறிவதற்கு மேலும் பயன்படுகிறது. புரிந்து கொள்ளவும், தெரிந்து பின்பற்றவும் அன்றைய சூழலை கண்ணாடியாய் நமக்குக் காட்டி நிற்கிறது.

கிள்ளிவளவனின் ஈகைத் தன்மை எப்படியிருந்தது என்பதை புலவர் ஒரு பாடலில் பழ மரபுக்கதைத் தொன்மத்தை உவமை காட்டி விளக்குகிறார். சோழ நாட்டை ஆண்ட மன்னர்களில் கிள்ளி வளவன் குறிப்பாகச் சொல்லப்படுபவன். இவன் கொடைச் சிறப்பை விளக்க கூறும் கதை, காட்டில் விறகு வெட்டப் போன அனைவருக்கும் புதையல் கிடைத்துவிடாது.புதையல் கிடைப்பது அரிதாக நடைபெறும் நிகழ்வாகும். ஆனால் கிள்ளிவளவனிடம் சென்றால் புதையல் போன்ற செல்வத்தைச் சென்ற அனைவருக்கும் தருவான் என்கிறார் புலவர். கிள்ளிவளவனின் கொடைக் குணத்தை விளக்கப் புலவர் பழமரபுக்கதையான விறகுவெட்டிக் கதையை உவமையாகக் கொண்டு விளக்குகிறார். இப்பாடலிலிருந்து (புறம். 70: 17-18) இரு செய்திகள் புலனாகின்றன. ஒன்று, கிள்ளிவளவனிடம் சென்ற அனைவரும் பொருள் பெறுவர் என்றும், இரண்டாவது, விறகு வெட்டப் போனவனுக்கு புதையல் கிடைத்தது போல கிள்ளிவளவனிடம் செல்பவர். புதையல் போன்று அதிக அளவு பொருளைப் பெறுவர் என்பது விளங்குகின்றது.

அக்கால மன்னனின் கொடைச் சிறப்பைக் காட்டத் தொன்மம் காலக் கண்ணாடியாகச் செயல்படுகின்றது.

**6. தொன்மம் காட்டும் வீரவிளையாட்டுக்களம் :** உலக வழக்கை, நடைமுறையை எளிதாய்ப் புரிய வைக்கத் தொன்மங்கள் சங்க இலக்கியத்தில் உவமைகளாக வந்து சுவை கூட்டுகின்றன. இதே போன்று முல்லைநிலப் பழக்கவழக்கங்கள் அன்று எப்படியிருந்தன என்பதை விளக்கப் பயன்படுகிறது. எடுத்துக்காட்டாக முல்லைக் கலியுட் காணப்படும் பாடல்கள் அக்கால ஆயர் குலத்தின் முறைமைகளைத் தெரிவிக்கின்றன. எருதினைப் பிடித்து அடக்குபவனுக்கே தன் மகளை மணம் செய்து கொடுத்துள்ளனர். வீரனுக்கே மாலையிடுவதை அம்மகளிர் குறிக்கோளாய் கொண்டிருந்தனர். ஏறு தழுவுதல் நடந்ததென்றால்

அக்களக்காட்சியை நம்மால் அளவிட்டு அறிய முடியாது. ஆனால் தொன்மம் உவமையாய் வந்து ஏறுதழுவுதல் எனும் காட்சி எத்தகையது என்பதைக் கண்முன் நிறுத்துவதாக உள்ளது.

எ.டு. ***புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க***
***வரிபுனை வல்வில் ஐவர் அட்ட***
***பொருகளம் போலும் தொழூஉ*** (கலி. 104: 57-59)

என்ற இப்பாடலில் ஏறுதழூவல் விளக்கப்பட்டுள்ளது.

**ஏறுதழுவுதல் களத்தின் காட்சி**

ஏறுதழூவுதல் நிகழ்ச்சியில் இளைஞர்கள் களத்தில் இறங்கி, சீறி வரும் காளையை அடக்கினர். இளைஞர்கள் காளையின் கொம்புகளால் குத்துப்பட்டும் தூக்கி எறியப்பட்டும் காயமுறுகின்றனர். சிலர் இறந்து போவதும் உண்டு. தொழு எங்கும் இரத்தமும் கிழிந்த சதையுமாய் உடல்கள் கீழே விழுந்து கிடக்கின்ற காட்சிக்குப் புலவர் மகாபாரதத் தொன்மமான குருசேத்திரப் போர்க்களத்தை உவமையாகக் கூறுகிறார்.

ஏறு தழூவும் தொழுத்தோற்றம் அச்சுறுத்தும் வகையில் இருந்தது என்பதற்கு போர்க்களம் என்று மட்டும் கூறவில்லை. குருசேத்திர போர்க்களம் போன்றிருந்தது என்கிறார். குருசேத்திரப் போர் பதினெட்டு நாட்கள் மிகப் பெரிய படைகளுடன் நடந்த போர் என்று பாரதச் செய்தி கூறுகின்றது. சங்ககால வீர விளையாட்டான ஏறு தழுவுதல் நிகழ்ச்சியை திரைப்படம் பார்ப்பது போல் நம் கண்முன் காட்ட தொன்மம் உதவுகின்றது.

ஏறுதழூவுதல் எனும் வீரவிளையாட்டை சாதாரணமான முறையில் விளக்காமல் பாரதப் போர்களத்திற்கு இணையாக உவமைக் காட்டி, அக்காலத்தில் ஏறுதழுவுதலில் ஈடுபட்ட மக்கள் எத்துணை வீரம் பொருந்தியவர்களாய் இருந்துள்ளனர் என்பதைக் கவிஞர் எடுத்துக் கூறுகின்றார்.

**7. கடவுளர் தொன்மங்கள் நல்வாழ்வுக்களங்கள் :** வீரம், காதலைத் தம் வாழ்க்கையின் பெருங்களங்களாகக் கொண்ட மக்களிடையே கடவுளர் தொன்மங்கள் அதாவது கடவுள் பற்றிய கதைகள் வாய்மொழியாக வந்து, பின் இலக்கியத்தில் இடம்பெற்றன. இவையே பின்னர் பக்தி இலக்கியம் உருவாகக் காரணமாயிருந்திருக்கலாம்.

மனிதனைப் பண்படுத்தி இது நல்லது, இது தீயது என்று புரிய வைக்க கடவுளர் தொன்மங்கள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. தீயவன் அழிவான் என்ற நியதியைப் புரிய வைத்ததில் பெரும்பங்கு கடவுளர் தொன்மத்திற்கே உரியது. மனிதனை நெறிப்படுத்த, வாழ்க்கை எப்படி அமைய வேண்டும் எனும் நியதிகளை நமக்குக் கற்றுக் கொடுக்கக் கடவுளர் தொன்மங்கள் எடுத்தாளப்பட்டுள்ளன.

எ.கா. ***அங்கறி கழங்கின் கோட்டம் காட்டி*** (நற். 47: 8-10)

***சூர்நவை முருகன் சுற்றத்து தன்னதின்*** (புறம் 23: 4-5)

ஆகிய பாடல்களில் சூர் ஆணாக முருகனின் எதிரியாக சூரபன்மன் உருவகித்துக் காட்டப்பட்டுள்ளான். இந்த சூரபன்மன் யார்? அரக்கர்குலம் நலிவுற்றபோது அரக்கர்க்கெல்லாம் அரக்கராக இருந்தவன் அசுரேந்திரன் என்ற அரசன், அவன் மகள் சுரசை. மாய வித்தைகளைக் கற்றவளாதலால் இவளுக்கு மாயை என்ற பெயரும் உண்டு. அரக்கர்குலம் முன்னேற சுக்கிராச்சாரியரிடம் ஆலோசனை கேட்டு மேரு மலையில் தவம் செய்து கொண்டிருந்த காசிபமுனிவரின் தவத்தைக் கலைத்து மயக்கிக் கூடினாள். அதன் பயனாய்ப் பிறந்தவனே சூரபன்மன். வலிமை, ஆற்றலால் தேவர்களையும், முனிவர்களையும் கொடுமை செய்தான். அவனை அழிக்கவே சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து முருகன் தோன்றினான் என்று புராணம் வழி அறியலாம். சூரனுக்கும் முருகனுக்கும் போர் நடந்தது என்றும், அப்போரில் முருகன் சூரனை வதம் செய்தார் எனவும் செய்தி உள்ளது.

இத்தொன்மம் சங்க இலக்கியத்தில் செய்தியாக வந்துள்ளது. முருகனின் சில தொன்மங்கள் உவமையாகவும் வந்துள்ளன. தீயது செய்தால் அழிவு ஏற்படும் என்பதை அறிவுறுத்துவது போல் சூரபன்மன் - முருகன் தொன்மம் உள்ளது. சூரன் போரில் ஒரு மறைமுகச் செய்தியும் நமக்குக் கிடைக்கிறது.

***சூரன் போர் நுட்பம் புராணத்திலேயே அடங்கிக் கிடக்கிறது. ஒவ்வோர் உள்ளமும் போர்க்களம். அக்களத்தில் நாடோறும் சூரனுக்கும் முருகனுக்கும் போர் நடந்த வண்ணமிருக்கிறது. சூரன் – முனைப்பு, முருகன் – அருட்கடவுள், முனைப்பு எப்போது அழிந்துபடும்? திருவருள் பதியப்பதிய அறிவாற்றல் அதாவது ஞானசக்தி எழும். அஃதெழுந்து பாயும்போது முனைப்பு அழிந்துவிடும். ஞானசக்தியே முருகன் வேலென்பது***[7]

கடவுளர் தொன்மம் வாழ்க்கையில் மனிதனைப் பண்படுத்தி வாழ்வதற்கான நியதிகளைக் கூறுகிறது. மகாபாரதத் தொன்மம் பிரபலமடைந்ததற்கு ஒரு காரணம் கெட்டதுக்கும் நல்லதுக்கும் நடந்த போரில் கிருஷ்ண பகவான் நல்லவர் பக்கமே நின்று பாண்டவர்களை வெற்றிபெற வைத்து, நாட்டில் நல்லதே நிலைக்கும் என்ற நியதிக்காகப் பாரதம் மக்களால் அதிகம் விரும்பப்பட்டிருக்கலாம்.

**8. தொன்மம் – இலக்கிய விளக்க உத்திகள்:**

***வென்வேற் பவுரியர் தொன்முது கோடி*** (அகம். 70: 13-17)

என்று தொடங்கும் பாடலில் இராமன் இராவணனுடன் போர் புரிவது பற்றி (இராவணனுடன்) ஆலமரத்தின்கீழ் அமர்ந்து பேசும்போது பறவைகள் மிகுந்த ஒலியெழுப்ப, அதை இராமன் ஒலியெழுப்பாதவாறு அடக்கினான். அதுபோல தலைவன் தலைவி களவு வாழ்க்கைப் பற்றி ஊரில் எழுந்த அலர், அவர்கள் திருமணம் முடிந்ததும் அடங்கி விடும் என்று கூறுகிறது. இப்பாடலில் அலர் எப்படி அடங்கும் என்பதை விளக்க தொன்ம உவமை பயன்பட்டுள்ளது.

பழந்தமிழ்ப் பெருநூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலியவை கி.பி. ஒன்று, இரண்டு நூற்றாண்டுகளைச் சார்ந்தவை. அவை இந்தியாவின் மிகு தொன்மை வாய்ந்த சமயம் சாராத பாடல்கள். சங்க இலக்கிய அகப்பொருள் பாடல்களின் தனிச்சிறப்பே அவை தொன்மையானவையாய் உயிரூட்டம் உள்ளவையாய் இலங்கும், இவை போன்ற சிறப்பான இலக்கியங்கள் வேறு இந்திய இலக்கியங்களில் இல்லை. காதலோடு, கனியும் பண்பாடும், உள்ளுறை, இறைச்சி ஆகியவையும் தலைவன் தலைவி பெயர் சுட்டப்படாவிடினும் ஓவியம் போன்ற நுண்ணிய வர்ணனை இவையாவும் தமிழர் அறிவுத் திறனின் மிகத் தொன்மையான எடுத்துக்காட்டு இவ்வகப்பாடல்கள்.[8] இத்துணை சிறப்பான சங்கப்பாடல்களின் கருத்தை இலகுவாக அறிய தொன்மங்கள் இலக்கிய விளக்க உத்திகளாக உவமைகளாக வந்துள்ளன.

**9. தொன்மம் மனித மன முரண்பாட்டுக் நீக்கிகள் :** மனிதர்கள் முரண்பட்ட மனதினை உடையவர்கள். இம்முரண்பாடுகள் மனிதனை நீதிநெறியிலிருந்து பிறழ வைக்கலாம். வாழ்வில் உணர்ந்தவை அல்லது அனுபவித்தவை தத்துவங் களாகின்றன. தத்துவம் என்பதற்கு உண்மை தன்மை என்று அகராதி பொருள் காட்டுகிறது. எனவே உண்மையே வாழ்வியற் தத்துவமாகும். வாழ்க்கையில் எதுவும் நிலையில்லை. இளமை, செல்வம், உடம்பு எதுவும் நிலையில்லாமல் போகின்றன. சங்க இலக்கியப் பாடல்கள் பெரும்பாலும் நிலையாமை பற்றி அதிகம் பேசவில்லை. ஆனால் மனித மனத்தின் முரண்பாடுகளை நேரிடையாக கூறாமல், அம்முரண்பாடுகளை சமாளித்து வெளிவர தொன்ம உவமை வழிகாட்டு கின்றது.

எ.கா. *அறிந்தினிர் ஆயின் சான்றவிர் தான்தவம்*
*ஒரீஇத் துறக்கத்தின் வழீஇ ஆன்றோர்*
*உள்ளிடப்பட்ட அரசனைப் பெயர்த்தவர்*

*உயர்நிலை உலகம் உறீஇ யாங்கென்*

*துயர்நிலை தீர்த்தல் நுந்தலைக் கடனே* (கலி. 139: 33-37)

என்ற இப்பாடலில் தலைவியின் மேல்கொண்ட காதலால் தலைவன் மடலேறுகிறான். மடலேறுதல் என்பது தலைவியை மணம் புரிய வேண்டி, பனங்கருக்கைக் குதிரைப்போல் செய்து, அதைத்தன் இருகால்களுக்கும் நடுவே வைத்துக் கொண்டு, மற்றவர்காளல் அதை இழுக்கச் சொல்வான். அப்படி இழுக்கப்படும் வேளை பனங்கருக்குகள் காலில் உரசி இரத்தம் வரவழைக்கும். இதுவே மடலேறுதல் என்ற நிகழ்வாகும். அக்காலத்தில் களவு வாழ்க்கையில் ஈடுபட்டோர் மணவாழக்கைப் பெறவேண்டி மடலேறுவர். மேற்கண்ட பாடலில் மடலேறும் தலைவன் தன்னை வருத்திக்கொண்டு சான்றோரை நோக்கி, அரசனை மீட்டுத் தவம் செய்வித்து உயர்ந்த நிலையை உடைய சுவர்க்கத்திலே போகச் செய்து துயர் தீர்த்தாற்போல, என் துயரத்தினையும் போக்குதல் நுமது தலையாய கடமையாகும் என்கிறான்.

இதில் அரசன் என்பது யயாதியைக் குறிப்பிடுகிறது. யயாதி, பாண்டவர், கௌரவர்களின் முன்னோர்களில் ஒருவரான மன்னன். சிற்றின்பத்தில் ஈடுபட்டவன். பின் சுக்கிரச்சாரியாரின் சாபத்தால் முதுமையாகினான். பின் தன் மகனிடமிருந்து இளமையை வாங்கி, மீண்டும் இன்பம் அனுபவித்து இறுதியில் பேரின்பமான இறைவனை அடைவதே சிறந்தது என உணர்ந்து, தன் முதுமையை மகனிடமிருந்து வாங்கி, அவனுக்குத் தன் இளமையைக் கொடுத்துவிட்டு காடு சென்று தவம் செய்து வீடுபேறு பெற்றான்.

இத்தொன்மத்தை உவமையாக்கிய களம் களவு வாழ்க்கை. தலைவன், சிற்றின்பத்தில் ஈடுபட்டு, அதிலிருந்து மீள யயாதியின் கதையைக் கூறுகிறான். பிறந்து மடியும் இம்மனித வாழ்க்கையில் இடையில் வரும் முரண்பாடுகளை

இலக்கியத்தில் வடித்து இன்னலை வெற்றிகொள்ள தொன்மத்தை இணைக்கிறார் புலவர்.

யயாதி தொன்மம் மனிதருக்குக் கூறும் செய்திகளாவன:

- இளமை என்பது நிலையாமை. அதற்காக நாம் வெகுவாகப் பாடுபட வேண்டியதில்லை என்று உணரலாம்.
- வாழ்க்கை சுழற்சி உடையது. பிறப்பும் இறப்பும் மாறிமாறி வரும். எந்தவிதப் பயனுமின்றி இறப்பது எவ்வித பயனுமில்லை. ஒருவனின் வாழ்க்கை பயனுடையதாய் புகழுடையதாய் இருத்தல்வேண்டும்.
- மனிதனுக்கு நிலையான இன்பம் தருவது சிற்றின்பம் அல்ல.
- இல்லறத்தில் ஈடுபடுவோருக்கு பலவிதமான சிக்கல்களும், முரண்பாடுகளும் இருந்தாலும், அவர் சான்றோர் அறிவுரையின்படி நடப்பாராயின், அவரும் தெய்வ நிலையை அடைவார் என்பது இத்தொன்மம் மூலம் புலனாகிறது.

ஆக தொன்மம் களவு வாழ்க்கையின் நிகழ்ச்சியில் உவமையாக வந்து அதற்கு வழியும் சொல்கிறது. மடலேறும் தலைவனுக்கு மட்டுமல்ல, படிப்பவருக்கும் முரண்பாடுகளைச் சமாளித்து வெளிவருவதற்கு உதவும் உத்தியாக உள்ளது எனலாம்.

**10. தொன்மங்கள் மனிதனின் ஊக்கக்காரணிகள் :** வாய்மொழிக் கதைகளால் ஆரம்பித்து பின் இலக்கியத்தில் இடம்பெற்றவை தொன்மங்கள் ஆகும். இவ்வாய்மொழிக் கதைகள் சமுதாய மாற்றத்திற்கு வழிவகுத்ததா? என்ற கேள்வி இருந்தாலும், பெரும்பாலான கதைகள் சமுதாய நடப்புகளைப் பின்பற்றி கற்பனைக் கலவையாகவோ, அல்லது உண்மையான நடப்புகளாகவோ

நிலைத்துவிடுகின்றன. சமுதாய மாற்றங் கருதிச் சில வாய்மொழிக் கதைகள் புனையப்பட்டிருக்கலாம். எது எப்படியிருப்பினும் இத்தொன்மங்கள் மனிதனுக்கு ஆறுதலும் ஊக்கமும் ஊட்டி இயக்கும் காரணியாகச் செயல்படுகின்றன என்பது உண்மை ஆகும்.

மகாபாரதத் தொன்மம், இராமாயணத் தொன்மம் என்ற இதிகாசத் தொன்மங்கள் இரண்டிலும் 'நல்லவர் வாழ்வர்; கெட்டவர் அழிவர்' என்று சொல்லிப் படிப்பவர் மனதுக்கு ஊக்கம் அளிப்பவையாக உள்ளன.

**முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்**
**ஐவர் என்று உலகேத்தும் அரசர்கள் அகத்தராக்**
**கைபுனை அரக்கில்லைக் கதழ்எரி சூழ்ந்தாங்கு** (கலி. 25: 1-4)

என்ற இப்பாடலில் மகாபாரதத் தொன்மம் உவமையாக்கப்பட்டுள்ளது. யானைகள் இருப்பிடத்தைச் சுற்றியுள்ள மூங்கில் காட்டில் தீ பற்றிக் கொள்ள, தம் இனத்தோடு அத்தீயிலிருந்து தப்பித்துச் செல்லும் யானைக் கூட்டத்தையுடைய சுரத்தைக் கடந்துசெல்லும் தலைவனே என்று தோழி கூறுகிறாள். இதில் அழலிலிருந்துரு வெளியேறும் யானைக் கூட்டம் எப்படியிருக்கிறது என்றால் துரியோதனன், பாண்டவர்கள் மீதுகொண்ட பகையால் அவர்களை அழிக்க எண்ணி, பாண்டவர்கள் தங்கியிருக்க அரக்கு மாளிகையை உண்டாக்கி, அதில் பாண்டவர்கள் இருந்தபோது அதற்குத் தீ வைத்தான். அவன் சூழ்ச்சியறிந்து தன் சுற்றத்தாருடன் பீமன் வெளியேறியிருந்ததைப் போன்றிருந்தது அந்த யானைக் கூட்டம் என்கிறார் புலவர்.

இந்த அகப்பாடலில் தலைவன் தலைவி களவுக் காதல் என்பது, சூழ இருக்கும் நெருப்புப் போன்றது. அதிலிருந்து கவனமாய் வெளியேறி மணவாழ்க்கைக்குள் போக வேண்டும் எனக் குறிப்பால் சொல்வது போல உள்ளது.

அதோடு நல்லவர்களானப் பாண்டவர்களிடம் துரியோதனனின் சூழ்ச்சி பலிக்க வில்லை. மகாபாரதத்தின் முடிவும் அதைத்தான் சொல்கிறது. மகாபாரத யுத்தத்தின் இறுதியில் கௌரவர் தோற்றுப்போய் அழிந்தனர். பாண்டவர்கள் அரசுரிமை பெற்றனர். சங்க இலக்கியத்தில் முக்கியமாகக் கலித்தொகையில் ஏறுதழுவுதல் நிகழ்ச்சியில் எருது தன்னை அடக்க வருபவரைச் சாவக்குத்தியதற்குப் பாண்டவர்களில் ஒருவனான பீமன், துரியனின் தொடை அறுத்து வீழ்த்தியதும், துச்சாதனின் நெஞ்சைப் பிளந்ததும் உவமைகளாகக் கையாளப்பட்டுள்ளன. இதிலிருந்து நல்லவர் வாழ்வர் என்ற ஆறுதலும், எத்தனை இன்னல்கள் வந்தாலும் இறுதியில் நல்லவரே வெற்றி பெறுவர் என்றும் அறியவருவதால், நல்லவராக வாழ்ந்தாக வேண்டும் என்ற ஊக்கத்தை உண்டுபண்ணுகின்றன.

### உவமைகள், தொன்ம உவமைகள் பயன்பாட்டில் வேறுபாடுகள்

சங்க இலக்கியத்தில் உவமை என்பது பாடல்களுக்கு மேலும் சுவை கூட்டச் செய்கிறது. பாடல் எனில் உவமை வேண்டும். அப்பொழுதுதான் படிப்பவரின் ஆர்வத்தைத் தூண்ட முடியும். உள்ளத்து உணர்ச்சி, வினைநலம், செயல் முதலியவை அகம், புறம் சார்ந்து அமைந்தன. **ஒரு கவிஞனுடைய திறமையை உள்ளவாறு மதிப்பிட உதவுவது அவனுடைய உவமைத்திறன் என்று கூறினால் மிகையாகாது. இவ்வாறு பயன்படுத்தும் உவமை அவனுடைய கல்வி, இயற்கை, அறிவு, அனுபவம், பரந்த மனப்பான்மை நுனித்துக் காணும் காட்சி முதலியவற்றிற்கு ஏற்பத் தோன்றும்.**[9]

இலக்கியத்தை அழகுபடுத்தும் முதல் அணி உவமையாகும். அதேபோன்று தொன்மங்கள் அழகுக்காக மட்டுமல்லாது உவமையாக வரும்பொழுது மானுடத்தை நெறிப்படுத்துகிறது எனலாம்.

உவமைகள், தொன்ம உவமைகள் இரண்டிற்குமுள்ள வேறுபாடுகளாவன:

| எண் | உவமைகள் | தொன்ம உவமைகள் |
|---|---|---|
| 1. | உவமை என்பது உவகை, அவலம், வெகுளி, நகை ஆகியவற்றை வெளிப் படுத்துகின்றன | மக்களின் எண்ணங்களை பிரதி பலிக்கின்றன |
| 2. | இல்லாத பொருள்கூட உவமையாகச் சித்தரிக்கப்படும் | நடந்தவையாகச் சொல்லப்படுவது உவமையாக வரும். |
| 3. | சொல்லப்படும் பொருளின் தன்மையைப் புலப்படுத்தும் | பொருளின் தன்மையுடன் வரலாற்று கதைகளையும், கடவுளர் கதைகளையும் புலப்படுத்தும். |
| 4. | பொருளைத் தக்க ஒப்புமைக்கொண்டு உணர்த்தும்<br><br>எ.கா. மகளிர் முகம் முழுமதிக்கு வடிவாலும் ஒளியாலும் உவமிக்கப்பட்டது. | பொருளை அதற்கு மேல் சிறப்பு உடைய தொன்மம் கொண்டு உணர்த்தும்.<br>எ.கா. ஏறுதழுவுதலில் எருதுக்கு பீமன் தொன்மம் உவமை யானது திரையனுக்கு திருமால் உவமையானது. |
| 5. | வினை, பயன், மெய், உரு ஆகிய வற்றின் தன்மைகளைச் சிறப்பிக்க உதவும். | வினை, பயன், மெய், உரு ஆகிய இந்நான்கினுடன் சூழலுக்கும் உவமையாகிறது. |
| 6. | ஓரே பொருளுக்குப் பல உவமைகள் வரும்.<br>எ.கா. முகைமுல்லை வென்று எழில் முத்து ஏய்க்கும் வெண்பல் (பத். 8/76)<br>முல்லையும் முத்தும் மகளிரின் பற்களுக்கு உவமையாகத் தரப்படுகின்றன. | பெரும்பாலும் ஒன்றுக்கு ஒரு தொன்மமே உவமையாக வரும். |
| 7. | உவமானமும் பொருளும் தம்முள் ஒத்திருக்கும் | உவமானமும் பொருளும் ஒத்து இருக்க வேண்டியதில்லை. |
| 8. | உவமை இரசனையைக் கூட்டுகிறது. | இரசனையுடன் பண்பாட்டைக் கணிக்க உதவுகிறது. |

| எண் | உவமைகள் | தொன்ம உவமைகள் |
|---|---|---|
| 9. | பொருளின் தன்மையைப் புலப்படுத்தும் | பொருளின் தன்மையோடு முன்னோர்களின் வாழ்க்கை முறைமையைக் கூறுகின்றன. |
| 10. | உள்ளுறை, இறைச்சி வகைகளைக் கொண்டன. | உள்ளுறையே பெரும்பாலும் களனாக கொண்டுள்ளன. |
| 11. | உவமையும் பொருளும் அண்மைக் காட்சிகளாக இருக்கலாம் | உவமையும் பொருளும் சேய்மை காட்சிகளாக இருக்கின்றன. |
| 12. | வாழ்க்கையில் என்றுமே நடைபெற இயலாத நிகழ்ச்சிகளும் உவமையாகும்<br>எ.டு. நீருள் குவளை வெந்து போதல் வடிவாலும் ஒளியாலும் உவமிக்கப்பட்டது. | ஏற்கனவே நடந்ததாகச் சொல்லப் படுபவையும் நடைபெற இயலாத நிகழ்ச்சிகளும் உவமையாக வரும் |
| 13. | உவமைகள் சூழ்நிலைகளால் பொருள் உணர்த்தும் சிறப்புடையன. | சூழ்நிலைகளுக்கு அப்பாற்பட்டது சூழ்நிலைக்கு தொன்மம் உவமை யாக பயன்படுகிறது. |
| 14. | உவமைகள் பொருளையும், கருத்தை யும் விளக்க உதவுகின்றன. | தொன்ம உவமைகள் கருத்தை விளக்குவதோடு அறக்கருத்துகளை யும் கூறுகின்றன. கடவுளர் தொன் மங்கள் பிற்காலத்தில் பக்திஇலக்கியம் தோன்றுவதற்கு அடிப்படையா கின்றன. |
| 15. | உலகில் இயல்பாக நிகழும் ஒரு நிகழ்ச்சி யின் மீது கவிஞன் தன் கற்பனையை ஏற்றிப் பொருள் கூறும்போது உவமை வரும். | என்றோ இயல்பாக நிகழ்ந்ததாகச் சொல்லிய இதிகாசம், புராணம் இவற்றிலிருந்து உவமை காட்டு வதாக அமையும் |
| 16. | கவிஞன் தானே ஒரு பொருளை மற்றதற்கு உவமை சொல்லலாம் | முன்னோர்கள் வழிவழியாய் சொல்லிவந்ததை கவிஞன் உவமை யாகக் கையாண்டது |

| எண் | உவமைகள் | தொன்ம உவமைகள் |
|---|---|---|
| 17. | உவமை தன்னிச்சையாய்த் தோன்றுவது | தொல்பழங்காலத்தில் மனிதர்கள் தம்மைச் சுற்றி நிகழும் இயற்கை நிகழ்வுகளை கண்டு வியந்தனர். அவற்றைப் பற்றி வினாக்கள் எழுப்பினர். இத்தகு வினாக்களுக்கு விடைகளாக வந்த தொன்மங்கள் உவமையாக வருகின்றன. |
| 18. | உவமைகள் புலவரின் கற்பனை வளத்தை நிர்ணயிக்கும் | புலவரின் கற்பனை வளத்தை நிர்ணயிப்பதோடு வாழ்க்கை அனுபவங்களின் குறியீடாகவும் அமையும். |
| 19. | புலன் அல்லாதன புலன் ஆதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கின்பம் பயத்தலும் உவமமாகும்<br>எ.டு. தலைவன், தலைவியையே தன் நெஞ்சு மத்தினைக் கட்டியிழுக்கும் கயிறுபோலச் சுற்றிச் சுழல்வதாகக் கூறுகிறான். இதை முல்லைக் கலிப் பாடல்.<br>மத்தம் பிடித்த கயிறுபோல் நின்நலம் சுற்றிச் சுழலும் எம் நெஞ்சு (கலி .110: 10-11) என்கிறது | புலன் அல்லாதன புலன் ஆதலும் அலங்காரமாகியதும், கூடவே கதை நிகழ்வுகளை நினைவூட்டுவது தொன்ம உவமமாகும். |
| 20. | உவமை ஒரு பொருள் தரும் நிலையில் அமைவது. | ஒரு பொருள் நிலையில் மட்டுமின்றி பன்முகப் பொருள் தரும் நிலையில் அமைவது |
| 21. | வேறுபட்ட இருபொருள்களுக்கிடையே அமைந்த ஒற்றுமையே உவமைக்கு காரணமாகும். | இருவேறுபட்ட பொருள்களுக்கு உவமைச் சொல்வதோடு, சங்க காலத்திற்கு அப்பாற்பட்ட புராணங்கள், இதிகாசங்கள், பழமரபுக் கதைகள் பற்றி அறிய உதவுகிறது. |

| எண் | உவமைகள் | தொன்ம உவமைகள் |
| --- | --- | --- |
| 22. | பொருளின் தன்மையை விளக்கும் | பொருளின் தன்மையோடு கருத்து விளக்க உத்தியாக வரும். |
| 23. | உவமையின் நோக்கம் சுவையுணர்வை கூட்டுகிறது எனலாம். | சுவையுணர்வை ஊட்டுவதுடன் படிப்பவரை நெறிப்படுத்துவது போல நல்லது கெட்டது எதுவென புரிய வைக்கின்றன. |
| 24. | பார்த்து, கேட்டு, அனுபவப்பட்டது ஆகியவை உவமையாகும் | வழிவழியாய் செவிவழி கேட்டக் கதைகள் உவமையாகும் |
| 25. | உவமை என்பது உயர்ந்த பொருளாக வரும் என்பது விதியாகும். | விலங்குக்கு இதிகாசப் பாத்திரங் களை உவமையாக்குவதும் எதிர் மறை பாத்திரங்களை உவமைக் காட்டுவதாகவும் வரும் எ.கா. கிள்ளிவளவன் கொடைச் சிறப்புக்கு விறகு வெட்டிக்கு புதையல் கிடைத்த பழமரபுக் கதை உவமையாகச் சொன்னது. |

முற்றிலும் தன்னுணர்ச்சிப் பா வடிவங்களைக் கொண்ட சங்கப்பாடல்கள் தொன்மையை அழகோடு அளவுடன் பயன்படுத்திக் கொண்டுள்ள நிறையும் முறையும் இவ்வேறுபாட்டின் மூலம் அறிய முடிகிறது.

## முடிவுரை

சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் நோக்கும் போக்கும் என்ற இந்த ஆய்வின் முதல் இயலான தொன்மங்கள் - தொன்ம உவமைப் பயன்பாடுகளின் உட்தலைப்புக்களாவன:

1. தொன்மங்கள் - ஒரு பார்வை
2. உவமையின் இயல்பு
3. தொன்ம உவமைப் பயன்பாடுகள்
4. உவமை, தொன்ம உவமை வேறுபாடுகள்

என ஆராயப்பட்டன.

அந்த இயலின் முடிபாக அறியப்படுவன:

- தொன்மம் செய்தியாக வருவதைவிட உவமையாக வரும்பொழுது பல அரிய தகவல்களைத் தருகிறது.
- சொல்ல வந்ததை மக்களிடையே செம்மையாகப் பதிவு பெறவே தொன்மம் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.
- ஏறுதழுவுதல் போன்ற பண்பாட்டுத் தொடர் நிகழ்வுகளுக்குத் தொன்மம் பயன்பட்டு வந்துள்ளன.
- தொன்மத்தை உவமையாகக் கையாண்ட புலவர்களின் அறிவுநுட்பம் வெளிப்படுகின்றது.
- ஒரு குறிப்பிட்ட பாடலில் உவமையாக வந்தாலும் தொன்மம் படிப்பவருக்கு பல அரிய தகவல்களைத் தருகிறது.
- அக்கால சமுதாய மாற்றங்களையும், போக்குகளையும் புலப்படுத்துகிறது.
- தொன்மம் நல்ல வழியில் மனிதனை நடத்திச் செல்கிறது. தீயவற்றைக் விலக்க உதவுகின்றது.
- மனித வாழ்க்கை நிலைகளைப் போல கடவுளர் தொன்மமும் அமைந்துள்ளது (கலி. 81: 9-10, அகம். 59: 10-12, நற். 82. 3-4).
- சங்ககாலத்திய நடப்புகளுடன், கடவுளர்களின் கதைகளை கூறிப் படிப்பவர்கள் எளிதாக புரிந்துகொள்ள வழி செய்கிறது (புறம். 278: 18-22).
- நல்லவர் அழிவதில்லை என்பதை அறிவுறுத்துகின்றது (கலி. 25: 1-4).
- நம் நாட்டை ஆண்ட மன்னர்களின் சிறப்பைக் கூறுகின்றது (புறம். 37: 5-6).
- தொன்மம் தத்துவ விளக்கத்திற்கு வழி செய்கின்றது (புறம். 55: 1-4, கலி. 2: 1-8)

உலகில் ஒரு காலத்தில் பேசப்பட்ட இயற்கையான பேச்சு, நுண்ணிய சிந்தனைகளைத் தொன்ம உவமைகள் மூலம் இலக்கியத்தின் வழி வெளிப்பட்டன. தொன்மம் உவமைகளாகப் பயன்பட்டதின் சிறப்புகளைச் சுருக்கமாகக் கீழ்க்காணுமாறு கூறலாம்.



## அடிக்குறிப்புகள்

1. சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, டாக்டர் ச. அகத்திய லிங்கம், ப. 23.
2. கம்பன் புதிய பார்வை, அ.ச. ஞானசம்பந்தன், பக். 8, 9.
3. மன அமைதிக்கு இந்து மதத் தத்துவங்கள், யோகி ஞான சிரஞ்சீவி, ப. 17.
4. உலக சமயங்கள், இந்து சமயம், ப. முத்துக்குமாரசாமி, பக். 31, 32.
5. இந்துமதம், மறைபொருள் தத்துவ விளக்கம், தொகுப்பாசிரியர் கவிஞர் அகில், ப. 44.
6. தொன்மவியல் கட்டுரைகள், முனைவர் யாழ். சு. சந்திரா, ப. 33.
7. மேலது, ப. 53.
8. திரு.வி.க. தமிழ்க் கொடை, திரு.வி.க., பக். 237, 238.
9. புதிய கோணம் (இலக்கியக் கட்டுரைகள்), அ.ச. ஞானசம்பந்தன், ப. 116.

# தொன்ம உவமைகள் பயன்பாட்டின் நோக்கம்

தொன்மங்கள் இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் என்ற வகைகளாகச் சொல்லப்படுகின்றன. பழமரபுக்கதைகள் கதைகளாகவும் இதிகாசமும், புராணமும் கதைகளாகவும், செய்திகளாகவும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. தொன்மங்கள் இடம்பெற்றதின் நோக்கம் மக்களுக்குச் செய்திகளைத் தெரியப்படுத்துவது ஆகும். தொன்மங்கள் கதை வடிவில் உவமைகளாக இலக்கியத்தில் இடம்பெறும்பொழுது, அவை கூறும் செய்திகளின் நோக்கத்தை ஆராய ஏதுவாகின்றது.

தொன்மங்கள் உவமைகளாகப் பாடலின் சூழலுக்கும், பாத்திரத்திற்கும் பயன்பட்ட விதத்தை வைத்து புலவரின் அறிவு நுட்பத்தையும், அவர் கூற விரும்பும் கருத்தையும் அறிய முடிகின்றது. பாடலின் நிகழவுக்கும், அதிலுள்ள பாத்திரங்களுக்கும் தொன்ம உவமைகள் பொருத்தமாக இருப்பதை வைத்து நோக்கம் இதுவாகயிருக்கலாம் என ஈண்டு ஆராயப்படுகின்றன.

இந்த இயலின் உட்தலைப்புகளாக இதிகாசம், புராணம், பழமரபுக்கதைகள் என்று பிரிக்கப்பட்டு அவை உவமைகளாகப் பயன்பட்டதின் நோக்கம் ஆராயப்படுகின்றன.

### இதிகாசத் தொன்மங்கள் – நோக்கம்

இராமாயணமும், பாரதமும் இதிகாசத் தொன்மங்களாகும். இதிகாசம் என்பது உண்மையில் நடந்த நிகழ்வுகளா? புனைந்துரைக்கப்பட்டதா? என்ற கருத்துகள் ஒருபுறமிருக்க இதிகாசம் இலக்கிய வழி கூறவிரும்பும் கருத்துகளை அறிய முடிகிறது. ***இதிகாசத்தொன்மங்கள் பெரும்பாலும் இல்பொருட் கதைகளே! கற்பனையே அவற்றின் அடிப்படை ஆயினும், மனிதனது சில***

***சிந்தனைகள், இலட்சியங்கள், நம்பிக்கைகள் ஆகியவற்றின் திரண்ட உருவச் சின்னமாக அவை மிளிர்கின்றன.***[1] என்பதால் அக்கால மனிதனின் சிந்தனைக் கடத்தியாக இதிகாசம் தொன்மங்கள் இருந்துள்ளன. அன்றைய காலத்தின் நடைமுறையைப் புலவர் தன் படைப்பின்வழி வெளிப்படுத்துகிறார். இதிகாசத் தொன்மங்கள் புலவர் கூற விரும்பும் கருத்துக்கு மேலும் செறிவைக்கூட்டுகின்றன எனலாம்.

இதற்கு கலித்தொகைப் பாடலில் அமைந்துள்ள இதிகாசத் தொன்மைத்தைச் சான்றுகாட்டலாம் தலைவன், தலைவியை பிரிந்து செல்லவிருக்கிறான். தோழி, தலைவன் கடந்து செல்லும் சுரத்தின் காட்சியைக் கூறி, இப்படிப்பட்ட சுரத்தைக் கடந்து செல்லும் தலைவனே என்கிறாள், இப்பாடலில் சுரத்தின் காட்சிக்கு மகாபாரதத் தொன்மத்தை உவமையாக்குகிறார். அழல் சூழ்ந்த இடத்திலிருந்து யானை தன் கூட்டத்தோடு வெளியேறுகிறது. இக்காட்சி

***ஓள்ளுரு அரக்கில்லை வளிமகன் உதைத்துத்தன்***
***உள்ளத்துக் கிளைகளோடு உயப்போடு வான் போல*** (கலி 25: 7-8)

என்கிறார் புலவர். அதாவது துரியோதனன் சூழ்ச்சியால் தீ வைக்கப்பட்ட அரக்கு மாளிகையிலிருந்து தன் சுற்றத்தோடு வெளியேறிய யானை வீமன் போன்றிருந்தது அந்த யானை என்கிறார் புலவர். யானையின் செயலுக்கு வீமனின் செயலை உவமையாக்குகிறார் வீமனின் செயல் பற்றிய உவமையை யானைக்குக் கூறினாலும் இவ் வீமன் தொன்மம் பயன்படுத்தப்பட்டத்தின் நோக்கங்களாகக் கீழ்க்காணுபவற்றைக் குறிப்பிடலாம்.

1. களவு வாழ்க்கை என்பது காட்டைப் போன்றது. கொடிய மிருகங்களும், கரடு முரடான முட்பாதைகளும், ஆறலைக் கள்வர்களும் நிறைந்த பகுதியே காடாகும். காட்டில் வாழ்வது என்பது பல இன்னல்களைத் தந்து மீளாத துயரில் ஆழ்த்திவிடும். இது போல களவு வாழ்க்கை, பிரிவு, அலர் போன்ற துன்பங்கள் நிறைந்தது. இத்தகைய களவு வாழ்வு என்பது காட்டைப் போன்றது என்பதை

புலவர் குறிப்பால் உணர்த்துகிறார் எனலாம். களவு வாழ்க்கையின் தன்மையை விளக்க காடு பற்றிய செய்திகள் உதவுகின்றன.

2. வீமன் அழலிலிருந்து மீண்டு தன் சுற்றத்தோடு வெளியேறுகிறான். அதுபோல தலைவன் மற்றவர் கூறும் அலர் மொழியிலிருந்து மீண்டு தலைவியோடு மணம் புரிய வேண்டும் என்பதைத் தோழியின் கூற்றாய் புலவர் குறிப்பால் உணர்த்த இப்பாரத தொன்மத்தை மிகப் பொருத்தமாய் உவமையாக்கியுள்ளார் எனலாம். ***அகத்தில் இருக்கும் சிறப்பு என்னவென்றால் எதனையும் வாய்திறந்து பட்டவர்த்தனமாக வெளிப்படையாகச் சொல்லும் மரபு இல்லை. சுட்டி உணர்த்தும் முறைமையே உண்டு. அகத்தில் வரும் கூற்றுகள் எல்லாவற்றிலும் இப்பண்பைக் காணலாம். அகத்துக்குரிய விடயங்களை இயற்கைப் பின்புலத்திலே வைத்துச் சூசமாகச் சொல்வார்கள். உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிகென அமைக்கும் முறைதான் உள்ளுறை***[2] இம் மேற்கோள் சுட்டுவதுபோல தொன்மங்கள் உள்ளுறுத்து கூறுவதற்காகப் பயன்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

அடுத்ததாக இராமாயணத் தொன்மம் உவமையாகப் பயின்று வரும் சங்க இலக்கியப் பாடல் ஒன்றைக்காணலாம் மன்னன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியின் கொடைச் சிறப்பைக் கூறுகின்றது. இம் மன்னனிடம் பெருஞ்செல்வம் பெற்ற புலவன் பாடுவதாகப் பாடல் அமைந்துள்ளது. புறநானூற்றில் (378) வரும் இப்பாடலில் புலவரின் சுற்றத்தார் மன்னனிடமிருந்து பெற்ற பொன் ஆபரணங்களை எங்கு அணிவது என்று அறியாமல் விரலில் அணிபவற்றைச் செவியிலும், செவியில் அணிபவற்றைக் கழுத்திலும் அணிந்தனர். இக்காட்சிக்கு இராமாயணத் தொன்மத்தை உவமை கூறுகிறார்.

> **கடுந்தெறல் இராம னுடன்புணர் சீதையை**
> **வலித்தகை அரக்கன் வெளவிய ஞான்றை**
> **நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்**

செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தா அங்கு
அறாஅ அருநகை இனிது பெற்றிகுமே (புறம், 378: 18-22)

என்கிறார் புலவர். சீதையை அரக்கன் இராவணன் கவர்ந்து சென்ற போது, தான் போகுமிடத்தை இராமனுக்குத் தெரிவிப்பதற்காகச் சீதை தன் அணிகலன்களை நிலத்தில் எறிந்தாள். அந்த அணிகலன்களைக் கண்டெடுத்த சிவந்த முகத்தையுடைய மந்திக் கூட்டம் அவ்வணிகலன்களை எங்கு அணிவது என்று அறியாமல் காதில் அணிவதைக் கழுத்திலும், கழுத்தில் அணிவதைக் கையிலும் மாற்றி மாற்றி அணிந்தது போலிருந்தது புலவரின் சுற்றத்தாரின் செயல் என்கிறார்.

இத்தொன்மத்தை உவமையாகப் புலவர் பயன்படுத்தியதின் நோக்கங்கள் கீழ்காணுமாறு.

1. குரங்குக் கூட்டத்திற்கு அணிகலன் பற்றிய அறிவு கிடயாது. அதே போன்று புலவரின் சுற்றத்தாரும் ஏழ்மை நிலமையில் உழன்றதால் பொன்னால் ஆன அணிகலன்கள் பற்றி அவர்களும் அறியாமல் இருந்தனர் எனக் கொள்ளலாம்.

2. குரங்குகள் கூட்டமாக வாழும் பண்புடையன, அதுபோல புலவரின் சுற்றத்தாரும் ஒன்றாகக் கூடி வாழ்ந்துள்ளதால் தொன்மம் பொருத்தமாக ஆளப்பட்டுள்ளது எனலாம்.

3. சீதை வீசிய அணிகலன்கள் இராவணனிடமிருந்து இராமன் தன்னைக் காப்பாற்றுவான் என்ற நோக்கத்தில் போடப்பட்டன அதே போன்று ஏழ்மை எனும் அரக்கன் பிடியிலிருந்து புலவரின் சுற்றத்தைக் காக்க மன்னனால் அணிகலன்கள் அளிக்கப்பட்டன என்ற வகையிலும் இத்தொன்மம் பொருத்தமாக ஆளப்பட்டுள்ளது. புலவரின் சுற்றத்தாரின் வறுமையைச் செம்மையாகப் பதியச் செய்யப் புலவர் இந்த இராமாயணத் தொன்மத்தை மிகப் பொருத்தமாக உவமையாக்கிருக்கிறார் எனலாம்.

மற்றொரு இராமாயணத் தொன்மம் உவமையாகப் பயின்று வரும் பாடல் கலித்தொகையில் (38) காணப்படுகிறது. களவு வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களைக் கூறி, தலைவியை விரைவில் மணம் புரியுமாறுத் தோழி கூறுகிறாள். இப்பாடலில் புலவர், தலைவனின் நாடு எப்படிப்பட்ட காட்டை உடையது என்று தோழி வாயிலாக நிறுவுகிறார் யானையின் பார்வைக்கு வேங்கை மரம் புலி வடிவம் போன்றிருந்தது. அதனால் மரத்தின் அடிப்பகுதியில் தன் கொம்பைக் குத்தி அதை வாங்கமாட்டாது காடே அதிரும்டி ஒலி யெழுப்பும் காட்டை உடைய மலை நாடனே என்கிறார். யானையின் இச்செய்கைக்கு இராவணன் தொன்மத்தைப் புலவர் உவமையாக்கியுள்ளார்.

இறைவனும் இறைவியும் அமர்ந்திருக்கும் இமயமலையை, பத்து தலையையுடைய இராவணன் அம்மலையின் கீழ் தன் கைகளைச் செருகி எடுக்க முடியாமல் திணறியது போலிருந்தது யானை வேங்கை மரத்தடியில் தன் கொம்பைக் குத்தி நின்ற காட்சி என்கிறார் இதைப் பாடலில் கூறும்பொழுது,

**இமையவில் வாக்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமையமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக**
**ஐயிரு தலையின் அரக்கர் கோமான்**
**தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத்து – அம்மலை**
**எடுக்கல் செல்லாது உழப்பவன் போல**
**உறு புலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையைக்**
**கனுவுகொண்டு அதன் முதல் குத்திய மதயானை**
**நீடு இருவிடர் அகம் சிலம்பக் கூய், தன்**
**கோடு புய்க்கல்லாது, உழக்கும் நாட! கேள்!**
**ஆர் இடை என்னாய் நீ அரவு அஞ்சாய் வந்தக்கால்**
**நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை**
**கார்பெற்ற புலமே போல் கவின் பெறும்: அக்கவின்**
**தீராமல் காப்பது ஓர்திறன் உண்டேல், உரைத்தைக்கான்.**

என்கிறார். இப்பாடலில் தொன்ம உவமை பயன்படுத்தியதின் நோக்கத்தை ஆராயும்போது தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களைக் கூறி, தலைவன் தலைவியைக் காண முடியாது போனால் தலைவி வாட்டமுற்று அழகு கெடுகிறாள் என்பதை

> **இருள் இடை என்னாய் நீ இரவு அஞ்சாய் வந்தக்கால்**
> **பொருளில்லான் இளமைபோல் புல்லென்றாள்,**
>
> ..........................................................................................
>
> **மறம் திருந்தார் என்னாய் நீ மலையிடை வந்தக்கால்,**
> **அறம் சாரான் மூப்பே போல் அழிதக்காள்,** (கலி. 38)

இவ்வாறு தோழி கூற்றாகப் புலவர் கூறுகிறார். இப்பாடலில் தோழி மூலமாகத் தலைவனைக் களவு வாழ்க்கையை நீட்டிப்பது கூடாது. மணவாழ்க்கை மேற்கொள்ள வேண்டும் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

இராவணன் தன் பலத்தின் மேலுள்ள அதிகமான நம்பிக்கையினால் மலையினடியில் கையைச் செருகி எடுக்க இயலாமல் வருந்தினான். அதுபோல தலைவனும் தான் தலைவியின் மேல் கொண்டுள்ள அதிகமான அன்பின் காரணமாக, களவு வாழ்வில் ஈடுபட்டு பல இன்னல்களை அனுபவிக்கின்றான். களவுக் காலத்தில் இன்னல்கள் என்றால், யாரும் அறியா வண்ணம் அஞ்சி அஞ்சித் தலைவியைக் காண வருவது, இரவுநேரத்தில் ஆபத்துகள் நிறைந்த பாதையில் தலைவியைக் காண வருவது மற்றவர்கள் கேலிப் பேச்சிற்கு ஆளாதல். அதனால் தலைவி இத்செறிக்கப்படுதல், இதன் காரணமாகத் தலைவன் ‘மடலேறுதல்’ போன்ற துன்பங்களை அடைவது இதெல்லாம் களவுக் காலத்தில் தலைவன் தலைவி எதிர்கொள்ளும் இன்னல்களாகும், இராவணன் இமயமலைக்குள் கையைச் செருகி எடுக்க இயலாது வருந்தியது போல தலைவன் களவுவாழ்வை நீட்டித்து வருந்த வேண்டாம் என்பதைக் கூறப் புலவர் இத் தொன்மத்தைப் பொருத்தமாகப் பயன்படுத்தியுள்ளார். **தொன்மவியல் ஒரு சமுதாயத்தின் பண்பு நலனையும்,**

உள்ளத்தையும் ஆழ்ந்து ஆய்கிறது. தொன்மங்கள் – தொல்லுருக்கள் ஒரு மக்கள் கூட்டத்தின் நம்பிக்கைகளையும், அச்சங்களையும் விருப்பங் களையும் குறியீடாக எடுத்துரைக்கின்றன.[3] இம்மேற்கோளுக்கிணங்க சங்கப்புலவர்கள் தாங்கள் கூறவிரும்பும் கருத்துகளுடன் தொன்மங்களை உவமைகளாக ஆக்கி இலக்கியத்திற்கு மேலும் அழகு சேர்த்துள்ளமை தெரிய வருகின்றது. இத்தொன்மம் இராமாயணத்தில் இராவணன் சீதையிடம் சொல்லப்படுவதாக உள்ளது. அக்காலத்தில் இராமாயணத்தில் நடைபெற்றதாகச் சொல்லப்பட்ட சிறு நிகழ்ச்சியும் மக்களிடையே வாய்மொழிக் கதைகளாகப் பேசப்பட்டிருக்க வேண்டும். இதனாலேயே புலவர் இந்த இராவணன் தொன்மத்தை உவமையாகக் கையாண்டிருக்கிறார் எனலாம்.

மற்றுமொரு அகப்பாடலில் மகாபாரதத் தொன்மம் உவமையாகப் பயின்று வந்துள்ளது. கலித்தொகையில் உள்ள ஒரு பாடலில் (139) தலைவன் தலைவி ஈடுபடும் களவு வாழ்க்கையில் ஏற்படும் மடலேறுதல் என்ற வழக்கம் குறிப்பிடப்படுகிறது. மடலேறும் தலைவன், சான்றோரை நோக்கி, ‘அரசன் தான் தவம் செய்தலினின்றும் நீங்கி, துறக்கத்திற் சேரலை வழுவுதலினாலே ஆன்றோர் அவ்வழுவுதலினின்று அரசனை மீட்டுத்தவம் செய்வித்து உயர்ந்த நிலை உடைய சுவர்க்கத்திலே போகச் செய்து துயர்தீர்த்தாற் போல என் துயரத்தினது தன்மையைப் போக்குதலும் நுமது தலையாய கடனாகும்’ என்கிறான். இதையே பாடல் வரிகள்,

**அறிந்தனிர் ஆயின் சான்றவிர் தான்தவம்**
**ஒரீஇத் துறக்கத்தின் வழீஇ ஆன்றோர்**
**உள்ளிடப்பட்ட அரசனைப் பெயர்த்தவர்**
**உயர்நிலை உலகம் உறீஇ யாங்கென்**
**துயர்நிலை தீர்த்தல் நுந்தலைக் கடனே** (கலி: 139: 33-37)

என்கின்றன. இப்பாடலில் அரசனை மீட்டுத் தவம் செய்வித்து உயர்நிலையை அடையச்செய்தது போல, தன்னையும் துயரிலிருந்து மீட்கும் படி தலைவன்

கூறுகிறான். அரசன் என்று குறிப்பிடப்படுவது பாண்டவர்களின் முன்னோர்களில் ஒருவனான யயாதி ஆவான். பாண்டவர்களின் முன்னோர்களின் வரைபடம் மூலம் கீழ்க்காணுமாறு விளக்கப்படுகின்றது.




மேற்கண்ட கலித்தொகைப் பாடலின் (139) கருத்துக்கு போவதற்கு முன் யயாதியின் தொன்மம் பற்றிய செய்திகளை அறிந்து கொண்டால், இப்பாடலின்

நிகழ்வுக்கும், தொன்மத்திற்கும் இடையே உள்ள ஒப்புமை விளங்கும். தொன்மம் பயன்படுத்தப்பட்டுள்ள நோக்கத்தையும் முழுமையாக அறிய இயலும்.

யயாதி என்ற அரசன் தன் முதல் மனைவி தேவயாணி அறியாவண்ணம் சன்மிஷ்டை என்ற பெண்ணை மனைவியாக ஏற்றுக்கொண்டு வாழ்கிறான். இச்செயல் முதல் மனைவியான தேவயாணியின் தந்தை சுக்ராச்சாரியாருக்குத் தெரிந்து விடுகின்றது. அதனால் சுக்கிரரின் சாபத்திற்கு யயாதி ஆளாகிறான். சாபத்தின்படி மூப்பு அடைந்து வருந்துகிறான். சிற்றின்பத்தின் மீது கொண்ட தீராத அவாவினால் தன் மகன் பூருவிடமிருந்து அவன் இளமையை வாங்கி யயாதி சிற்றின்பத்தில் மூழ்கினான். பின்பு சிற்றின்ப ஆசை தீராது, மேலும் மேலும் வளரும்' என்ற உண்மையைப் புரிந்துகொண்ட யயாதி, தன் மகனுக்கு இளமையை அளித்து, தன் மூப்பை வாங்கிக் கொண்டு தவம் செய்து சொர்க்கம் அடைந்தான் என்று இதிகாசம் கூறுகின்றது.

இந்த யயாதியைப் புலவர் தலைவனுக்கு (கலி. 139) உவமையாகக் காட்டுவதோடு, தலைவன் கூற்றாகவும் இதனைக் கூறுகின்றார். இப்பாடலின் தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கத்தை ஆராயும்பொழுது,

- ☆ யயாதி சிற்றின்பத்தின் மேல்கொண்ட ஈடுபாட்டினால் இன்னலுற்றான். அதேபோன்று தலைவனும் களவு வாழ்க்கையில் கொண்ட ஈடுபாட்டால் இன்னல் அடைகிறான்.
- ☆ யயாதி திரும்ப முதுமை பெற்று, தவம் செய்து சொர்க்கம் அடைந்தான். அதேபோல தலைவனும் களவு வாழ்க்கையிலிருந்து வெளிவந்து தலைவியை மணம்முடித்து இன்ப வாழ்க்கை வாழ விரும்புகிறான்.

சோதிடக் கணிப்புப்படி சுக்கிரரின் அருட்பார்வை இருந்தால்தான் ஒருவனின் இல்லற இன்பம் சிறப்பாக இருக்கும் என சோதிட சாத்திரம் மூலம் தெரிகிறது. யயாதிக்கு சுக்கிரருடைய அருட்பார்வை இல்லாது போனதால்தான் சிற்றின்ப நுகர்வுக்கு ஏற்ற இளமையை இழந்து இன்னல்களை அடைந்தான் என இதிகாசம் கூறுகின்றது.

கலித்தொகைப் பாடலிலும் (139) தலைவனும் தலைவியுடன் இல்லற வாழ்க்கை மேற்கொள்ள மடலேறுகிறான். அவ்வாறு மடலேறும் தலைவன் யயாதியைக் குறிப்பிடும் பொழுது சுக்கிரரின் அருள் இல்லறத்திற்குத் தேவை என்பதை சுட்டாமல் சுட்டவே புலவர் பாடலில் யயாதி தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்துகிறார் எனலாம். இதன் மூலம் பின்வரும் கருத்துகள் புலனாகின்றன.

1. ஒருவனுக்கு ஒருத்தி என வாழாவிடில் யயாதி பெற்ற துன்பத்தைப் பெற நேரிடும்.
2. சிற்றின்பம் என்பது நிலையற்றது. காட்டுத்தீ போல மேலும் மேலும் அதிகமாகி மனிதனை அழித்துவிடும்.
3. சுக்கிரர் அருள் கிடைக்காவிடில் ஒருவனால் இல்லறத்தில் ஈடுபட இயலாது, இதுபோன்ற கருத்துகளை களவு வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் தலைவன் மூலமாக புலவர் அறிவுறுத்த இந்த யயாதி தொன்மத்தை பயன்படுத்தி யுள்ளார் எனலாம்.

மகாபாரதத்தில் இடம்பெற்ற ஒரு பாத்திரத்தை உவமையாகக் கொண்டு பதிற்றுப்பத்தில் உள்ள ஒரு பாடல் (14) உள்ளது. இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனின் சிறப்பைக் கூற வந்த புலவர் நிலம், நீர், வளி, விசும்பு என்ற நான்கின் அளப்பு அரியையே, நாள், கோள், திங்கள், ஞாயிறு, கனை அழல் ஐந்து ஒருங்கு புணர்ந்த விளக்கத்து அனையை:

**போர்த்தலை மிகுந்த ஈர் ஐம்பதின்மரொடு**
**துப்புத்துரை போகிய துணிவுடை ஆண்மை**
**அக்குரன் அனைய கைவன் மையையே** (பதிற்றுப். 14: 1-7)

என்கிறார். துரியோதனன் முதலிய கௌரவர் நூற்றுவரும் போர் செய்வதிலே வல்லவர் ஆவர். அவர்களுக்குத் துணைவலியாகும் வகையில் இறுதிவரையில் உதவியாக இருந்தவனும் அஞ்சாமையுடையவனுமாகிய அக்குரனை யொத்த பெருங்கொடைச்சிறப்பினை உடையவன் நெடுஞ்சேரலாதன் என்கிறார் புலவர்.

கௌரவருக்கு துணையாய் நின்ற அக்குரன் என்றதால் கர்ணனாக இருக்கலாம் எனவும்; அதற்கு ஆதாரம் கிடைக்கவில்லை என்றும் உ.வே.சா. குறிப்பிடுகின்றார். அக்குரனே கர்ணன் எனக் கருத்தில் கொண்டு ஆராயும்பொழுது சேரலாதனின் வாழ்க்கை நிகழ்வுகளும் கர்ணன் தொன்மமும் ஒற்றுமையுடையதாக உள்ளதைக் காணமுடிகிறது. பதிற்றுப்பத்துப் பாடல் மூலம் சேரலாதன் பற்றிய செய்திகளும், பாரதச் செய்திகள்வழி கர்ணன் தொன்மமும் கீழ்க்கண்டவாறு அட்டவணையிடப்படுகின்றன.

| எண் | நெடுஞ்சேரலாதன் | கர்ணன் |
|---|---|---|
| 1. | போரில் போர் புரியும் வீரர்களுக்கு அவர்களைப் பாதுகாக்கும் பொருட்டு போரில் புகுந்த வீரர்களுக்கு மார்புக் கவசமாய் விளங்குபவன். | கர்ணன் கௌரவப்படைகளைக் காக்கும் பொருட்டு போர் புரிந்தான். கௌரவர்களுக்கு மிகவும் பக்கபலமாக இருந்தான் எனப் பாரதம் கூறுகின்றது. |
| 2. | தன்னைப் பாடிய புலவருக்குத் தேவை யான செல்வத்தை வழங்குபவன் இச்சேர லாதன் என்று புலவர் பாடுகிறார். | தன்னை நாடி வந்தவர்களுக்கெல்லாம் கொடை அளிப்பவன் கர்ணன். |
| 3. | சேரலாதன் போர் செய்தலை விரும்பி நின்ற வலிமையுடையவன் எனப் புலவர் பாடுகிறார். | கர்ணனும் துரியோதனுக்காகப் போரை விரும்பி ஏற்றுப் போரிடும் வலிமையுடை யவன் என பாரதச் செய்தி கூறுகின்றது |
| 4. | ஒருமுறை சேரலாதனுக்கும், சோழ மன்னன் வேல்பஃறாடைக்கைப் பெரு நற்கிள்ளிக்கும் போர் மூண்டது. நற்கிள்ளி வேற்போரில் வல்லவன் என்பது அவன் பெயரிலே உள்ளது. | "குருசேத்திரம்" எனுமிடத்தில் நடந்த பாரதப் போரில் கர்ணனும் விற்போரில் வல்லவனான அர்ச்சுனனுடன் போர் புரிந்தான் எனப் பாரதம் கூறுகிறது. |
| 5. | நற்கிள்ளியுடன் நடந்த போரில் சேரலாதன் உயிர் நீங்குகிற தருணத்தில் கழாத்தலையார் எனும் புலவர் அவனைக் கண்டு பாடி அவனது கழுத்திலிருந்த ஆரத்தைப் பரிசாகக் கேட்டார். சேர லாதன் ஆரத்தை வழங்கி மாண்டான். | போர்க்களத்தில் பாரதப்போரில் கர்ணன் உயிர் நீங்குகிற தருணத்தில் கிருஷ்ணர் அந்தணர் வடிவில் கர்ணனை யாசித்து இதுவரை அவன் செய்த புண்ணியங் களனைத்தையும் தானமாகக் கேட்டார். கர்ணன் அத்தானத்தை வழங்கி இறந்தான். இது பாரதம் கூறும் செய்தியாகும். |

ஆக சேரலாதனுக்கும் கர்ணனுக்கும் உள்ள ஒற்றுமைகளை மனதில் கொண்டு புலவர் நெடுஞ்சேரலாதனுக்குக் கர்ணனைப் பொருத்தமாக உவமையாக்கியுள்ளார். புலவர் இவ்விருவருக்கும் உள்ள பொருத்தத்தை மனதில்கொண்டு இத்தொன்மத்தை உவமையாக்கிப் பாடலுக்கு நயமும் சிறப்பும் சேர்த்துள்ளார்.

மற்றுமொரு சங்க இலக்கியப் பாடலில் மகாபாரதத்தொன்மத்தை உவமையாகப் புலவர் கையாண்டுள்ளது கீழ்க்காணுமாறு அமைகிறது.

முல்லை நிலத்தில் ஆயர்குல வழக்கமாயிருந்த ஏறு தழுவுதல் எனும் நிகழ்வை முல்லைக் கலிப் பாடல் வழியாக அறிய முடிகிறது. ஏறுதழுவுதல் என்பது ஒரு வீர விளையாட்டாகும். ஆயர் குலத்து ஆடவர்கள் தாங்கள் விரும்பும் பெண்டிரைக் காளையை அடக்கியபின் திருமணம் புரிந்தனர். பலவிதமான காளைகள் அணிவகுத்து வர, அவற்றை இளைஞர்கள் எதிர்த்து நின்று அடக்குவர். அந்த நிகழ்ச்சிகளை விளக்க புலவர்கள் இதிகாசத் தொன்மங்களைப் பல இடங்களில் உவமையாக்கி யுள்ளனர். இதற்குச் சான்றாக ஒரு சில பாடல்களைக் கூறலாம். ஒரு பாடலில் ஏறுதழுவிய பின்னர் தொழுத் தோற்றத்திற்கு பாரதப் போர்க்களத்தை உவமை கூறுகிறார் புலவர். இதை,

> **புரிபு மேல் சென்ற நூற்றுவர் மடங்க**
> **வரிபுனை வல்வில் ஐவர் அட்ட**
> **பொருகளம் போலும் தொழூஉ** (104: 57-59)

என்ற வரிகளில் தெரிவிக்கின்றார். அதாவது ஏறுதழுவிய பின்னர் காணப்படும் தொழுத் தோற்றம் போரை விரும்பி மேலே சென்ற நூற்றுவர்கள் தோல்வி அடையுமாறு, வரிந்துக் கட்டப்பெற்ற வலிமை படைத்த வில்லினை உடைய பாண்டவர்கள் போரிட்ட போர்க்களம் போன்றிருந்தது என்கிறார். இதில் இளைஞர்களுக்கும், காளைகளுக்கும், பாண்டவர்களையும் நூற்றுவரான கௌரவர்களையும் உவமையாகக் காட்டியுள்ளார். ஏறுதழுவுதல் நடந்து முடிந்த தொழுத் தோற்றத்திற்குப் பாரதப் போர் நடந்த போர்க்களத்தை உவமையாக்கியமை பொருத்தமாக உள்ளது எனலாம்.

ஏறுதழுவுதல் எனும் நிகழ்ச்சி இன்றளவும் தென்மாவட்டங்களில் குறிப்பாக மதுரைக்கு அருகிலுள்ள கிராமப்புறங்களில் நடந்து வருகின்றன. இன்று அவ்வீரவிளையாட்டை "ஜல்லிக்கட்டு" என்று கூறுகின்றனர். அன்றைய காலத்தில் காளையை அடக்குவது திருமணத்திற்காக நடத்தப்பட்டது. இன்று ஆண்களின் தைரியத்தையும் வீரத்தையும் காட்டும் முகமாக நடந்து வருகின்றன.

ஏறுதழுவுதலில் காளைகளுக்கும், இளைஞர்களுக்கும் நடக்கும் நிகழ்வுகளில் கூரிய கொம்புகளுடன் சீறிவரும் காளைகள் தன்னை அடக்குபவரை,

**வரி பரிபு இறுபு குடர் சோரக் குத்தி – தன்**
**கோடு அழியக் கொண்டானை ஆட்டி**
**வாடா வெகுளி எழல் ஏறு – திரிபு உழக்கும்**

என்ற வரிகள் மூலமாய் எலும்புகள் முறியவும், குடர்கள் சரியவுமாகக் குத்திப் பின்னர்த் தன் கொம்புகளின் வலிமை அழியுமாறு தழுவிக் கொண்டிருந்தவனை அங்குமிங்கும் ஆட்டி, அலைக் கழித்துத் திரிந்து கலக்கும் குறையாத கோபத்தினை உடைய அழகிய ஏறு என்று ஏறுதழுவுதலில் நடக்கும் நிகழ்ச்சியைக் கூறுகிறார் புலவர்.

ஏறு தழுவிய பின்னர் உள்ள தொழுத் தோற்றத்திற்குப் பாண்டவரும் நூற்றுவரும் போரிட்ட போர்க்களம் உவமையாக காட்டப்படுகின்றது. இவ்விரண்டு நிகழ்வுகளுக்குமுள்ள ஒற்றுமைகளைக் கீழ்க்கண்ட முறையில் அட்டவணைப்படுத்தலாம்.

| எண் | ஏறுதழுவுதலுக்குப்பின் தொழுத்தோற்றம் | பாரதப் போர்க்களம் |
|---|---|---|
| 1. | ஏறு தழுவும் நிகழ்வுக்கு முன்னர் பறைகள் மிகுந்த ஒலியுடன் முழங்கின. இதனை "பறை எழுந்து இசைப்ப பல்லவர் ஆர்ப்ப" (கலி. 104: 29) என்கிறது பாடல்வரி | "குரைசெய் வான் பனைக் குப்பைகள் யாவினும் முரச கால முழங்கின சாலவே" (வீட்டும பருவம் முதற்போர்ச் சருக்கம்) என்று பாண்டவ கௌரவப் போர் தொடங்குவதற்கு முன்பு ஒலித்தலைச் செய்யும் பறைகள் முழங்கின என்கிறது பாடல்வரி (வில்லிபாரதம், ராஜ கோபாலாச்சாரியார், பக். 18, 19) |

| எண் | ஏறுதழுவுதலுக்குப்பின் தொழுத்தோற்றம் | பாரதப் போர்க்களம் |
|---|---|---|
| 2. | இறைவனின் கணிச்சி படைபோலக் கொம்புகள் சீவப்பட்ட ஏறுகளை ஒரு சேரத் தொழுவினுள் புகவிட்டதைப் பாடல் வரிகள்<br>"சீறு அரு முன்பினோன் கணிச்சி போல்<br>ஏறு தொழூஉப் புகுந்தனர்" (கலி. 101: 8) | "கொற்றவர் தம்மை யேழக்<br>குரோணிவெஞ் சேனையோடும்<br>பற்றுடை யசல மாகும் பான்மையால்<br>வியூக மாக்கி"<br>ஏழு அக்குரோணி என்னும் தொகை உடைய சேனையோடும், சேனைத் தலைவர்களாகிய அரசர்களைத் தொடர்ச்சியுடைய மலை என்று சொல்லும் தன்மையுடைய வியூகம் ஆக்கி நின்றதாகத் தெரிகிறது (மேலது) |
| 3. | மைந்தர் தழுவுதலினாலே எலும்புகள் முறிந்து, முறிந்து தசைகள் சிதறிப் பரவிக் கிடந்தன. இதைப் பாடல்,<br>"மறுத்து மறுத்து மைந்தர் சார<br>தடிகுறை இறுபு இறுபு தாயின கிடப்ப"<br>(கலி 104: 52-53)<br>என்கிறது. | "உற்ற வன்றலை சிந்திட வோச்சினான்<br>அற்ற தன்றலை கொண்டவ னுந்தனைச்<br>செற்ற வன்றலை சிந்திட வீசினான்"<br>என்று வீரர் இருவரில் ஒருவன் வாள் படையோடு நின்று எதிர்வந்தவன் தலை சிந்தும்படி வீசினான். அற்ற தலையைக் கொண்டவனும், தன் தலை அறுத்தவன் தலை சிதறும்படி வாளை வீசினான் என்று பாரதப் போரின் ஒரு காட்சி விளக்கப்படுகிறது (மேலது). |
| 4. | ஏறுகளும், பொதுவரும் தம்முள் மாறு படுகையில் பல்வேறு இசைக் கருவிகள் முழங்கின. இதைப் பாடல் வரிகள்,<br>"கார் எதிர் கலிஒலி கடி இடி உருமின்<br>இயம் கறங்க" (கலி. 105: 24)<br>எனக் கூறுகின்றன. | பாரதப்போர் தொடங்குமுன் பறை ஒலிக்க, முரசுகள் அதிர, கிருஷ்ணர் வலம்புரி சங்கு கொண்டு ஒலியெழுப்ப போர் தொடங்கியதாகக் கூறப் பட்டுள்ளது. |
| 5. | மிகுந்த வலியுடைய ஏற்றை நகை நெகிழ விடாது வெற்றி கொள்வாய். அவ்வாறு செய்தால் எம் ஆய மகளை அடையலாம் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள். இதனை,<br>"............. கண்ணஞ்சா ஏற்றை<br>விடாஅது கொள்குவை ஆயின்:<br>படாஅகை<br>ஈன்றன ஆயமகள் தோள்"<br>என்கிறது பாடல். | பாரதப் போரில் வீடுமன் கௌரவர் களுக்குப் பெரும் வலிமை சேர்த்தார் அவரைப் போரில் வீழ்த்தியபின்<br>"வென்றனம் இனிநாம் என்று மெய்ம்<br>முகில் வண்ணன் சொல்ல"<br>என்ற வரிகளில் இனிநாம் பகைவரை வெற்றி பெற்றுவிட்டோம் என்று கண்ணன் கூறினான் (வில்லிபாரதம் டாக்டர் ஜெகத்ரட்சகன், ப. 328)[4]<br>பாரதப் போரிலும் கௌரவர்களை வென்றால் பாண்டவர்களுக்கு நாடு கிடைக்கும் என்ற நிலை இருந்தது. |

ஏறுதழுவுதலில் தலைவன் காளையை அடக்கினால், வெற்றி பெற்றதாகக் கொள்ளப்பட்டு தலைவியைத் திருமணம் செய்து கொள்ள இயலும். அதேபோல் பாரதப்போரில் வீடுமனை அழித்ததால் பாண்டவர் வெற்றி பெற்றதாகக் கொள்ளப்பட்டு நாட்டைப் பெறமுடியும் என்ற செய்தி உள்ளது. இவ்வாறு ஏறுதழுவிய தொழுத்தோற்றத்திற்கும், பாண்டவர் போரிட்ட போர்க்களத்திற்கு உள்ள பல ஒற்றுமைகள் உள்ளதால் ஏறுதழுவுதல் பாடல்களுக்கு புலவர் பாரதப் போர் தொன்மத்தை உவமையாகக் கையாண்டுள்ளார் எனலாம்.

தொழுத்தோற்றத்திரற்கு உவமையாகப் போர்க்களம் என்று பொதுவாகக் கூறாமல் பாண்டவர் போரிட்ட போர்க்களம் என்று பாரதத் தொன்மத்தை உவமையாக்கியிருப்பதன் காரணங்களாகக் கருதப்படுவன.

1. பாரதப் போரில் பாண்டவர் எண்ணிக்கையை விட, கௌரவர் எண்ணிக்கை அதிகம், அதுபோல ஏறுதழுவுதலில் காளைகளின் எண்ணிக்கையை விட, காளைகளை அடக்க முன்வரும் பொதுவர் எண்ணிக்கை அதிகம், இதைக் குறிப்பாக உணர்த்த பாரதத் தொன்மத்தை பயன்படுத்தியிருக்கலாம்.

2. பாரதப் போரின் தொடக்கத்தில் வெற்றி பெறுபவர் பாண்டவரா? கௌரவரா? என்று அறிய இயலாது. அதுபோல ஏறுதழுவுதலிலும் ஏறுகளா? பொதுவர்களா என்று வெற்றி பெறுபவர் யாரென அறிய இயலாது.

3. தங்களை வெல்ல எண்ணும் பாண்டவர்களைத் தாக்கி வெற்றி பெற முயன்றனர் கௌரவர்கள். அதுபோல தம்மை அடக்கி வெல்ல எண்ணும் பொதுவரை சாவக்குத்தி வெற்றி பெற முயன்றன காளைகள் என்பதை தொன்ம உவமை பார்த்த வழியாக உணர்த்துகிறார் புலவர் எனலாம். ஆகவே மேற்கண்ட கருத்துகளின் ஒற்றுமையை மனதில்கொண்டு புலவர் பாரதத் தொன்மத்தை உவமையாக்கியிருப்பதாகக் கொள்ளமுடியும்.

மற்றுமொரு சங்கப் பாடலில் பாரதத் தொன்மம் உவமையாகப் பயின்று வந்துள்ளது. கலித்தொகையில் (52) தலைவன், தலைவியைக் காணவரும்

தருணத்தில் அவன் வருகை எழுப்பும் ஒலியானது யானை வருவது போலவும், புலி வருவது போலவும், ஊரிலுள்ளோர் நினைப்பார்கள் எனக் கூறப்பட்டுள்ளது. இதனை,

> ***ஐது அகல் அல்குலாள் செய்குறி நீ வரின்***
> ***ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்***
> ***களிறு என ஆர்ப்பவர்; ஏனல் காவலரே***

என்றும்

> ***ஐதுஅகல் அல்குலாள் செய்குறி நீ வரின்***
> ***கறிவளர் சிலம்பில் வழங்கலானாய்***
> ***புலி என்று ஓர்க்கும், இக்கலி கேழ் ஊரே***
> ***விலங்கு ஓரார் மெய் ஓர்ப்பின், இவள் வாழாள் இவள் அன்றி***
> ***புலம்புகழ் ஒருவ! யானும் வாழேன்;***
> ***அதனால் பொதி அவிழ் வைகறை வந்து நீ குறைகூறி***
> ***வதுவை அயர்தல் வேண்டுவல்! அங்க***
> ***புதுவை போலும் நின்வரவும் இவள்***
> ***வதுவை நாண் ஒடுக்கமும் காண்குவல் யானே*** (கலி. 52)

எனப் பாடுகிறார் புலவர். தலைவன்தான் வருகிறான் என ஊரார் அறிந்து விட்டால், தலைவியின் களவு வெளிப்பட்டுவிடும். அவ்வாறு வெளிப்பட்டு விட்டால் தலைவி உயிர் வாழமாட்டாள். அவளை இழந்து தானும் வாழ இயலாது. அதனால் விரைவில் வந்து தலைவியை மணந்து கொள் எனத் தோழியின் கூற்றாகக் கூறிவிட்டு புதியவனைப் போல தலைவி வீட்டாரிடம் தலைவன் வந்து பெண் கேட்பதையும், தலைவி நாணத்துடன் திருமணக் கோலத்தில் தலைவனருகில் இருக்கும் காட்சியை தான் காண வேண்டுமென்கிறாள் தோழி. இப்பாடலில் தலைவனுடைய நாட்டின் மலைச்சாரலில் காணப்படும் ஒரு காட்சிக்கு பாரதக்

காட்சியை உவமையாக்குகிறார். தன்னைத் தாக்க வந்த புலியை சினந்து அதன் நெஞ்சைத் தன் கூறிய கொம்பால் குத்திக் கொன்ற யானையையுடைய மலைநாடனே என்று தலைவனைத் தோழி விளிக்கிறாள். இதில் யானையின் செயலுக்கு இதிகாசத் தொன்மமும், புராணத் தொன்மமும் உவமையாக வந்துள்ளன. ஒரே காட்சிக்கு இரு தொன்மங்களை உவமையாகப் பயன்படுத்திப் புலவர் தான் கூற விரும்பும் கருத்துக்கு வலுச் சேர்க்கிறார் எனலாம். அத்தொன்மங்களாவன:

நூற்றுவர்க்குத் தலைவனாகியத் துரியோதனனைப் பாரதப் போரில் வீமன் தொடையில் அடித்து உயிரைப் போக்கியது போல யானை புலியின் நெஞ்சைப் பிளந்து கொன்றது. அதன்பின் அந்த யானை மல்லர்களைக் கொன்ற திருமாலின் தோற்றத்தைப் போன்று கம்பீரமாகச் சென்றது என்பது கீழ்க்காணும் பாடலில் விளக்கப்பட்டுள்ளது. அப்பாடல்:

***முறம்செவி மறைப் பாய்வு முரண் செய்த புலிசெற்று***
***மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்***
***குறங்கு அறுத்திடுவான் போல், கூர்நுர் மடுத்து, அதன்***
***நிறம் சாடி முரண் தீர்ந்த நீள்மருப்பு எழில்யானை***
***மல்லரை மறம் சாய்ந்த மால் போல் தன்கிளை நாப்பன்***
***கல் உயர் நனஞ்சாரல் கலந்து இயலும் நாட!***

என்கிறார் புலவர். யானையின் செயலுக்கு வீமனையும் யானையின் தோற்றத்திற்குத் திருமாலையும் உவமை காட்டியிருப்பதன் நோக்கத்தை ஆராயும்பொழுது புலவர் தோழி வாயிலாக தலைவனுக்குக் கூற விரும்பும் கருத்துகளை அறிவுறுத்த இத்தொன்மங்களை எடுத்தாண்டுள்ளார் எனலாம். இவ்விரு தொன்மங்களும் போரிட்டு வெற்றி பெற்றவர்களான வீமனையும், திருமாலையும் கூறுகின்றன. அக இலக்கியத்தில் தலைவன் விரைவாக மணம்

செய்து கொள்ளக்கூறும் பாடலில் போரிட்டு வெற்றி பெற்ற தொன்மப் பாத்திரங்கள் உவமையாகக் காட்டப்பட்டுள்ளன. இத்தொன்மங்களை ஆண்ட நோக்கத்தை ஆராயவும் பொழுது கிடைக்கும் செய்திகளாகவன.

1. வீமன் -துரியோதனன் ஆகியோர் இடையில் பகை மூண்டதால் போர் நடந்தது. இதுபோல தலைவன் - தலைவி ஆகியோர் இடையில் களவு ஏற்பட்டதால் பிறருக்குத் தெரிந்துவிடும் ஆபத்து உண்டானது.

2. துரியோதனனின் தொடையில் அடித்தால் அவன் மாண்டுவிடுவான் என்ற சூட்சமத்தை அறிந்து கொண்டு வீமன் அச்செயலைச் செய்து வெற்றி பெற்றான். அது போன்று தலைவன், புதியவனைப் போல வந்து பெண் கேட்டால், திருமணம் நடக்கும் என்ற சூட்சுமத்தைக் கூறுகிறாள் தோழி.

3. வீமனுக்குத் துரியோதனன் எதிரி என்பது போன்று தலைவனுக்கு, தலைவனின் களவு வாழ்வைப்பிறர் அறிந்தால் அதுவே தலைவனின் களவு வாழ்க்கைக்கு எதிரியாகிவிடும் என்பதைக் குறிப்பாகக் கூறுகிறார்.

4. வீமன் துரியோதனனை வீழ்த்தி வெற்றிபெற்றான் அது போலத் தலைவனும் ஊரார் பேச்சுக்களை வீழ்த்துவது போன்று தலைவியை மணம் செய்து கொண்டு வாழ்வில் வெற்றி பெற வேண்டும் என்று தோழி கூறுவதாகப் பொருத்தமாக இத்தொன்மம் ஆளப்படுகின்றது

5. மல்லர்களைத் திருமால் அழித்தது போல, தலைவன் தனக்கெதிராக உருவாகும் சூழலை அழித்துத் தலைவியை மணம் செய்து கொள்ள வேண்டும் என்பதற்காகக் கூறப்பட்டிருக்கலாம்

6. வீமனும், திருமாலும் தங்களைக் காத்துக் கொள்ள துரியோதனனையும் மல்லர்களையும் வீழ்த்தி வெற்றி பெற்றனர். இதுபோல தலைவனும் தலைவியுடனான தங்கள் அன்பைக் காத்துக் கொள்ள அலர் போன்ற

இன்னல்களை வென்று விரைவில் திருமணம் முடித்து வாழ்வில் வெற்றிபெற வேண்டும். என்பதற்காகவும்,

7. தன்னைக்கொல்ல வந்த மல்லர்களை அழித்து திருமால் தன்னைக் காத்துக் கொண்டு இவ்வுலகிற்கு அருளியது போலத் தலைவனும் ஊரார் தூற்றும் அலரிலிருந்து தன்னைக் காத்துக் கொண்டு, தலைவியை மணந்து கொள்வதின் மூலம் அவளுக்கு அருள் செய்ய வேண்டும் என்பதற்காகவும் சொல்லப்பட்டிருக்கலாம்.

**மல்லரை மறம் சாய்த்த மால் போல்**

என்ற வரிக்கேற்ப திருமால், தன் கிருஷ்ணாவதாரத்தில் தான் கம்சனால் ஏவப்பட்ட மல்லர்களை அழிக்கின்றார்.

**தன்கிளை நாப்பன்**

என்பதற்கேற்ப கிருஷ்ணர் எல்லோராலும் விரும்பப்பட்டவர். கோபியர்களின் மனங்கவர் கள்வன் என ஸ்ரீமத் பாகவத புராணம் கூறுகின்றது. கிருஷ்ணன் மேல் அழியாக் காதல் கொண்டிருந்ததைக் குலசேகர ஆழ்வார்,

**வார் மணற் குன்றில் புலர நின்றேன்**
**வாசுதேவா உன் வரவு பார்த்தே**

என ஆறாம் திருமொழிப் பாடலில் பாடுகிறார். மணற்குன்றில் உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டு பொழுது விடியுமளவும் காத்திருந்தேன் என கிருஷ்ணரை நோக்கி, குலசேகர ஆழ்வார் கூறுவது போல இச்சங்கப்பாடலும் தலைவனின் வருகைக்காக தலைவியும் எதிர்நோக்கிக் காத்திருக்கிறாள் என்று கூறுகின்றது. இக்கிருஷ்ண தொன்மத்தை சங்க இலக்கியப் பாடலோடு ஒப்புமைப் படுத்தினால்,

| **தொன்மம்** | | **பாடல் இடம்பெற்றவைகள்** |
|---|---|---|
| கிருஷ்ணர் | ——> | தலைவன் |
| பக்தி | ——> | களவு |
| அடியவர்/கோபியர் | ——> | தலைவி |
| மல்லர் | ——> | அலர் |
| கம்சன் மல்லரை ஏவுதல் வருகைக்குக் காரணம் | ——> | ஊரார் அலரைத் தூற்றுதல் எழுவதற்கு காரணம் |

என்ற இந்த வகைகளிலெல்லாம் இத்தொன்மங்கள் பொருத்தமுறக் கையாளப்பட்டுள்ளன எனத் தெளிவாகின்றன.

அடுத்ததாக, சிறுபாணாற்றுப்படையில் (238-239) நல்லியக்கோடனின் கொடைப் பண்பிற்குப் பாரதத் தொன்மம் உவமையாக வந்துள்ளது. நல்லியக்கோடானிடம் பரிசு பெற்ற பாணன், மற்றொரு பாணரிடம் ஆற்றுவித்துப் பாடுவதாகப் புலவர் பாடலை அமைத்துள்ளார். அப்பாடல்வரிகளாவன:

**கா எரி யூட்டிய கவர்கணைத் தூணிப்**
**பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்**
**பனிவரை மார்பன், பயந்த நுண்பொருட்**
**பனுவலின் வழாஅப் பல்வேறு அடிசில்** (238-241)

என்று நல்லியக்கோடன் அளிக்கும் சுவையான உணவுக்குப் பாரதத் தொன்மத்தை உவமையாகக் கொள்கிறார் புலவர். சமையற்கலையில் சிறந்தவன் எனப் புகழப்பட்டவன் வீமன். அப்படிப்பட்ட வீமன் எழுதிய மடைநூலின் (சமையற்கலை நூல்) படி சமைத்த அறுசுவை உணவை அளிப்பவன் நல்லியக்கோடன் ஆவான் என்கிறார் புலவர். இப்பாடலில் வீமனைக் குறிப்பிடும்பொழுது காண்டவ வனத்தை

எரித்த அருச்சுனனின் உடன்பிறந்தவன் என்ற குறிப்பு உள்ளது. இப்பாடலின் மூலம் அருச்சுனன் காண்டவன வனத்தை எரித்தச் செய்தியும் வீமன் சமையற்கலையில் வல்லவன் என்ற செய்தியும் தெரிய வருகின்றன.

மேற்கண்டப் பாடலில் இடம்பெற்ற தொன்மத்திற்கும் பாடல் தலைவன் நல்லியக்கோடனிற்கும் ஒப்புமைப்படுத்தி ஆராயும்பொழுது தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கங்களைத் தெளிவாக அறியமுடிகின்றது.

1. அருச்சுனன் தன்னை நாடி வந்த அக்கினி பகவானின் பசிப்பிணி தீரும் பொருட்டு காண்டவ வனத்தை அழித்து உதவினான். அதுபோல நல்லியக்கோடன் தன்னை நாடி வருபவருக்குப் பசிப்பிணி தீரும் பொருட்டு உணவளித்து உதவினான்.

2. அருச்சுனன் போர் புரிவதில் வல்லவன் என்று இதிகாசம் கூறுகிறது. அதுபோன்று நல்லியக்கோடனும் போரில் வல்லவன் என்பதை

   ***ஆண் அணி புகுதலும் அழிபடை தாங்கலும்***

   ***வான்மீக் கூற்றத்து வையவர் ஏத்த..........*** (சிறுபாண்.216 - 218)

   என்ற சிறுபாணாற்றுப் பாடல் வரிகள் கூறுகின்றன.

பொதுவாக சங்க இலக்கியப் பாடல்களில் உவமையாக வரும் பாரதத் தொன்மங்களில் பெரும்பாலும் வீமனே உவமையாகக் கூறுப்படுகிறான். அப்படியிருக்க இச்சிறுபாணாற்றுப்படையில் வீமனுடன் அருச்சுனன் பற்றிய தொன்மம் பயன்பட்டுள்ளது. நல்லியக்கோடனின் சிறப்பை உயர்த்திக் கூறவே வீமனையும், அருச்சுனனையும் மிகப் பொருத்தமான வகையில் புலவர் உவமை யாக்கியிருக்கிறார்.

இதிகாசத் தொன்மங்கள் பெரும்பாலும் கலித்தொகையில் உவமைகளாக ஆளப்பட்டுள்ளன. அதுவும் குறிப்பாக பாடலில் கூறப்படும் காட்சிக்கு

உவமைகளாக வந்துள்ளன. அதிலும் பெரும்பான்மையாக விலங்குகளின் செயல்களுக்குத் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன. அதிகமான அளவில் வீமன் தொன்மங்களே உவமை காட்டப்படுகின்றன. காட்சிகளுக்கு உவமையாகக் கூறப்படும் தொன்மங்களைப் பாடலின் முதன்மை பாத்திரங்களான தலைவன், தலைவியோடு ஒப்புமைப்படுத்தி ஆராயும்பொழுது, தொன்மங்கள் பொருத்தமாகவும், பல செய்திகளைத் தருவதாகவும் உள்ளன. அகப்பாடலில் வந்துள்ள தொன்ம உவமைகள் மூலமாகப் புலவர் களவு வாழ்க்கை பற்றித் தாம் கூறவிரும்பும் கருத்துகளை பாடல் பாத்திரம் வழியாக உலகிற்கு உணர்த்த விழைகிறார் எனலாம்.

## புராணத் தொன்மங்கள்

புராணங்கள் என்பவை கடவுளரின் திருவிளையாடல்கள், அவதாரக் கதைகள், கடவுள் பற்றிய செய்திகளை உள்ளடக்கியவை ஆகும். இப்புராணங்கள் கடவுளைப் பற்றிச் சொல்லும்போது மனிதனுக்கு வேண்டிய நல்ல கருத்துக்களைக் கூறி, மனிதனை நல்வழிப்படுத்துகிறது. அதுபோல சங்க இலக்கியமும் தமிழர் வாழ்க்கை முறையை இலக்கியத்தின் மூலம் விளக்குகிறது. சங்க காலத்தில் உவமைகளாகப் புராணக் கதைகள் ஒரு சில வரிகள் அமைப்பில் வந்துள்ளன. புராணகாலம் - சங்ககாலம் இடையே உள்ள காலவரையறைப் பற்றி ஆய்ந்தவர் கூறும் கருத்துகளாவன: ***இந்து சமய வரலாற்றில் ஏறத்தாழ கி.மு. 2000 முதல் கி.மு. 500 வரையில் வேதகாலம் (The Vedic Period) எனவும், கி.மு. 500 முதல் கி.மு. 200 வரையில் மனு தர்ம சாத்திரக் காலம் (the Manudharma Sutra Period) எனவும், கி.மு. 200 முதல் கி.பி. 300 வரையில் இதிகாசக் காலம் (the epic period) எனவும், கி.பி. 300 முதல் கி.பி. 750 வரையில் புராண காலம் (the puranic period) எனவும், கி.பி. 750 முதல் கி.பி. 100 வரை தத்துவ தரிசனக் காலம் (the darshana period) எனவும், கி.பி. 1000***

முதல் கி.பி. 1800 வரையில் இடைக்காலம் (the medieval period) எனவும், கி.பி. 1800க்குப் பிறகு தற்காலம் (the Modern period) எனவும் கொள்ளப் படுகிறது. பல அனுமானங்களின் அடிப்படையிலான இக்கணக்கீடு ஒரு அணுகுமுறையே யன்றி இறுதியானதன்று. தமிழ இலக்கிய வரலாற்றில் ஏறக்குறைய கி.மு. 300 முதல் கி.பி. 300 வரை சங்ககாலம் என்று கருதப்படுகிறது.[5]

புராண காலம் கி.பி. 300 முதல் கி.பி. 750 வரை என்றால் சங்க காலத்துக்குப் பின் புராணங்கள் எழுத்து வடிவில் வந்தது என்பது தெரிகின்றது. சங்க காலத்துக்குப் பின் வந்த புராணங்கள் எப்படி சங்க இலக்கியத்தில் இடம்பெற்றிருக்க முடியும்? என்ற கேள்வி எழுகிறது. அதற்கு விடையாகக் கீழ்காணும் கருத்தை எடுத்துக்காட்டலாம். பாரத நாட்டு இலக்கிய வகைகளுள் ஒன்று புராணமாகும். புராண இலக்கியத்தின் தோற்றத்தை அறுதியிட்டுக் கூற இயலாது. வேத காலத்திற்கு முன்பு புராணங்கள் பழைய கதைகளாக வழங்கி வந்தன. அதர்வண வேத காலத்திலேயே புராணங்கள் சிறந்த இலக்கியங்களாக கருதப்பட்டன.[6] இவ்வாறாக வந்த புராணங்கள் சங்க இலக்கியத்தில் உவமைகளாக புலவர்களால் கையாளப்பட்டுள்ளன.

## புராணத் தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கம்

சங்க காலத்திற்குப் பின் பக்தி இலக்கியக் காலம் வளர்ச்சியடைந்தது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் பக்தி இலக்கியத்தை வளரச் செய்தவர்கள் ஆவர். சங்க காலத்திலேயே பக்தி வித்திடப்பட்டது எனலாம். சங்கப் பாடல்களில் அகப் பாடல்களிலும், புறப்பாடல்களிலும் கடவுளர் பற்றிய கதைகள் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளன. கடவுளர் பற்றிய கதைகளே புராணங்கள் எனப்பட்டன. சிவன், திருமால், முருகன் என்ற மூன்று தெய்வங்களைப் பற்றிய கதைகள்,

குறிப்புகள் சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இம்மூன்று தெய்வங்களின் வழிபாடு அன்றைய காலத்தின் முதன்மையான வழிபாடாக இருந்திருக்க வேண்டும். மக்களிடையே அக்கடவுளர் பற்றிய கதைகள் புழக்கத்தில் இருந்திருக்கும். அதனாலேயே புலவர்கள் அக்கதைகளைப் பாடல்களில் உவமையாக்கித் தந்துள்ளனர் எனலாம். அகஇலக்கியத்திலும், புற இலக்கியத்திலும் கடவுளர் தொன்மங்கள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டதின் நோக்கம் இந்தத் தலைப்பில் ஆராயப்படுகின்றது.

முதலாவதாக, சிவன் பறிய தொன்மங்களைக் காணலாம். சிவன் பற்றிய தொன்மங்கள் இடம்பெற்ற இலக்கியங்களாகக் கலித்தொகை, புறநானூறு, மலைபடுகடாம் என்ற மூன்றும் அமைகின்றன. இதனைக் கீழ்க்காணும் வரைபடம் விளக்குகிறது.




இதுதவிர சிறுபாணாற்றுப்படை, பதிற்றுப்பத்து, மதுரைக்காஞ்சி, அகநானூறு இவற்றிலும் சிவன் தொன்மம் உவமையாக வந்துள்ளது.

## கலித்தொகை கூறும் சிவன் தொன்மங்கள்

சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான கலித்தொகையில் சிவன் தொன்மங்கள் பெருமளவில் உவமையாக கையாளப்பட்டுள்ளன. அதிலும் பாலைக்கலி தவிர்த்து மற்ற எல்லாத் திணைகளிலும் சிவன் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன. மருதக் கலியில் கற்பு வாழ்விற்கும், மற்ற மூன்று கலிகளில் (குறிஞ்சி, நெய்தல், முல்லைக் கலிகள்) களவு வாழ்விற்கு உவமையாகச் சிவன் தொன்மங்கள் வந்துள்ளன.

குறிஞ்சிக் கலியில் ஒரு பாடலில் தலைவன் தலைவியைக் காண இரவு நேரத்தில் வருகிறான். அப்போது தோழி தலைவனிடம் தலைவியின் நிலைமைப் பற்றிக் கூறி விரைவில் திருமணம் செய்துகொள்ளுமாறு கூறுகிறாள்.

நீ அடையும் துன்பத்தைக் கூறக் கேட்ட தலைவன் வேங்கை மலரும் காலத்தை எதிர்பாரா நின்று, பெருத்த முன் கையினையுடைய மூங்கில் போன்ற நின்தோளை வரைந்து கோடற்க வருவான் என்பதை,

**நின்உறு விழுமம் கூறக்கேட்டு**
**வருமே, தோழி! நன்மலை நாடன்**
**வேங்கை விரிவு இடம்நோக்கி**
**வீங்கு இறைப் பணைத் தோள் வரைந்தனன் கொளற்கே**

(கலி. 38: 23-26)

என்கிறாள் தோழி. புலவர் தலைவனின் நாடு எத்தகையது என்று கூறும்போது வேங்கைப் பூ பூத்த மரத்தை புலி என்று யானையானது நினைத்து தன் கொம்புகளை மரத்தினடியில் செருகி எடுக்க மாட்டாது அலறியது. இப்படிப்பட்ட காட்டை உடைய மலை நாடனே என்கிறார். இதில் யானையின் அச்செய்கை எப்படி உள்ளதென்றால் இறைவன் சிவபெருமான இறைவி உமையம்மையுடன் உயர்ந்த இமயமலையில் இருந்தபோது, அரக்கர்களின் தலைவனான இராவணன்

இமய மலையை எடுத்ததற்காகக் கைகளைக் கீழே செருகிக் கைகளை எடுக்க இயலாமல் வருந்தியது போலிருந்தது என்று கூறுகிறார் புலவர். இதனைப் பாடல் வரிகள் (38).

**இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக** (38: 1-2)

என்று கூறுகிறது. சிவன் தொன்மம் இங்கு உவமையாக ஆளப்பட்டுள்ளது. சிவன் தொன்மத்தை இப்பாடலில் மிகப் பொருத்தமாகப் புலவர் கையாண்டுள்ளார். அப்பொருத்தங்களாவன:

1. சிவன் உமையோடு இருந்த மலையை இராவணனால் எவ்வாறு எடுக்க இயலவில்லையோ அதுபோல, தலைவன் தலைவியுடன் இணைந்து இருந்ததால், (இணைதல் என்பது திருமணம் முடித்தல் என்று பொருள்படக் கூறப்படுகிறது) ஊரார் பேசும் அலரால் ஒன்றும் செய்ய இயலாது. அலர் செயலிழந்து போய்விடும் என்ற அளவில் இவ்வுவமை மிகப் பொருத்தமாக ஆளப்பட்டு தோழியின் நோக்கம் இதுவாகும் என்று புலவர் குறிப்பால் கூறுவதாகக் கொள்ளலாம்.

2. சிவன் தன் இடப் பாகத்தைத் தன் துணைவியான சக்திக்குத் தந்தவர். அதனால் அர்த்தநாரீஸ்வரன் என்று பெயர் பெற்றவர். இதை மாணிக்க வாசகர் தன் திருவாசகத்தில்,

**தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்**
**பால்வெள்ளை நீரும் பசுஞ்சாந்தும், பைங்கிளியும்**
**சூலமும், தொக்க வளையும் உடைத் தொன்மைக்**
**கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத் தும்பீ!**

என்று சிவன் பாதி, உமை பாதியாக நிற்கும் அர்த்தநாரி வடிவத்தைப் பாடுகிறார். அப்படிப்பட்ட சிவன், சக்தியைப் போலத் தலைவனும்

இமய மலையை எடுத்ததற்காகக் கைகளைக் கீழே செருகிக் கைகளை எடுக்க இயலாமல் வருந்தியது போலிருந்தது என்று கூறுகிறார் புலவர். இதனைப் பாடல் வரிகள் (38).

**இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக** (38: 1-2)

என்று கூறுகிறது. சிவன் தொன்மம் இங்கு உவமையாக ஆளப்பட்டுள்ளது. சிவன் தொன்மத்தை இப்பாடலில் மிகப் பொருத்தமாகப் புலவர் கையாண்டுள்ளார். அப்பொருத்தங்களாவன:

1. சிவன் உமையோடு இருந்த மலையை இராவணனால் எவ்வாறு எடுக்க இயலவில்லையோ அதுபோல, தலைவன் தலைவியுடன் இணைந்து இருந்ததால், (இணைதல் என்பது திருமணம் முடித்தல் என்று பொருள்படக் கூறப்படுகிறது) ஊரார் பேசும் அலரால் ஒன்றும் செய்ய இயலாது. அலர் செயலிழந்து போய்விடும் என்ற அளவில் இவ்வுவமை மிகப் பொருத்தமாக ஆளப்பட்டு தோழியின் நோக்கம் இதுவாகும் என்று புலவர் குறிப்பால் கூறுவதாகக் கொள்ளலாம்.

2. சிவன் தன் இடப் பாகத்தைத் தன் துணைவியான சக்திக்குத் தந்தவர். அதனால் அர்த்தநாரீஸ்வரன் என்று பெயர் பெற்றவர். இதை மாணிக்க வாசகர் தன் திருவாசகத்தில்,

**தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்**
**பால்வெள்ளை நீரும் பசுஞ்சாந்தும், பைங்கிளியும்**
**சூலமும், தொக்க வளையும் உடைத் தொன்மைக்**
**கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத் தும்பீ!**

என்று சிவன் பாதி, உமை பாதியாக நிற்கும் அர்த்தநாரி வடிவத்தைப் பாடுகிறார். அப்படிப்பட்ட சிவன், சக்தியைப் போலத் தலைவனும்

தலைவியை விட்டுப் பிரியாமல் மணம்செய்து வாழவேண்டும் என்று தோழி உள்ளுரையாகக் கூறுவதாகக் கொள்ளலாம்.

3. சிவனும் உமையும் இமயமலையை இருப்பிடமாகக் கொண்டமர்ந்து போல, தலைவனும் தலைவியும் களவு வாழ்வை விடுத்து மலைபோன்ற நிலையான கற்பு வாழ்க்கைக்குள் செல்ல வேண்டும் என்பதை கூறுவதற்காக ‘மலைநாடன்’ என்று தோழி குறிப்பிட்டாள் எனக் கருதவும் ஏது உள்ளது. புலவர் இப்பாடலில்,

**இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**

என்று சிவனை மட்டும் குறிப்பிடாமல் “உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக” என்று உமையாளையும் சேர்த்துக் கூறியதிலிருந்து இரு செய்திகள் புலப்படுகின்றன.

4. சிவனொடு உமையும் குறிப்பிடப்படுவதால் தலைவனும் தலைவியோடு என்றும் பிரியாதிருக்க வேண்டுமெனின் மணம் செய்து கொள்ள வேண்டும், என்பதற்கு இத்தொன்மம் ஆளப்பட்ட நோக்கம் நிறைவேற்றப்பட்டுள்ளது. கடவுளைக் கூட தனித்து வணங்கும் வழங்கும் தமிழரிடையே அக்காலத்தில் இருந்திருக்கவில்லை என்ற கருத்து இத்தொன்மம் மூலம் புலனாகிறது. இன்றும் சிவத் தலங்களில் சக்திக்கும் தனிச் சந்நிதி இருக்கின்றது என்பதை எண்ணிப் பார்க்கத்தக்கது,சிவன் தன் தேவியுடன் இருக்கும் இத்தொன்மத்தைக் கையாண்டதன் மூலம் களவு வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் தலைவனை மண வாழ்க்கைக்குள் வரவழைக்கும் பொருட்டு இத்தொன்மப் பயன்பாடு முழு வெற்றி பெற்றுள்ளது எனக் கூறலாம்.

அடுத்ததாக சிவன் தொன்மம் கையாளப்பட்டுள்ள மருதக் கலிப்பாடல் (81) ஒன்றைக் காணலாம்.

**மைஅறு விளங்கிய மணிமருள் அவ்வாய் தன்**
**மெய்பெறா மழலையின் விளங்கு பூண் நனைத்தர,**
**பொலம் பிறையுள் தாழ்ந்த புனை வினை உருள் கலன்**
**நலம் பெறு கமழ் சென்னி, நகையொடு துயல்வர** (81: 1-4)

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

**பாலோடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்**
**கால் வல்தேர் கையின் இயக்கி நடை பயிற்றா**
**ஆல் அமர் செல்வன் அணிசால் பெருவிறல்**
**போல வரும் என் உயிர்** (81: 7-10)

என்ற இப்பாடலில் தலைவன் பரத்தையின் பொருட்டுப் பிரிந்து சென்று, பின்னர் தன் வீட்டிற்கு வந்து தலைவி அறியாத வண்ணம் சிறைபுறத்தே நிற்கிறான். இதையறியாத தலைவி தலைவன்பால் மனவருத்தத்தில் உள்ளாள். விளையாடிக் கொண்டிருக்கும் தன் சிறுமகனின் அழகைத் தோழியிடம் புகழ்ந்து சொல்கிறாள். பால் உண்பதை மறந்து விட்டு, முற்றத்திலே உருட்டி விளையாடும் தேரைக் கையால் தள்ளியவாறே மகன் நடைபயிலுகின்றான் ஆலமர் செல்வனின் அழகிற் சிறந்த முருகனைப் போல என் உயிரான என் மகனும் இதோ வருகின்றான் என்கிறாள் தலைவி.

தலைவன் பரத்தையரிடத்தே இருப்பதைப் பாணன் கூற, மனம் வருந்தி தன் மகனின் மழலைச் சொற்கள் தன் மனவருத்தத்தைப் போக்கும் மருந்தாக இருக்கும் என்று மகனை பேசச் சொன்னபோது, அவன் தன் தந்தையைக் கண்ணுற்று தந்தையைக் குறிக்கும் விதமாக “அத்தத்தா” என்று திரும்பத் திரும்பக் கூறுகிறான் என்கிறாள் தலைவி.

மேற்கண்ட பாடலில் “ஆலமர் செல்வன்” என்ற சொல் சிவனையே குறிக்கும். சிவபெருமான் தெற்குத் திசை நோக்கி ஆலமரத்தின் கீழிருந்து அறம் உரைத்தான் என்று புராணம் கூறுகிறது. ஆலமர் செல்வனின் மகன் அழகிற் சிறந்த

முருகப்பெருமான் போன்ற அழகுடன் இருந்தான் தன் மகன் என்று தலைவி கூறுகிறாள்.

தன் மகனின் அழகிற்கு கடவுளின் மகனான முருகனை உவமை கூறியிருப்பதன் நோக்கம் ஆராயத்தக்கது.

1. முருகன், சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியவர் என புராணம் கூறுகின்றது. முருகன் பிறப்பில் சிவனின் துணைவியான சக்திக்கு பங்கு இல்லை. சிவனின் துணைவி என்பதால் முருகனின் தாயாகக் கருதப்படுகிறாள். முருகன் அவதாரத்தில் சிவனுக்கே முக்கியத்துவம் உள்ளது. இவ்வாறுள்ள முருகன் சிவன் தொன்மத்தை, தலைவியின் மகனுக்கு உவமையாக்கியிருப்பது பொருத்தமாக அமைந்துள்ளது. ஏனெனில் தலைவி தன் மகன் மீது தீராத அன்பு கொண்டிருந்தாலும், மகன் தன் தந்தை மேல் அன்பு கொண்டவனாக 'அத்தத்தா' என்று கூறுகிறான். இதைத் தலைவி "நோய் நாம் தணிக்கு மருந்து" எனப் பாராட்ட ஓவாது அடுத்தடுத்து அத்தத்தா என்பான் என்று கூறுகிறாள். எனவே தந்தை மேல் அன்பு கொண்டு தந்தையைக் கூப்பிடும் மகனுக்கு, சிவனாகிய தந்தையால் பிறந்த முருகன் தொன்மத்தைப் பொருத்தமான சிறப்பான உவமையாகப் புலவர் கையாண்டுள்ளார்.
2. சிவன் தன் துணைவியான உமையைத் தவிர மற்றொரு பெண்ணான கங்காதேவிக்குத் தன் சிரசில் இடமளித்திருந்தார் எனப் புராணம் கூறுகின்றது. அதுபோல இப்பாடலின் தலைவனும் தன் தலைவியைத் தவிர மற்றொரு பெண்ணிடம் (பரத்தையிடம்) மையல் கொண்டிருந்தான்.
3. கங்கை பலரின் தாகத்தை தீர்த்து, தேகத்திற்கு சுத்தத்தை அளிக்கிறது. பரத்தை பலரின் உடல்வேட்கையைத் தீர்த்து, அவர்களின் தேகத்திற்கு சுகத்தை அளிக்கிறாள். ஆகவே இப்பாடலில் எல்லா வகையிலும் சிவன்

தொன்மம் மிகப் பொருத்தமான உவமையாகிறது எனலாம். இக்கருத்துகளைக் கூறாமல் கூறவே சிவன் தொன்ம உவமை பயன்படுத்தப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம்.

மருதக்கலியில் மற்றுமொரு பாடலில் (83) சிவன் தொன்மம் உவமை வந்துள்ளது. தலைவன் பரத்தையரிடம் சென்று திரும்பி வந்து சிறைப்புறமாய் நிற்கிறான். தலைவி தன் மகனை விளையாட அழைத்துப் போகுமாறு தோழியுடன் அனுப்பி வைத்தாள். திரும்பி வர தோழி தாமதப்படுத்த, தோழி வந்தவுடன் தாமதத்திற்கான காரணத்தைத் தலைவி கேட்டாள். பனங்குரும்பைகளை கழி நுனியில் பொருந்தியத் தேரை தலைவியின் மகன் உருட்டி விளையாடியபோது அகன்ற மனையை நோக்கி வராது நின்றான். அம்மனையிலிருந்த இளமகளிர், ஆலமர் செல்வனின் மகனான முருகனின் திருநாள் வந்ததோ என சிலம்பொலிக்க வாயிலுக்கு வந்தனர். வாயிலுக்கு வந்தனர். இவன் இன்னானென அறிந்ததும், இவனை தன் இல்லத்திற்கு அழைத்தனர். இவனும் அவர்களோடு சென்றுவிட்டான். இதுவே தாமதத்திற்கான காரணம் என்று தோழி கூறுவதாக உள்ள பாடல் வரிகளாவன:

**பெரு மடற் பெண்ணைப் பிணர்த் தோட்டுப் பைங்குரும்பைக்**
**குடவாய்க் கொடி பின்னல் வாங்கி, தளரும்**
**பெரு மணித் திண்தேர்க் குறுமக்கள் நாப்பண்.**
**அகல் நகர் ன் தருவானாக புரி நெகிழ்பு**
**நீல நிரைப்போது உறு காற்கு உலைவன போல்**
**சாலகத்து ஒல்கிய கண்ணர், 'உயர் சீர்த்தி**
**ஆல் அமர் செல்வன் அணிசால் மகன் விழாக்**
**கால்கோள் என்று ஊக்கி, கதுமென நோக்கி,**
**திருந்து அடி நூபுரம் ஆர்ப்ப இயலி, விருப்பினால்**
**கண்ணும், நுதலும், கடவுளும், கவ்வியார்க்கு** (83: 8-17)

**வேற்று ஆனாத் தாயர் எதிர் கொள்ள, மாற்றாத**
**கள்வனால் தங்கியது அல்லால், கதிபாதி**
**ஒள்ளிழாய்! யான் தீது இலேன்.** (83: 23-25)

என்கிறது பாடல் வரிகள். இப்பாடலிலும் ஆலின் கீழ் இருந்த இறைவன் என்று சிவனைக் குறிப்பிடுகின்றார். இறைவனுடைய மகன் என்பது முருகனைக் குறிப்பிடுகின்றது. ஏனெனில் இறைவனின் இன்னொரு மகனான பிள்ளையார் வழிபாடு பிற்காலத்தில் ஏற்பட்டது. சங்க இலக்கியத்தில் முருகன் வழிபாடு மட்டும் இருந்துள்ளது என்பதை இலக்கியம் மூலம் அறிய முடிகிறது.

**ஆல்அமர் செல்வன் அணிசால் மகன் விழாக்**
**கால்கோள் என்று ஊக்கி** (83: 14-15)

என்கின்ற இப்பாடல் வரிகளும்

**ஆல்அமர் செல்வன் அணிசால் பெரு விறல்**
**போல வரும் என் உயிர்** (81: 9-10)

என்கின்ற பாடல் வரிகளும் ஒரே கருத்துகளைக் கொண்ட பாடல்களுக்கு உவமையாகின்றன. இரு பாடல்களிலும் பரத்தையரிடமிருந்து திரும்பிய தலைவன் சிறைப்புறமாய் நிற்க, தலைவி தன் மகனைப் பற்றி தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளன. மேற்கண்ட இரு மருதக்கலிப் பாடல்களிலும் (81, 83) பாடப்படும் பொருள் ஒன்றுதான். அதுபோல் அதில் பயின்று வரும் சிவன் தொன்ம உவமையும் ஒன்றாக உள்ளது. சிவனும், முருகனும் தந்தை தனயன் என்ற உறவின் அடிப்படையில் ஒன்றாகப் பாடல்களில் சுட்டப்படுகின்றனர்.

சங்க காலத்திலிருந்து மனித உறவுகளுக்கு தெய்வ உறவுகளை உவமைப் படுத்திக் கூறியுள்ளனர். **தெய்வங்களை மனித நிலைப்படுத்தி அம்மனித நிலையின் இன்றியமையா உணர்ச்சி பாவங்களை அத்தெய்வத்தின் மேல் ஏற்றி முழுமத அனுபவத்தையுமே சமூக அனுபவ குறியீடுகளில் (ஆண்டான் – அடிமை; காதலன் – காதலி; தகப்பன் – பிள்ளை, தாய் – பிள்ளை, நண்பன்) வெளிப்படுத்தும் முயற்சிதான் பக்தி முறையாகும். சைவ வைணவ மதங்களில் நிலவிய ஐதீகங்கள் (Myths) தெய்வங்களை மனிதப் பண்புப் படிமத்தில் நோக்க உதவின.**[6] இந்த வகையில் தெய்வங்களின் தொன்மங்கள்

இலக்கியம் வாயிலாக உவமையாகச் சொல்லும்பொழுது படிப்பவர் மத்தியில் ஆழப்பதிகிறது. தொன்மங்கள் எனும்போதே அன்றைய காலக்கட்டத்தில் நடந்ததாகச் சொல்லப்படுவதாகும். அதிலும் புராணத் தொன்மங்கள் என்கின்றபோது தெய்வங்களுக்கு மனிதப் பண்புகளை ஏற்றி கடவுளின் துணைவி, கடவுளின் பிள்ளை எனக் கூறப்படுகிறது. தெய்வங்களுக்கு ஏற்றிக் கூறுவதினாலேயே கடவுளர் தொன்மங்கள் இலக்கியக் காட்சிகளுக்கு உவமையாகப் பொருந்திவருகிறது. தாம் கூற விரும்பும் பாடலின் கருத்தை தொன்மம்வழி இலகுவாக மனதில் பதிவு செய்ய புலவர் கையாளும் உத்தியாகத் தொன்மம் வழிசெய்து, இலக்கியத்திற்குச் சுவை கூட்டுகிறது எனலாம். சிவன் தொன்மங்கள் பயின்றுவரும் சில முல்லைக்கலிப் பாடல்களில் சிவன் காளையின் தோற்றத்திற்கு உவமையாகக் காட்டப்பட்டுள்ளான். முல்லைக்கலியில் சிவன் தொன்மம் இடம்பெற்றதைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.




இந்நான்கு பாடல்களில் சிவனின் தோற்றமும், சிவன் திருவிளையாடலும் உவமையாக வந்துள்ளன. அது மட்டுமல்லாமல் விலங்கினமான காளைக்கும் கடவுள் உவமையாகிறார்.

முல்லைக்கலிப் பாடலில் (101) கரிய எருதானது கண்ணி சூடிய பொதுவனைச் சாடி, குடர் சரியக் குத்தி குலைப்பதன் தோற்றம் ஊழி முடிவிலே பசிய நிறத்தைத் தன் பாகத்தே உடைய கடவுள், உயிரினங்களை அழிக்கும் எருமைக்கடா மீது ஏறிவரும் கூற்றுவனுடைய நெஞ்சைப் பிளந்து, குடரைக் கூளிக்கு இட்டு அதன் வயிற்றை நிரப்புவது போன்றிருந்தது என்கிறார் புலவர்.

இப்பாடலில் தலைவிக்கு, தோழி தலைவன் ஒரு நாள் வந்து ஏறு தழுவி தலைவியைத் திருமணம் செய்துகொள்வான் என ஆற்றுவித்தாள். இப்பாடலின் கருத்துக்குச் சிவன் தொன்மத்தை உவமையாக்கியதன் நோக்கத்தை ஆராயும்பொழுது, ஏறுதழுவுதலில் தன் மேல் பாய்ந்த இளைஞனை குடர் சரியக் குத்திய காளை, ஊழிமுடிவில் கூற்றுவனைக் கொன்ற சிவன், பாடல் கருத்து என்ற மூன்றுக்கும் உள்ள இயைபுகள் கீழே அட்டவைணப்படுத்தப்பட்டுள்ளன.

| எண் | பாடல் கருத்து | ஏறுதழுவுதல் | சிவன் தொன்மம் |
|---|---|---|---|
| 1. | தலைவிக் கற்பு மணத் திற்காகப் போராடுதல் | எருது ஆயர்குலப் பொது வர்களுடன் சண்டை யிடுதல் | சிவன் கூற்றுவனுடன் எதிர்த்து நிற்றல் |
| 2. | தலைவி, தலைவனுக்கு ஏறுதழுவுதலில் என்ன நடக்குமோ என்று அச்சம் கொண்டாள் | காளையை எதிர்க்கும் இளைஞன் என்ன நடக்கு மோ என்றும், காளை தன்னைச் சாடுபவன் ஏது செய்வானோ என்றும் அச்சம் கொண்டது | சிவனால் எதிர்க்கப்பட்ட கூற்றுவன் சிவனின் சினத்தைக் கண்டு அச்சம் கொள்ளல் |
| 3. | தலைவன் வராததால் தலைவி வருத்தமடைதல் | காளைகளும் ஏறு தழுவின வரும் புண் பெற்று வருந் தினர் | சிவனின் செய்கையால் கூற்றுவன் வருத்தம் அடைதல் |

இப்படி பல ஒற்றுமைகள் உள்ளன. முடிவாக சிவன் கூற்றுவனைக் கொன்றது போல தலைவனும் காளையை அடக்கி தலைவியை மணம் முடிப்பான் என்று தோழி மறைமுகமாய் தலைவிக்கும் கூறுவதாகக் கொள்ளலாம். தலைவன் காளையை அடக்கித் தலைவியைக் கைபிடிப்பான் என்று குறிப்பாகக் கூறுவதினால் இதை எளிதாகப் புரிய வைப்பதற்குப் புலவர் சிவன் தொன்மத்தை மிகப் பொருத்தமாக உவமையாக்கியுள்ளார் எனலாம்.

முல்லைக்கலியின் மற்றொரு பாடலிலும் (103) மேற்கண்ட பாடலின் கருத்தைப் போல தலைவன் விரைந்து வந்து ஏறுதழுவி தலைவியை மணப்பான் எனத் தோழி தலைவியை ஆற்றுவிப்பதாக உள்ளது. இப்பாடலில் உவமையாகச் சொல்லப்படும் சிவன் தொன்மத்திலும் சிவன் கூற்றுவன் நெஞ்சைப் பிளந்த நிகழ்ச்சியை உவமையாகக் கூறுகிறார்.

முல்லைக்கலிப் பாடலை எழுதிய புலவர் சோழன் நல்லுருத்திரன் இரு பாடல்களிலும் (101, 103) சிவன் தொன்மத்தை உவமையாக ஆண்டுள்ளார். பாடலின் கருத்தும் இருபாடல்களும் ஒன்றாகவே அமைந்துள்ளன.

முதல் முல்லைக்கலிப் பாடலில் (101),

**இடரிய ஏற்று எருமை நெஞ்சு இடத்து இட்டு**
**குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்** (101: 24-25)

என்று கூறி எருதின் தோற்றத்திற்கு ஊழிக்கால முடிவிலே கூற்றுவன் நெஞ்சைப் பிளந்த சிவன் போலிருந்தது என்கின்ற புலவர், முல்லைக்கலி (103)யின் மற்றொரு பாடலில்,

**ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடத்து இட்டு**
**சீற்றமொடு ஆர்உயர் கொண்ட ஞான்று, இன்னன்கொல்**
**கூற்று என உட்கிற்று என் நெஞ்சு**

என்று தோழி கூற்றாக இரு பாடல்களிலும் புலவர் கூறுகிறார். முதல் பாடலில் ஊழிக் காலத்தில் உயிர்களைக் கவரும் கூற்றுவன் நெஞ்சைப் பிளந்த சிவன் போன்று எருது இருந்தது என்கிறார். இரண்டாவது பாடலில் (103) எருதை அடக்க முயன்ற பொதுவனுக்கு கூற்றுவனுடைய நெஞ்சத்தைக் காலால் உதைத்துப் பிளந்திட்டுச் சீற்றத்துடன் உயிரைப் பறித்த இறைவன் சிவன் இப்படித்தான் இருந்தானோ என்று நெஞ்சம் அச்சம் கொண்டது எனக் கூறுகிறார்.

முதல் பாடலில் (101) எருதுக்கு சிவன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. இரண்டாவது பாடலில் (103) அதே சிவன் தொன்மம் எருதை அடக்கும் பொதுவனுக்கு உவமையாக வருகிறது. ஆனால் இப்பாடலில் கூற்றுவனுடைய நெஞ்சத்தைக் காலால் உதைத்துப் பிளந்திட்ட சிவன் என்று கூறுகிறார். இதில் ஊழிக்காலம் என்று குறிப்பிடாததால், சிவன் மார்க்கண்டேயர் பொருட்டு கூற்றுவனின் நெஞ்சைக் காலால் உதைத்துப் பிளந்திட்ட தொன்மத்தை எடுத்துக்கொண்டு இப்பாடல் கருத்தோடு, ஒப்புமைப்படுத்திக் காணும்பொழுது பல செய்திகள் புலனாகின்றன.

**மார்க்கண்டேயன் வரலாறு**

மார்க்கண்டேயனின் ஆயுள் பதினாறு வயது வரைத்தான் என்பது விதி. மார்க்கண்டேயனுக்குப் பதினாறு வயதாகும்போது, அவரின் தாய் தந்தையர் கலங்கினர். ஏற்கனவே மிகுந்த சிவபக்தியுடைய மார்க்கண்டேயர் சிவபூசை செய்தார். அச்சமயம் கூற்றுவன் மார்க்கண்டேயரின் உயிரைக் கவர்ந்து செல்ல வந்தான். மார்க்கண்டேயர் சிவலிங்கத்தை இறுகக் கட்டிக் கொண்டு சிவன் நாமத்தை உச்சரித்தார். அப்போது கூற்றுவனால் மார்க்கண்டேயர் மீது வீசப்பட்ட பாசக்கயிறு சிவன் மேல் விழுந்தது. அதுகண்டு சிவன் கோபங்கொண்டு கூற்றுவனை காலால் எட்டி உதைக்க, கூற்றுவன் மாண்டுபோனான். பின்னர் இறைவன் மார்க்கண்டேயருக்கு நீண்ட ஆயுளை நல்கி அருள் புரிந்தார் என்று மார்க்கண்டேய புராணம் சொல்கிறது. இத்தொன்மம் உண்மை என்பதற்குச் சான்றாக, ***திருக்கடவூர் வீரட்டானம் என்ற ஊர் சிவன் மார்க்கண்டேய முனிவர் பொருட்டு யமனை உதைத்த தலமாகும்*** என்று கூறப்பட்டுள்ளதைக் காட்டலாம்.

பாடல் கருத்துக்கும் இப்பாட்டில் கூறிய தொன்ம உவமைக்குமுள்ள ஒற்றுமைகளாவன:

பாடல்

| | உவமை | கருத்து |
|---|---|---|
| 1. | மார்க்கண்டேயரைக் காக்கும் பொருட்டு சிவன் கூற்றுவனை உதைத்தான் | பெண்ணை மணக்கும் பொருட்டு இளைஞன் காளையை எதிர்த்துப்போரிட்டான். |
| 2. | சிவன் மார்க்கண்டேயரின் பக்திக்காக கூற்றுவனை எதிர்த்தார் | தலைவன் தலைவியின் மீது கொண்ட காதலுக்காக ஏறுதழுவுதலில் காளையை எதிர்த்தான் |
| 3. | சிவபிரான் கூற்றுவனின் நெஞ்சைப் பிளந்தார் | இளைஞன், காளையை வருத்தி அதன் மேல் ஏறிய செயல். |
| 4. | கூற்றுவன் மார்க்கண்டேயர் உயிரை எடுக்க முனைந்தான் | எருது இளைஞனைக் கொல்ல முயன்றது |
| 5. | கூற்றுவன் தன் உயிரை மாய்க்க வந்தபோதும் மார்க்கண்டேயன் சிவனைப் பற்றிக்கொண்டான் | எருது தன்னை தாக்கிய போதும் துணிச்சலுடன் இளைஞன் அதைப் பற்றிக் கொண்டு அடக்க முயன்றான். |

இப்படியாகப் பாடல் காட்சிக்கு உவமையாக வந்த சிவன் தொன்மம் மிகச் சிறப்பாகப் பொருத்தி வருவதால் புலவர் இத்தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்தியிருக்கிறார் எனலாம். காளைக்குச் சிவனை உவமையாக்கியதும் அல்லாமல் சிவன் கூற்றுவனைச் சினத்தால் உதைத்த தொன்மத்தை பயன்படுத்தியிருப்பதன் நோக்கம் யாதெனில் காளையின் சீற்றத்தின் தன்மையை பல வார்த்தைகள் கொண்டு விளக்காமல் தொன்மத்தைக் கூறிப் பொருத்தமாய் விளக்குவதற்கு புலவர் கையாண்ட உத்தி ஆக இருக்கலாம்.

மற்றொரு முல்லைக்கலிப் பாடலில் (104) எருதின் வலிமைக்கு முக்கண்ணனாகிய சிவபெருமானின் உருத் தோற்றத்தினை உவமையாக்கியுள்ளார். அப்பாடல் வரி:

*முக்கணான் உருவே போல் முரண் மிகு குரலும்* (104: 12)

என்று எருதிற்குச் சிவன் உவமையாகிறார். இப்பாடலில் எருதின் வலிமைக்கு, சிவன் போன்ற வலிமையுடையது என்று கூறாமல், முக்கண்ணனாகிய சிவனின் உருவினை ஒத்த வலிமையையுடைய எருது என்கிறார்.

இப்பாடலில் எருதுக்கு உவமையாக சிவன் சொல்லப்பட்டதால், இவ்விரண்டிற்குமுள்ள பொது கருத்துக்களை ஆராயும்போது சில செய்திகள் கிட்டுகின்றன.

1. சிவனின் வாகனம் காளை என்று புராணம் கூறுகிறது. சிவனையே சுமந்து நிற்கும் காளை வலிமையுடையதாக இருக்க வேண்டும். ஆகவே புலவர் காளையின் வலிமைக்கு சிவனின் வலிமையை உவமையாக்கியிருக்கலாம்.

2. படைத்தல், காத்தல், அழித்தல் என்று மூன்று தொழில்களை முறையே பிரம்மன், திருமால், சிவன் செய்வதாகப் புராணம் கூறுகிறது. ஏறுதழுவுதல் நிகழ்ச்சியில் தன்னை அடக்க முயற்சிப்பவனைக் குத்திக் கொல்கிறது காளை. இவ்விடத்தில் காளை அழித்தல் தொழிலை நிகழ்த்துவதால், புலவர் சிவனை உவமையாக்கியுள்ளார் என்றும் அனுமானிக்கலாம்.

இப்பாடலில் வரும் சிவன் தொன்மத்திற்குப் பாடல் கருத்தை தொடர்பு படுத்தி பார்க்கும்பொழுது அது,

1. முக்கண்ணனாகிய சிவன் என்றதால், சிவனின் மூன்றாவது கண்ணாகிய நெற்றிக் கண் எப்பொழுதும் திறப்பதில்லை. சினம் ஏற்பட்டால்தான் அக்கண் திறக்கும். அதுபோல ஏறுதழுவுதல் என்பது வீரத்தை வெளிப்படுத்தும் காரணத்திற்காக நடக்கும்போது, காளையானது தன்னை அடக்க வரும் பொதுவனை சினங்கொண்டு தாக்கும்.

2. சிவனின் மூன்றாவது கண் திறந்தால் எதிரேயிருப்பவை எரிந்து இல்லாது போகும். அதுபோல பொதுவன் காளையை அடக்கி வெற்றி பெற்றால் தலைவியை

மணப்பது மூலம் அலர் இல்லாது போகும் என்ற இவ்வகையிலும் இத்தொன்மப் பயன்பாடு சிறப்புற ஆளப்பட்டுள்ளது.

சிவன் தொன்மத்தை உவமையாக்கிய புலவர் முக்கண்ணனாகிய சிவன் என்று கூறியதன் மூலம் பாடல் கருத்துக்கும், உவமிக்கப்படும் எருதுக்கும் சிறப்புச் சேர்க்கவே தொன்மத்தை பயன்படுத்தியுள்ளார். சிவனின் மறுபெயர் முக்கண்ணன் என்று புராணம் கூறுகிறது. அக்காலத்தில் இறைவனின் கதைகளை மட்டுமல்லாமல், இறைவனின் அங்கங்கள் பற்றியும் தெரிந்துள்ளனர். அதன் சிறப்பையும் தெரிந்து வைத்துள்ளனர். அதனால் புலவரும் இலக்கியத்தில் மேம்பட்ட கருத்துக்கு உவமையாக அவற்றைப் பயன்படுத்திப் பதிவு செய்திருக்கிறார்.

அடுத்ததாக மற்றொரு முல்லைக்கலிப் பாடலில் (105) ஏறுதழுவுதலுக்கு முன் செய்யப்படும் சடங்குகளும், அதற்கான ஏற்பாடுகளும் கூறப்படுகின்றன. இப்பாடலில் எருதிற்குச் சிவனை உவமையாக்கியுள்ளார் புலவர்.

***பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற்று அணிபோல***
***இரும்பினர் எருத்தின் ஏந்து இமில் குராலும்*** (105: 13-14)

என்கிறது பாடல். பெரும் பெயர் கொண்ட கணிச்சிப்படையோனின் நீலமணித் திருமிடற்றின் அழகு போல் இருந்தது. ஏந்தின திமிலையுடைய கபில நிறமுடைய எருது என்கிறார் புலவர். நீலமணித் திருமிடற்றை உடையவன் என்று சிவனைக் குறிப்பிடுகிறார். ஒரு முறை தேவர்களும், அசுரர்களும் அமுதம் வேண்டி மேருவை மத்தாகவும், வாசுகி என்ற ஐந்து தலை நாகத்தைக் கயிராகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனர். அப்போது வாசுகி நாகமானது நஞ்சைக் கக்கியது. அதை மற்றவர்கள் உண்டுவிடக் கூடாது என்று சிவன் அந்நஞ்சைத் தான் எடுத்து வாயில் போட்டு விழுங்கினார். இதைக் கண்ட உமை தன் கரங்களால் சிவனின் கண்டத்தைப் பிடித்தாள். இதனால் நஞ்சு அக்கண்டத்திலேயே நின்று விட்டது.

அதனால் சிவனின் கழுத்து நீல நிறமானது. இதிலிருந்து சிவபெருமான் நீலகண்டன் என்று அழைக்கப் பெற்றார்.

புலவர் எருதின் சிறப்பை நன்கு வலியுறுத்த வேண்டுமென்று சிவன் தொன்மத்தை உவமையாக்கியுள்ளார். ஏறுதழுவுதலில் ஆயர் ஏறுதழுவத் தொடங்கியதும் எருதுகள் வரிசையாக வந்து பொதுவரை நீண்ட மருப்பினால் குத்திச் சாடி தழுவுவதற்கு இடங்கொடாமல் அவரை நீக்கி நிறுத்தின.

> **. . . . . . . . . . . . . கோட்டுவாய்ச் சாக்குத்தி**
> **கொள்வார்ப் பெறாஅக் குரூஉச் செகில் காணிகா –**
> **செயிரின் குறை நாளால் பின் சென்று சாடி**
> **உயிர் உண்ணும் கூற்றமும் போன்ம். . .**

என்ற வரிகளில் உள்ளபடி எருது தன்னை அடக்க முயலுகின்ற ஆயரைக் குத்திக் கொன்ற செயல் வாழ்நாள் குறைகின்ற காலத்தே அவர் பின்னே சென்று வருத்தி உயிரை உண்ணும் கூற்றுவனைப் போன்றிருந்தது என்கிறார் புலவர். இப்படிப்பட்ட எருதிற்குச் சிவன் உவமையாகிறார். சிவன் ***சலந்தரன் கர்வமடைந்து தம்மிடம் யுத்தஞ்செய்ய எண்ணி கையிலையை நோக்கி வருகையில் அவன் முன் விருத்தராய்ச் சென்று சக்கரங் காலால் கீறியெடுப்பித்து, அச்சக்கரத்தால் அவனுடலைப் பிளப்பித்துச் சலந்தராரி யெனப்பட்டார்.***[8] இதிலிருந்து அறியப்படும் செய்தியானது, சிவனைப் போல எருதும் தன்னை எதிர்ப்பவர்களைக் கூற்றுவன் போலக் கொன்றுவிடும் என்று கருத்துத் தோன்றுகிறது.

இதனால்தான் புலவர் எருதின் சீற்றத்திற்கு நேரடியாக உவமை கூறாமல், நீலமணித் திருமிடற்றின் அழகு போலுள்ள ஏந்தின திமிலையுடைய கபில நிறத்தைக் கொண்ட எருது என்று ஏறுதழுவுதலில் எருதின் செயல் எப்படியிருக்குமென்று கூறுவதற்கு ஒரு வரியில் சிவன் தொன்மத்தை

உவமையாக்கியுள்ளார். சிவன் பிறருக்காகத் தாம் நஞ்சுண்ட போதிலும் தன்னை எதிர்த்த அசுரர்களைக் கொன்று வெற்றி கண்டவர். இதுபோலக் காளையும் பிறருக்காக உழைக்கின்றது ஏறுதழுவுதல் என்று வரும்போது, தன்னை அடக்க முயல்பவரை சாவக் குத்திக் கொல்கின்றன. இத்தன்மையிலும் சிவன் தொன்மத்தோடு பாடல் கருத்து ஒத்துப் போகுமாறு புலவர் பாடலை அமைத்துள்ளமை சிறப்பு எனலாம்.

சிவன் தொன்மம் பயின்றுவரும் மற்றுமொரு நெய்தற்கலிப் பாடலில் தலைவி பிரிவுத் துன்பத்தில் வாடுகிறாள். நாணம் கடந்து, பொழுதொரு புலம்பி, அறிவு அழிந்து மொழிந்தாள். எப்போது தம் இல்லத்தில் அவனைக் காண்பேனோ என்று கூடலிழைத்தாள். கூடலிழைத்தல் என்பது கண்களை மூடிக்கொண்டு தலையில் வட்டமிடுதலாகும். முடிவில் வட்டம் முழுமை பெற்றால் தலைவன் வருவான் என்றும் வட்டம் முழுமை பெறாவிடில் தலைவன் வரமாட்டான் என்றும் பொருள் கொள்ளும் மரபு அக்காலத்தில் இருந்துள்ளதை அறிய முடிகிறது. இதைப் புலவர்,

> ***கோடு வாய் கூடாப்பிறையை, பிறிது ஒன்று***
> ***நாடுவேன், கண்டனென்; சிற்றிலுள் கண்டு*** (142: 24-25)

தலைவியால் வரையப்பட்ட வட்டம் முழுமை பெறாமல் பிறை வடிவமாக நின்று விடுகிறது. இதைக் கண்ட தலைவிக்கு வானிலுள்ள பிறைச் சந்திரன் நினைவுக்கு வருகிறது. வானத்திலுள்ள பிறை ஒருநாள் முழுமதியாகும். அம்முழுமதி தலைவனைப் பிரிந்திருக்கும் தன்னை வருத்தும் என்று தன் ஆடையால் அப்பிறையை மூடுகின்றாள். அவ்வாறு பிறையை மறைத்ததால் நீலமணி மிடற்றையும், கொன்றை மாலையையும் உடைய சிவபெருமான், முன்பு தான் சூடிய அந்தப் பிறையைத் தேடுவானோ? எனக் கேட்பதாகப் பாடல் அமைந்துள்ளது. அவ்வரிகளாவன:

*. . . . . . . ஆங்கே*

*ஆடையான் மூஉய் அகப்படுப்பேன் சூடிய*

*காணான், திரிதரும்கொல்லோ – மணிமிடற்று*

*மாண்மலர்க் கொன்றையவன்?* (142: 25-27)

என்கிறார் புலவர்.

1. சிவன் நீலமணி மிடற்றை உடையவன்.
2. சிவன் கொன்றை மாலையை விரும்பி அணிபவன்
3. பிறை சூடிய சிரத்தைக் கொண்டவன்

போன்ற புராணச் செய்திகளைப் புலவர் பாடலில் பதிவு செய்கின்றார். மேலும் இப்பாடலில் (142) தலைவி, சூரியனை நோக்கி அது மலைஉச்சியை அடையும்போது தன் தலைவனைக் கண்டுபிடித்துத் தரும்படி கூறுகிறாள். அவ்வரிகளாவன,

*கதிர் பகா ஞாயிறே! கல் சேர்தி ஆயின்*

*அவரை நினைத்து, நிறத்து என்கை தீட்டித்*

*தருகுவை ஆயின், தவிரும்* (142: 37-39)

மேலும் தன் தலைவனைத் தேடுவதற்குச் சுடரின் ஒளிக் கதிர்களைக் கடன் கேட்கிறாள். இதைப் புலவர்,

*மைஇல் சுடரே! மலைசேர்தி நீ ஆயின்,*

*பௌவநீர்த் தோன்றிப் பகல் செய்யும் மாத்திரை*

*கைவிளக்காகக் கதிர் சில தாராய்!* (142: 41-43)

என்கிறார். இறுதியில் தலைவன் வந்துவிட தலைவி இன்பமடையவதாக பாடல் முடிகிறது.

. . . . . . . . . . . . . . எல்லீரா

நல்கிய கேள்வன் இவன் – மன்ற மெல்ல

மணியுள் பரந்த நீர் போலத் துணிவாம்

கலம் சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்

கலங்கிய நீர்போல் தெளிந்து நலம்பெற்றாள்

என்று பாடல் கூறுகிறது. இப்பாடலில் இயற்கையில் நடவாத நிகழ்ச்சிகள் பல இடம்பெறுகின்றன. அவை:

1. பிறை வளராமலிருக்க ஆடையால் மறைப்பது,

2. பிறையைக் காணாமல் சிவன் தேடுவானோ எனக் கேட்பது,

3. சூரியனிடம் தலைவனைக் கண்டுபிடித்து தரச் சொல்வது,

4. சுடரின் ஒளிக்கதிர்களைத் தலைவனைத் தேடுவதற்குக் கடன்கேட்பது,

இதுபோன்ற கருத்துகளை பாடலில் அமைத்துப் புலவர் பாடியதன் நோக்கத்தை ஆராயும்பொழுது தலைவனைப் பிரிந்த தலைவிக்கு பிரிவுத் துன்பத்தின் தாக்கத்தினால் நடக்க இயலாத அரிய செயல்களும், நடைமுறைக்கு உகந்த செயல்களாகத் தோன்றும் என்று புலவர் கூறாமல் கூறுவதற்காக இப்பாடலை இவ்வாறு பாடியிருக்கலாம். இப்பாடலின் கருத்தோடு சிவன் தொன்மத்தை ஒப்பீட்டு நோக்கும்போது புலவரின் நோக்கத்தைத் தெள்ளத் தெளிவாக அறியமுடிகிறது. அவை,

1. சிவனைப் பிறையின்றிக் காண இயலாது. அதுபோல, தலைவியும் தலைவன் இல்லாது வாழ மாட்டாள் எனக் குறிப்பால் உணர்த்தப் புலவர் சிவன் தொன்மத்தைக் கையாண்டிருக்கலாம்.

2. ஆடையால் மறைத்த பிறையைச் சிவன் காணாது தேடுவானோ, எனக் கேட்பது மூலமாய்ப் புலவர், பிரிந்த தலைவனைக் காணாது தலைவி தேடுகிறாள் என்பதற்கு பொருத்தமாக அமைந்துள்ளது தெரிகிறது.

3. சிவன் மேல் மனிதப் பண்பை ஏற்றிப் பிறை காணாது தேடுவான் என்று கூறுவதன்மூலம் தலைவியின் பிரிவுத் துன்பத்திற்கு முன் கடவுள், மனிதன் எனும் பாகுபாடு கிடையாது என்பதைப் புலவர் சுட்டாமல் சுட்டுகிறார் என்பதாகக் கொள்ளலாம்.

பிரிவுத் துன்பத்தில் ஆட்பட்டிருக்கும் தலைவிக்குச் சிவன் கடவுள் என்றும், அவன் மனிதன் போல, தன் பொருளைத் தேடும் இயல்பிற்கு அப்பாற்பட்டவன் என்றும் இவையெல்லாம் புலப்படாத அளவிற்குத் தலைவி துன்பத்தில் உள்ளாள் என்பதைக் கூற புலவர் கையாண்ட தொன்ம உத்தியாக இதனைக் கொள்ளலாம்.

இன்றைய காலகட்டத்திலும் ஏதேனும் துன்பம் வரும்பொழுது கடவுளை அவன் இவன் என ஒருமையில் விளிப்பது மனிதர்களின் பழக்கமாக உள்ளது.

ஆக புலவர் ஒரு தொன்மத்தைக் கூறி பல கருத்துகளை ஊற்று நீர் போன்று தருகிறார். இந்த வகையில் தொன்மம் சங்க இலக்கியத்தில் பெரும்பங்கு வகிக்கின்றது எனலாம்.

சிவன் தொன்மம் உவமையாகப் பயின்று வரும் மற்றுமொரு நெய்தற் கலிப்பாடலில் (150) தலைவன் பொருள் ஈட்டப் போய்விடுகிறான். தலைவி பிரிவுத் துன்பத்தால் வாடுகிறாள். அவளை ஆற்றுப்படுத்தி தோழி கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

கங்கையைச் சடையிலே மறைத்துள்ள சிவன் போன்று நின் நிறம் பசந்து, நீ வருந்துமாறு தலைவன் கைவிட மாட்டான். அழகிய வடிவிடைய ஏற்றினை ஊர்தியாகக் கொண்ட சிவன் போன்று நின் நிறம் இழந்து போதலை தலைவன் விரும்பமாட்டான். கோடைக்காலத்தே வெம்மை கொண்ட பரந்து குன்றுகளையுடைய காட்டைக் கடந்து பொருள் ஈட்டச்செல்லும் தலைவன், பிறைத் திங்களைத் தலையில் சூடிய சிவனின் பொன்னாற் செய்த தலைக் கோலங்கள் தாழ்ந்து தொங்கினாற்போல நின் கூந்தல் காய்கின்ற காட்சியைக் கண்டால் தலைவன் பொருள் ஈட்டச் செல்ல மாட்டான் என்று தோழி கூறுகிறாள்.

இதனைப் பாடல் வரிகள்,

***'ஓதுக்கு அரியநெறி' என்னார் ஒண் பொருட்டு அகன்றவர்***
***புதுத்திங்கட் கண்ணியான் பொன்பூண் ஞான்று அன்ன, நின்***
***கதுப்பு உலறும் கவினையாய் காண்டலும் காண்பவோ?***

(150: 16-18)

இவ்வாறு புலவர் தோழியின் கூற்றாகக் கூறி இறுதியில் பெறுதற்கரிய ஆதிரை நாளினையுடைய சிவபெருமானின் திருமார்பு அழகுபெற மலர்ந்த செண்பகம் பருவம் பொய்யாதவாறு பூப்பதுபோலத் தலைவன் பருவங்கழிதற்கு முன்னரே வருவார் எனத் தோழி தலைவிக்கு ஆறுதல் அளிக்கிறாள், இதனை,

***அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த***
***பெருந்தண் சண்பகம் போல, ஒருங்கு அவர்***
***பொய்யார் ஆகுதல் தெளிந்தனம்***
***மை ஈர் ஓதி மடமொழியோயே*** (150: 20-23)

என்று பாடல்வரிகள் கூறுகின்றன.

இப்பாடலின் தலைவன் கடந்துபோகும் வெஞ்சுரத்தின் வெம்மைக்கு உவமையாகச் சிவன் திரிபுரத்தை எரித்தபோது ஏற்பட்ட வெம்மையுடைய நெருப்பைக் கூறுகிறார். கொடுமைகள் செய்த அவுணர்களின் திரிபுரம்இருந்த கோட்டைகளைச் சிவன் எரித்தார் என்பது புராணம் கூறும் செய்தியாகும். இதுபோன்று தலைவனும் காட்டில் பரவியிருந்த நெருப்பையும், கொடூர விலங்குகளையும், தெளிவில்லாத கடினமான மலைப்பாதையையும் கடந்து செல்கிறான். சிவன், முப்புரம் இருந்த கோட்டைகளை வீழ்த்தி வெற்றி பெற்றது போலத் தலைவனும் காட்டில் நிலவும் கொடுமைகளைக் கடந்து செல்வான் என்று தோழி கூறுகிறாள். தோழி வாயிலாகப் புலவர்கூறும் இக்கூற்று தலைவியின் அச்சத்தைப் போக்குவதற்காகக் கூறப்படுகின்றது எனலாம். கொடுமையை அழிக்கச்

சிவன் திரிபுரம் எரித்து வெற்றிகண்டது போல, வறுமையை அழிக்கத் தலைவன் பொருள் ஈட்டச் சென்று வெற்றியுடன் திரும்புவான் என்று தலைவி அவள் கொண்ட துன்பத்தைக் கைவிட புலவர் பயன்படுத்தும் கருவியாகத் தொன்மம் விளங்குகின்றது எனலாம்.

இப்பாடலில் புலவர், தோழி கூற்றாக அமையும் மற்றொரு சிவன் தொன்மத்தைக் கூறுகிறார். தலையில் கங்கையை மறைத்துள்ள சிவன் போன்று நின்நிறம் பசந்து நீ வருந்துமாறு உன்னைத் தலைவன் கைவிட மாட்டான் என்கிறார். சிவன் போன்று நின் நிறம் பசந்து போகுமாறு என்று கூறாமல், தலையில் கங்கையை மறைத்துள்ள சிவன் போன்று நின் நிறம் பசந்து போகுமாறு என்று புலவர் கூறுவதன் நோக்கத்தை ஆராயும்பொழுது, தலைவனின் உயர்வை மேம்படுத்திக் கூறப் புலவர் இத்தொன்மத்தைக் கையாண்டுள்ளார் எனலாம்.

சிவன், இமயத்தில் ஊற்றெடுத்து வந்த கங்கையின் வேகத்தைக் கட்டுப்படுத்த தன் தலையில் தாங்கிக் கொண்டு பின்பு பூமியில் கங்கையைத் தவழவிட்டு மண்ணுலகை வாழ வைத்தார் என்பது புராணம் கூறும் செய்தியாகும். இதுபோன்று தலைவனும் பொருள் ஈட்டுதல் எனும் கடமையை தன் சிரமேற்கொண்டு சென்று, திரும்பி வந்து தலைவியை வாழ வைப்பான் என்று கூறுவதற்காகப் புலவர் மேற்கண்ட சிவன் தொன்மத்தை கையாண்டுள்ளார் எனலாம்.

***பெருந்தண் சண்பகம் போல, ஒருங்கு அவர்***
***பொய்யார் ஆகுதல் தெளிந்தனம்*** (150: 21-22)

என்ற வரிகளில் பருவம் பொய்க்காது மலரும், சிவனின் மார்பில் சூடியிருக்கும் குளிர்ந்த மலர்ந்த செண்பகம் என்று புலவர் கூறியுள்ளதன் நோக்கம் யாதெனின்,

1. மற்ற எத்தனையோ மலர்களிருக்க, செண்பகம் சிவனின் மார்பில் சூடும் சிறப்புப் பெற்றதைப் போலத் தலைவன் தலைவிக்கு அத்துணைச் சிறப்புடையவன் என்பதைக் கூறி இத்தகு சிவன் தொன்மத்தைப் புலவர் கையாண்டிருக்கலாம்.

2. மலர்ந்த குளிர்ந்த செண்பகம் மனத்திற்கும் கண்களுக்கும் மகிழ்ச்சி ஊட்டுவது போல, தலைவனின் வருகை தலைவிக்கு மகிழ்ச்சி ஊட்டும் என்பதை அழுத்தமாகப் புலவர் இத்தொன்மம் மூலமாய்ப் பதிவு செய்துள்ளார்.

மேலும் இப்பாடலில் புலவர்,

***உருவ ஏற்ற ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன நின்***
***உரு கிழ்ந்து இனையை பாய் உள்ளது உள்ளுபவோ?***

(150: 13-14)

என்று பாடுகிறார். பிறைத் திங்களைச் சூடியவனான சிவனின் பொன்னாற் செய்த தலைக் கோலங்கள் தாழ்ந்து தொங்கினாற் போன்று தலைவியின் கூந்தல் காய்கின்ற படி தலைவன் வாட விடமாட்டான் என்று தோழி கூற்றில் புலவர் பாடியுள்ளார்.

புற இலக்கியத்திலும் சிவன் உவமையாகக் காட்டப்படுகிறார். எட்டுத்தொகை நூல்களுள் புறப்பொருளைக் கூறும் அதாவது, வீரம், கொடை, வாழ்வியல் முறைகள், அரசர்களின் மாண்பு ஆகியவைப் பற்றிப் பாடும் நூல் புறநானூறு ஆகும். இவ்விலக்கியத்தில் அரசர்களுக்குச் சிவன் தொன்மம் உவமையாக வருகின்றது. பாடப்படும் பாட்டுடைத் தலைவனின் முக்கியத்துவத்தைச் சிறப்பித்துக் கூற, சிவன் தொன்மத்தை உவமையாக்கி, அதன் மூலம் சிவன் பற்றிய அரிய தகவல்களைப் புலவர்கள் பதிவு செய்கிறார்கள்.

புறநானூற்றில் கடவுள் வாழ்த்து சிவனைப் பற்றி உள்ளது. மேலும் சிவன் அணியும் கொன்றை மாலை, ஊர்தியாகிய ஆனேறு, நீல நிறக் கண்டம்

உடையவன், அந்தணரால் போற்றிப் புகழப்பட்டவன், ஒரு பாகத்தே பெண் வடிவம் கொண்டவன் பிறையைச் சூடியவன் என்று பலவாறாக சிவபெருமானின் சிறப்புகள் புறநானூற்றில் சொல்லப்பட்டுள்ளன.

***புறநானூற்றைப் பொருத்தமட்டில் முதல் பாடலான கடவுள் வாழ்த்துப்பாடல் புறநானூறு தொகுக்கப்பட்ட காலத்தில் அத்தொகைக்காக எழுதிச் சேர்க்கப்பட்டது என்று தெரிகிறது.***[9] இக்கூற்றுப்படி கடவுள் வாழ்த்து பின்னர் சேர்க்கப்பட்டது என்றாலும், புறநானூற்றின் பாடல்கள் உவமைகளாகச் சிவன் தொன்மத்தைக் கூறுவதிலிருந்து, சிவன் பற்றிய செய்திகளும், கதைகளும் அந்நாட்களில் மக்களிடையே பேசப்பட்டு வந்திருக்க வேண்டும் என்பதும், அதனால்தான் புலவர்களும் அவற்றைத் தங்கள் கருத்துக்களை நன்கு வலியுறுத்தப் பயன்படுத்தியுள்ளனர் என்பதும் தெரியவருகின்றது.

புறநானூற்றுப் பாடல் ஒன்று (55) பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனின் சிறப்புகளைச் சொல்கிறது.

***ஓங்கு மலைப் பெருவில் பாம்புஞாண்***
***ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி***
***பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த***
***கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்***
***பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல***

என்கிறார் மருதனிளநாகனார். பாண்டியன் நன்மாறன் மூவேந்தருள் உயர்ந்தவன் என்று கூற வந்த புலவர் முப்புரத்தை எரித்துத் தேவர்களுக்கு வெற்றியைத் தேடி தந்த சிவனின் பிறை சேர்ந்த நெற்றியில் விளங்கும் கண் போன்ற சிறப்பை உடையவன் என்கிறார். சிவனைப் பாண்டியனுக்கு உவமை கூறும் புலவர் திரிபுரம் எரித்த சிவன் எனும் தொன்மத்தைக் கையாண்டுள்ளார்.

திரிபுரம் எரிந்த கதை

*தாரகாசூரன் குமரராகிய வித்துற்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் இவர்கள் மூவரும் சிவ பூஜாபலத்தால் பொன், வெள்ளி, இரும்பு கோட்டைகளைப் பெற்று, அக்கோட்டைகளுடன் பறந்து சென்று தேவர்களை வருத்தியிருந்தனர். இதனால் தேவர் சிவமூர்த்தியிடம் முறையிட விஷ்ணுமூர்த்தி, சூர்யசந்திரர்களைத் தேருருளை யாகவும், காலம், வானம், ஐம்பூதம், இந்திரியம் இவற்றை முறையே பார், மேலிடம், நுகம், முன் கொம்பு, கொம்புக்காதாரப் பொருள்களாகவும் புராணங்களைப் படமாகவும், உலோகாலோக பர்வதம் படியாகவும், அஷ்டகுல பர்வதங்கள் விதானமாகவும், அண்டமுகடு கொடுஞ்சியாகவும், இடைவெளி தட்டாகவும்,வேதங்களைக் குதிரை களாகவும், வாசுகியை நாணாகவும், மேருவை வில்லாகவும், பிரமனை முட்கோல் பிடித்துத் தேரைச் செலுத்தும் சாரதியாகவும் செய்வித்து தேர் முடிந்ததென்று கூறினர். சிவமூர்த்தி தேர்மேல் ஆரோகணித்து வில்லைக் கையிலேந்தி விஷ்ணு மூர்த்தியைப் பாணமாக்கி எய்யத் தொடங்குகையில் விஷ்ணுமூர்த்திக்கு மனதிலுதித்த இறுமாப்பை யெண்ணித் திரிபுரத்தை நோக்கியும் இவரது எண்ணத்தை எண்ணியும் சிவன் சிரித்தார். இச்சிரிப்பின் சுவாலையால் திரிபுரம் தீப்பற்றப்பட்டது. இதில் மேற்கூறிய மூன்று அசுரர் சிவபூசை விடாமல் இருந்தவராதலால் தீப்படாமல் காக்கப்பட்டனர்.*[10]

இப்பாடலில் புலவர் பாண்டிய நன்மாறனைப் புகழ்ந்து கூறவே இச்சிவன் தொன்மத்தைக் கூறுகிறார். சிவனின் நெற்றிக்கண் போன்றவன் பாண்டிய மன்னன் என்கிறார் புலவர். சிவனின் இருகண்களை விடுத்து நெற்றிக்கண்ணை உவமையாகக் காட்டுவதன் நோக்கத்தை ஆராயும்பொழுது அறியப்படும் செய்திகளாவன:

1. நெற்றிக்கண் மற்ற கண்களை விடச் சிறப்பானது. எப்பொழுதும் மூடியிருக்கும் நெற்றிக்கண்ணைத் திறந்து நோக்கினால் எதிரே இருக்கும் எதுவும் இல்லாது அழிந்துபோய்விடும். இதுபோன்று பாண்டிய மன்னன் பிற மன்னர்களை விடச் சிறப்பானவன் என்பதை வலியுறுத்த புலவர் இத்தொன்மத்தைக் கையாண்டுள்ளார் எனலாம்.

2. சிவன் சினம் கொள்ளும்போது நெற்றிக்கண் திறக்கப்பட்டு எதிரே இருப்பவரை அது அழித்துவிடும். அதுபோல பாண்டிய மன்னன் சினங் கொண்டு போரில் ஈடுபட்டால், அவன் எதிரிகள் அழிந்துபோய்விடுவர் என்பதை வலியுறுத்த புலவர் இந்தச் சிவன் தொன்மத்தை எடுத்தாண்டுள்ளார் என்று கூறலாம்.

3. நீலமணி மிடற்றன் என்று சிவன் போற்றப்படுகிறார். இதற்கு காரணமான நஞ்சை அருந்திய நிகழ்வு இப்பாடலில் உள்ளது. சிவன் பிறரைக் காக்கும் பொருட்டு அந்நஞ்சைத் தான் உண்டதுபோல, அரசனும் தன் குடிமக்களுக்காக தன் உயிரைப் பற்றி எண்ணாது, தன் மக்களின் நலத்தை மட்டும் பேணிக் காக்கவேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்தவும் பாண்டிய மன்னனின் நற்பண்புகளை வெளிப்படுத்தும் விதமாகப் புலவர் இத்தொன்மத்தைப் பொருத்தமுற பயன்படுத்தியுள்ளார்.

4. பாண்டியர் மதுரையை மையமாகக் கொண்டு ஆண்டனர். மதுரையில் தமிழ்ச் சங்கம் தோன்றியது. அச்சங்கத்தில் சிவன் தலைமை வகித்ததாக வரலாறு குறிப்பிடப்படுகின்றன. அதுமட்டுமின்றி, சிவன் சொக்கநாதராக வந்து மீனாட்சியை மணம் முடித்தது இம்மதுரையில் என்று புராணச் செய்தி கூறுகிறது. ஆகவே புலவர் மதுரையை ஆண்ட பாண்டிய மன்னனுக்குப் பொருத்தமான உவமையாக சிவன் தொன்மத்தைக் கூறியிருக்கலாம்.

5. சிவன் இன்னார், இனியார் என்று பார்த்து அருள்புரிவதில்லை இறைவன் முன் அனைவரும் சமம். இதுபோல, பாண்டியன் நன்மாறனும் மக்களில் வேண்டியவர், வேண்டாதவர் என்று வேறுபாடு காட்டாமல் இருக்க வேண்டும் என்றும் எல்லோருக்கும் சமநீதி தந்தருள வேண்டும் என்றும் மறைமுகமாய் அறிவுறுத்த, சிவன் தொன்மத்தைப் பயன்படுத்தியிருக்கிறார் எனக் கூறலாம்.

6. பாண்டிய மன்னனைச் சிவனின் நெற்றிக் கண்ணிற்கு உவமையாக்கி யுள்ளார். மற்ற இரு கண்கள் எப்போதும் பார்க்கும் தொழிலைச் செய்து கொண்டிருக்கும். ஆனால் தகுந்த நேரம் வரும்பொழுதுதான் சிவபெருமானின் நெற்றிக்கண் திறக்கும். இதுபோல பாண்டியன் நன்மாறன் தேவையேற்பட்டால்தான் போருக்குச் செல்வான். (நெற்றிக்கண் சினத்தில் திறப்பதால் போரில் ஈடுபடும் மன்னனும் சினத்தோடு போர் புரிவதால் போர் என்று எடுத்துக்கொள்ளப்பட்டது.) மற்ற சமயங்களில் தன் மக்களின் நலத்தில் கவனம் செலுத்துகிறவன் என்பதைக் குறிப்பால் உணர்த்த சிவனின் நெற்றியிலுள்ள கண் போன்றவன் என்று புலவர் கூறியிருக்கலாம்.

புறநானூற்றுப் பாடலில் (56) மன்னன் நன்மாறனை நக்கீரர் புகழ்ந்து பாடுகிறார். கடவுளர் நால்வரின் திறனுக்கு மாறனின் ஆற்றலை ஒப்புமைப் படுத்தியுள்ளார் புலவர். அப்பாடல் வரிகளாவன:

***கூற்று ஒத்தீயே மாற்று அருஞ் சீற்றம்***
***வலி ஒத்தீயே, வாலியோனை***
***புகழ் ஒத்தீயே, இகழுநர் அடுநனை,***
***முருகு ஒத்தீயே முன்னியது முடித்தலின்*** (56: 11-14)

என்கிறார். அதாவது சினத்தால் கூற்றுவனான சிவனை ஒத்தவனாவாய் என்கிறார். அழிக்கும் தொழிலுக்குரியவர் சிவன் என்பதால் கூற்றுவன் என்று கூறப்படுகிறார். வலிமையில் பலதேவனைப் போன்றுள்ளாய், புகழால் பகைவரைக் கொல்லும்

மாயோனை (திருமாலை) ஒத்து விளங்குகிறாய், கருதியது முடிப்பதில் முருகனுக்கு ஒப்பாவாய் என்கிறார். இப்பாடலில் இந்நான்கு கடவுளர்களின் கொடிகளும் குறிப்பிடப்படுகின்றன.

*இடபக்கொடி – சிவன்*

*பனைமரக்கொடி – பலராமன்*

*கருடக்கொடி – திருமால்*

*மயில்கொடி – முருகன்*

இதோடு மழுவேந்திய நீலகண்டன், கொல்லும் கலப்பையை உடைய பலராமன், வெற்றி வேலேந்திய முருகன் என்ற வந்தமையால், கொடியும் ஆயுதமும் குறிப்பிடப்படுவதால், பாண்டியன் நன்மாறன் போரில் அஞ்சாது ஈடுபட்டு வெற்றி பெறுபவன் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார் என்ற கொள்ளலாம். நான்கு கடவுளர்களை உவமையாக்கி பாண்டிய மன்னன் வலிமையும், பகைவரைக் கொல்லும் வீரமும், எண்ணியதை முடிக்கும் திறனும் உடையவனாய் இருக்க வேண்டும் என்று வாழ்த்துகிறார். ஒரு மன்னனுக்கு திறனும் வலிமையும் மட்டும் போதாது. சினமும் மெய்ப்பாடும் வேண்டும் என்கிறார். சிவன் அழித்தல் தொழில் புரிபவன் என்றும் ஊழிக்காலத்தே கூற்றுவன் போன்று உலகத்தை அழித்தல் தொழில் புரிபவன் என்றும் புராணம் கூறுகின்றது. சிவன் போன்று பாண்டிய மன்னனும் சினம்கொண்டு போரில் ஈடுபட்டால் யாவற்றையும் அழிக்கும் வல்லமையுடையவன் என்பதைக் கூறப் புலவர் இத்தொன்மத்தை மிகப் பொருத்தமாய் கையாண்டுள்ளார். மற்றொரு புறநானூற்றுப் பாடலில் அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் சிவனுக்கு ஒப்புமைப்படுத்தி வாழ்த்திப் பாடுவதாக ஒரு பாடல் அமைந்துள்ளது. அதியமான் பழமைமிக்க பெரிய மலையின் பிளவிடத்தில் அரிதான உச்சியில் சிறிய இலையையுடைய நெல்லியின் இனிய கனி கிடைக்கப் பெற்றான் அக்கனி இறவா நிலையைத் தரும் அபூர்வக் கனி. அக்கனியை அதியமான் தான் உண்ணாமல் ஔவைக்குக் கொடுத்தான். அக்கனியைப் பெற்ற ஔவை அதியமானை, பால் போன்ற பிறையணிந்த

நெற்றியுடன் பொலிவுற்ற திருமுடியையும் நீலமணி போலும் கரிய கழுத்தினையும் உடைய ஒருவனாகிய சிவபெருமான் போல நிலைபெறுவாயாக என்று வாழ்த்துகிறார்.

இப்பாடலில் சிவபெருமான் நஞ்சு உண்ட தொன்மம் உவமையாக வந்துள்ளது. நஞ்சை உண்டதால் சிவன் கழுத்து கருநீலமானதை நீலமணி போலும் கரிய கழுத்தினை உடையவன் என்று குறிப்பிடப்படுகிறது. இச்சிவன் தொன்மம் அதியமானுக்கு உவமையாக வந்ததின் தொடர்புகள் ஆராயும்பொழுது பல ஒற்றுமைகள் அறியப்படுகின்றன. அவை:



மேற்கண்ட ஒப்புமைகளை மனதிற்கொண்டு புலவர் அதியமானுக்கு சிவன் தொன்மத்தை உவமையாக்கியுள்ளார் எனத் தெரிகிறது. புறநானூற்றுப் பாடல்களில் மன்னனுக்கு உவமையாக சிவன் தொன்மம் வந்துள்ளது. மன்னனைக் கடவுளோடு ஒப்புமைப்படுத்திக் கூறும் மரபு அக்காலத்தில் புலவர்களிடையே இருந்திருக்கின்றது என அறியமுடிகிறது. இதை வள்ளுவர்,

*முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்*
*நிறையென்று வைக்கப் படும்* (குறள். )

என்று நடுநிலைப்படி ஆட்சி செய்பவனே அவன் நாட்டு மக்களால் கண்காணும் இறைவனென எண்ணப்படுவான் என்று மன்னனை கடவுள் நிலையில் வைத்துப் பேசுகிறார்.

மற்றொரு புறநானூற்றுப் பாடலில் (6) பாண்டிய மன்னன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக்கிழார் பாடுகிறார். இப்பாடலில்,

*. . . . . நின்குடையே – முனிவர்*
*முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே* (புறம். 6: 17-18)

என்று முனிவரால் வணங்கப்பெறும் முக்கட் செல்வர் எனும் சிவபெருமானின் திருக்கோயிலை உன் வெண்கொற்றக் குடை வலம் வருவதற்குரிய வகையில் தாழ்ந்து விளங்கட்டும் என்கிறார். இப்பாடலில் சிவன் தொன்மம் உவமையாக வரவில்லை. பாண்டியமன்னன் பணிவுடைய குணநலத்தைப் பெற்றவனாக இருக்கட்டும் என்பதற்காக அவ்வாறு கூறுகிறார். பேரரசன் ஆனாலும் கடவுள் முன் அடியவனே என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது. மேற்கண்ட சிவன் தொன்மம் பயின்றுவரும் பாடல்களை நோக்கும்போது பொருளுக்காக அரசனைப் புகழ்ந்து பாடும் புலவர்கள் இருந்தாலும், சிவன் தொன்மம் பயின்றுவரும் இப்பாடல்களில் அரசனின் இயல்புகள் அரசன் மேல் கொண்ட அக்கறையோடு பாடப்படுவதை அறியமுடிகிறது.

பத்துப்பாட்டில் ஒன்றான மலைபடுகடாமில் (82-83) பாட்டுடைத் தலைவன் நன்னனின் சிறப்பைக் கூறுமுகமாக, நவிரமலையில் விளங்கும் காரியுண்டிக் கடவுள் என்று கூறப்படும் நஞ்சினை உணவாகக் கொண்ட இறைவன் சிவபெருமானைப் போல் ஆற்றல் உடையவன் நன்னன் என ஆசிரியர் கூறுகிறார்.

தேவர்கள் அமுது உண்டு வாழ ஒருவரும் உண்ண விரும்பாத நஞ்சை தான் உண்டவர் சிவபெருமான். நன்னனும் தம் மக்களின் நலனுக்காக வாழ்பவன் என்பதைக் கூறாமல் கூறுகிறார். சிவபெருமான் தேவர்களை நஞ்சை தானுண்டு காத்ததுபோல, நன்னனும் தம் மக்களுக்கு காவல் தெய்வமாக இருந்து காலம் எனும் பெருங்கடலில் ஏற்படும் நஞ்சு என்ற இன்னல்களை எதிர்கொண்டு மக்களை காப்பாற்றுவான் என்று புலவர் கூறுதற்கு சிவன் தொன்மத்தை மிகப் பொருத்தமாக மையாண்டுள்ளார்.

சிவன் தொன்மங்களைப் பொறுத்தவரை அகப்பாடல்களுக்கும் புறப்பாடல்களுக்கும் நன்கு பொருந்தி வருவதைக் காணலாம்.

**சிவன் தொன்ம உவமைகள் வழி அறியவரும் கருத்துகள்**

1. சிவன் தொன்மம் சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை அக இலக்கியமான கலித்தொகையிலும், புற இலக்கியமான புறநானூற்றிலும் அதிக அளவில் உவமைகளாக கையாளப்பட்டுள்ளன.
2. சங்க இலக்கியப் பாடல்களில் சிவன் தொன்மத்தைப் பொறுத்தவரை சிவன் நஞ்சு உண்ட தொன்மம் அதிக அளவில் உவமையாக வந்துள்ளன.
3. பிறை சூடிய சிவன் தொன்மம் அதிகமாக அக இலக்கியத்தில் உவமையாக வந்துள்ளன.
4. சிவன் தொன்மத்தைப் பொறுத்தவரை சங்க இலக்கியப் பாடல்களில் திரிபுரம் எரித்த தொன்மமே அதிகம் உவமையாகப் பேசப்படுகின்றன.

5. சிவனின் நெற்றிக்கண் புற இலக்கியத்தில் உவமைகளாக வந்துள்ளன.

6. பல சங்க இலக்கியப் பாடல்களில் சிவனொடு முருகன் தந்தை மகன் என்ற உறவு நிலையில் உவமையாக கையாளப்பட்டுள்ளான்.

7. சிவனும் முருகனும் ஒரு சேர பெரும்பாலும் மருதநிலத் தலைவனுக்கு உவமையாக வருகின்றனர்.

8. சிவன் நஞ்சுண்ட தொன்மம் அகப்பாடலுக்கும், புறப்பாடலுக்கும் உவமையாக வந்துள்ளன.

9. சிவன் அழித்தல் தொழிலையுடையவன் என்று உவமைவழிக் காட்டப்படுகின்றது.

10. சிவன் புராணத் தொன்மத்தைப் பொறுத்தவரை சங்க இலக்கியப் பாடல்களில் சிவனின் துணைவியான உமை பற்றிய செய்திகள் அதிகமாகக் குறிப்பிடப்படவில்லை.

## திருமால் தொன்ம உவமைகள்

சங்க இலக்கியத்தில் சிவன் தொன்மம் போலவே திருமால் தொன்மங்களும் உவமையாக வந்துள்ளன. சிவன் போன்றே திருமாலுக்கும் மேனி வண்ணம், கொடி, படை, சிறப்பு போன்றவை சங்க இலக்கியத்தில் செய்தியாக வந்துள்ளன. மேலும் திருமாலின் அவதாரக் கதைகள் செய்தியாகவும், உவமையாகவும் வந்துள்ளன. உவமைகளை மட்டும் கணக்கில் கொண்டு ஆராயும்பொழுதுதான் பாடலில் கூறப்படாத உள்ளுறைக் கருத்துகளை அறிய முடிகிறது. புலவர், திருமால் தொன்மத்தை உவமையாக்கியதின் நோக்கம் புலப்படுகின்றது. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை திருமால் தொன்மம் உவமைகளாக கலித்தொகை, நற்றிணை, அகநானூறு, புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பதிற்றுப்பத்து, முல்லைப்பாட்டு போன்றவற்றில் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் மிக அதிக அளவிலான உவமைகள், கலித்தொகை மற்றும் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன.

புறநானூற்றைப் பொறுத்தவரை அரசர்களின் வீரத்திற்கும், சிறப்பிற்கும் திருமால் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன. எடுத்துக்காட்டாக ஒரு புறநானூற்று பாடலில் (56) பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனைக் கடவுளருடன் ஒப்பிட்டுப் போற்றுகிறார் புலவர் நக்கீரனார், இப்பாடலில்,

***புகழ் ஒத்தீயே, இகழுநர் அடுநனை*** (புறம். 56: 13)

என்று புகழால் பகைவரைக் கொல்லும் மாயோனை ஒத்து விளங்குவாய் என்று பாடுகிறார். இப்பாடலில் புகழால் மாயோனைப் போன்றவன் என்று கூறாமல், பகைவரை அழித்த மாயோனைப் போன்றவன் எனப் பாடுகிறார். திருமால் தன் அவதாரங்களில் பெரும்பாலும் அரக்கர்களையும் அசுரர்களையும் போரிட்டு அழித்ததாகப் புராணம் கூறுகிறது. இவற்றைக் கீழ்க்காணுமாறு விளக்கலாம்.

| **அவதாரங்கள்** | **வதம் செய்த அரக்கர்கள்** |
|---|---|
| 1. இராமன் | இராவணன் |
| 2. கிருஷ்ணர் | கம்சன், மற்றும் அவனால் ஏவப்பட்ட பல அசுரர்கள் |
| 3. நரசிம்மர் | இரண்ய கசிபு |
| 4. வாமனன் | மாவலி |

என்று கூறலாம். திருமால் காக்கும் கடவுளாகப் புராணங்களில் காட்டப்படுகிறார். அதுமட்டுமின்றி திருமால் தன் கிருஷ்ணாவதாரத்தில் தன்னைக் கொல்லவரும் அசுரர்களை அழித்தார் எனப் பாகவதபுராணம் கூறுகிறது. இதுபோன்று பாண்டிய மன்னனும் பகைவருடன் போரிட்டு வெற்றி பெறுகிறான் என்றும், பெறவேண்டும் என்றும், திருமாலின் புகழ் போன்று பெரும் புகழை அடையவேண்டுமென்றும் வாழ்த்த, திருமாலின் தொன்மத்தை உவமையாகப் புலவர் பொருத்தமாய் கையாண்டுள்ளார்.

மன்னனின் இன்றியமையாத கடமை என்பது தம் மக்களை காப்பதாகும். திருமால் அசுரர்களுடன் போரிட்டு மக்களுக்கு காக்கும் கடவுளானது போல மன்னன் பகைவருடன் போரிட்டு மக்களைக் காக்க வேண்டும் என்பதாலேயே புலவர் பாண்டிய மன்னனைக் காக்கும் கடவுளான திருமாலுடன் ஒப்பிட்டுள்ளார் எனலாம்.

அடுத்ததாக, மற்றுமொரு புறநானூற்றுப் பாடலில் (58) திருமால் தொன்மம் உவமையாகப் பயின்று வருகிறது. சோழ மன்னன் திருமாவளவனும், பாண்டிய மன்னன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒரே இடத்தில் ஒற்றுமையாய் வீற்றிருந்ததைக் கண்டு புலவர் காரிக்கண்ணனார்,

***பால்நிற உருவின் பனைக் கொடியோனும்***
***நீனிற உருவின் நேமியோனும்***

என்று பாடுகிறார். பால்நிற பனைக்கொடி உடைய பலராமனும் நீல வண்ணத் திருமாலும் போல ஒருங்கே இருக்கிறீர்கள் என்கிறார். பலராமன் திருமாலின் கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணருக்கு அண்ணனாக ஒன்றாக வளர்ந்தவர். நீங்கள் இருவரும் ஒற்றுமையுடன் இருந்தால் கடல் சூழ்ந்த இந்த உலகத்தின் வாயிலாக உண்டாகும் பயன் யாவும் உங்கள் கைவசப்படும். உங்கள் அன்பு கெழுமிய நெஞ்சில் பிரிவு உண்டாக்குபவர்களின் சொற்களை ஏற்காதீர்கள். போர்க்களத்தில் உங்களுடைய வேல் வெற்றி பெறட்டும். பகைவர் நாட்டில் புலக்கொடியின் சின்னமும் மீன் கொடியின் சின்னமும் பொறிக்கப்பட்டு மேன்மை அடையட்டும். பகைவருடைய நாடுகள் உங்களுக்குக் கீழ்ப்படட்டும் என்று புலவர் காரிக்கண்ணனார் சோழன் திருமாவளன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி ஆகியோரைப் பாடுகின்றார். இவ்விரு பெரும் அரசர்களும் நட்புக் கொண்டு வாழ்ந்தனர் எனத் தெரிகிறது.இப்பாடலில் திருமால் தொன்மம் உவமையாகப் பாடப்படுகிறது.

சங்ககாலத்தில் சேர, சோழ, பாண்டியர்களிடையே அத்துணை நட்புறவு இருந்ததில்லை என்பதைப் புறநானூற்றுப் பாடல்கள் வழி அறியலாம். எடுத்துக் காட்டாக புறநானூற்றில் (62) சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக் கைப்பெருவிறற் கிள்ளியும் ஒருவரோடு ஒருவர் போரிட்டபோது புலவர் கழாஅத் தலையார் பாடுகிறார். அடுத்த சான்றாக ஒரு பாடலில் (33) சோழன் நலங்கிள்ளி பாண்டிய நாட்டில் போர் செய்து ஏழுகோட்டைக் கதவுகளையும் அழித்து வெற்றிகொண்டு, தன்னுடைய புலிச்சின்னத்தைப் பொறித்தவன் என்று புலவர் கோவூர்கிழார் பாடுகிறார். ஆக மூவேந்தர்களுக்கும் நட்பு என்பது அரிதான ஒன்றாய் இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. இப்படிப்பட்ட சூழலில் நட்பாயிருக்கும் சோழ மன்னனையும் பாண்டிய மன்னனையும், பலராமன், கிருஷ்ணர் போல இணைந்து இருப்பீர்களாக என்று காரிக்கண்ணனார் பாடுவதின் நோக்கத்தை ஆராயலாம்.

1. பலராமனும் கிருஷ்ணரும் நண்பர்கள் இல்லை. அண்ணன் தம்பி ஆவார். அதாவது இரத்த சம்மந்தமுள்ளவர்கள் எவ்வாறு பாசத்துடன் பிரியாது இருப்பார்களோ, அதுபோல சோழனும் பாண்டியனும் பிரியாமல் இருக்க வேண்டும் என்பதற்குச் சொன்னதாகக் கொள்ளலாம்.

2. பலராமன், இராமாவதாரத்தில் இலட்சுமணனாக அரிய தொண்டு ஆற்றியதால் இராமன் தனக்கு அண்ணனாக இலட்சுமணனை பலராமனாக கிருஷ்ணாவதாரத்தில் அவதரிக்கச் செய்தான் என்று தசாவதாரக் கதைகள் கூறுகின்றது. அதுபோல சோழனும், பாண்டிய மன்னனும் யுகம் யுகமாய் இருவரும் இணைந்து இருக்க வேண்டும் என்பதைக்கூற புலவர் இத்தொன்மத்தைக் கூறியிருக்கிறார் எனக் கொள்ளலாம்.

3. போர்க்களத்தில் இருவரும் வெற்றி பெறுவதாக என வாழ்த்துகிறார் புலவர். இதுபோல பலராமனும், கிருஷ்ணரும் இணைந்து வதம்செய்த அசுரர்கள் பலர்.

***1. தேறுகன்***

***2. பிரலம்பன்***

***3. துவாவிதன்[11]***

பலராமன், கிருஷ்ணன் அவதார நோக்கம் அசுரர்களை போரிட்டு வெல்வது எனலாம். அதுபோல சோழனும் பாண்டியனும் போரில் வெற்றிபெறட்டும் எனப் புலவர் சொல்வதாகக் கொள்ளலாம்.

4. பலராமன் பனைக்கொடி உடையவன், கிருஷ்ணன் கருடக்கொடியை உடையவன் அதுபோல சோழமன்னன் புலிக்கொடியையும், பாண்டிய மன்னன் மீன் கொடியையும் உடையவர்கள் என்பதால், பலராமன், கிருஷ்ணன் போல பகைவர்களை வெல்லுங்கள் என்பதைக் குறிப்பால் உணர்த்துவதற்காக திருமால் தொன்மத்தை உவமையாக்கியிருக்கலாம். முடிவாக, திருமால் தொண்டு உவமையின் நோக்கம், சோழ பாண்டிய மன்னர்கள் இணைபிரியாமல் போரில் வெற்றி பெற வேண்டும் என்பதற்காகக் கூறப்பட்டிருக்கலாம்.

அடுத்ததாகப் புறநானூற்றுப் பாடலின் (57) புலவர் காரிக்கண்ணனார், பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனைப் பாடுகிறார்.

***வல்லார் ஆயினும் வல்லுநர் ஆயினும்***
***புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன*** (57: 1-2)

என்று புலவர் பாடுகிறார். வல்லமையுடையவரானாலும் அவ்வாறு இல்லாத எளியவரானாலும் நின்னைப் புகழ்ந்து போற்றுபவர்களுக்குத் திருமால் போன்று துணை நின்று வாழவைக்கும் சிறப்புடைய பாண்டியன் நன்மாறனே! உன்னிடம் ஒன்றைக் கூறுகிறேன். பகைவர் நாட்டின் மீது நீ படையெடுத்துச் செல்லும்போது எதை வேண்டுமானாலும் அழித்து விடு. ஆனால் அவ்வூர் காவல் மரங்களை அழிக்காதே. அவை இளமையான மரங்கள்,. உன்னுடைய பெரிய யானைகளுக்கு அவை கட்டுத்தறிகளாக இருக்கத் தாங்காது என்று மன்னன் போர் புரிவதைக்

கைவிடுமாறு மறைமுகமாகத் தெரிவிக்கிறார். ஏனையவை அழிவிலிருந்து விரைவில் மீளும். ஆனால் நெடிது வளர்ந்த பெரிய மரத்தை மீண்டும் விளங்கச் செய்வது இயலாது என மேற்கண்ட பாடலில் புலவர் கூறுகிறார். இப்பாடல் மூலம் பாண்டிய மன்னனைப் போரிடுவதைக் கைவிட்டு காக்கும் கடவுளான திருமாலைப் போன்ற இயல்பினனாய் இருப்பாய் எனப் புலவர் மறைமுகமாய் கூறுகிறார் எனக் கொள்ளலாம்.

புராணங்கள் மூலம் கடவுளர்களின் கதைகள், சிறப்புகள், தன்மைகள் அறிய முடிகிறது. ***பொதுமக்களுக்குரிய வைதீகச் சமய நூல்களாக விளங்கியவை. புராணங்களும், இதிகாசங்களும் ஆகும். அவற்றின் நோக்கம் வரலாறு கூறுவதல்ல. இலட்சியங்களுக்கு உதாரணங்கள் காட்டுவதாகும்.***[12] இதன் அடிப்படையிலேயே சங்கப் புலவர்கள் கடவுளை மன்னனுக்கு உவமையாக்கி யமையை அறியமுடிகிறது. திருமால் அவதாரங்களில் இராமாவதாரத்தில் அரக்கர் குலத்தில் பிறந்தாலும் வீடணன் இராமரைப் போற்றுதல் செய்தவன். நியாயத்தின் பக்கம் நிற்க தன் அண்ணனான இராவணனையே எதிர்த்தவன். இறுதியில் இராமர் வீடணனை அரசனாக்கினார். அதேபோல கிருஷ்ணாவதாரத்தில் எளியவரான குசேலருக்கு அருள்புரிந்து குபேரனாக்கினார் என்று புராணங்கள் கூறுகின்றன. திருமால் போல நின்னைப் போற்றுபவர்களை வாழ வைப்பவனே என்று புலவர் உவமை காட்டுகிறார். திருமால் உவமையாக ஆக்கப்பட்டதால் மற்றவர்களுக்கு அரசன் காக்கும் கடவுளாக இருக்கவேண்டுமே தவிர போர் புரியும் போர்வீரன் போன்று இருக்கலாகாது என்றும், அரசன் போர்த்தொழிலைக் கைவிட வேண்டும் என்ற கருத்தையும் வலியுறுத்தப் புலவர் காக்கும் கடவுள் எனப்பட்ட திருமாலை உவமை காட்டுகிறார் எனக் கொள்ளலாம்.

புறநானூற்றுப் பாடலில் (77)

> ***. . . . . . . . . . . . . . . . தார்பூண்டு***
> ***தாலி களைந்தன்றுளும் இலனே***

என்று பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இடைக்குன்றூர்கிழார் பாடுகிறார். இப்பாடலில் திருமால் தொடர்புடைய ஐம்படைத்தாலி சுட்டப்படுகிறது. மன்னன் இளமையிலேயே போர் ஏற்ற பண்பினன் எனச் செழியனின் பண்பை பாராட்டிப் பாடுகிறார். முன் அணிந்த ஐம்படைத் தாலியை இன்னும் அவன் அகற்றவில்லை. பாலை அருந்துதலைவிட்டு இன்றுதான் உணவும் உட்கொண்டனன். சினத்துடன் எதிர்த்து வரும் புதிய வீரரைக் கண்டு மதிப்பதும், அவமதிப்பதும் செய்யாதவன். அவ்வீரரை அழுந்தப் பற்றிப் பரந்த வானத்தில் ஒலியெழுமாறு, பிணம் கவிழ்ந்து நிலத்தில் விழுமாறு கொன்றவன். அச்செயலை பெரியதாய்க் கருதித் தானே மகிழ்ந்ததும் இல்லை. அதனை எண்ணித் தன்னை உயர்வாக எண்ணும் எண்ணம் இல்லாதவன் எனப் பாடுகிறது இப்பாடலில் திருமால் தொன்மம் ஐம்படைத்தாலி என்ற சொல் மூலமாக வந்துள்ளது எனலாம். இதனை அபிதான சிந்தாமணி, ***இது காத்தற் கடவுளாகிய திருமாலின் பஞ்சாயுத வடிவமாக பிள்ளைகட்கு ஐந்து மாதத்தில் கட்டப் படும் அணிகலன்***[13] என்கிறது.

அன்றைய காலகட்டத்தில் சிறுபிள்ளைகளுக்கு காலில் கொலுசும், தலையிற் குடுமியும், கையில் சிறிய வளையல்களும் மார்பில் ஐம்படைத் தாலியும் அணிவதும் மரபாக இருந்துள்ளது. நெடுஞ்செழியன் இன்னும் காளைப் பருவத்தை அடையவில்லை. காளைப் பருவம் அடைந்த ஒருவன் காலில் கழலும், தோளில் தொடியும், மார்பில் மாலையும் அணிந்திருப்பான் எனச் சொல்லப்படுகிறது. ஆகவே நெடுஞ்செழியன் இளமைப்பருவத்திற்கு முன்னுள்ள சிறார் பருவத்திலேயே பகைவரை வெல்வதை மிக எளிதாகச் செய்தவன் என்று வலியுறுத்துகிறார். ஐம்படைத்தாலியை அணிந்தவன் என்பதால், செழியனும் மக்களைக் காத்தலில் திருமால் போன்றவன் எனச் சொல்வதாகக் கூறலாம்.

மற்றுமொரு புறநானூற்றுப் பாடலில் (174) மலையமான் சோழ ஏனாதி திருக்கண்ணனை மாறோகத்து நப்பசலையார் பாடியுள்ளார்.

இடும்பை கொள். பருவரல் தீர, கடுந்திறல்
அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு

பிறருக்காக இரங்கும் தன்மையுடையவன் மலையமான், திருமாலுக்கு ஒத்தவனாகிறான். பகைவர்களை அழிக்கும் வீரத்தை உடையவன் மலையமான். திருமால் மல்லர்களை அழித்து வெற்றி கொண்டவன். மலையமானின் வீரத்தையும், பண்பையும் மேலும் மெருகூட்டிச் சொல்லவே இத்திருமால் தொன்மம் உவமையாகக் கையாளப்பட்டுள்ளது எனலாம். மேற்கண்ட பாடலில் திருமால் தொன்மம் உவமையாக வந்ததின் ஒற்றுமைகளை கீழ்க்காணும் அட்டவணை மூலம் விளக்கலாம்.

| எண் | பாடல் கருத்து | தொன்ம உவமை |
|---|---|---|
| 1. | மன்னன் மலையமான் | திருமால் |
| 2. | சோழ நாடு | உலகம் |
| 3. | சோழன் இல்லாதது | சூரியன் இல்லாதது |
| 4. | மலையமான் சோழனுக்கு உதவியது | திருமால் இராம அவதாரத்தில் சுக்ரீவ மன்னனுக்காக வாலியுடன் போர் தொடுத்து உதவியது. |
| 5. | மலையமான் சோழநாட்டின் துயரைப் போக்கியவன் | திருமால் உலக மக்களின் துயரைத் துடைப்பவன் |

மற்றுமொரு புறநானூற்றுப் பாடலில் (198) பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை பேரிசாத்தனார் பாடியுள்ளார். பாண்டியன் இலவந்திகை பள்ளித் துஞ்சிய நன்மாறன் புலவருக்குப் பரிசில் கொடுப்பதற்குக் காலம் நீட்டித்ததால், புலவர் மன்னனின் முன்னோரையும், மன்னனையும் போற்றிப் பாராட்டிவிட்டு பரிசில் வாங்காது சென்றார். சென்றபோது

இச்செயலை மறக்காமலிருக்கும்படி கூறிச் செல்வதாகப் பாடல் அமைகிறது. இப்பாடலில்

**ஆல் அமர் கடவுள் அன்ன நின் செல்வம்**
**வேல் கெழு குருசில் கண்டேன்**

எனத் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. வேந்தே! கனவிலும் நின் புகழையே கூறும் விருப்பத்தை உடையேன். என் நெஞ்சம் இன்புற்று மகிழ, ஆலிலையில் எழுந்தருளியுள்ள திருமால் போன்ற நின் செல்வத்தைக் கண்டேன். ஆதலால் விடைபெற்றுச் செல்கின்றேன். வாழ்க என வாழ்த்துகிறார். இப்பாடலில் இலவந்திகை மன்னனுக்குத் திருமாலை உவமைக் காட்டுகிறார். அதுவும் ஆலிலை மேல் எழுந்தருளியுள்ள திருமால் என்கிறார். செல்வத்துக்கு அதிபதி மகாலட்சுமி என்கிறது புராணம். மகாலட்சுமியை துணைவியாகக் கொண்டு தன் மார்பில் சூடியிருப்பவர் திருமால் என்கிறது புராணக் கதைகள். செல்வத்துக்கு அதிபதியையே துணையாகக் கொண்ட திருமாலைப் போன்று மன்னனுடைய செல்வத்தைக் கண்டேன் என்கிறார். ஊழிக்காலத்தில் உலகம் அழிந்து, பிரபஞ்சம் உற்பத்தியாகிற வேளையில், ஆலிலையில் திருமால் குழந்தையாகச் சமுத்திரத்தில் மிதந்ததாகப் புராணம் கூறுகிறது. இத்தொன்மத்தை இலவந்திகைக்கு உவமையாகக் கூறியதின் நோக்கங்களாவன:

1. உலகம் அழிந்து பிரபஞ்ச உற்பத்தியின் போதுள்ள திருமாலைக் கூறியதால், புலவர் தானும் ஏழ்மை நிலை அழிந்து மன்னனிடம் பொருள் பெற்றுப் புதிய வாழ்க்கையைத் தொடங்கக் காத்திருப்பதை அரசனுக்குச் சுட்ட புலவர் திருமாலை உவமையாக்கியிருக்கலாம்.

2. ஆலிலைமேல் எழுந்தருளிய குழந்தை வடிவத் திருமால் என்றதால் இலவந்திகையும் செல்வத்தைப் பெற்றிருந்தாலும், குழந்தை போன்று அதைக் கொடுக்கும் வகை அறியாதவன் எனச் சுட்டிக் காட்டியிருக்கலாம்.

3. ஆல் இலை மேல் எழுந்தருளிய திருமால் போன்று நின் செல்வத்தைக் கண்டேன் என்று புலவர் மன்னனை நோக்கிப் பாடுகிறார். செல்வத்துக்கு அதிபதியான மகாலட்சுமியை திருமால் துணையாகக் கொண்டிருந்தாலும் ஆல் இலையில் எழுந்தருளிய திருமால் வடிவம் குழந்தையாக இலைமேல் படுத்திருக்கும் என்பதால் மன்னன் இலவந்திகையும் இருந்தும் இல்லாதவனே என்று புலவர் கூற இத்தொன்மத்தைப் பயன்படுத்தியுள்ளார் எனலாம்.

4. திருமால் போன்று அரசனும் பெருஞ்செல்வம் உடையவன். உலகைத் திருமால் காப்பதுபோல், அரசனும் தம் நாட்டைக் காப்பாற்றுபவன். அடியவர் பக்திக்கு மனம் இரங்கி அருள் செய்யும் திருமால் போல மன்னன் இலவந்திகையும் தன்னை நாடி வரும் புலவருக்கு மனம் இரங்கி பரிசில்கள் கொடுத்து அருள் செய்ய வேண்டும் என்பதற்காக, இந்த உவமையைச் சொல்லியிருக்கலாம். முடிபாக இலவந்திகை மன்னன் புலவருக்குப் பரிசில் தரக் காலம் நீட்டித்ததால் திருமாலை உவமை கூறி அவன் செய்ய வேண்டுவதையும், அவன் செய்யாமல் விட்டதையும் அறிவுறுத்தத் திருமால் தொன்ம உவமையைப் பொருத்துமுற கூறியிருக்கலாம்.

அடுத்ததாக ஒரு பாடலில் (புறம். 229) சேரமான் யானைகட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்ற மன்னன் தன் இறுதிக்காலத்தில் தான் நோயில்லாதவனாக இருக்க வேண்டும் என்று வேண்டிய செய்தியும், அவன் இறப்பதற்கு முன் நடந்த அபசகுனங்களையும் கூறி அவன் இறந்தபின் அவனுடைய சிறப்பைக் கூறிப் பாடலை முடிக்கிறார் கூடலூர் கிழார். பங்குனி மாதத்தில் மீன் வீழ்ந்தால் அது அரசனுக்கு ஆகாது. மன்னன் இறப்பதற்கு முன் யானை இறந்தது, முரசு கிழிந்தது, வெண்கொற்றக்குடை கால் ஒடிந்தது, குதிரைகள் இயக்கமின்றிக் கிடந்தன போன்ற அபசகுணங்கள் நிகழ்ந்தது போல சேரவேந்தனும் தேவருலகம் அடைந்தான். ஆகையால் வளையணிந்த மகளிரால் விரும்பப்பட்ட துணையாகிய மாயோன் தனக்குத் துணையாகியவரையும் மறந்துவிட்டானோ? எனப் புலவர் கேட்பதாக

*ஒண் தொடி மகளிர்க்கு உறுதுணை ஆகி*
*தன்துணை ஆயம் மறந்தனன் கொல்லோ...*
*பகைவர் பிணிக்கும் ஆற்றல் நசைவர்க்கு*
*அளந்து கொடை அறியா ஈகை*
*மணிவரை அன்ன மாஅயோனே?* (புறம். 229: 23-27)

எனப் புலவர் கேட்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதில் மாயோன் என்று குறிப்பு சேரனைச் சேரும்.

திருமால் கிருஷ்ணாவதாரத்தில் கோபியர் எனும் பெண்களால் விரும்பப் பட்டவர். அதுபோல சேரவேந்தனும் தன் மனைவியரால் மிகவும் விரும்பப்பட்டவன் என்பதை கூற இத்தொன்மத்தைப் பயன்படுத்தியிருக்கலாம். தன்னை விரும்பிய பெண்களுடனே கிருஷ்ணர் இருந்துவிடவில்லை. ஒரு காலக்கட்டத்தில் கோபியர்களுடன் லீலைகள் புரிந்த கிருஷ்ணர், கம்ச வதை செய்து மன்னனாக முடிசூட்டிக் கொண்டார் என்று தசாவதாரக் கதைகள் கூறுகின்றன. அதுபோல சேரமானும் தன்னை விரும்பும் மனிதர்களை மறந்து சென்றுவிட்டான் என்பதைக் கூறுவதற்குச் சேரனை மாயோன் என்று பொருத்தமுறக் கூறுவதாகக் கொள்ளலாம்.

நற்றிணையில் காணப்படும் ஒரு பாடல் திருமால் தொன்மத்தை உவமையாக்கியுள்ளனர். தலைவன்பால் கொண்டுள்ள நம்பிக்கையை ஆராய தலைவி முற்படுகிறாள். அதற்குத் தோழி, 'அவன் தகுதியுடையவன், இத்தனை நாள் பழகியபிறகு நட்புக்குறித்து இப்போது ஆராய்வது சரியல்ல; தலைவன் நல்லவனே' என்று கூறுவதாக அமைந்துள்ளது பாடல்.

தலைவனுடைய நாட்டிலுள்ள மலையை மாயோனைப் போன்ற பெரிய மலை என்றும், அவனுக்கு முன்பிறந்த வெள்ளை நிறத்தையுடைய பலதேவனைப் போன்று வெண்மையாய் விளங்கும் அருவி என்றும் பாடியுள்ளார் புலவர்.

சான்றோர் தம்மோடு நட்புக் கொள்ள விரும்பியவர்களின் குணங்களை முதலில் ஆராய்ந்து பார்த்துப் பின்பு நட்புக் கொள்வர் என்கிறாள் தோழி, இப்பாடலில் திருமால் தொன்மம் உவமையாகப் பயன்பட்டதின் நோக்கத்தை ஆராயும்பொழுது,

***மாயோன் அன்ன மால் வரைக் கவாஅன்***

***வாலியோன் அன்ன வயங்கு வெள்அருவி*** (32: 1-2)

என்ற வரிகளில் இயற்கைச் சூழலுக்குத் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. திருமால் கிருஷ்ணாவதாரத்திலும், இராமாவதாரத்திலும் நட்புக்கு நல் உதாரணமாக இருந்தார் என்பதை அறிய முடிகிறது. இராமாவதாரத்தில் சுக்ரீவன், குகன், விபீஷணனுடன் நட்புகொண்டு தன் சகோதரர்கள் ஆவார்கள் என்று இராமர் கூறுவதாக வந்துள்ளது.

பாரதப் போரில் கிருஷ்ணர் பாண்டவர் பக்கமிருந்து வெற்றிப்பெறச் செய்தார். ஆக இப்பாடலில் தலைவனின் நாட்டிலுள்ள மலைக்கும், அருவிக்கும் திருமாலை பலதேவனை உவமையாகச் சொல்லி தலைவனின் நட்பும் அதுபோல அப்பழுக்கற்றது என்று தோழி கூறாமல் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ள இரண்டாம் பத்தில் குமட்டூர் கண்ணனார் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் புகழ்ந்துப் பாடுகிறார். அதில் சேரலாதன், மண்ணுலகில் வாழும் உயிர்கட்கெல்லாம் குறைவுபடாமல் கொடுக்கும் ஈகையினையும், கடிய வலிமையினையும் உடையவன் என்றும் இறைவனுடைய ஆலயங்களுக்கெல்லாம் சிறந்த அணிகலன்களைக் கொடுப்பவன் என்றும் காண்போருக்கு இன்பம் தரும் சிறப்புமிக்க திருமாலைப் போன்று குறைவற்ற புகழ் குறையாமல் வாழும் பண்பு கொண்டவன் என்றும் கீழ்க்காணும் பாடல் வரிகளில் குறிப்பிடுகிறார்.

*நெடியோன் அன்ன நல்இசை*

*ஓடியா மைந்தே! நின்பண்பு பல நயந்தே* (15: 39-40)

என்கிறார் புலவர்.

இப்பாடல் வரிகளில் சேரலாதனுக்குத் திருமால் உவமையாக்கப் பட்டிருக்கிறார். சேரலாதனுக்கும் திருமாலுக்குமுள்ள ஒற்றுமைகளை ஆராய்ந்ததில் கிடைக்கப்பெற்றச் செய்திகள் கீழ்காணுமாறு:

| எண் | சேரலாதன் | திருமால் |
|---|---|---|
| 1. | பாசறையில் தங்கி போர்செய்வதில் நீண்ட காலத்தைச் செலவழித்தான் என்று கீழ்க்கண்ட பாடல்வரிகள் ***மரம் கொல் மழகளிறு வழங்கும் பாசறை*** (பதிற். 16: 1) | திருமால் கிருஷ்ணாவதாரத்தில் பாண்டவர்களுடன் நீண்டகாலம் தங்கி பாரதப்போர் மேற்கொண்டார் |
| 2. | பிழைசெய்த பகைவர் பணிந்தபோது அவர்களை மன்னிக்கும் பொறுமைக் குணமும், புகலிடம் இல்லாதவருக்கு பாதுகாப்பு அளிக்கும் அருட்குணமும் உடையவன் நெடுஞ்சேரலாதன் என்கிறார் புலவர். ***பெரிய தப்புநர் ஆயினும் பகைவர் பணிந்து திறைபகரக் கொள்ளுநை ஆதலின் துளங்குபிசிர் உடைய மாக்கடல் கடம்பு அறுத்து இயற்றிய நீக்கி*** (பதிற்று. 16: 2-5) | திருமாலும் பிழைசெய்த பணிபவர்களை மன்னிக்கும் குணமுடையவர். நிற்கதியாகி நிற்பவருக்குப் பாதுகாப்பளிக்கும் அருட்குணமுடையவர் என்று இதிகாசம் வழி அறிய முடிகிறது. (எ-கா.) கௌரவர் சபையில் துகிலுரியப்பட்டபோது முதலில் வணங்காது பிழைசெய்த திரௌபதி தன்னை கைதூக்கி வணங்கியதும் அவளைக் காத்து அருளினார். |

சேரலாதனின் உயர்பண்புகள் திருமால் தொன்மத்தோடு ஒத்துப் போவதால், சேரலாதன் இறைக்கு ஒப்பானவன் என்ற கூற்றை மறைமுகமாய் வலியுறுத்த திருமால் தொன்மம் உவமையாகப் பயன்பட்டுள்ளது எனலாம். அதுமட்டுமல்லாது, சேர நாட்டில் திருமாலின் ஓர் அவதாரமான "வாமனன்" அவதாரம் நடைபெற்றதாகப் புராணம் கூறுகிறது. சேர நாட்டை ஆண்ட "மாவலி" அரசன் பொருட்டு அவதாரம் எடுத்து வந்து பூமியைத் தானமாகப் பெற்ற வரலாறு யாவரும் அறிந்ததே. இன்றும் "ஓணம்" எனும் பண்டிகை மாவலி மன்னன் நினைவாகக் கொண்டாடப்படுகிறது.

இத்தனை புராணப் பின்னணி கொண்ட சேரநாட்டை ஆண்ட சேரலாதனுக்குத் திருமால் உவமையாக வந்தது பொருத்தமே. புலவர் திருமால் தொன்மத்தை ஒப்புமைக் கருதி உவமையாக்கியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

திருமால் தொன்மம் உவமையாக அகஇலக்கியமான கலித்தொகையிலும் அமைந்துள்ளது. கலித்தொகையைப் பொறுத்தமட்டில் பாலைக் கலியில் இருபாடல்களுக்கு திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளன. இருபாடல் களிலும் பலராமரும் உவமையாகக் காட்டப்பட்டுள்ளார். இப்பாடல்களில் பலதேவன் எனக் குறிப்பிடப்படுகிறார். பிரிவும் பிரிதல் நிமித்தமும் பாலையின் உரிப்பொருள் என்பதால் இவ்விரு பாடல்களிலும் தலைவன் பிரிவால் வாடும் தலைவிக்கு தோழி ஆறுதல் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. இருபாடல்களிலும் (பாலைக்கலி. 26, 36) இளவேனிற் காலம் குறிப்பிடப்படுகிறது.

***ஒரு குழை ஒருவன் போல்: இணர் சேர்ந்த மராஅமும்*** (பாலைக்கலி 26)

என்று தொடங்கும் பாடலில் தலைவன் வேற்று நாட்டிற்கு வேந்தன் பொருட்டு பிரிந்து சென்றுவிட்டான். பிரிவுத் துன்பத்தால் வாடும் தலைவிக்குத் தோழி தேறுதல் கூறித் தேற்றுகிறாள். இப்பாடலில் இளவேனிற்காலத்தே பூக்கும் பூக்களுக்கு தெய்வங்கள் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. நீர் பொருகின்ற

கரையிடத்தே அழகுற நின்ற ஒரு பூங்குழையை உடைய பலதேவனைப் போலப் பூத்திருக்கும் பூங்கொத்துகள் உடைய வெண்கடம்பு, கதிரவனைப் போலப் பூத்திருக்கும் செருந்தியும், மன்மதனைப் போல மலர்ந்திருக்கும் காஞ்சியும், காமனின் தம்பியான சாமனைப் போலப் பூத்திருக்கும் ஞாழலும், இடபக் கொடியுடைய இறைவனைப் போன்று மலர்ந்த இலவமும் என்கிறது பாடல். இதில் பலதேவன் எனும் பலராமர் போன்று பூத்திருக்கும் வெண்கடம்பு என உவமை கூறப்பட்டுள்ளது.

> ***பருத்தியும் செல்வன்போல் நனை ஊழ்ந்த செருந்தியும்***
> ***மீன் ஏற்றுக் கொடியோன் போல் மிஞிறு ஆர்க்கும் காஞ்சியும்***
> ***ஏனோன்போல், நிறம் கிளர்பு கஞலிய ஞாழலும்***
> ***ஆன் ஏற்றுக் கொடியோன் போல் எதிரிய இலவமும்***

என இப்பாடல் வாசிப்பின் மூலம் சில செய்திகளை அறியமுடிகிறது. அவை:

1. திருமால் அவதாரங்களில் பலராமருக்கு என்று தனிக்கதைகள் இல்லை (இராமர், கிருஷ்ணர், வாமனன் போன்ற கதைகள் போல பலராமருக்கு என்று என்று தனிக்கதைகள் இல்லை). கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணனுக்கு அண்ணனாக வரும் பலராமர் பற்றி கிருஷ்ணருடனே உவமையாகக் காட்டப்பட்டுள்ளார் எனலாம்.

2. மன்மதனை காமன் என்றும், அவன் தம்பியை சாமன் என்றும் சொல்லும் வழக்கு உள்ளது.

3. ***. . . . . . . . ஆங்கு***

***தீது தீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோல*** (கலி. 26:6)

என்பதில் குற்றமற்ற சிறப்பினை உடைய ஐவர் என்பது பஞ்சபாண்டவர்களைக் குறிப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது.

4. இடபக் கொடியைக் கொண்ட இறைவன் என்பது சிவனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இடப வாகனத்தை உடையவர் சிவன் என்று புராணம் கூறுகிறது.

இளவேனிற் காலத்தே வந்துவிடுவதாகத் தலைவன் தூது அனுப்பி யுள்ளான். அப்படிப்பட்ட இளவேனிற் காலத்தில் பூக்கும் பூக்களுக்குத் தெய்வங்களை உவமை கூறியிருப்பது, இத்தெய்வங்கள் தலைவனைக் கொண்டு வந்து தலைவியிடம் சேர்த்துவிடும் என்ற நம்பிக்கையின் பொருட்டுப் புலவர் பாடியுள்ளதாகக் கொள்ளலாம். நம்பிக்கையை நிலைநிறுத்த இப்பாடல் தொன்மத்தை கையாண்டிருக்கலாம்.

அடுத்த பாலைக்கலிப் பாடலில் (36) இயற்கைக் காட்சியை விளக்க பலராமர் தொன்மம் உவமையாகக் கூறப்படுகிறது. பிரிந்துசென்ற தலைவன் காதலிலிருந்து நிங்கிவிட்டாரோ? தன்னை மறந்துவிட்டாரோ? தலைவனைக் காண்போமா? என்று பல கேள்விகளைக் கேட்கும் தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி. இயற்கை காட்சிகளுக்கு உவமை கூறும்போது, கொடிய வலிய கலப்பைப் படையினைக் கொடியாகக் கொண்ட நம்பி மூத்தபிரான் பலதேவன் தோளில் பசிய துளசி மாலையை அணிந்திருப்பதுபோல, வெண் கடம்பின் உயர்ந்த இடத்தே மயில்கள் அனைத்தும் சீர்மையுடையவாய் விளங்கின என்கிறார் புலவர்.

இப்பாடலிலும் வெண்கடம்பிற்கு பலராமர் தொன்மம் உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. மூத்தபிரான் என்று கிருஷ்ணருக்கு மூத்தவர் எனச் சொல்லப்படுகிறது. இப்பாடலின் வரும் காட்சிக்கு பலராமன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அக்காலக்கட்டத்திற்கு முன் வாய்மொழியாகப் பேசப்பட்ட கடவுளர் தொன்மத்தோடு பலராமன் தொன்மமும் பேசப்பட்டுள்ளது என அறியமுடிகிறது. பலராமர் கிருஷ்ணபிரானின் அண்ணன் என்பதை மேலும் மேலும் பதிவு செய்யப் புலவர் பலராமர் பற்றிய தொன்மங்களை உவமையாகச் சொல்லியிருக்கலாம்.

ஆயர் இன மக்களின் வாழ்க்கை முறையை களவு ஒழுக்கத்தின் வழியாகக் கண்முன் காட்டுகிறது. இம்முல்லைக்கலி எனலாம். இவ்விலக்கியத்தில் சில பாடல்களில் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளன.

முல்லைக்கலிப் பாடல் (103) ஏறு தழுவி வெற்றி பெற்றவர் செயலைப் பாடுகிறது. அன்றைய காலகட்டத்தில் அதுவும் முல்லைநில மக்களிடையே இளைஞன் ஒருவன் தன் வீரத்தை உறுதி செய்ய, காளையை அடக்கிக் காட்ட வேண்டும் என்ற மரபு இருந்துள்ளது தெரிகிறது. அவ்வாறு காளையை அடக்குபவனே ஆயர்குலப் பெண்ணை திருமணம் செய்துகொள்ள முடியும். இதன் மூலம் அக்காலப் பெண்களும் வீரத்தைச் சிறப்பாக மதித்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

ஆயர் ஏறுதழுவிய பாங்கினைத் தோழி தலைவியிடம் விளக்குகிறாள். தன்னை அடக்க வந்த இளைஞர்களைத் தன் கொம்புகளால் எருதுகள் குத்தின. நீங்காத சினத்துடன் எதிர்த்து வந்த காளையைச் செவியோடு பிடித்து, அடக்கித் தழுவும் இளைஞனைப் பார், பகைவர் விடுத்த பிடரிமயிர் கொண்ட குதிரையை வாயைப் பிளந்து கொன்ற சமயத்தில் மாயவனும் இப்படித் தானிருந்திருப்பானோ? என அச்சங்கொண்ட மனதோடு தோழி கூறுகிறாள்.

> **ஓவா வேகமோடு உருத்துத் தன்மேல் சென்ற**
> **சேஎச் செவிடுதற் கொண்டு பெயர்த்து ஒற்றும்**
> **காயாம்பூங் கண்ணிப் பொதுவன் தகை கண்டை**
> **மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை**
> **வாய்பகுத்து இட்டு புடைத்த ஞான்று, இன்னன் கொல்**
> **மாயோன் என்று உட்கிற்று என் நெஞ்சு** (கலி. 103: 51-55)

இப்பாடலில் குதிரையை வாயைப் பிளந்து கொன்ற மாயோன் என்று திருமால் குறிப்பிடப்படுகிறார். கம்சனால் அனுப்பப்பட்டவன் 'கேசி' எனும் குதிரை முகம்

கொண்ட அசுரன். அவன் கிருஷ்ணரைக் கொல்வதற்காக வந்தவன். அவ்வசுரனைக் கிருஷ்ணர் வாயைப் பிளந்து கொன்றார் என்று பாகவத புராணம் கூறுகிறது.

கிருஷ்ணரால் தன் உயிருக்கு ஆபத்து என்ற நிலையில், கோகுலத்திலேயே கிருஷ்ணரைக் கொன்றுவிடுமாறு குதிரை முகம் கொண்ட அசுரனைக் கம்சன் அனுப்புகிறான் என கிருஷ்ணாவதாரக் கதைக் கூறுகிறது. அக்கம்சன் போல காளையும் தன்னை கொன்று விடுவானோ இந்த இளைஞன் என்று பயந்து இளைஞனைக் குத்திக் கொல்ல முயன்றது. கம்சன் தன் தங்கை தேவகியின் ஏழு குழந்தைகளை கொன்றவன். அதுபோலக் காளையும் தன்னை காத்துக்கொள்ள தன் மேல் பாய்ந்த பொதுவரைக் குடல் சரிய குத்தியது. கிருஷ்ணர் அசுரனைக் கொன்றதுபோல இளைஞனும் காளையை அடக்கி நின்றான். காளையின் செயலுக்கும், முடிவில் காளையை வெற்றி கொண்ட இளைஞனின் சிறப்பிற்கும் விளக்கம் தருவதே இத்தொன்மத்தின் நோக்கமாக இருக்கிறது எனலாம். இந்த ஒற்றுமையைப் புலவர் மனதில் கொண்டு காளைக்குக் கம்சனை உவமையாக்கியிருக்கலாம். அடுத்ததாக,

> ***. . . . . . . . பனைக் கொடிப்***
> ***பால்நிற வண்ணன் போல்பழி, தீர்ந்த வெள்ளையும்***
> ***பொருமுரண் மேம்பட்ட பொலம் புணபுகழ் நேமி***
> ***திருமறு மார்பன் போல் திறன் சான்ற காரியும்*** (104: 7-10)

இப்பாடலில் ஓங்கி ஒளிவீசும் பனைக் கொடியினையுடைய பால் போன்ற நிறமுடைய பலராமனைப் போன்றிருந்தது வெற்றை நிற எருது என்றும், புகழ்பெற்ற சக்கரப்படையை உடையவனும், திருமகளை மார்பிலே கொண்டவனுமான மாயோனின் நிறமுடைய கரிய எருது என்று புலவர் பாடுகிறார்.

வெள்ளைநிற எருதுக்கு பலராமரும் கரிய நிற எருதுக்குத் திருமாலும் உவமையாக வந்துள்ளனர். இதே பாடலில் மற்றொரு இடத்தில் தன்மேல்

பாய்ந்தவனை இடைவிடாது குத்தும் காளையின் தோற்றம் நீலநிறமான மாயோன் போன்றிருந்தது என்று மட்டும் கூறாமல் பாம்பானது நிலவை விழுங்கி விடும்போது ஏற்படும் நீலநிறம் போன்ற நிறத்தையுடைய மாயோன் போன்றிருந்தது என்கிறார்.

இப்பாடலில் எருதின் நிறத்திற்குத் திருமாலை உவமையாக்கிய நோக்கம், எருதின் வன்மையைச் சிறப்பிக்கச் சொல்லப்பட்டதாகக் கொள்ளலாம். இதில் தலைவியின் அலர் அச்சம் நீங்கியதும், தலைவனுக்கு தலைவியை மணம் செய்விக்கப் பெரியவர்கள் உடன்பட்டது நிலவை விழுங்கி விடுவிக்கும் நீல நிறம் போலுடைய மாயோன் போன்றிருந்தது எனக் குறிப்பிடுகிறது. இதில் அலர் அச்சத்திற்கும் தலைவன் தலைவியை வருத்தின துன்பத்திற்கும் நிலவை பாம்பு விழுங்கியதும், பாம்பு நிலவை விழுங்கி விடுவித்ததற்கு தலைவன் - தலைவி திருமணம் செய்விக்க உடன்பட்டதும் குறிப்பாகக் கூறப்படுகிறது எனக் கருதலாம். இப்பாடலைப் பொறுத்தவரை திருமாலின் மேனி நிறம் ஏறுதழுதலில் ஈடுபடும் காளைக்கு உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. கூடவே சந்திர கிரகண நிகழ்வும் சுட்டப்படுகிறது. இதனால் இலக்கியம் மூலம் கடவுளர் கருத்தும், அறிவியல் நிகழ்வும் உவமைகளாக காட்டியப் புலவரின் அறிவுத்திறன் வெளிப்படுகிறது

மற்றொரு முல்லைக்கலிப் (105) பாடலிலும் ஏறுதழுவதலில் பங்கு பெறும் எருதுக்கு திருமால், பலராமர் தொன்மம் உவமையாக வந்துள்ளது. சக்கரப் படையோன் வாய்வைத்து ஊதிய சங்கு போல விளங்கும் வெள்ளைச் சுட்டி உடைய கரிய எருது என்றும் பலராமன் திருமார்பிலே விளங்கும் ஒளி படைத்த மாலை போல, சிவந்த மறுவினை உடைய வெள்ளை எருது என்றும் புலவர் உவமை கூறுகிறார். இப்பாடலில் திருமால் கையில் வைத்திருந்த சங்கும் பலராமன் மார்பில் சூட்டிய மாலையும் காளைகளின் அடையாளங்களுக்கு உவமையாகி யுள்ளது.

குருசேத்திரப் போர் தொடங்குமுன் கிருஷ்ண பரமாத்மா சங்கு எடுத்து ஊதியப் பின் போர் தொடங்கினதாக பாரதம் மூலம் அறியப்படுகிறது. எருதின் நெற்றியில் சிறிய அளவிலான சங்கைக் கயிற்றால் கட்டியிருப்பர். எவ்வாறு கிருஷ்ண பரமாத்மா சங்கெடுத்து ஊதியதும் போர் தொடங்கியதோ அதேபோல சங்கை நெற்றிச் சுட்டியாக அணிந்திருந்த காளை தொழுவத்தினுள் வந்ததும் ஏறு தழுவுதல் நிகழ்ச்சித் தொடங்கியதாகப் பாடல் அமைந்துள்ளது. பலராமன் மார்பில் சூடியுள்ள மாலைபோல, சிவந்த மறுவினையுடைய வெள்ளை எருது எனும்போது, கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணரைக் கொல்ல கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களைக் கிருஷ்ணருடன் பலராமரும் சண்டையிட்டு ஒழித்தார்கள் என்று புராணம் வழி அறியலாம். பலராமர் கம்சனால் மல்யுத்தத்திற்கு ஏவப்பட்ட **முஷ்டிகனையும் அவன் தம்பி கூடனையும் கொன்றார்.**[14] ஆகவே எண்ணற்ற அசுரர்களுடன் போரிட்டு வென்ற பலராமனை உவமையாகச் சொல்வதின் நோக்கம் ஏறுதழுவுதலில் இடம்பெற்ற காளைகளும் அவ்வாறு போரிட்டு வெற்றிபெறும் தன்மையுடையவை என்பதை மறைமுகமாய்ச் சுட்டுவதாகக் கொள்ளலாம்.

அடுத்ததாக, திருமால் தொன்மம் பயின்றுவரும் ஒரு பாடலில் (நெய்தற் கலி. 123) தலைவி தலைவனைச் சந்திக்க இயலாதபடி காவல் காக்கப்படுகிறாள். அதனால் துயரப்படுகின்றாள். தலைவனை நோக்கிப் போகும் எண்ணங்களைப் பார்த்து பாடுவதாக பாடல் அமைந்துள்ளது.

> **கருங்கோட்டு நறும் புன்னை மலர் சினை மிசைதொறும்**
> **கரும்பு ஆர்க்கும் குரலினோடு, இருந்தும்பி இயைபு ஊத**
> **ஒருங்குடன் இம்மென இமிர்தலின் பாடலோடு**
> **அரும் பொருள் மரபின் மால்யாழ் கேளாக் கிடந்தான் போல்**

என்று பாடல் அமைந்துள்ளது. இதில் இரவு நேரத்தில் தும்பிகள் ஒருங்கு சேர்ந்து எழுப்பும் ஒலியும், சுரும்புகள் மலர்களை நுகர்வதற்காக எழுப்பும் ஒலியும், யாழ் இசைப்பது போல இருப்பதைக் கேட்டு திருமால் பள்ளி கொண்டிருந்தார்.

எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கும் பெரிய கடலும் ஒலியடங்கி உறக்கம் மேற்கொண்டிருந்தது. இப்பாடலில் திருமால் பள்ளிகொண்ட கோலம் உவமையாக்கப்பட்டுள்ளது.

கடலுக்கு ஒலியடங்கி உறக்கம் மேற்கொள்வது என்பது என்றும் நடவாத செயலாகும். அதுபோல தும்பிகள், சுரும்புகளின் இம்மென்ற ஓசை பாடலோடு யாழ் மீட்டுவது போன்று, அதைக் கேட்டு திருமால் பள்ளிகொள்வது என்பதும் கற்பனைக்கு அப்பாற்பட்ட செயலாகும். கடல் கூட ஒலியடங்கி அமைதியான உறக்கம் கொள்ளும். திருமாலும் பள்ளிக்கொண்டு தூங்குவார். ஆனால் தலைவனைக் காணாது காவலிலுள்ள தலைவிக்குத் தூக்கம் என்பது இல்லாத ஒன்றாகும் என்பதைச் சொல்லாமல் சொல்ல இத்தொன்மம் உவமையாக்கப்பட்டிருக்கலாம்.

திருமால் மற்றும் கடல் துயில் கொண்டதாகப் பாடலில் கூறப்படுவதால் உலகமே நிம்மதியாகத் துயில் கொள்ளும் வேளையிலும் களவில் ஈடுபட்ட தலைவி காவலில் வைக்கப்படுவதால் எல்லையில்லாத் துன்பத்தால் தலைவனை நினைத்து துயில் கொள்ள இயலாமல் தவிக்கிறாள் என்பதைப் புலவர் உள்ளுறையாக வைத்துப் பாடுவதற்கு இத்தொன்மம் உவமையாக வந்து உதவுகிறது எனலாம்.

மற்றுமொரு திருமால் தொன்மம் உவமையாக வந்த நெய்தற் கலிப்பாடல் (124) தலைவன் பொருள்வயிற் பிரிந்து திரும்பி வந்த நிலையில், களவு வெளிப்பட்ட பின்னரும் தலைவியைத் திருமணம் முடிக்கத் தாமதிக்கின்றான். அவனிடம் தலைவியின் துன்பத்தை எடுத்துக் கூறியத் தோழி திருமணம் விரைவில் செய்க என்பதாகப் பாடலுள்ளது.

> ***ஞாலம் மூன்று அடித் தாய முதல்வற்கு முது முறைப்***
> ***பால் அன்ன மேனியான் அணி பெறத் தைஇய***
> ***நீலநீர் உடை போல,***

என்கிறார் புலவர். உலகம் மூன்றையும் தன் திருவடியினால் அளந்த முதல்வனாய் திருமாலுக்கு மூத்தவனாகிய பால் போன்ற மேனியனான பலராமன் அழகுபெற அணிந்திருந்த நீலநிற ஆடையைப் போல உள்ளது அழகு பெற்ற வெண் திரையினை உடைய கடல் என்கிறார் புலவர். ஊரார் அவர் தூற்றுகின்றனர். தலைவனால் ஏற்பட்ட காமநோயினால் தலைவி மிகுதியும் வாடுகிறாள். அவருடைய பிறை போன்ற நுதலில் பசலை படர்ந்து களவு வாழ்வை ஊராருக்குக் காட்டிவிட்டது.

தலைவி தன் இயற்கையான அழகையெல்லாம் இழந்து உன் பொருட்டு வாடுகிறாள். தலைவன் பிரிவால் இழந்த நலம் மீண்டும் கிடைக்கத் தலைவனே நீ உன் தேரினைச் செலுத்தி தலைவியின் மனையிடத்தே விரைந்து செல்வாயாக என்கிறாள் தோழி.

இப்பாடலில் கடலுக்கு பலராமனின் நீலநிற ஆடை உவமையாக வந்துள்ளது. உலகை மூன்றடி அளந்த திருமாலின் மூத்தவன் பலராமன் என்று சொல்லப்பட்டுள்ளது. திருமாலின் வாமன அவதாரத்தில் வாமனனாக வந்த திருமால் மாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டார். சிறிய உருவத்தில் வந்த திருமாலிடம் மாபலி தருகிறேன் என்று உறுதியளிக்க, வாமனன் பெரிய ரூபம் எடுத்து ஓரடியில் பூமியை அளந்தார். இரண்டாவது அடியால் வானத்தை அளந்தார். மூன்றாவது அடி எங்கே எனக் கேட்க, மாபலி தன் தலையைக் காட்ட, அரசன் தலையில் கால் வைத்து பூமிக்குள் வாமனன் அரசனை அமுக்கினார் என்று தசாவதாரக் கதை கூறுகிறது.

உலகை மூன்றடியினால் அளந்த திருமாலுக்கு மூத்தவனான பலராமன் அணிந்த நிலநிற ஆடையைப் போன்ற கடல் என்று குறிப்பிடப்படுகிறது. பலராமனுக்கு **யமுனை இரண்டு நீல வஸ்திரங்களும், ஒரு பொன் மாலையும் அளித்தது. ஆகையால் அதையணிந்து நீலாம்பரன் எனப் பெயரடைந்தார்.**[15]

இப்பாடலில் வந்துள்ள திருமால், பலராமன் தொன்ம உவமைகள் மறைமுகமாய் சில செய்திகளைக் காட்டுகிறது எனலாம். திருமணத்திற்குக் காலம் தாழ்த்திய தலைவனின் பிரிவாலும், ஊரார் தூற்றும் அலராலும் வாடும் தலைவியின் நிலையைத் தோழி தலைவனுக்குக் கூறி திருமணம் முடிக்கத் தூண்டுகிறாள். இப்படிப்பட்ட களவு வாழ்க்கையை எடுத்துக்கூறும் பாடலில் கடவுளர்களான திருமால், பலராமர் தொன்மம் உவமையாகப் பயன்பட்டிருப்பதின் நோக்கத்தை ஆராயும்பொழுது ஒப்பீட்டு நிலையில் சில செய்திகளை அறியலாம். அவை:

| | |
|---|---|
| திருமாலிடம் மூன்றடி தருவதாக வாக்கு கொடுத்த மாபலி இறுதியில் துன்பப் பட்டது போல, தலைவன் தலைவியை மணப்பேன் என்று உறுதியுடன் இருந் தவன், மணக்க வராததால் தலைவி துன்பப்படுகிறாள் என்று கூறலாம். | பலராமனுக்கு யமுனை நீலநிற ஆடை அளித்ததுபோல, தலைவன் தலைவிக்கு காதல் வாழ்வை பரிசாக நல்கினான் எனலாம் |
| மாபலி, தன்னால் மூன்றடி கொடுக்க முடியும் என்று கர்வப்பட்டது போல, தலைவியும் களவுவாழ்க்கையில் வெற்றி கொண்டு கற்பு வாழ்வு வாழ்வேன் என்றிருந்தும், தலைவன் தன்மேல் கொண்ட அன்பால் கர்வப்பட்டிருந்தவள் இன்று மாபலி அழிந்ததுபோல காம நோயால் அழிகிறாள் எனச் சொல்லாம். | பலராமனுடைய நீலநிற ஆடையைப் போன்ற கடல் என்பதால், அழகியல் உணர்வுகளைக் கொடுத்த கடல் போன்ற களவு வாழ்க்கையில், கடுமையான அலர் எனும் அலைகளின் நடுவே நீந்தி கரை யெனும் கற்பு வாழ்வை அடையவேண்டும் எனத் தலைவனுக்கு மறைமுகமாகச் சொல் வதாகக் கொள்ளலாம். |

இப்பாடலில் கூறிய திருமால் தொன்ம உவமைகள் பாடலின் கருத்துகளுக்கு மிகப் பொருத்தமாகப் பொருந்தி வருகின்றன என்று கூறமுடியும்.

அடுத்து நெய்தற்கலிப் பாடல் (134) தலைவன் பிரிந்து சென்றதால் வாடிய தலைவி கடலும், மணலும், மரமும் அவளது துயரம்கண்டு துன்பம் அடைந்த

தாகவும் தலைவன் வருவான் எனச் சொல்லிய அளவில் தலைவன் வந்துவிட தலைவியின் துன்பம் நீங்கியது எனக் கூறுகிறது பாடல். இப்பாடலில் சூரியன் மேற்றிசை மறைவதற்கு திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அப்பாடல் வரிகளாவன:

> ***மல்லரை மறம் சாய்த்த மலர்த்தண்தார் அகலத்தோன்***
> ***ஒல்லாதார் உடன்று ஓட, உருத்து, உடன் எறிதலின்***
> ***கொல்யானை அணிநுதல் அழுத்திய அழிபோல்***
> ***கல் சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்*** (134: 1-4)

என்கிறார் புலவர். அலர்ந்த தண்ணிய மாலையை அணிந்த திருமார்பை உடைய மாயோன், பகையாய மல்லர்களின் வலிமையை அழித்தான். பகைவர் ஒரு சேர வந்து சினந்து போரிட்ட காலத்தே அவர் ஓடும்படியாக அவர்தம் கொல்யானையின் அழகிய மத்தகத்திலே ஆழ்த்திய சக்கரப்படை போலிருந்தது. சூரியன் தான் பரப்பிய ஒளிக்கற்றைகளைத் தன்னிடத்தே வாங்கிக் கொண்டு மேற்றிசை மலையை அடைந்து மறைந்த காட்சி எனப் புலவர் பாடுகிறார்.. இப்பாடலில் இயற்கை காட்சியான சூரியனின் மறைவதற்குத் திருமால் தொன்மம் உவமையாக வந்தாலும், இப்பாடலின் முக்கிய கருத்துக்கும் இத்தொன்மம் ஒத்ததாக அமைகிறது எனலாம். அதாவது தலைவன் பிரிந்து சென்ற நிலையில் தலைவி வாடுகிறாள். பின்பு தலைவன் வந்துவிடுகிறான். இதுபோல மாயோன் மல்லர்களை அழித்த நிகழ்வு ஆகிய இவ்விரண்டையும் ஒப்புமைக்கொண்டு நோக்கினால் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.



இப்பாடலின் மையக் கருத்துக்குத் திருமால் தொன்மம் உவமையாக வரவில்லை என்றாலும், அப்பாடலில் வரும் ஒரு செய்திக்குத் தொன்மம் உவமையாக வந்துள்ளது. மையக் கருத்துடன் அவ்வுவமையைத் தொடர்புபடுத்தும் போது பொருத்தமாகிறது. இது சங்க இலக்கியப் புலவரின் தனித்திறனைக் புலப்படுத்துகிறது எனலாம். அத்துடன் திருமால் தொன்மம் பாடலின் கருத்துக்குச் செறிவூட்டுவதாகவும் வருகின்றது.

இன்னுமொரு பாடலில் (நெய்தற்கலி 140) மடல் ஏறுவேன் என்று முற்பட்ட தலைவன் ஊரில் உள்ளவர்கள் தனக்காக இரக்கம் கொள்ளாமல், பாராமுகமாக இருக்கின்றார்களே. ஒருவருக்கு உதவுதல் சான்றோர் கடமை அல்லவா? என்று கோபமுற்றான், நெடியோனாகிய திருமாலின் மகனாகிய மன்மதன் தன்னை அழிக்க விரும்பினான் எனத் தலைவன் கூறுகிறான். பின்பு ஒருத்தி தன் உடம்பில் மன்மதனால் கொடுக்கப்பட்ட அழகுடன் தோன்றி தன்னுடைய கண்களால் என் நெஞ்சாகிய அரண் இடிந்து போகுமாறு செய்தாள் என்கிறான்.

தலைவி தலைவனைக் கவர்ந்து களவு வாழ்க்கை மேற்கொண்டு, அதற்காக மடலேறும் தருவாயில் இதற்குத் திருமாலின் மகனாகிய மன்மதனே காரணம் என்று தலைவன் கூற்றாகப் பாடல் அமைந்துள்ளது. தலைவியால் ஏற்பட்ட காமநோயைத் தீர்க்குமாறு தலைவன் சான்றோரை வேண்டுகிறான். இப்பாடலில் திருமால் மகனாகிய மன்மதன் என்னை அழிக்க விரும்பினான் என்று வந்துள்ளது. **மன்மதன் கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணருக்கும் ருக்மணிக்கும் பிரத்யும்னன் என்ற பெயரில் மகனாகப் பிறந்தவன். இவன் ஆன்மாக்களுக்குக் காமத்தை விளைவித்து வம்ச விருத்தி செய்விப்பவன்**[6] என்பதால் தலைவன், திருமாலின் மகனாகிய மன்மதனால் ஏற்பட்டது இக்காம நோய் என்கிறான். இதற்குதான் காரணமல்ல. கடவுள் தான் காரணம். அதனால் தனக்கு ஏற்பட்ட காமநோயைத் தீர்த்து வைப்பது சான்றோருக்கு கடமை என்று மறைமுகமாய் சொல்லுவது போலக் கொள்ளலாம். காமநோயைத் தீர்த்து

வைப்பதற்கு தலைவியைத் தனக்கு மணமுடித்து வைக்குமாறு தலைவன் வேண்டுகிறான்.

அடுத்ததாக நெய்தற்கலியில் மற்றுமொரு பாடல் (145), தலைவன் பிரிந்து சென்றதால் வாடும் தலைவி ஊராரைப் பார்த்தும், நிலவை நோக்கியும், சூரியனை நோக்கியும் தலைவனைக் கூட்டி வரும்படியும், தலைவனிடம் சென்று தலைவியின் குறையைக் கூறும்படியும் தன் மேல் சுடுகின்ற காமத்தீயைப் போக்குமாறு மேகத்தை மழைபொழியச் சொல்லுவதுமாய் பாடல் அமைந்துள்ளது. இறுதியில் தலைவன் வந்துவிட, மாயவன் மார்பில் திருமகள் சேர்ந்தாற்போல தலைவன் மார்பில் தலைவி சேர்ந்தாள் என்கிறது பாடல். அப்பாடல் வரியாவன:

***மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர*** (145: 64)

தலைவன் மார்பில் தலைவி சேர்ந்ததற்குத் திருமால் மார்பில் திருமகள் சேர்ந்தது உவமையாக வந்துள்ளது. திருமால் தன் துணைவியான திருமகளை ஒருபோதும் விட்டுப் பிரியாதவர் என்று பாகவதம் மூலம் அறியமுடிகிறது. இராமாவதாரத்தில் சீதையாகவும், கிருஷ்ணாவதாரத்தில் ருக்மணியாகவும் திருமகள் அவதரித்தாள் என்று புராணம் கூறுகிறது. அதுபோல தலைவன் - தலைவி பிரியாமலிருக்க வேண்டும் என்பதற்காக இத்தொன்ம உவமையைப் புலவர் பயன்படுத்தியிருக்கலாம். பாடலின் பொருளுக்கு தொன்மம் உவமையாக வரும்போது மேற்கண்ட கருத்து போல பல கருத்துகளை வெளியிட ஏதுவாகின்றது. புலவரின் உள்ளக்கிடக்கும் இதுவாக இருக்கலாம் என அனுமானிக்க முடிகிறது.

கலித்தொகை போன்று மற்றுமொரு அகஇலக்கியமான அகநானூற்றில் திருமால் தொன்மம் உவமையாகப் மூன்று பாடல்களில் வந்துள்ளது எனலாம்.

முதலாவதாக பாடல் (அகம். 59) வரிகளில் (6-7) திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. தலைவன் பிரிவால் வாடும் தலைவிக்குத் தோழி

ஆறுதலாகத் தலைவன் விரைவில் வருவார் எனக் கூறுகிறாள். தலைவியின் அழகைப் பார்த்துப் பாராட்டியதையும் மறந்து தலைவன் பொருளீட்டச் சென்றுள்ளான். அவ்வாறு அவர் போகும் பாதையில் எதிர்ப்படும் காட்சியை விளக்கி அக்காட்சிக்குத் திருமால் தொன்மம் உவமையாக்கப்பட்டுள்ளது.

தலைவன் செல்லும் பாதையில் பெண் யானை உண்ணட்டும் என்று ஆண் யானை மரக்கிளையை வளைத்துக் கொடுக்கிறது. இக்காட்சி எப்படி உள்ளதென்றால் யமுனை ஆற்றில் நீராடிய ஆயமகளிர் குளிர்ந்த தழையை உடுத்திக் கொள்ளட்டும் என்று குருந்த மரக்கிளையின் மேல் ஏறி நின்று, அதனை மிதித்து, கிளையை தாழ்த்திக் கொடுத்த கண்ணபிரான் போலிருந்தது என்கிறார் புலவர். பெண் யானைக்கு உதவும் ஆண் யானையைப் பார்த்ததும் தலைவியின் நினைவு வந்து தலைவன் விரைந்து வந்துவிடுவான் என்று தோழி கூறுகிறாள். இப்பாடலில் வரும் ஒரு சூழலுக்கு திருமால் அவதாரமான கிருஷ்ணர் தொன்மம் உவமையாக வந்துள்ளது. ஆய மகளிருக்கு இரக்கப்பட்டு கிருஷ்ணர் அருளுதல் போல, தலைவி மீது இரக்கம் கொண்டு தலைவன் விரைவில் வந்து அருளுவார் என்பதை உள்ளுறையாக வைத்துப் புலவர் கூற்றாகத் தலைவிக்கு உணர்த்த இத்தொன்மம் பயன்பட்டிருக்கலாம்.

அடுத்த (அகம். 175) பாடலில் தலைவனைப் பிரிந்து வாடும் தலைவியிடம், தோழி வருந்த வேண்டாம் எனக் கூறியதும், அதற்குத் தலைவி தலைவன் கடந்து சென்ற பாலை வழிப் பாதையின் கருமையையும், அவன் நிச்சயம் வந்துவிடுவேன் என்று சூளுரைத்ததையும் கூறுகிறாள்.

மேகமானது பாண்டியன் நெடுஞ்செழியன் போரிட்டு வென்ற வேற் படையைக் காட்டிலும் பெரிதாக மின்னியது. அவன் அறைந்த முரசு சத்தம்போல இடிஇடித்தது. அதிகமான ஆரங்களையுடைய சக்கரப்படையைக் கொண்ட திருமாலின் மார்பிடத்தே உள்ள பல நிற வண்ண மாலைகள் போல் வானில்

வானவில் தோன்றியது. மேகம் மண் பயன்பெறுமாறு மழை பெய்யுங் காலத்துத் தாம் மேற்கொண்ட செயலை முடித்துக்கொண்டு வருவனே் என்று கூறிச் சென்ற தலைவன் வரவில்லையே எனத் தலைவி வாடுகிறாள். இப்பாடலில் வானத்தில் வரும் வானவில்லிற்கு திருமால் மார்பில் உள்ள மாலைகள் உவமையாக்கப் பட்டுள்ளன. தலைவன் மழைக்காலத்தில் திரும்பி வருவேன் என்று சொல்லிப் போனதாக குறிப்பு உள்ளது. வானத்தில் பல வண்ணங்களிலுள்ள வானவில் தோன்றினால் மழை வராது என்பதாகச் சொல்வார். மழை இல்லாத காலத்திலே வானவில் தோன்றும். தலைவன் வரும் காலம் மழைக்காலம் என்பதால் அக்காலம் இன்னும் வரவில்லை. அதனால் தலைவி வருந்தத் தேவையில்லை. மழைக்காலம் வந்ததும் தலைவன் கூறிச் சென்றது போலவே வருவான் எனக் கொள்ளலாம். வானவில்லுக்கு திருமால் மார்பிலே சூடிய வண்ணமாலையைச் சொல்வது திருமாலின் மேல் அக்காலத்திலிருந்த பக்தியை வெளிப்படுத்துகிறது.

மற்றுமொரு அகநானூற்றுப் பாடலில் (220) தலைவன், இரவு நேரத்தில் தலைவியைக் காணச்செல்கையில் தோழி தலைவனிடம் அவன் பிரிந்தபோது வாடுகிறாள் தலைவி. அதனால் தலைவியின் அழகு கெடுகிறது. அதைப்போக்க வழிசொல்லுமாறு தலைவனை வேண்டி தலைவியை மணந்து கொள்ளுமாறு கூறுகிறாள்.

தலைவன் பிரிவில் தலைவி வாடுகிறாள், இதில் திருமால் தொன்மமான பரசுராமர் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அரசர் குலத்தை அழித்த பரசுராமர் செய்த வேள்வியில் இடம்பெற்ற உயர்ந்த காவலையுடைய வேள்வித்தூண் போன்று யாரும் காணமுடியாத எம் தலைவியின் மார்பகத்தை நினைக்கும் போதெல்லாம் நீதான் வந்து நின்று வருத்துகின்றாய் எனத் தலைவனிடம் தோழி கூறுகிறாள். இப்பாடலில் தலைவிக்கு, பரசுராமர் செய்த வேள்வியிலுள்ள மிகுந்த காவலிலுள்ள வேள்வித் தூணை உவமையாகச் சொல்கிறார் புலவர். வேள்வி

நெருப்பின் தாக்கத்திலுள்ள வேள்வித் தூணை தலைவனைப் பிரிந்து வாழும் தலைவிக்கு உவமை கூறியுள்ளார் புலவர். நெருப்பின் வெப்பத்தில் வேள்வித் தூண் இருப்பதுபோல தலைவனால் ஏற்பட்ட பிரிவுத் துன்பத்தில் தலைவி, அனலில் நிற்பது போலத் துயரப்படுகிறாள் என்பதைச் சுட்டப் புலவர் இத்தொன்மத்தை உவமையாகப் பாடலின் கருத்துக்கு பொருந்தி வருமாறு அமைத்துள்ளார் எனலாம். தலைவியின் துன்பத்தையும், அவள் மிகுந்த காவலிலுள்ளாள் என்பதையும் குறிப்பால் உணர்த்தவும் இத்தொன்மம் பயன்பட்டுள்ளது என்று கூறலாம்.

பத்துப்பாட்டிலுள்ள ஆற்றுப்படை இலக்கியங்களில் ஒன்று பெரும் பாணாற்றுப்படையாகும். கடியலூர் உருத்திரங்கண்ணனார் பேரியாழ் இசைக்கும் பெரும்பாணனை காஞ்சித் தலைவன் தொண்டைமான் இளந்திரையனிடம் ஆற்றுப் படுத்துகிறார். ஆற்றுப்படுத்துவது என்பது காஞ்சி சென்று இளந்திரையனை நாடினால் தாம் பெற்றதுபோல ஏராளமாய்ப் பொன், பொருள் பெறலாம் என்று சொல்வதாகும்.

பெரும்பாணாற்றுப்படையில் மூன்று இடங்களில் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளன. பாடலின் தலைவனான தொண்டைமான் இளந்திரையனைச் சிறப்பிக்க திருமால் சார்ந்த உவமை பயன்பட்டுள்ளது (பெரும்பாண். 29-30). இளந்திரையன் திருமாலின் வழிவந்தவன் என்பதை விவரிக்க், பெரிய நிலத்தை அளந்து கொண்டவனும் திருமகளாகிய மறுவினை அணிந்த மார்பை உடையவனும் கடல் வண்ணனுமாகிய திருமால் மரபினன், கடல் அலைகளால் கரை சேர்க்கப்பட்ட சோழ மன்னன் மரபில் வந்தவன் திரையன் என்று குறிப்பிடப்படுகிறது.

இதில் பெரிய நிலத்தை அளந்து கொண்டவன் என்பது திருமால் அவதாரத்தில் ஒன்றான வாமன அவதாரத்தில் மூன்றடி நிலத்தைத் தானமாகப்

பெற்ற தொன்மம் சுட்டப்பட்டுள்ளது. திரையனிடம் சென்றால் பொன்னும் பொருளும் தான தர்மம் செய்வான் என்று ஆற்றுப்படுத்தும் பாடல் வரிகளில் நிலத்தைத் தானம் கேட்ட வாமன அவதாரத் தொன்மம் உவமையாக உணர்த்தியது பொருத்தமாகும். சங்குகளில் சிறந்தது வலம்புரிச் சங்கு என்று சொல்லப்படுவது போல மூவேந்தர்களில் சிறப்பானவன் திரையன் என்று சொல்லுகிறார் புலவர்.

தன்னைப் புகழ்ந்து பாடும் புலவருக்கு வேண்டியதெல்லாம் வாரி வழங்குபவன் திரையன். அவன் எல்லாவிதத்திலும் பெருமையுடையவன். ***திரையனின் தந்தை சோழன் கிள்ளிவளவன் – தாய் நாகநாட்டு இளவரசி பீலிவளை. இவனைக் கடல் திரை தந்ததால் திரையன் என அழைக்கப்பட்டான்.***[17] இதுபோல திருமாலும் கடலில் பாம்பனையில் பள்ளிகொண்டவர். இச்செய்தியால் திரையனுக்கும், திருமாலுக்கும் உள்ள தொடர்பு ஒத்துப் போகிறது. தொண்டைக் கொடி சுற்றி வந்ததால் தொண்டைமான் இளந்திரையன் எனப்பட்டான் என விளக்கம் கிடைக்கிறது. தொண்டைமான் இளந்திரையனின் தன்மையைக் கூறக் கேட்ட மாத்திரத்தில் மனக் கவலை கெட்டு ஒழியும் என்கிறார் புலவர். திருமாலின் அவதாரக் கதைகளையும், அவன் பாடல்களையும் கேட்ட மாத்திரத்தில் மனக்கவலை ஒழியும் என்பார் வைணவ பெரியார்கள். திருமாலைப் போல மக்களைக் காப்பதில் சிறந்தவன் திரையன் என்றுச் சுட்டிக்காட்டுவது இத்திருமால் தொன்மத்தின் நோக்கம் எனக் கொள்ளலாம்.

அடுத்ததாக பெரும்பாணாற்றுப் பாடலில் (372-373) காஞ்சியிலுள்ள திருமால் திருத்தலமாகிய திருவெஃகா எனும் இடம் சிறப்பிக்கப்படுகிறது. பூங்கொத்துக்களை உடைய காந்தள் அடர்ந்த மலைகளிடத்தே யானை கிடந்தாற்போன்று பாம்பணையில் பள்ளிகொண்ட திருமாலின் திருப்பதியான திருவெஃகாவை அடையலாம். அங்குள்ள திருமாலை வாழ்த்திச் சிறிதுநேரம் யாழ்

இசைத்து பின் செல்லலாம் என்று திரையனிடம் பரிசில் பெறச் செல்லும் பாணர்கள் கூற்றாகப் பாடல் அமைந்துள்ளன. திருமாலுக்கு அதாவது பள்ளிகொண்ட பெருமாள் யானை கிடந்தாற்போன்று பள்ளி கொண்டிருந்ததாக உவமையாக்கியுள்ளார் புலவர். பாணர்கள் பரிசில் பெறச்செல்லும் வழியில் கோயில்களையும் பல குடியிருப்புகளையும் கடந்து செல்வதும் அப்படி கடந்து செல்லும் வேளையில் திருமால் தலத்தின் சிறப்பையும் பாடுவர். காஞ்சியில் திருமாலின் தலத்தில் வழிபாடு இருந்துள்ளமையை இதன்மூலம் அறிய முடிகிறது. திருவெஃகா என்பது **இப்போதுள்ள சின்ன காஞ்சி வரதராசப்பெருமாள் கோயில்**[18] ஆகும். திரையன் கடலில் வந்தவன் அதேபோன்று திருமாலும் கடலில் பள்ளிகொண்டதால், திருமாலுக்கு, திரையனுக்கும் ஒப்புமையின் பொருட்டு இந்த உவமை பொருந்துகிறது. அதுமட்டுமின்றி திரையன் ஆட்சியின் கீழுள்ள கோவிலைக் குறிப்பிடும்பொழுது அது திருமால் உறையும் கோவிலைக் கூறுவது மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது.

மற்றுமொரு இடத்தில் (பெரும்பாண். 402-403) காஞ்சி நகரின் சிறப்பைக் கூறும்போது உவமையாகத் திருமால் தொன்மத்தைப் பயன்படுத்தியுள்ளது தெரிகிறது. **காஞ்சிமா நகரமானது நீலநிற உருவம் கொண்ட திருமால் படுத்திருப்பது போலவும், திரையனின் அரண்மனையானது திருமாலின் கொப்பூழில் தோன்றிய நான்முகன் அமர்ந்திருக்கும் தாமரையின் பொகுட்டு போலவும் அமைந்திருக்கும். காஞ்சி மாநகரம் தாமரை என்றால் அரசன் திரையனின் அரண்மனை தாமரை பொகுட்டு ஆகும்.**[19] ஆக திரையன் திருமால் மரபில் வந்தவன் என்பதற்குப் பொருத்தமாய் அவன் ஆண்ட ஊரிலுள்ள கோவிலுக்கும், ஊருக்கும் திருமால் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன.

நற்றிணையில் (32) ஒரு பாடலில் தலைவனுடன் தலைவி நட்புக் கொண்டு பழகிய பின்னர் அவனைக் குறை கூறி வெறுக்கிறாள். இச்செயலைத் தோழி கண்டித்துச் சொல்லும்போது திருமால் தொன்மம் உவமையாக வருகின்றது.

மாயோனைப் போன்று பெரிய மலையும், அங்கு அவனுக்கு முன்பிறந்த வெள்ளை நிறத்தவனான பலதேவனைப் போன்ற வெண்மையான அருவியும் உடைய மலைக்குத் தலைவன் என்று தலைவனைக் கூறுகிறாள் தோழி. நட்பு குறித்து இப்போது ஆராய்வது பயனில்லை. இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னரே ஆய்ந்து பின் நட்புக் கொண்டிருக்க வேண்டும் என்கிற தோழி தலைவன் நல்லவனே என்று புலப்படுத்துகிறாள்.

மாயோனாகிய திருமால் கரிய நிறமுடையவர் என்பதால் மலைக்கு உவமையாகவும், பலராமர் வெண்மை நிறம் என்பதால் அருவிக்கும் உவமையாக்கப் பட்டிருக்கிறார்.

பொதுவாக அகப்பாடல்களில் திருமால் தொன்மம் உவமையாகப் பயன்படும்போது திருமாலுடன் பலராமரும் சேர்த்து உவமையாகிறார். காரணம் அறிய ஆராயும்போது பெரும்பாலும் திருமால் தொன்மம் என வரும்போது கிருஷ்ணாவதாரமே உவமையாக வருகின்றது. கிருஷ்ணாவதாரத்தில் மாயோன் இளவயதில் கோபியர் சூழ வாழ்ந்தவன் என்றும், ராதையுடன் களவு வாழ்க்கை வாழ்ந்தவர் என்றும் புராணங்கள் கூறுகின்றன. கிருஷ்ணருடன் பலமராமரு இணைந்து இருந்ததால் அகப்பாடல்களில் பெரும்பாலும் இவ்விருவரே (மாயோன், பலராமர்) உவமையாக வந்துள்ளனர்.

பதிற்றுப்பத்தில் (15: 38-39) சேரலாதன், இந்த உலகின் கண் நிலை பெற்றுள்ள உயிர்களுக்கெல்லாம் குறைவில்லாமல் ஈகை உடையவன். இறைவன் இருக்கும் ஆலயங்களுக்குச் சிறந்த அணிகலன்களை நல்குபவன் கண்டதும் இன்பம் தருதலையுடைய சிறப்புமிக்க திருமாலைப் போன்று குறைவற்ற புகழை அடைந்து வாழும் பண்பு உடையவன் என்கிறார் புலவர். சேரலாதனின் சிறப்பை ஈகைக் குணத்தை மேம்படுத்திச் சொல்ல திருமால் உவமையாக்கப்பட்டிருக்கிறார் எனலாம். கண்டதும் இன்பம் தருதலையுடைய திருமால் போன்று என்பது குலசேகர ஆழ்வார்

பாடிய பெருமாள் திருமொழி தொகுப்பிலிருந்து ஒரு பாடல் (647) வரியைச் சான்றாகக் கூறலாம்.

> . . . . . . . . . . . . . பொன்னி
> **திரைக்கையால் அடி வருடப்**
> **பள்ளிக்கொள்ளும்**
> **கருமணியைக் கோமளத்தைக் கண்டு**
> **கொண்டு என் கண்ணிணைகள்**
> **என்று கொலோகளிக்கு நாளே**

என்று ஆழ்வார் திருமாலைப் பாடியது போல சேரலாதன் தன்னை நாடி வருபவர் தேவையை பூர்த்திசெய்து அருளுபவன் என்பதற்காக மன்னனை திருமாலுடன் ஒப்பிட்டு இவ்வுவமை ஒப்பீடு செய்து கையாளப்பட்டிருக்கலாம்.

அடுத்ததாக முல்லைப்பாட்டில் (2) வினையின் பொருட்டு பிரிந்த தலைவனை நினைத்து வாடும் தலைவியைக் கண்டு தலைவன் வரும்வரை பொறுமையுடனிரு என்று முதுபெண்டிர் கூறுகின்றனர். அதனால் அவள் பொறுமை காத்தாலும் அவள் மனம் அவனை நினைத்துக் கொண்டேயிருக்கிறது தலைவிக்காக மற்றவர்கள் விரிச்சி கேட்கின்றனர். அச்சமயம் கடல்நீரைக் குடித்து எழுந்த மேகம், மலைகளில் தங்கி மாலைப்பொழுதில் பெருமழையாகப் பொழிந்தது. மேகம் மழை பொழிந்த காட்சி சக்கரத்தோடு வலம்புரிச் சங்கினை ஏந்திய கைகளையும், திருமகளை வைத்திருக்கும் மார்பினையும் உடைய திருமால், வாமனனாகச் சென்று இரந்தபோது மாவலி தானம் கொடுப்பதாகச் சொல்லி, நீரை வாமனனின் கையில் விட்டவுடன் விண்ணையும், மண்ணையும் தொடுவது போன்று திருமால் உயர்ந்தது போல இருந்தது என்கிறார். இப்பாடலில் மேகம் மழைபொழிதற்கு திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது.

இப்பாடலில் தலைவி தலைவனுடன் நட்புகொண்டு பிரிய விழைகிறாள். அதன் காரணமாய் மனம் வாடுகிறாள். அவளைத் தேற்றுகின்றனர். பாடலின் கருத்திற்குப் பதிலாக பாடலில் இடம்பெறும் காட்சிக்குத் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. மழை பொழியும் மேகத்திற்கு, வாமன அவதாரத்தில் மூன்றடி மண் கேட்டு மூன்றாவது அடியை மாபலி அரசனின் தலையில் அழுத்தி அழித்தது போல, தலைவியும் மாவலி போலத் துன்பப்படுகிறாள் என்பதற்கேற்ப இந்த உவமைப் பொருத்தமாக வந்துள்ளது எனலாம். அதேபோல திருமால் வாமனனாக வந்து மாபலிக்கு மோட்சம் அளித்ததுபோல தலைவனும் விரைவில் வந்து தலைவியை வருத்தத்திலிருந்து மீட்டு மகிழ்ச்சி கொடுப்பான் என்பதற்காகப் புலவர் இத்திருமால் தொன்மைத்தை பயன்படுத்தியிருக்கலாம்.

### திருமால் தொன்ம உவமைகள் மூலம் அறியவருவன

1. திருமால் அவதாரக் கதைகளே பெரும்பாலும் உவமையாக வந்துள்ளன.
2. திருமாலின் மேனிவண்ணம், கொடி, படை போன்றவை உவமையாக வந்துள்ளன.
3. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை மிகுந்த அளவில் கலித்தொகை யிலும், புறநானூற்றிலும் திருமால் உவமையாக ஆக்கப்பட்டிருக்கிறார்.
4. புறநானூற்றில் அரசர்களுக்குத் திருமால் தொன்மம் உவமையாகக் கூறப்படுகிறது.
5. அதிலும் குறிப்பாக காக்கும் கடவுளாகத் திருமால் உள்ளதால் அரசர்களின் கடமையான மக்களைக் காப்பது என்பதற்குத் திருமால் உவமையாகச் சுட்டப்படுகிறார் எனலாம்.
6. அகப்பாடல்களான கலித்தொகையில் தலைவன் தலைவியின் பிரிவுச் சூழலில் திருமால் உவமைகள் பயின்று வருகின்றன.

7. சங்க இலக்கியத்தில் திருமால் அவதாரக் கதைகள் உவமையாகக் கையாளப்பட்டுள்ளன. அவற்றுள் பல பாடல்களில் பலராமர் திருமாலுடன் இணையாக உவமித்துக் குறிப்பிடப் படுகிறார்.

8. திருமால் அவதாரக் கதைகள் எனும்போது அவற்றுள் கிருஷ்ணாவதாரமும், வாமன அவதாரமும் அதிகமாக உவமைகளாக வந்துள்ளன.

9. அரசர்களின் வீரத்திற்குத் திருமால் உவமையாக வரும்பொழுது மல்லரை வதம் செய்த நிகழ்வும், கேசி எனும் அசுரனை வதம் செய்த தொன்மமும் உவமையாக வந்துள்ளன.

10. உவமையாக வருவனவற்றில் திருமால் அவதாரத்துடன் திருமாலின் மேனி வண்ணமும், அவன் பள்ளிகொண்டிருப்பதாகக் கூறப்படும் கடலும் கூடுதலாக உவமையாக வந்துள்ளன.

## முருகன் தொன்மம் உவமைப் பயன்பாடு – நோக்கம்

கடவுளர்களில் தமிழ்க்கடவுள் என்று வணங்கப்படுபவர் முருகக்கடவுள் எனலாம். சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை முருகன் தொன்மம் செய்திகளாகவும் உவமைகளாகவும் வந்துள்ளன. செய்தியாக வந்தால் அதன் நோக்கம் தெரியப்படுத்துதல் என்ற அளவுடன் முடிந்துவிடுகிறது எனலாம். ஆனால் உவமையாகத் தொன்மம் பயன்படும் பொழுது அதன் நோக்கம் என்று ஆராயும்போது பல கருத்துகளை அறியமுடிகிறது. சங்க இலக்கியத்தில் முருகன் தொன்மம் உவமையாக வந்தவிதம் பற்றி கீழ்க்கண்ட வரைவடம் மூலமாய் அறியலாம்.




மேற்கண்ட ஆறு விதங்களில் முருகன் தொன்மம் உவமையாக அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் முருகன் தொன்ம உவமைகள் ஒவ்வொரு பாடலிலும் இடம்பெற்ற அளவு பற்றி அறிய அடுத்துவரும் வரைபடம் உதவுகிறது.

**முருகன் தொன்ம உவமைகள பயன்பாட்டு விவரம்**




முருகன் தொன்ம உவமைகள் பயன்பாடு அகநூல் எனப்படும் அகநானூற்றிலும் புறநூல்களில் புறநானூற்றிலும் மற்ற நூல்களைக் காட்டிலும் அதில் சற்று கூடுதலாக முருகன் தொன்ம உவமைகள் உள்ளன எனலாம். புராணம் என்பது கடவுளரின் கதைகளை, அவதாரங்களை, திருவிளையாடல்களை கூறுபவை. அப்படிப்பட்ட புராண நிகழ்ச்சிகளைச் சங்க இலக்கிய காட்சிகளுக்கு உவமையாக கூறுவதின் மூலம் மறைமுகமாய் ஒரு செய்தியைப் புலப்படுத்த விழைகிறது எனலாம். **புராணம் என்றால் பழைய வரலாறு நாடோடிப் பாடல் என்று சில பாடல் பாடி வருகிறோம். அவை மக்களுக்கு எல்லாம் பொதுப்**

***பாடல்கள். புராணம் என்பவை உலகோடிக் கதைகள். உலகம் முழுவதும் வெவ்வேறு வடிவில் இவை வழங்கி வருகின்றன. இக்கதைகள் வெறுங்கதைகள் அல்ல. இவற்றின் பொருளாழம் நம் ஆராய்ச்சிக்கு எட்டுவதில்லை***[20] என்ற மேற்கண்ட கருத்துக்கேற்ப புராண வரிசையில் முருகன் தொன்மம் உவமையாக வந்து சங்க இலக்கியத்தில் பல செய்திகளைத் தருகிறது எனலாம்.

**முருகன் தொன்ம உவமைப் பயன்பாடு**

அக இலக்கியத்தைப் பொறுத்தவரை முருகன் தொன்மம் பெரும்பாலும் தலைவன் சிறைப்புறத்ததாயிருக்க, அவனுக்குச் சொல்வது போல, தோழியோ, தலைவியோ முருகன் வெறியாட்டு நடந்ததைத் தலைவனிடம் கூறி விரைவில் திருமணம் செய்யுமாறு வலியுறுத்துவதாக அமைந்துள்ளது எனலாம்.

தலைவன் பிரிவால் தலைவியின் மேனியில் வேறுபாடு ஏற்பட்டது இதை அறியாத தலைவியின் தாய், வேலன் வெறியாட்டு நடத்தினாள். வெறியாட்டில் தலைவியின் உடல் மாற்றம் எதனால் வந்தது என்று கூறுவர். அப்படிக் கூறவில்லை என்றால் தலைவி களவு வாழ்வில் ஈடுபட்டாள் என்று ஊராருக்குத் தெரிந்துவிடும். ஆகவே அவளை விரைவாக வரைந்து கொள் என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துவாள். வேலன் வெறியாட்டு என்பது அன்றைய காலகட்டத்தில் கடைப்பிடிக்கப்பட்ட பழக்கவழக்கத்தில் ஒன்றாகும். இவ்வெறியாட்டு ஒரு நிகழ்வாக பல பாடல்களில் (அகநானூறு: 22, 98, 138, 232; குறுந்தொகை: 111, 263) இடம்பெற்றுள்ளது. தலைவன் தலைவி களவு வாழ்க்கை இடையூறின்றி, திருமணத்தில் முடிய தலைவி முருகனுக்கு பலி சிதறி வேண்டிக் கொள்வதாக ஐங்குறுநூறு 259ஆம் பாடலில் இடம்பெற்றுள்ளது. ஆகவே பலி சிதறுதல் சங்க கால மக்களின் நம்பிக்கையாக இருந்துள்ளது என அறிய முடிகிறது.

தலைவியின் மேனி மாறுதலுக்கு முருகனே காரணம் என்று வேலன் கழங்கு பார்த்துச் சொன்னார். வேலன் கழங்குக் குறி என்பது ***கழற்சி விதைகளை***

***முருகன் முன்னிலையில் பரப்பி, வேலன்தன் கையிலுள்ள சிறுபைகள் கட்டிய கோலினால் அக்காய்களை அள்ளி எடுக்கும்போது நேரும் குறிப்புக் கண்டுக் கூறுவதாகும். இக்கழங்குக்குறி, தாய்மார் தங்கள் பெண்களின் மேனி வேறுபாட்டின் காரணத்தை அறியவும், தாங்கள் எண்ணியது கை கூடுமா என்று அறியவும் இவ்வகையான குறிகளைக் கேட்பதில் ஈடுபடு கின்றனர்***[21] என அறிஞர்கள் விளக்கம் அளித்துள்ளனர். தோழி கழங்குகுறிக்குச் சொல்வது போல தாயிற்குக் கூறுகிறாள். தலைவியின் மேனியை வருந்தச் செய்தவன் இளமயில்கள் ஆடி மகிழும் வள்ளிக் கொடி படர்ந்த விரிந்த காட்டிற்கு உரிமையுடையனாகிய மக்களுள் ஒருவனே. ஆண்டவனான வெற்றியை உடைய வேலன் அல்ல எனக் கூறுவதாகப் பாடல் (ஐங்குறு. 250) உள்ளது. இப்பாடலில் தலைவனைச் சொல்லும்போது மயில்கள் ஆடிய, வள்ளிக்கொடி படர்ந்த காட்டிற்கு உரிமையுடையவர்களில் ஒருவன் என்கிறார். ஆக முருகனின் வேலன் வெறியாட்டு எனும் இந்நிகழ்வு தலைவி-தலைவன் களவு வாழ்வை வெளிப்படுத்தி, அவர்கள் கற்பு மணம் புரிவதற்கு காரணமாகின்றது எனலாம்.

மற்றுமொரு பாடலில் (ஐங்குறுநூறு 308) தலைவன் பிரிவதாகத் தோழியிடம் கூறுகிறான். அதற்குத் தோழி தலைவியை விட்டுப் பிரியாமலிருப்பதே சிறந்தது என்கிறாள். கூடவே முருகப்பெருமான் விரும்பி உறைகின்ற இப்பெரிய மலையை அவர்விட்டு பிரியும் போது நீயும் எம்மைவிட்டுப் பிரிவாயக என்று கூறுகிறாள். இப்பாடலில் வரும் முருகன் தொன்மம் பயன்பட்டதின் நோக்கம் யாதெனின் தலைவன், தலைவிக்குள் பிரிவு என்பது நிகழக்கூடாது என்பதைச் சொல்ல, முருகன் தான் உறையும் மலையை விட்டுப் பிரியும்போது தலைவனாகிய நீயும் பிரிவாய் என்பதாகக் கொள்ளலாம்.

> ***பல் இருங் கூந்தல் மெல்லிய லோள் வயின்***
> ***பிரியாய் ஆயினும் நன்றே: விரி இணர்க்***

*கால் எறுழ் ஒள் வீ தாஅய*
*முருகு அமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே* (ஐங். 308)

என்று முருகன் விரும்பி உறையும் மலை என்று குறிப்பிட்டதால் முருகன் மலையைவிட்டு நீங்கமாட்டான். அதுபோன்று தலைவனும் தலைவியை விட்டு நீங்கக் கூடாது என்று அறிவுறுத்த புலவர் இம்முருகன் தொன்மத்தைப் பயன்படுத்தியுள்ளார் எனக் கூறலாம். தலைவன்- தலைவி வாழ்விற்கு முருகன் உள்ளான் அவன் காப்பாற்றுவான் என்பதை மறைமுகமாய் கூறுவதற்காகவும் இத்தொன்மம் கையாளப்பட்டுள்ளது எனலாம். குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்குமிடம் என்று வாய் மொழி வழக்கு சொல்லப்படுகிறது. ஆகவே மலை எங்கெல்லாம் உள்ளதோ அங்கு முருகன் எழுந்தருளியிருப்பான். இம்முருகன் தொன்ம உவமை மூலம் புலவர் தலைவன்-தலைவிக்கிடையே பிரிவு என்பதே இருக்கக் கூடாது என்பதை உணர்த்த தோழி கூற்றாகக் கூறுகிறார் எனலாம்.

கலித்தொகையில் ஒரு பாடல் (81: 9-10) தலைவன், பரத்தையின் பொருட்டு தலைவியைப் பிரிந்து சென்று பின் வருகிறான். தலைவி தோழியிடம் தன் மகனின் அழகையும் ஆபரணங்களையும் வருணித்துக் கூறுகின்றாள். தன் மகன் பால் உண்ணாமல் முற்றத்தில் தேரை உருட்டி நடைபயிலா நின்றான். அவன் மழலை மொழியில் 'அத்தத்தா' என்று தன் அப்பாவைக் கூப்பிட்டதில் மகிழ்ந்து, 'ஆலமர் செல்வனின் அழகிற் சிறந்த முருகனைப் போலுள்ளவனே, உன் தந்தையின் பிரிவினரால் மருந்தறியாமல் துன்பப்பட்ட என் நெஞ்சிற்கு நீ பேசும் மழலை அமுதத்தை உண்டாற்போல இனிமையாய் உள்ளது' என்கிறாள் தலைவி.

இப்பாடலில் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளதின் நோக்கங்களாவன:

1. தலைவி தன் மகனின் அழகைப் புகழ்கிறாள். முருகன் என்றால் அழகானவன் என்று கூறுவர். முருகு என்றால் அழகு எனப் பொருள்

கூறப்படுகிறது. இதன்மூலம் தன் மகனும் முருகன் போன்று அழகானவன் எனத் தலைவி வலியுறுத்த முனைகிறாள்.

2. தலைவி தன் மகனின் அழகைப் புகழ்கிறாள். முருகன் என்றால் அழகானவன் என்று கூறுவர். முருகு என்றால் அழகு எனப் பொருள் என்று கூறப்படுகிறது.

3. தலைவி, அன்பாய் பேணி வளர்த்தாலும், மகன் மழலை மொழியில் தன் அப்பாவையே அழைக்கிறான். முருகனுக்கும் உமை தாயாக இருந்தாலும் ஓம் என்னும் பிரணவ மந்திரப் பொருளை தன் தந்தையான சிவனுக்கே அருளினான் எனப்புராணம் வழி அறியமுடிகிறது.

4. தலைவி தன் மகனின் அழகையும், அவன் அணிந்த அணிகலன்களையும் புகழ்ந்து கூறுகிறாள். கமழும் தலையிற் கிடந்த பொன்னால் செய்த பிறையுள் சேர்ந்த முத்து வடத்தோடே நெற்றியிலே தொங்கும் சுட்டி அசைய, இடையிடையே இடுப்புத் தெரிய நெகிழக் கட்டிய சிற்றாடை கிண்கிணி ஒலி எழாமல் பாதங்களில் படிந்து தடுத்தது என்று சிவபெருமானின் மகனாகிய முருகனைப் போல்வரும் என் மகனே என்கிறாள். இதேபோல் முருகப் பெருமானும் பாலகனாயிருந்தபோது புகழப்படுகிறான். ***இரண்டு தண்டைகளும், நவரத்தினங்களினால் இழைத்த வேலைப்பாடமைந்த இரண்டு பாதஸர சதங்கைகளும், இடுப்பின் கீழ கட்டியுள்ள அரைஞாணில் கோர்க்கப்பட்டுள்ள கிங்கிணி மணிகளும், மார்பில் அணிந்திருக்கும் மாலைகளும், குழந்தை (முருகன்) இப்படி அப்படி அசையும்போதும் நடக்கும் போதும் ஜல்ஜல் என்ற இனிய ஒலிகளை ஏற்படுத்திக் கொண்டிருந்தன***[22] என்று முருகன் பாலகனாய் வருணிக்கப்படுகிறான். மேற்கண்ட பாடலில் தலைவியினுடைய மகனின் அழகை சிறப்பித்துக் கூற முருகன் தொன்மம் பயன்பட்டுள்ளது. முருகனின் அழகை

சிறப்பித்துப் பாடியது போலத் தலைவியும் தன் மகனின் அழகைச் சிறப்பித்துக் கூறுகிறாள். இதன்மூலம் தன் மகன் முருகனுக்கு ஒப்பானவன் என்று கூறுவதற்கு முருகன் தொன்மம் உவமையாகப் பயன்பட்டுள்ளது எனலாம்.

இதேபோல் மற்றொரு கலித்தொகை பாடலில் (83: 14-15) தலைவன் பரத்தையின் பொருட்டு பிரிந்து சென்று திரும்பி வந்து சிறைப்புறத்தானாகத் தலைவி அறியாது நிற்கிறான். தலைவியின் மகனை வெளியே கூட்டிப்போன தோழி காலம் நீட்டித்து வருகிறாள். இதைக்கண்டு கோபமுற்றத் தலைவி கால தாமதத்திற்குக் காரணம் என்னவென்று கேட்கிறாள். அதற்குத் தோழி, பனங் குரும்பைகளில் செய்த சக்கரங்களால் ஆன சிறு தேரைக் கட்டி இழுத்துக் கொண்டு நடக்க, பரத்தையர் களுக்கு நடுவே அவர்கள் தளர்ந்து ஒதுங்கும்படி உன் மகன் நகருக்குள் வந்தான். இதைச் சாளரங்கள் வழியாகப் பார்த்த பெண்கள் ஊரில் முருகன் திருவிழா தொடங்கிவிட்டது என்று நினைத்து விரைந்துவந்து பார்த்தனர். இவனிடம் வந்து, நீ எங்கள் வீட்டில் தங்கிச் செல்வாயானால் உன் தந்தை எங்கள் நலனை உண்டு பின் நினையாமல் கைவிட்டமையால் ஏற்பட்ட வருத்தம் குறையும் என்று தங்கள் வீட்டுக்கு அழைத்துப் போயினர். அதனால் காலம் நீட்டித்தது என்கிறாள்.

இப்பாடல் மூலம் முருகப்பெருமானுக்கு என்று தனித் திருவிழா நடந்ததும், அத் திருவிழா நாளில் தேர் வருவதும் அறிய முடிகிறது. மக்கள் அனைவரும் உயர்வு தாழ்வின்றி சரிசமமாய் தேர்பார்த்ததும் பாடல் கூற்று வழி இளமகளிர் (பரத்தையர்) சிலம்பொலிக்க அணுகி வந்து பார்த்தனர் என்று அக்கால பழக்க வழக்கம் தெரிகின்றது.

அடுத்து முருகன் தொன்மம் பயின்றுவரும் கலித்தொகைப் பாடல் வரிகள் (27) கூறும் செய்திகளாவன: தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று விடுகிறான்.

இளவேனிற் காலத்தே திரும்பி வருவேன் என்று கூறியவன் வரவில்லை. தலைவி தோழியிடம் நம் சாயல் அழிந்தமை கண்டு கேலி செய்வன போல மலை மேலேயிருந்த மயில்கள் ஆரவாரித்து ஆடாமல் நின்றன. ஊராரும் ஆரவாரித்து அலர் தூற்றா நின்றனர். கடலிடத்து மாமரமாகி மறைந்து நின்ற சூரனை வெற்றி வேலால் எறிந்து கொன்ற முருகப் பெருமான் வீற்றிருக்கும் திருப்பரங்குன்றத்தில் அவனுக்காக நடைபெறும் விளையாட்டைக் காணத் தலைவன் வருவானோ வரமாட்டானோ என்று தோழியிடம் கூறுகிறாள் தலைவி.

இப்பாடலில் வந்த முருகன் தொன்மம் உவமையாக வரவில்லை. ஆயினும் குறிப்பால் பொருள் உணர்த்த இத்தொன்மம் கையாளப்பட்டுள்ளது எனலாம். இப்பாடலின் கருத்திற்கும் இப்பாடலில் இடம்பெற்ற தொன்மத்திற்கும் உள்ள ஒற்றுமை கீழே அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளது.

| எண் | பாடல் கருத்து | தொன்மம் |
|---|---|---|
| 1. | தலைவன் வராததால் துயரத்தால் சாயல் அழிந்ததில் வருத்தம் மறைந்துள்ளது. | கடலிடத்தே உள்ள உருவம் கரந்து மா மரமாகி சூரன் மறைந்துள்ளான் |
| 2. | தலைவன் வருகைக்காகத் தலைவி வாடுதல் | முருகன் வருகைக்காகத தேவர்கள் வேண்டியதாக புராணச்செய்தி கூறுகின்றது. |
| 3. | தலைவன் வரவால் பிரிவுத்துன்பம் நீங்கும் | முருகன் வரலால் தேவர்களின் துயர் நீங்கும் |

இப்பாடலில் தொன்மம் உவமையாக வரவில்லை என்றாலும், பாடலின் கருத்துக்கு ஏற்றாற் போல தலைவன் தலைவியிடம் திரும்பிவரும் வரை, தலைவியின் நிலை என்பது போர்ப்பாசறையில் நின்று போராடும் நிலைதான் என்பதை அறிவுறுத்தப் புலவர் சூரனை போரில் வென்ற முருகன் தொன்மத்தை பாடலில் வைத்துப் பாடியுள்ளார். இவ்வகையில் இந்த தொன்மம் இப்பாடலில் இடம்பெற்றுள்ளது மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது. அடுத்ததாக முருகன் தொன்மம் பயின்று

வரும் குறிஞ்சிக் கலிப்பாடலில் (40: 11) தலைவன் சிறைப்புறமாக நிற்க தலைவியும், தோழியும் உரையாடுகின்றனர். களவொழுக்கம் இன்பத்தைத் தருவதாக நினைத்துக் கொண்டு அதில் ஈடுபட்டிருந்தான் தலைவன். திருமணம் செய்து கொள்ளாமல் தலைவன் காலம் நீட்டித்தது தலைவிக்குத் துன்பத்தை தந்தது. அதனால் அவள் தலைவனைப் பழித்துப் பாடுகிறாள்.

தோழி தலைவனைப் புகழ்கிறாள். தன்னைச் சேர்ந்தோரது துன்பத்தை நீக்கும் தலைவனது மலையில, கைகள் இரண்டையும் குவித்து கொடிச்சியர் முருகனைத் தொழுவதுபோல தேன் நிறைந்து அசையும் கொத்தாக உள்ள காந்தட் பூ அத்தேன் கீழே சொட்ட நிமிர்ந்து விளங்கும். தலைவனது மலையில் தான் கூடிய மகளிரின் இயற்கை அழகு குறையுமாயின், அவர்களை விடத் தான் மிகுதியாக வருத்தம் அடைபவர்களைக் கொண்ட தலைவனது மலையில் இல்லறப் பண்பாடு தெரியாத ஆண் குரங்கு பெண் குரங்கு கூட்டத்தில் சென்று, அப்பெண் குரங்கிடம் தன் மணவிருப்பத்தைச் சொல்லும் தன்மையினை உடையது. அத்தகைய தலைவனின் மலையே இத்தகைய குரங்குகளைக் கொண்டது அம்மலை என்று தலைவனுடைய மலையைப் புகழ்கிறாள். தலைவனது மலையே இத்தகைய நற்பண்பைக் கொண்டிருந்தது என்றால், மலைக்குச் சொந்தமான தலைவன் நற்பண்புகளை கொண்டிருப்பான். உறதியாக தலைவியை கற்புமணம் புரிவான் என்பதை குறிப்பால் உணர்த்தி தலைவன் மலையைப் புகழ்ந்து பாடுகிறாள்.

ஆனால் தலைவி மகளிரின் இன்பத்தை அனுபவித்து குளிர்ந்த மலைச் சாரலில் மலரில் மகரந்தம் உண்ணும் வண்டு அதனை விட்டுப் பறப்பதுபோல் செல்பவனுடைய மலையாக இருக்கிறது தலைவனுடைய இம்மலை எனப் பழித்துப் பாடுகிறாள். தலைவிக்கு களவு வாழ்க்கையில் விருப்பம் உள்ளது என எண்ணிக் கொண்டிருந்த தலைவனுக்கு தலைவி இயற்பழித்துப் பாடுவதைக் கேட்டதும் விரைவாய் அவளை மணம்புரியவேண்டும் என உணருகிறான். இப்பாடலில் மலைவாழ் மகளிர் முருகனைத் தொழுவது போலப் பூத்துள்ளது

காந்தட்பூ என்று தொன்மம் உவமையாக வருகிறது. முருகனின் மனைவியரில் ஒருத்தி வள்ளி. இவள் வேட குலத்தில் பிறந்து மலையில் வாழ்ந்தவள் என்று புராணம் கூறுகிறது. மலைவாழ் மக்கள் அனைவருக்கும் தெய்வமான முருகனை மணக்கிறாள் என்று புராணக் கதை கூறுகிறது.

தோழியின் கூற்றாக வரும் இத்தொன்மம் உவமை மறைமுகமாய் தலைவிக்கு ஒரு செய்தியைக் கூறுவது போலுள்ளது எனலாம். அதாவது மலைவாழ் மகளிர் போல தலைவியான நீயும் முருகனை வணங்கு, தலைவன் விரைவாக மணம் முடிக்க வருவான். முருகன் வள்ளியை மணந்ததுபோல, தலைவன் தலைவியை மணப்பான் என்று புலவர் குறிப்பால் உணர்த்த இத்தொன்மம் பயன்பட்டுள்ளது எனலாம்.

கலித்தொகையில் முல்லைக்கலியைப் பொறுத்தவரையில் ஏறுதழுவுதலில் ஈடுபடும் காளையின் தோற்றத்திற்கு உவமையாக முருகன் தொன்மம் பயின்று வருகிறது. ஒரு பாடலில் (104: 14) மாமரத்தின் வடிவில் நின்ற அசுரனைக் கொன்று புறங்கொடாத வேலினையுடைய வல்லனாய முருகனின், நிறம் போன்ற சிவந்த எருது எனப் புலவர் பாடியுள்ளார்.

சூரனை வதம் செய்யும் வேளையில் கோபத்தால் முகம் சிவந்து காணப்படும் முருகனைப் போன்று சிவந்த எருது என்றும், முருகனைப் போல சீற்றத்துடன் உள்ள எருது என்றும் கொள்ளலாம்.இப்பாடலில் முருகன் தொன்ம உவமையின் நோக்கம் யாதெனின் எருதின் நிறத்தையும், எருது கொண்டிருந்த சீற்றத்தின் தன்மையையும் காட்டுவதற்காக இத்தொன்மம் பயன்பட்டிருக்கலாம். தன் எதிரியான சூரனை வதம் செய்யும்போது முருகப்பெருமான் எத்துணை சீற்றத்துடன் இருந்தாரோ அதுபோல எருது தன்னை எதிர்த்து நிற்கும் இளைஞன் மேல் சீற்றத்துடன் பாய்ந்தது எனலாம். முருகனிடமிருந்து சூரன் எப்படி தப்ப முடியவில்லையோ அதுபோல சீற்றத்துடனுள்ள காளையிடமிருந்து அதை எதிர்க்கும் எந்த இளைஞனும் காயமில்லாமல் தப்பமுடியாது என்பதை உணர்த்த

மிகச் சரியாக பாடலின் பொருளுக்கு ஒத்துப்போவது போல முருகன் தொன்ம உவமையைப் புலவர் கையாண்டுள்ளார் எனலாம்.

அகநானூற்று பாடலில் (59) பொருள் ஈட்டச் சென்ற தலைவன் வராததால் தலைவி வருந்துகிறாள். வரைந்து தலைவன் வருவான் என தோழி ஆற்றுப்படுத்துகிறாள். இப்பாடல் தலைவியின் கூற்றாக வருகிறது. முருகன் தொன்மம் பயன்படுத்தியதின் நோக்கம் மறைமுகமாய் ஒரு பொருளை உணர்த்துவது போல உள்ளது எனலாம்.

முருகன் சினம் மிக்கவன். சூரபன்மாவினையும், அவன் சுற்றத்தாரையும் அழித்தவன். ஒளிபொருந்திய இலை போன்ற தோற்றத்தையுடைய நீண்ட வேற்படையைக் கொண்டவன். அம்முருகப் பெருமானுக்குரிய மலையான திருப்பரங்குன்றத்தில் நல்லந்துவனரால் பாடப்பட்ட சந்தன மரங்கள் மிகுந்து உள்ளன. அம்மலையிலுள்ள சுனையில் பூத்த செங்கழுநீர் மலரால் அழகு செய்யப்பட்ட கூந்தல் அசையும் தலைவியின் முதுகைப் பாராட்டியதைத் தலைவன் நினைத்துப் பார்க்காமல் சென்றுவிட்டான் என்கிறாள் தலைவி.

முருகன் தொன்மம் இப்பாடலில் பயன்படுத்தியதின் நோக்கம் பற்றி ஆராய்ந்தால் முருகன் சினம் மிக்கவன். சூரனையும் அவன் சுற்றத்தாரையும் அழித்தவன் என்று சொல்வது தலைவனை எச்சரிப்பது போல உள்ளது எனலாம். சூரன் போல தலைவனும் தலைவிக்குக் கெட்டது செய்தால் முருகன் தண்டிப்பான் எனவும், அதனால் தலைவன் தலைவிக்குத் துன்பம் கொடுக்காமல் விரைவில் திரும்ப வேண்டும் என்று மறைமுகமாய் கூற முருகன் தொன்மம் பயன்பட்டுள்ளது எனலாம். மேலும் நீண்ட வேற்படையினை உடையவன் என்பதால் தலைவியின் பிரிவுத் துன்பத்தை அழிப்பவன் முருகன். தன் குறையைப் போக்கித் தலைவனை விரைவாய் கொண்டு வந்து சேர்ப்பான் என தலைவி நம்பிக்கையுடன் கூறுவதாகக் கொள்ளலாம். பொதுவாக இப்பாடலில் முருகனுக்குரிய மலையாகக் கருதப்படும் திருப்பரங்குன்றம் என்று புலவர் கூறாமல், முருகன் சினம் மிக்கவன் சூரனையும்

அவன் சுற்றத்தையும் அழித்தவன் ஒளி பொருந்திய நீண்ட வேற்படையினை உடையவன் என்று குறிப்பிட்டுச் சொல்லி தலைவி வாயிலாக தலைவனுக்கு எச்சரிக்கை செய்யும் மு்கமாகவும், தனக்குத் தானே தலைவி நம்பிக்கை ஊட்டிக் கொள்வதற்கும் இம்முருகன் தொன்மத்தைப் புலவர் பயன்படுத்தியுள்ளார் எனக் கொள்ளலாம். மேற்கண்ட கருத்துகளைப் பாடலில் நேரடியாகப் புலவர் கூறாமல், மறைமுகமாய்ப் புரிந்து கொள்ளுதற்கு ஏதுவாக இத்தொன்மம் அமைந்துள்ளது என்று கூறலாம்.

அடுத்ததாக அகநானூற்றுப் பாடலில் (120) களவொழுக்கத்தில் ஈடுபட்டிருக்கும் தலைவன் தலைவியைக் காணப் பகல் பொழுதில் வந்து செல்கிறான். இரவில் தலைவி தலைவன் இல்லாது வருந்துவதைத் தோழிக் காண்கிறாள். அதனால் தலைவனிடம் எம் ஊரில் இரவில் தங்கிச் செல்க. அப்படிச் செல்வதால் உனக்கு என்ன துன்பம் வந்துவிடப் போகிறது? எனக் கேட்கிறாள். இப்பாடலில் அந்தி நேர வானத்தில் கொக்கின் கூட்டம் வரிசையாய் பறந்து செல்வது, முருகக் கடவுளின் மார்பின்கண் விளங்கும் ஆரத்தைப் (முத்துமாலை) போன்றது என்ற வர்ணனை வருகிறது. இதைப் பாடல்,

> ***நெடுவேள் மார்பின் ஆரம் போல***
> ***செவ்வாய் வானம் தீண்டி, மீன்அருந்தும்***
> ***பைங்காற் கொக்கினம் நிரைபறை உகப்ப*** (அகம். 120: 1-3)

என்று முருகனின் மார்பு மாலை இப்பாடலில் உவமையாக வந்துள்ளது. தலைவன் இரவு நேரத்தில் தலைவியைக் காண வந்தால் பிறர் அறியக்கூடும். அதனால் தலைவி இற்செறிக்கப்படுவாள். பிரிவுத் துன்பம் தலைவனை வாட்டும். அதனால் தலைவன் தலைவிக்கு மாலை சூட்டி மணம் செய்துகொள்ள முனைவான் என்ற நோக்கில் தலைவனைத் தோழி தூண்டுவதற்குச் சொல்லப்பட்டதாகக் கொள்ளலாம்.

அகநானூறு 149ஆம் பாடலில் தலைவன் பொருள் ஈட்டவேண்டிப் புறப்பட நினைக்கிறான். ஆனால் தான் பிரிந்து சென்றால் தலைவி கண்ணீர் விடுவாள். அதனால் தலைவி வருந்தும்படி போகமாட்டேன் என்கிறான். இடைவிடாது நடைபெறும் விழாக்களை உடைய முருகனது திருப்பரங்குன்றத்து ஆழமான சுனையில் பூத்த குவளை மலர்கள் இரண்டு ஒன்று சேர்ந்தது போலுள்ள தலைவியின் செவ்வரி படர்ந்த குளிர்ந்த கண்கள் கலங்குமாறு சுரம் கடந்து அரிதான பொருள் எளிதாக கிடைத்தாலும் தலைவியைப் பிரியமாட்டேன் என்கிறான் தலைவன். பொதுவாக இலக்கியத்தில் கண்களுக்கு உவமையாக குவளை மலரைச் சொல்வதுண்டு. இப்பாடலில் இடைவிடாது விழாக்கள் நடைபெறும் முருகனது திருப்பரங்குன்றத்து மலையிலுள்ள சுனையில் பூத்த குவளை மலர் போன்ற கண்கள் என்கிறார்.இப்படிக் கூறுவதின் நோக்கம் என்னவெனில் என்று ஆராய்ந்தால் முருகன் தெய்வயானையை மணந்த இடம் திருப்பரங்குன்றம் என்று புராணம் சொல்கிறது.

சூரனை வதம் செய்த தலமாக புராணத்தில் சொல்லப்படுவது செந்திலம்பதி (தற்போது திருச்செந்தூர்) ஆகும். அத்தலத்தில் மிகுந்த சினங்கொண்டு தன் கடமையை முடிக்கும் நிலையில் முருகன் காட்சி தருகிறார் எனலாம். ஆனால் திருப்பரங்குன்றம என்பது முருகனின் திருமணத் தலம், மகிழ்ச்சியும் இடைவிடாது விழாக்களில் கொண்டாட்டமுமாய் முருகன் வீற்றிருக்கும் தலம் இது எனலாம். இதனால் களவொழுக்கத்தில் திருப்பரங்குன்றம் வெகுவாகக் குறிக்கப்படுகிறது எனலாம். இடைவிடாது விழாக்கள் நடைபெறும் முருகனது திருப்பரங்குன்றம் என்று பாடலில் குறிக்கப்படுவது தலைவனும் தலைவியும் பிரியாமல் இணைந்து இருந்தால் அவர்களுக்கும் விழா நடப்பது போல கொண்டாட்டமும் மகிழ்ச்சியும் கிட்டும் என்று குறிப்பாக உணர்த்துவது போலுள்ளது எனலாம்.

அடுத்ததாக அகநானு’று 158ஆம் பாடலில் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. தலைவன் தலைவியைக் காண வந்து சிறைப்புறத்தில் நிற்கிறான். தோழி இதையறிந்து செவிலித்தாய்க்குக் கூறுவது போலத் தலைவனுக்குச் சொல்கிறாள். களவொழுககம் குறித்துத் தலைவியின் தந்தை தலைவியை கடிந்துகொண்ட செய்தியைக் கூறுகிறாள் தோழி. முருகன் சீற்றத்தைப் போன்ற சீற்றத்தையும் மிக்க வலிமையினையும் உடைய எம் தந்தை புலிக்கூட்டத்தைப்போன்ற நாய்கள் தொடர்ந்து வர வேட்டையாடுதலைக் கைவிட்டு வீட்டிலிருக்கிறார். அப்படி யிருக்கையில் தலைவி எப்படி தலைவனைக் காண வருவாள்? என்று தலைவியின் அச்ச உணர்வினைக் கூறுகிறாள்.

இப்பாடல் முருகனின் சீற்றமும் வலிமையும் தலைவியின் தந்தையினுடைய சீற்றத்திற்கு வலிமைக்கும் உவமையாக வந்துள்ளன. முருகன் சீற்றத்தோடு இருந்தது எதிரியான சூரபன்மனை வதம் செய்யும் சமயத்தில் எனலாம். முருகனின் சீறற்த்தையும் வலிமையையும் கொண்ட எம் தந்தை என்பதால், தலைவனுக்கு எச்சரிக்கை செய்வது போலக் களவொழுக்க வாழ்வை தலைவன் நீட்டித்து இருந்தால் தலைவியின் தந்தையின் சீற்றத்திற்கு ஆளாவான் என்றும் அதனால் விரைவில் தலைவியை மணம்செய்து கொள்க என்றும், களவொழுக்க வாழ்வில் தொடர்ந்து ஈடுபட வேண்டாம் என்றும் குறிப்பாகக் கூறுவதாகக் கொள்ளலாம்.

இதே போன்று களவொழுக்கம் பற்றி, மற்றொரு அகநானூற்று 272ஆம் பாடல் கூறுகிறது. தலைவியின் தாய்க்குத் தெரிந்துவிட்டபடியால் தலைவி காவலில் வைக்கப்பட்டாள். தலைவியை காணாது தலைவன் கையில் வேலுடன் தலைவி வீட்டிற்குள் புகுந்தான். அவன் தோற்றத்தைக் கண்டு தாய் அவனை முருகனே என நினைத்துப் புகழ்ந்து பாராட்டினாள். அவனைத் துதித்தாள். இரவுக்குறி வந்த தலைவன் சிறைப்புறமாய் நின்ற போது, அவன் கேட்குமாறு இனித் தலைவனுடன் தாம் கொண்ட நட்பு என்னவாகுமோ? என்று பயப்படுகிறாள் எனப் பாடல் கூறுகிறது.

இப்பாடலில் தலைவனின் தோற்றத்திற்கு முருகனின் தோற்றம் உவமையாக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து அன்றைய காலகட்டங்களில் முருகன் வழிபாடு சிறப்பாகயிருந்தது என்றும் கையில் வேலையும் அழகிய உருவத்தையும் கொண்டிருந்தால் அவர்கள் முருகனாகவே கொண்டாடப்பட்டார்கள் என்பதையும் அறிய முடிகிறது. இப்பாடல் மூலம் கடவுளின் வேடம் களவு வாழ்வில் தலைவியைக் காணத் தலைவனுக்கு உதவுகின்றது எனலாம். தலைவனை முருகன் என்று நினைத்து துதித்த அன்னை தலைவியின் களவொழுக்கத்திற்கு இவனே காரணம் என்று தெரிந்துவிட்டால் ஏற்கமாட்டாள். அதனால் தலைவன் தலைவி நட்பை தொடரமுடியாமல் போகுமோ? என்ற அச்சத்தில் தங்கள் நட்பு என்னாவதோ? என்று கலங்குகிறாள். அதனால் தலைவனை மறைமுகமாய் திருமணம் ஏற்பாடு செய்யுமாறு தூண்டுவதற்கு இப்பாடலில் உவமையாக வந்த முருகன் தொன்மம் ஒரு கருவியாகிறது எனலாம்.

பத்துப்பாட்டிலும் இடம்பெற்றுள்ள குறிஞ்சிப்பாட்டு எனும் அகநூலில் மூன்று பாடல்களில் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அவற்றை இனிக் காணலாம்.

**குறிஞ்சிப்பாட்டு** 116ஆம் பாடலில் தலைவன் தலைவியைக் காண வருகின்றான். அவனது தலை, காது, மார்பு, கை, இடை, கால் ஆகிய உறுப்புகளில் அணிந்துள்ள அணிகளைப் பற்றிக் கூறுவது கேசாதிபாத வர்ணனை எனப்படும். தலைவன் தலைமயிரை எப்படியெல்லாம் பேணுகிறான் என்று புலவர் கூறுகிறார். எண்ணெய் பூசி, மயிர்ச் சாந்தணிந்து ஈரம் புலர விரலால் விடுத்தும் அகில் புகையூட்டியும் அகிலின் நெய் பூசியும் பாதுகாத்தமையால் கரிய நிறத்துடன் நீண்டு விளங்குகிறது. தலைமகனின் மயிரின் எழில் நலத்தை முதலில் கண்டு வியந்தனர். தோழியும், தலைவியும் பலவகையான வண்ணமலர்கள் மாலைகளாகத் தொடுத்தது போல, தலைவனும் பலவகையாகப் பூத்த மலர்களால் ஆன மாலை அணிந்து வந்தான். தலைவனின் அழகும் ஆற்றலும் முருகப்பெருமானோ என்று அச்சத்தைத் தோற்றுவிப்பதாயிற்று என்கிறது பாடல்.

இப்பாடலில் தலைவனின் அழகும், ஆற்றலும் முருகப்பெருமான் போன்றிருந்தது என்றில்லாமல் முருகப்பெருமானோ என்று அச்சத்தை தோற்றுவிப்பதாயிற்று என்பதாக உள்ளது. இதன் உட்கருத்தை ஆராயும்பொழுது இருவிதமாகக் கூறலாம்.

1. தலைவனின் அழகும் ஆற்றலும் முருகப்பெருமான் போன்றுள்ளதால், முருகனைப் போல் தலைவனும் போர் போர் என்று எதிரிகளை அழிப்பதையே பிறப்பின் நோக்கமாகக் கொண்டிருப்பானோ? அப்படிக் கொண்டிருந்தால் தலைவிக்குத் துன்பம் ஏற்படுமே என்ற அச்சத்தின் வெளிப்பாடாக இப்படிக் கூறியிருக்கலாம்.

2. மற்றுமொரு கோணத்தில் ஆராய்ந்தால் அழகும், ஆற்றலுமுடைய முருகனுக்கு மனைவியர் இருவர் போல, அழகும், ஆற்றலுமுடைய தலைவனுக்கு அவன் மேல் ஆசைப்பட்டு தலைவியைத் தவிர இரண்டாவதாக வேறு எந்தப் பெண்ணும் ஆசைக்கொண்டு மனைவியாக வந்துவிடுவாளோ என்று தலைவியின் அச்சத்தை வெளிப்படுத்த தலைவனின் அழகும் ஆற்றலும் முருகப்பெருமானே என்று அச்சம் எனும் உணர்ச்சியை வெளிப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

அடுத்ததாக மற்றொருக் குறிஞ்சிப்பாட்டில் (51) இயற்கைச் சூழலுக்கு முருகன் தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்தியுள்ளார் புலவர். மேகத்தின் இடியோசை முரசு அதிர்வது போலவும், அதன் மின்னலின் ஒளி முருகப்பொருமான் அசுரர்களைக் கொல்வதற்கு உயர்த்திய வேலின் விளக்கம் போலவும் உள்ளது என்கிறார். தலைவனுடன் அருவியில் நீராடி, சுனையில் விளையாடி இனிய பாடல்களைப் பாடிக் களித்தோம் என்கிறார். ஈரக் கூந்தலைப் பிழிந்து உலர்த்தி, அத்தனை நேரம் விளையாடியதில் எம் கண்களின் உள்ளிடமெல்லாம் சிவந்தது என்று தோழி கூற்றாகப் பாடல் அமைந்துள்ளது. இப்பாடலில் வரும் காட்சிகள் குறிஞ்சி நிலமான மலையும் மலை சார்ந்த இடத்திலும் நடப்பதால், குறிஞ்சி நிலத் தெய்வமான முருகன் உவமையாக்கப்பட்டது பொருத்தம் எனலாம். இடியின் ஓசை முரசு அதிர்வது போலவும், மின்னலின் ஒளியானது முருகப்பெருமான் அசுரர்களைக் கொல்வதற்கு உயர்த்திய வேலின் விளக்கம் போலவும் உள்ளதாகப் பாடல்

வருகிறது. களவு மேற்கொண்ட சூழலில் போருக்குப் போகும் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. இது சற்ற முரணாகத் தெரிந்தாலும் உட்கருத்தை ஆராயும்போது, மின்னல் வானத்தில் பார்க்கும்போது வெள்ளிக்கோடு போல அழகாய்த் தெரிந்தாலும் அது உயிரைக் கொல்லும் தன்மையது. அதனாலேயே முருகன் அசுரர்களை கொல்வதற்கு உயர்த்திய வேல்போல இருந்தது என்கிறார் புலவர். களவு வாழ்க்கை என்பது ஆபத்து நிறைந்தது என்பதை உள்ளுறையாகக் கூறுவதற்கு முருகனின் போர் நிகழ்வுகளைப் புலவர் உவமை காட்டுவதாகக் கொள்ளலாம்.

அக இலக்கியங்களில் புராணத் தொன்மங்களைப் பொறுத்த வரை அவை உவமையாகப் பயன்படும்பொழுது ஆண்டதன் உட்கருத்துகளை ஆராய ஆராயப் பல செய்திகளை அவை தருகின்றன. புற இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவனுக்கும் முருகனுக்கும் ஒப்புமையை மறைமுகமாய் எடுத்துக் கூறுவதாகக் கொள்ளலாம். ***புராணத்தின் முக்கிய நோக்கம் பரமார்த்திக தத்துவங்களை மக்களின் பொது உடைமையாக்குதலாம். மனதில் மேலான எண்ணங்களைக் கற்பனை பண்ணுவதற்கே புராணக் கதைகள் அமைக்கப்பட்டுள்ளன.***[33]

**முருகன் தொன்மம் – உவமைப் பயன்பாட்டின் நோக்கம் : புறஇலக்கியம்**

சங்க இலக்கியத்தின் இருபிரிவுகளில் ஒன்று புறம். புற இலக்கியத்தில் பெரும்பாலும் தொன்மம் வீரத்திற்கே உவமையாகக் கூறப்படுகிறது எனலாம். அத்துடன் வள்ளல்தன்மைக்கு, பரம்பரையின் சிறப்பிற்கும், உருவச் சிறப்பிற்கும் உவமையாக வந்துள்ளது. இதனைக் கீழ்க்கண்ட வரைபடம் விளக்குகிறது.

**புறஇலக்கியம்**

வீரம் | பரம்பரைச் சிறப்பு | வள்ளல் தன்மை | உருவச்சிறப்பு

முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது

**வீரம்:** புறநானூற்றைப் பொறுத்தவரை அரசர்களின் வீரத்திற்கும் போர் புரிதலுக்கும் உவமையாக முருகன் தொன்மம் எடுத்தாளப்பட்டுள்ளது. *குறிப்பிட்ட ஓர் இன மக்களுடைய அண்டத் தோற்றம் பற்றிய எண்ணங்களையும், இயற்கை இகழ்ந்த நிகழ்ச்சிகள் பற்றிய மரபுகளையும் கதை வடிவில் கடந்தகால நிகழ்ச்சிகளாக எடுத்துரைப்பது தொன்மம் (Myth) எனப்படும். மக்களுடைய தெய்வங்கள் மாவீரர்கள், பண்பாட்டுக் கூறுகள், சமய நம்பிக்கைகள் போன்ற வலவற்றை தொன்மம் படம்பிடித்துக் காட்டும். அறிவினால் புரிந்துகொள்ள இயலாத பலவகையான பண்டை நிகழ்ச்சிகளை, செய்திகளைத் தெளிவுபடுத்த முயலுவதே தொன்மத்தின் நோக்கமாகும்.*[23] இது போலவே புறநானூற்றில் அரசர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிக்கு உவமையாக வரும் முருகன்தொன்மங்கள் கடந்தகால நிகழ்வுகளை எடுத்துரைக்கின்றன. அரசர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்வுகளைக் கோடிட்டு காட்டுவது போல உவமை பயன்பட்டுள்ளது எனலாம். எடுத்துக்காட்டாக புறநானூற்று 14 ஆம் பாடலில் சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதனை கபிலர் பாடுகிறார். அரசனின் வீரத்தைச் சொல்லும்போது, அவனின் கை வலிமை பற்றிக் கூறி, பெண்டிரை வருத்தும் மார்பையும் போரிடுவோர்க்கு நடுக்கத்தை உண்டு பண்ணும் வலிமையையும் கொண்டவனாய்ப் போரில் முருகவேளை ஒத்துத் தோன்றுவாய் என்பதாகப் பாடல் அமைந்துள்ளது.

> *. . . . . . . . . . . . . . . . . . நல்லவர்க்கு*
> *ஆர் அணங்கு ஆகிய மார்பின், பொருநர்க்கு*
> *இரு நிலத்து அன்ன நோன்மை,*
> *செரு மிகு சேஎய்! – நிற் பாடுநர் கையே* (புறம். 14: 16-19)

இப்பாடலில் வலிமையில் முருகனைப் போன்றவன் என்றிருந்தாலும் பொருள் மாறுபடப் போவதில்லை. ஆனால் குறிப்பாகப் போரில் முருகவேளை

ஒத்துத் தோன்றுவாய் என்று குறிப்பிட்டதின் நோக்கம் யாது என்று ஆராயும் போது முருகப் பெருமானின் அவதாரச் சிறப்பே சூரபன்மனை வதம் செய்வதற்கு எனலாம். முருகன் சூரனைக் கொல்வதற்காகவே சிவனால் படைக்கப்பட்டார் என்று புராணம் கூறுகிறது. குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்று முருகனைக் கூறும் வழக்கு உண்டு. பெரும்பாலும் மலையின் மேலுள்ள கோவில்கள் முருகன் ஆட்சிபுரிந்து அருள்செய்யும் கோவிலாக இருக்கும் எனலாம். ஆனாலும் சூரனை வதம் செய்து சிறப்புப் பெற்றது கடற்கரையில் கோயில் கொண்டு முருகன் ஆட்சி புரிந்தான் என்று புராணம் மூலம் அறிய முடிகிறது. அதுபோலவே சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன், ***இனிய சுனைகளையும் செல்வ வளச் செழுமையையும் கொண்ட பக்க மலைகள் பல சூழ்ந்த நாட்டுப்பகுதியில் ஆண்டான். இவனது பல வெற்றிகளுக்குப் பின் மேலைக் கடற்கரையில் இருந்த நறவுப் பட்டினமும் இவனது ஆட்சிக்கு உட்பட்டது எனலாம்.***[24]

அது மட்டுமல்லாமல் தேவர்கள் சூரனால் பெரும் அவதிக்குள்ளானார்கள். அவர்களின் துயரம் துடைக்கவும், தேவர்களுக்குக் காவலாகவும் முருகன் அவதரித்தான் என்று புராணம் கூறுகிறது. இதுபோன்ற சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனும் ***வில்லோர் மெய்ம்மறை என்று இவன் குறிப்பிடப்படுகிறான். வில்லோர் குடியினர் குதிரை மலைப் பகுதியில் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு மார்பு கவசம் போன்று பாதுகாவலாய் விளங்கினான்***[25] என்று கூறப்படுகிறது. ஆக செல்வக்கடுங்கோ வாழியாதனின் வாழ்வு நிகழ்வுகளுடன் இம்முருகன் தொன்மம் ஒப்புமை கொண்டுள்ளது அறியப்படுகிறது. ஆகவே புலவர் இப்பாடலில் முருகன் தொன்மத்தை உவமையாக்கியதன் நோக்கத்தைத் தெளிவாக அறியமுடிகிறது எனலாம்.

மற்றுமொரு புறநானூற்று 120ஆம் பாடலில் புலவர் கபிலர் பாரியைப் புகழ்ந்து பாடும்போது, பகைவரது புறங்கொடுத்து ஓடும் வீரக்கழல்களின்

ஆரவாரத்தைக் கேட்டு நாணிப் பின்செல்லாது போரிடுதலை விரும்பி எதிர்நின்று போரிடும் இயல்புடையவன் என்றும் முருகக் கடவுளுக்கு ஒப்பானவன் என்றும் கூறுகிறார். பாரியின் போர்த் திறனைச் சிறப்பாகக் கூறுவதற்கு முருகக் கடவுளுக்கு ஒப்புமைப்படுத்துகிறார். இப்பாடலில் முருகன் தொன்மம் உவமையாக வரவில்லை. பாரி முருகனைப் போல் போரிடும் திறம் பெற்றவன் என்று கூறாமல், போரிடுவதில் முருகனுக்கு நிகரானவன் என்கிறார். முருகன், சூரனை அழித்து போரில் வெற்றி பெற்றதால், பாரியும் போர்களில் தவறாமல் வெற்றி பெறுபவன் என்று குறிப்பால் உணர்த்துகிறார் புலவர்.

இதே புறநானூற்று 56ஆம் பாடலில் நன்மாறனை மதுரைக் கணக்காயனார் புகழ்ந்து பாடுகிறார். மன்னனுக்கு உவமையாகச் சிவன், பலராமன், கண்ணன் என்று கூறிய புலவர், கொடியாக மயிலையும், பிணிமுகம் எனும் யானையை ஊர்தியாகவும் கொண்டு கருதியது முடிப்பவன் முருகவேள். முருகவேள் போன்ற தன்மையுடையவன் நீ என்கிறார்.

முருகப் பெருமான் புராணத்தில் தந்தையாகிய சிவனின் கட்டளையை ஏற்றுக்கொண்டு சூரபன்மனைப் போரிட்டு அழிக்க வேண்டும் என்று கருதி வீரவாகுடன் போரில் ஈடுபட்டு வெற்றி கண்டார். அதேபோல வள்ளியை மணம் முடிக்க வேண்மென்று கருதி, மணமுடித்து வெற்றியும் கண்டார் என அறிய முடிகிறது. அதனாலேயே புலவர் கருதியது முடிப்பவன் முருகவேள் என்கிறார்.

மன்னன் நன்மாறன் ***பகைவர்களை காய்வதில் இவன் ஞாயிறு போன்றவன். புலவர்களுக்கு நலம் சொரிவதில் திங்கள் போன்றவன்*** என்பது போல முருகப்பெருமான் தேவர்களைக் காப்பாற்றுவதில் திங்கள் போன்றவன். சூரபன்மன் உள்ளிட்ட அசுரர்களுக்கு ஞாயிறு போன்றிருந்தவன் என புராணம் வழி அறியமுடிகிறது.

பெரிய மன்னர்களை மட்டுமல்ல சிற்றரசர்களையும் புலவர்கள் புகழ்ந்து உவமையோடு பாடியுள்ளனர் என்பது தெரியவருகிறது. மலையனை வடம்

வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் புகழ்ந்து பாடுகிறார். போரில் வென்றவனும், தோற்றவனும் புகழ்ந்து போற்றும் தன்மையில் நீ ஒருவனாயினாய் நிலத்தை உழுத வலிய எருது பின் வைக்கோலைத் தின்றாற்போல உனது முயற்சியால் செய்த பொருளை யாவர்க்கும் அளித்துப் பின்னர் நீ விரும்பி உண்ணும் கள் நல்ல அமிழ்தமாவதாக உன்னை நட்பாகவும், பகையாகவும் பெற்றவர்களுக்கு பெருமழைக்கு இருப்பிடமாகவும் அமைந்த உயர்ந்த மலையையுடைய திருத்தக்க முருகக்கடவுளுக்கு ஒப்பாவாய் என்று கூறுகிறார்.

இப்பாடலிலிருந்து மன்னன் மலையனின் கொடைக் குணத்தை நன்கு அறிய முடிகிறது எனலாம். உன்னை நட்பாகவும் பகையாகவும் கொண்டவர்களுக்கு உயர்ந்த மலையையுடைய முருகக் கடவுளுக்கு ஒப்பாவாய் என்கிறார் புலவர்.

முருகப்பெருமான் பகை, நட்பு, விருப்பு, வெறுப்பு எதுவுமில்லாமல் பாரபட்சமில்லாமல் எல்லோரிடமும் அருள் செய்யும் கடவுளுக்குரிய பண்புடன் விளங்குபவர். அதுபோல மலையனும் தன் குடிமக்கள் அனைவருக்கும் ஒன்று போல அருள் செய்பவன் என்று கூறப் புலவர் மலையனுக்கு உவமையாக முருகன் தொன்மத்தை பயன்படுத்தியிருக்கலாம். **மலையன் என்பவனை மலையமான் திருமுடிக்காரி என்று வழங்குவர். குதிரையின் பெயரும் காரி என்பதே. இவன் மாரி போன்ற வன்மையுடையவன்.**[27]

மாரி எப்படி நல்லவர், தீயவர் என்று பாராது மழை பொழிகிறதோ அது போல முருகப்பெருமானும் நல்லவருக்கு அருளுவதோடு தீயவனான சூரபன்மனுக்கும் போரின் இறுதியில் அவன் கேட்டதற்கு இணங்க சேவலாகவும், மயிலாகவும் ஆக்கிக் கொண்டார் என்று புராணம் கூறுகிறது. அதுபோல மலையனும் எல்லோருக்கும் அருளியவனாய் இருந்தான் போலும். அதை மறைமுகமாய் வெளிப்படுத்த முருகனுக்கு ஒப்பாவாய் என்றார். அதிலும் உயர்ந்த மலையையுடைய முருகனுக்கு ஒப்பாவாய் என்று கூறி, மலையனின் சிறப்பை மேலும் உயர்த்திக் காட்டுகிறார் எனலாம்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனை மதுரை மருதன் இளநாகனார் பாடிய பாடலில் (புறம். 55) மன்னன் பரிசில் தர கால நீட்டித்தான். இருந்தும் புலவர் அவனை வாழ்த்திப் பாடுகிறார். அதற்கு முருகன் தொன்மம் உவமையாகப் பயன்படுகிறது. செந்திலம்பதி நெடியோனாகிய முருகவேள் நிலைபெற்ற அழகிய அகன்ற துறை. அத்துறையில் பெருங்காற்று திரட்டுவதால் குவிந்த மணல் மேட்டிலுள்ள மணலின் எண்ணிக்கையினும் பல காலம் வாழ்வாயாக என்கிறார் புலவர். இப்பாடல் மூலம் மன்னன் பரிசில் தரக் காலம் நீட்டித்தாலும், புலவர் பெருந்தன்மையுடன் இருந்து வாழ்த்தியுள்ளார் என அறியமுடிகிறது. மேலும் இப்பாடலில் பயன்படுத்தும் தொன்ம உவமையைப் பாடலின் கருத்தோடு ஆராய்ந்து பார்த்தால், பல செய்திகளைக் கண்டறிய முடிகிறது. அவை:

1. முருகன் அறுபடை வீடு கொண்டவன் என்று புராணம் கூறினாலும், சங்க இலக்கியத்தில் திருப்பரங்குன்றமும், திருச்சீரலைவாய் எனப்படும் செந்திலம்பதியாகிய திருச்செந்தூரும் சிறப்புறப் பேசப்பட்டுள்ளது. மற்ற அறுபடை வீடுகள் அவ்வளவாக சங்க இலக்கியங்களில் பேசப்பட வில்லை.

**ஈதலால் ஒருவனுக்கு இன்பமும் புகழும் பெருகும் ஈதலோடு ஒருவனுடைய நற்குணங்களும் அற நிலை திறம்பா நடுநிலைமையும் போர் வெற்றியும் ஒருவனது வாழ்க்கையில் பெருமிதத்தை உண்டாக்கும். தொல்காப்பியரும் கல்வி, அஞ்சாமை யோடு கூடிய வீரம், கொடை, புகழ் என்பனவே பெருமித வாழ்க்கைக்கு அடிநிலை என்பார்.**

**உதவி வேண்டியார்க்குச் சிறிதும் காலம் தாழ்த்தாது கண்ணுக்கு நேர்ந்த இடையூற்றைக் கை சென்று தடுப்பதைப் போல உதவுதல் வேண்டும். இதனை,**

***கண்ணுறு விழுமம் கைபோல் உதவி***

***நம் உறுதுயரம் களையார் ஆயினும்***[28] (நற். 216: 3-4)

என்பது தொல்காப்பியம் பற்றி, நற்றிணைப் பாடல் கூறும் கருத்துகளாகும். கொடை கொடுத்தலின் சிறப்பும், அதனைக் கொடுக்க காலம் நீட்டித்ததும் தவறான பண்பாகும் என அறிய முடிகிறது.

2. 'செந்திலம் பதியிலுள்ள துறையின் மணல் எண்ணிக்கையைவிட பலகாலம் வாழ்வாயாக' என்று கூறுகிறார் புலவர். செந்திலம்பதி, முருகன் போரிட்ட தலமாகும். ஒரு மன்னனுக்குரிய குணங்களாகக் கூறப் படுபவை. வீரமும், கொடைச் சிறப்புமாகும் எனலாம். பரிசில் தரக் காலம் நீட்டித்த நீ என்றும் போரிட்டிரு என்று சபித்துச் சொல்லாமல் சொல்வதற்கு முருகன் போரிட்ட கடற்கரையைக் குறிப்பிட்டுள்ளார்.

3. மணலின் எண்ணிக்கையைக் காட்டிலும் பலகாலம் வாழ்வாயாக என்கிறார் புலவர். பரிசில் தர தாமதித்த நீ கடற்கரை மணலுக்கு ஒப்பானவன். கடற்கரையிலுள்ள மணலைக் கொண்டு எவ்வித பயனுமில்லையோ அதுபோல உன்னால் எந்த பயனுமில்லை என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

4. மேலும் கடற்கரையிலுள்ள மணலைக் கொண்டு எதையும் ஆக்க முடியாது. அதுபோல பரிசில் தர நீட்டித்ததால் நீயும் அக்கடற்கரை மணல் போன்று யாருக்கும் பயன்தராதவன் என்பதைக் குறிப்பாக கொள்ளலாம்.

வாழ்த்திப் பாடுவதாகப் பாடல் அமைந்தாலும் முருகன் தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கம் பற்றி ஆராயும்போது பரிசில் தராத மன்னனைப் பழித்துப் பாடும் பொருள் பாடலுள் மறைந்துள்ளதை அறிய முடிகிறது எனலாம். ஆக, இத்தொன்மங்கள் புலவர் வெளிப்படையாகப் பாடாத செய்திகளைப் பொருத்திக் காட்ட துணை செய்கின்றன எனலாம்.

இதேபோல மற்றோரு பாடலில் (புறம். 209) மூவன் எனும் சிற்றரசன் பரிசில் தரக்காலம் நீட்டித்தமையால் பெருந்தலைச் சாத்தனார் அவனைப் புகழ்ந்து பாடுகிறார். இறுதியில் நீ ஒரு பரிசும் கொடுக்கவில்லை என்றாலும் நான் வருந்தமாட்டேன். நீ நோய் இன்றி இருப்பாயாக என்று வாழ்த்துகிறார். பெரிய மலை போன்ற மார்பினை உடைய போரை விரும்பும் முருகவேளைப் போன்றவனே என்கிறார்.

இப்பாடலிலும் பரிசில் தராத மன்னனை வாழ்த்தினாலும் போரை விரும்பும் முருகவேளைப் போன்றவனே என்கிறார் புலவர். பரிசில் தராத நீ வாழ்நாள் அனைத்தும் போரிட்டுக் கொண்டேயிருப்பாயாக என்று மறைமுகமாய் புலவர் கூறுவதாகக் கொள்ளலாம். மலையன் கொடைச் சிறப்பைப் பாராட்டி உயர்ந்த மலையையுடைய முருகனுக்கு ஒப்பாவாய் என்றார் ஒரு புலவர். அதேபோல பாரியைப் பற்றிய பாடலில் முருககடவுளுக்கு ஒப்பானவன் என்று பாடுகிறார் கபிலர். பாரி வள்ளல்களில் சிறந்தவன் என்று இலக்கியம் கூறுகிறது.

ஆனால் பரிசில் தராது காலம் நீட்டித்த அரசர்களாக பாண்டியன் இலவந்திகையையும், மூவன் எனும் சிற்றரசனையும் புகழ்ந்து பாடிய புலவர்கள் முருகன் போரிட்ட தலத்தையும், போரை விரும்பும் முருகனையும் உவமையாக்கி யுள்ளதால் பாடலில் சொல்லப்படாத கருத்தைக் கூற முருகன் தொன்மம் உதவியாக உள்ளன. இதை தொன்மங்கள் பயன்படுத்தியதின் நோக்கமாகக் கருதலாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் புலவர் கல்லாடனார் புகழ்ந்து பாடுகிறார் (புறம். 23) பாண்டியனின் பகைவர்களை அழிக்கும் வீரத்திற்கு முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. கடம்ப மாலையை அணிந்த, சூரபன்மாவைக் கொன்றவனுமாகிய முருகவேளின் ஏவலராகிய கூளிச் சுற்றம் போன்ற கூர்மையான நல்ல அம்புடன் வளைந்த வில்லுடைய பாண்டியனின் வீரர்கள் கைக்கொள்ளுமளவு கொண்டபின் எஞ்சிய பொருளைப் பகைவர்கொண்டு உணவாக்காதவாறு விளைநிலங்கள் அழிக்கப்

பட்டது. செழியனால் அழிந்த பகைவர் தம் மனைவியர் தம் தம் மக்களுக்காக உயிர் வாழ்ந்து கைம்மை நோன்பு மேற்கொண்டு வேளைக் கீரையை உணவாகக் கொள்வர் என்று பாடுகிறார் புலவர்.

இப்பாடலில் முருகனின் வீரம் உவமையாக வந்துள்ளது. முருகனின் ஏவலராகிய கூளிச் சுற்றம் போன்ற கூர்மையான நல்ல அம்புடன் வளைந்த வில்லையுடைய பாண்டியன் என்கிறது பாடல். முருகன் ஏவலராகிய அதாவது பணியாளர்களாகிய கூளிச் சுற்றம், முருகன் நினைத்த மாத்திரத்தில் அவர் இட்ட வேலையைச் செய்து முடிக்கும். கூளிச்சுற்றம் என்பதற்கு அகராதி காட்டும் விளக்கம்:

***கூட்டம்***
***படை வீரர்கள்***
***படைத் தலைவன்***
***வேட்டுவர்***
***குறவர்***[29]

என்பதாகும். முருகனின் கூளிக்கூற்றம் போன்று நினைத்த உடனே பகைவர்களை அழிக்கவல்ல வில்லையும் அம்பையும் உடையவன் பாண்டியன் என்கிறார் புலவர். முருகனின் கூளிச்சுற்றம் தோல்வியடையாதது போல பாண்டியனின் வில் அம்பிலிருந்து பகைவர்கள் தப்ப முடியாது என்பதைக் குறிப்பாகக் கூறுவது போலுள்ளது எனலாம்.

அடுத்ததாக, பத்துப் பாடலிலில் ஒன்றான பெரும்பாணாற்றுப் பாடலில் (75-76) கீழ்க்காணும் கருத்துகள் வருகின்றன.

பாணன் பொருள் பெறவேண்டி மன்னனைக் காணச் செல்லும் வழியில் வருவோர் போவார் பற்றியும் அவர்கள் தோற்றம் பற்றியும், ஆறலைப் போரில் ஈடுபட்ட வலிமையுடைவர்கள் என்றும் கூறுகிறது பாடல். அவர்கள் இடுப்பில் உடைவாள் செருகியிருந்தார்கள். கடம்பின்கண் அமர்ந்த முருகனை ஒத்த

வீரத்தையும் வேலேந்திய கையினையும் புறமுதுகிட்டு ஓடாத தன்மையையும் கொண்டவர்கள் என்கிறது பாடல்.

***கடம்பு அமர் நெடுவேள் அன்ன, மீளி***
***உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்*** (பெரும்பாண். 75-76)

எனும் இப்பாடலில் அக்காலத்தில் ஊரில் வாழும் மக்கள் வீரமுடன் இருந்தது முருகன் தொன்மம்வழி அறியப்படுகிறது.

பெரும்பாணாற்றுப்படை 457-459ஆம் பாடல் வரிகளில் மன்னன் திரையனை பாணன் போற்றிய போது முருகனின் தொன்மம் வருகிறது. இப்பாடலில் மன்னன் திரையனின் சிறப்பை விளக்கும் நோக்கமாக முருகன் தொன்மம் உவமையாகக் காட்டப்பட்டுள்ளது.

கடலிற் சென்று ஓடி ஒளிந்த சூரபன்மனைக் கொன்ற முருகனைப் பெற்ற பெருமையுடைய துணங்கை கூத்தினைக் கொண்ட இறைவியாகிய கொற்றவையை பாராட்டிப் பேய்கள் புகழ்தல் போன்ற அமையாத கொடையை யுடைய நின்னைப் புகழ்ந்து வந்தேன் என்கிறார் புலவர். இப்பாடலில் கொற்றவையைப் பேய்கள் புகழ்ந்து பாடுதல் போன்ற அமையாத கொடை யுடைய நின்னைப் புகழ்ந்து வந்தேன் என்று கூறியிருந்தால் பொருள் மாறிவிடப் போவதில்லை. ஆனால் முருகன் சூரபன்மனைக் கடலில் மாமரமாய் ஒளிந்து நின்றபோது தன்வேலால் இருகூறாகப் பிளந்து கொன்றான். அவரின் அன்னை யாகிய கொற்றவை என்று கூறுகிறது பாடல். இதன் நோக்கம் என்னவெனில் திரையனும், முருகனைப் போன்று அவன் பகைவர்கள் எங்கு ஓடினாலும் அவர்களை அழித்து வெற்றி காண்பவன் என்பதைக் குறிப்பாக உணர்த்த இத்தொன்ம உவமையைப் பயன்படுத்தியுள்ளார் எனலாம்.

மதுரைக்காஞ்சியில் பாண்டிய மன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் புகழ்ந்து பாடும்போது, அவனது வீரப் பண்பிற்கு முருகனின் வீரம் உவமையாக ஆக்கப்பட்டுள்ளது. முருகன் பகைவர் மேல் செல்வது போலத் தடையறப் பகைவரிடம் போர் குறித்துச் சென்று, மழை

போன்று அம்புகளைத் தூவி பகைவர்களைக் கொன்றவன், பகைவர்களின் நாடுகள் அழியுமாறு அவர்கள் தங்கியுள்ள மதில்களைக் கைப்பற்றி அவர்களுக்கு உதவி புரியும சுற்றத்தார்களையும், சுற்றத்தார்களின் வலிமையினையும் போக்கினாய் என்கிறார் புலவர்: *நெடுஞ்செழியன் சிறுவனாக இருந்தபோதே பட்டம் ஏற்றான். அவன் மீது சேரன், சோழன் என்ற முடியுடைவேந்தர் இருவரும் திதியன், எழினி முதலிய ஐம்பெரும் வேளிரும் படையெடுத்தனர். இளைஞனான நெடுஞ்செழியன் இப்பகைவரை யான் வெல்லேனாயின் குடிபழி தூற்றுங் கோலேனாகுக! மாங்குடி மருதனைத் தலைவனாகப் பெற்ற புலவர் பெருமக்கள் எனது நாட்டைப் படாது ஒழிவாராக என்று சூளுரைத்துப் போருக்கெழுந்தான். எழுவரோடும் போர் புரிந்தான். இறுதியில் தலையாலங்கானம் (இன்றைய தலையாலங்காடு) என்னும் இடத்தில் அவர்களை முற்றிலும் முறியடித்தான். அதனால் தலையாலங் கானத்துச் செருவென்றவன் என்ற விருதுப்பெயர் பெற்றான்.*[30] இதுபோல முருகனுடன் *பலவாறும் போர் செய்து களைத்த சூரன் இறுதியில் அழிவுற்றான். உடல் இருகூறாகிச் சேவலும், மயிலுமானது. சேவல் கொடியாயிற்று, மயில் முருகனின் வாகனமாயிற்று.*[31]

முருகன் சேவல் கொடியோன் மயில் வாகனன் எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டான் என்பது அறியமுடிகிறது. முருகன் இளைஞனாய் இருந்தபோது சூரபன்மனுடன் போர்புரிந்து வெற்றி கண்டான். நெடுஞ்செழியனும் இளவயதில் போர் புரிந்து வென்றுள்ளான். முருகன் திருச்சீரலைவாய் எனப்படும் இடத்தில் (தற்போது திருச்செந்தூர்) சூரபன்மன் உடன் பல அசுரர்களைப் போரிட்டு வென்றான் - நெடுஞ்செழியனும் தலையாலங்கானம் (தற்போது தலையாலங்காடு) எனுமிடத்தில் பகை அரசர்களை வென்று வெற்றி கண்டான். அவ்விடத்தில் வெற்றி கொண்டதால் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என அழைக்கப்பட்டான். ஆக முருகனுக்கும், பாண்டிய மன்னனுக்கும் இருக்கும் ஒற்றுமைப் பண்புகளை மனதில் கொண்டு பாண்டிய மன்னனுக்கு முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது சிறப்பு எனலாம்.

மலைபடுகடாம் செய்யுளில் மன்னன் நன்னனுக்கு முருகப்பெருமானின் ஆற்றலும், வீரமும் உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. வெல்லும் போரில் வல்ல முருகனைப் போன்ற ஆற்றலையும், அழகினையும் உடைய நன்னன் என்று புலவர் பாராட்டியுள்ளார். *நன்னன் ஏழுமலைப் பகுதியைப் பெற்றிருந்தமையால் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்து வேள் என்று பெயர் பெற்றான். ஆஅய் எயினன் மிக்க வீரமுடையவன். அகுதை எனும் மன்னன் ஆஅய் எயினனுக்கு நடுங்கியிருந்தான். இத்தகைய மேம்பாடு கொண்ட இவ்ஆஅய் எயினன் நன்னனது படைத்தலைவனாகிய மிஞிலி அவனோடு போர் தொடங்கினான். அப்போது அந்நன்னன் தனது பேய் கூட்டத்து அருகில் நின்று கூறிய கட்டளையை மேற்கொண்டு வந்தெதிர் நின்று போர் தொடங்கி நண்பகற்பொழுதில் வேலாலெறிந்து ஆஅய் எயினனைக் கொன்றான்.*[32] இவ்வகையான வாழ்க்கைக் குறிப்புகளை உடைய நன்னனை முருகப் பெருமானுக்குரிய வரலாற்று நிகழ்வுகளாகக் குறிப்பிடப்படும் புராணக் கருத்துகளுடன் ஒப்புமைப்படுத்தினால் கீழ்க்காணும் ஒற்றுமைகள் காணப் பெறுகின்றன.

| எண் | முருகன் | நன்னன் |
|---|---|---|
| 1. | முருகன் மலைகள் தோறும் கோவில் கொண்டவன். | நன்னன் ஏழுமலைப்பகுதியை ஆண்டவன் |
| 2. | முருகனின் எதிரியாகக் கருதப்பட்ட சூரபன்மன் மிக்க வலிமையுடையவன் சூரபன்மனுக்கு தேவர்கள் அஞ்சி நடுங்கினர். | நன்னனின் எதிரியான ஆஅய் எயினன் மிகுந்த ஆற்றலுடையவன். வீரமுடையவன் அகுதை எனும் அரசர் அவனுக்குப் பயந்து நடுங்கினான். |
| 3. | முருகனின் படைத்தளபதி வீரபாகு. முருகனின் கட்டளையை ஏற்று சூரபன்மனைக் கொல்ல உதவினான். | நன்னனின் படைத்தளபதி மிஞிலி. நன்னன் கட்டளைப்படி ஆஅய் எயினனைக் கொன்றான். |
| 4. | வேலால் சூரன் கொல்லப்பட்டான். | வேலால் ஆஅய் எயினன் கொல்லப் பட்டான். |

இவ்வாறாகப் பல ஒற்றுமைகள் இருக்கும் நன்னனுக் முருகன் உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது பொருத்தம் எனலாம். முருகன், நன்னன் இருவரின் ஒற்றுமைகளை மனதிற் கொண்டுப் புலவர் முருகன் தொன்மத்தை இப்பாடலில் உவமையாக எடுத்தாண்டுள்ளார் எனத் தோன்றுகிறது.

பொருநராற்றுப்படைப் பாடல் வரிகளில் (130-132) மன்னன் கரிகாலச் சோழனின் சீற்றத்திற்கு முருகனின் சீற்றம் உவமையாக்கப்பட்டுள்ளது. கரிகாலனும் தன் இளமைக்காலத்தில் சேர, பாண்டியர்களை போரில் வென்று வெற்றி பெற்றான். அதுபோல முருகனும் தன் இளவயதில் சூரனுடன் போரிட்டு வென்றான். கரிகாலன் பிறக்கும்போதே பகைவரை உடையவன் என்று வரலாறு கூறுகிறது. அதேபோல முருகப் பெருமான் அவதரித்ததே தேவர்களின் பகைவனான சூரனை அழிப்பதற்கு எனப் புராணம் கூறுகிறது. முருகனைப் போலப் பேரில் வல்லவன், சீற்றமுடையவன் கரிகாலன் என்று புலப்படுத்த முருகன் தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்தியுள்ளது பொருத்தமாக உள்ளது. இதே போன்று பதிற்றுப்பத்து (11-5) பாடலில் முருகன் தொன்மம் சேரலாதனுக்கு உவமையாகிறது. நடுக்கடலில் போரிட்ட முருகவேளுக்கு அஞ்சி சூரபத்மன் மாமரத்தின்பின் ஒளிந்து கொண்டான். பிறருக்கு அச்சத்தை உண்டாக்கும் அவுண வீரர்கள் அம்மரத்திற்குக் காவலிருந்தனர். முருகன் அம்மாமரத்தினை வேரோடு அழியுமாறு செய்து சூரபன்மனையும் அழித்தான். பின் பிணிமுகம் என்ற தன் போர்க்களிற்றின் மீது ஏறி அம்முருகப் பெருமான் வெற்றி உலா வந்தான். சேரலாதனும் கடலிடத்துப் பகைவரை வென்று களிறேறி வீதியுலா வந்தான் என்கிறார் புலவர்.

சேரலாதனின் செயல்கள் முருகப் பெருமான் சூரனை வதம் செய்த செயல்போல இருந்ததால் முருகனின் தொன்மம் உவமையாக்கப்பட்டுள்ளது மிகச் சிறப்பாகப் பொருந்தியுள்ளது. ஒரு பொருளுக்கோ, நபருக்கோ உவமை கூறும்போது அதனை ஒத்த வேறு பொருள் உவமையாக வரும் என்பது அடிப்படை

விதி. அதற்கு ஏற்றாற்போல சேரலாதனின் வீரத்திற்கு முருகனின் செயல்கள் ஒத்து இருந்ததால் புலவர் முருகனின் தொன்மத்தை உவமையாக கையாண்ட நோக்கத்தில் வெற்றியடைந்துள்ளார் எனக் குறிப்பிடலாம்.

**முருகன் தொன்ம உவமைகள் மூலம் அறிய வரும் செய்திகள்**

1. முருகன் தொன்மத்தைப் பொறுத்தவரை அகப்பாடல்களுக்கும் புறப்பாடல்களுக்கும் வெவ்வேறு விதமாக பயன்பட்டுள்ளன எனலாம்.
2. அகப்பாடல்களில் பெரும்பாலும் அக்கால வழக்கமான முருகன் வெறியாட்டு நிகழ்வு களவுப் பாடல்களில் பெரும்பங்கு வகிக்கின்றன.
3. தலைவன் - தலைவியின் சிறுவயது மகனின் அழகிற்கு முருகன் அழகு உவமையாகக் கூறப்படுகின்றன. அவ்வாறு முருகன் ~~அழகு~~ குறிப்பிடப்படும் போது சிவனின் மகன் என்றே கூறப்படுகின்றான்.
4. அகப்பாடல்களில் முருகன் குடியிருக்கும் மலையின் அழகும், அதன் வளமையும் முருகனின் அழகும், முருகன் பிறப்பும் உவமையாக வருகின்றன எனலாம். அதோடு முருகன் மேற்கொண்ட போர் செ உவமைய வருகி
5. முருகனின் அறுபடை வீடு குறிப்பிடப்படுகின்றது.
6. புறப்பாடல்களில் வீரம், பரம்பரைச் சிறப்பு, வள்ளல்தன்மை, உருவத் தோற்றம் இவற்றிற்கு உவமைகளாக முருகன் தொன்மம் பயன்பட்டுள்ளது எனலாம்.
7. முருகன் அரசர்களின் போர் புரியும் திறனுக்கு உவமையாகிறான் எனலாம்.
8. அரசர்களின் வீரம் பற்றிக் கூறும்போது முருகன் - சூரபன்மன் போர்க் காட்சிகள் உவமைகளாக காட்டப்பட்டுள்ளன எனலாம்.

9. அகப்பாடல்களுக்கும், புறப்பாடல்களுக்கும் உவமையாக முருகன் - சூரபன்மன் போர் நிகழ்வுகள் காட்டப்படுகின்றன.

10. முருகனின் அறுபடை வீடுகளில் திருப்பரங்குன்றமும், முருகனின் சூரபன்மனுடன் போரிட்ட, தலமாகிய செந்திலம்பதியும் திருச்செந்தூரும் சுட்டப்படுகின்றன.

ஆகவே தொன்மங்கள் உவமையாகும்போது படிப்பவரின் கற்பனை உணர்வுகளுக்குக் களமாகவும், பாட்டின் பொருளுக்கு ஆழமான கருத்துக்களையும் இவை உள்ளடக்கி உள்ளன எனலாம்.

**பழமரபுக் கதைகள் (எனும் அரசர் தொன்மங்கள்) தொன்ம உவமைகளின் நோக்கம்**

சங்கப் புற இலக்கியங்கள் அரசர், குறுநிலமன்னர்களின் புற வாழ்க்கை நிகழ்வுகளைப் பற்றி கூறுகின்றன. பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை தவிர மற்ற நூல்களும், எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்தும், புறநானூறும் மன்னர் பற்றிய கதை சார்ந்த செய்திகளைச் சொல்கின்றன. இச்செய்திகளே தொன்மங்கள் எனப்படுகின்றன. இத்தொன்மங்கள் உவமைகளாகவும் வந்துள்ளன.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகையை ஆய்வுக் களமாகக் கொண்டிருப்பதால் இவற்றுள் அரசர் தொன்மங்கள் உவமைகளாக இருபத்து நான்கு இடங்களில் வந்துள்ளதை அறியமுடிகிறது. சங்க இலக்கியத்தில் அரசர் தொன்மம் உவமையாக நூல்களில் இடம்பெற்ற அளவுகள் கீழ்க்காணும் வரைபடம் மூலம் எளிதாக விளக்கப்பட்டுள்ளது.

## அரசர் தொன்ம உவமை விளக்கப்படம்




புறநானூற்றில் பழமரபுக் கதைகள் அதிகமாகப் பயின்று வருகின்றன எனலாம். புறநானூற்றில் அரசர்களின் இயல்பு, அவர்களின் கொடைத் திறம், வீரம், அரசனின் முன்னோர் சிறப்பு ஆகியவை கூறப்படுகின்றன. இவற்றுடன் தவறு செய்யும் அரசனுக்கு நல்வழி அறிவுறுத்துவது, அவனது பகைவர் நாட்டினை எண்ணி அதனால் புலவர் இரங்கி அரசனுக்கு அறிவுரை கூறுவதுபோலப் பாடியுள்ளமையும் காணப்படுகின்றன. அன்றைய காலக்கட்டங்களில் சேர சோழ பாண்டியர் எவ்வாறு ஆண்டனர்? அவர்களின் கடமை எப்படி இருந்தது? போன்ற அனைத்து வினாக்களுக்கும் விடை புறநானூற்றில் உள்ளது எனலாம்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை காரிக்கிழார் பாடிய பாடல் (புறம். 6) மன்னனை வாழ்த்திப் பாடுவதாக உள்ளது. பாண்டியனின் ஆட்சி எல்லையாக வடதிசையிலுள்ள இமயத்திற்கு வடக்கிலும், தென்திசையில் கன்னியாற்றிற்குத் தெற்கிலும், கிழக்குத் திசையில் சகரரால் தோண்டப்பெற்றுக் கரையை மோதும் கடலுக்குக் கிழக்கிலும், மேற்குத் திசையில் தொன்மையாய்

முதிர்ச்சியுற்ற கடற்பரப்பின் மேற்கிலும், கீழுள்ள நிலம், வான், சுவர்க்கம் என்ற மூன்றும் சேர்ந்து அடுக்கிய முறையில் முதலாவதாக உள்ள நீர்நிலையிலிருந்து உயர்ந்து தோன்றும் நிலத்திற்குக் கீழேயும் மேலமைந்த கோ உலகிற்கு மேலேயும் விளங்குகின்ற அடங்காத அச்சமும் புகழும் உன்னுடையதாகட்டும் என்கிறார் புலவர்.

இப்பாடலில் சகரரால் தோண்டப்பட்ட கடலுக்குக் கிழக்கிலும் என்ற வரிகளில் சகரன் எனும் அரசனின் தொன்மம் இடம்பெற்றுள்ளது.

**சகரர் (கதை) தொன்மம்**

***சகரன் எனும் அரசன் மகாகீர்த்தியுடன் சக்கரவர்த்தியாய் வாழ்ந்தான். சகரன் தனது குரு அவுரவருடைய உத்தரவின்படி தாலசங்கர்கள், யவணர்கள் முதலிய பகைவர்களை வென்று அவர்களுக்கு மொட்டையடித்து அனுப்பினான். அசுவமேத யாகங்கள் பல செய்தான். இந்த யாகம் வெற்றி பெற வேண்டுமானால் சகரனால் ஏவப்பட்ட குதிரை மூவுலகையும் சுற்றி வரவேண்டும். அப்படி வந்துவிட்டால் சகரனை யாராலும் வெல்ல முடியாது. இந்திரன் அப்படி நடந்துவிடக்கூடாது என்பதற்காக சகரனின் குதிரையைப் பாதாளத்திலுள்ள கபிலமுனியினுடைய ஆசிரமத்தில் கட்டி வைத்துவிட்டான். சகரனுக்கும் சுமதிக்கும் பிறந்த அறுபதினாயிரம் பிள்ளைகள் அக்குதிரையைத் தேடி வந்தனர். பூமி எங்கிலும் தேடினர். குதிரைக் கிடைக்கவில்லை. பூமியைச் சுற்றிலும் தோண்டினர்.[34]***

*அந்த சகரனுடைய பிள்ளைகளால் இந்தச் சமுத்திரமானது நிருபிக்கப்பட்டது. அந்தச் சகரனுடைய பிள்ளைகளால் இந்தச் சமுத்திரமானது நிருமிக்கப்பட்டது.[35]*




இத்தொன்மம் பாண்டியன் மன்னன் புகழுக்கு கருவியாக வந்துள்ளது. இங்கு உவமையாக வரவில்லை என்றாலும், பாண்டியனுக்கும் சகரனுக்கும் உள்ள ஒற்றுமைக்குப் பொருத்தமாக உள்ளதால் எடுத்தாளப்பட்டுள்ளது என்பதைக் கீழ்க்காணும் மேற்கோளைச் சான்றாகக் காட்டலாம்.

***இப்பாண்டிய மன்னன் அக்காலத்தில் நிலவிய அரசர் பலரையும் புறங்கண்ட பெருவீரன் அரசர்க்குரிய பல வேள்விகளை முடித்துப் பெருமை எய்தியவன்.***[36]

சகரனும் தாலசங்கர்கள், யவணர்களைப் புறங்கண்டவன். அசுவமேத யாகம் நடத்தியவன். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பல யாகங்கள் நடத்தினதால் இப்பெயர் பெற்றான் என்று வரலாறு கூறுகிறது. ஆக பாண்டிய மன்னனின் இயல்புகளுக்கு ஏற்ற இயல்புகள் கொண்டவன் அரசன் சகரன் என்பதால் பாண்டிய மன்னன் சிறப்பை உயர்த்திக் காட்டும் நோக்கத்தில்

இச்செய்தி எடுத்தாளப்பட்டுள்ளதாகக் கருத வாய்ப்புள்ளது. பாண்டிய மன்னனின் ஆட்சி எல்லையைக் குறிப்பிடும்போது, புலவர் மிகத் திறனாக பாண்டியனின் இயல்புக்கு ஒத்த இயல்புகொண்ட சகரர் தொன்மத்தை குறிப்பிடுவது பொருத்தமாக அமைந்துள்ளது.

அடுத்ததாக அமையும் புறநானூற்றுப் பாடல்கள் (36, 37, 39, 46) சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவனைப் புகழ்ந்து மாறோகத்து நப்பசலையாரும், கோவூர் கிழாரும் பாடுகின்றனர். இப்பாடல்களில் புறாவின் துயர் போக்கத் தன் தசை கொடுத்த சிபியின் மரபில் வந்தவனே என்று சோழமன்னனை சிறப்பாகச் சொல்கின்றார் புலவர்.

**சிபியின் வரலாறாவது:** சோழர் குல அரசருக்கு சிபி முன்னோடியாகத் திகழ்ந்தான் என்று அறியமுடிகிறது. ***சந்திர குலத்திலே சிபி எனப் பெயர் கொண்ட மன்னன் ஒருவன் உளனென்பது புராண இதிகாசங்களால் அறியப்படுகிறது. அவன் யயாதியின் மக்களுள் ஒருவனாகிய அணுவின் வழியில் வந்த உசிநரன் புதல்வனாவான். சிபி சூர்யக் குலத்தவனென்றும் சோழர்களின் முன்னோனென்றும் சங்கத்துச் சான்றோராலும் நல்லிசைப் புலவர்களாலும் இடைக்காலத்தே தோன்றிய செயங்கொண்டார், சேக்கிழார், கம்பர், ஒட்டக்கூத்தர் முதலிய புலவர் பெருமக்களாலும் பலவிடங்களில் கூறப்படுகின்றான். ஆதலின் சூரிய குலத்துச் சிபியும் வேறு சந்திரகுல சிபியும் வேறு என்று கொள்ளுதல் வேண்டும். பல அரசர்கள் ஒரே பெயர் தரித்திருப்பதைப் புராணங்களிற் காணலாம்.***

***சங்க இலக்கியங்களில் சோழர் குல முன்னோரின் மாட்சியை விளக்க நேர்ந்தபோதெல்லாம் சிபி என்ற மன்னன் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றான். இவ்வேந்தர் பெருமானைக் குறித்து மகாபாரதத்தில் கூறப்பட்டிருக்கிறது தர்மபுத்திரர் பேரறிவாளரான பாட்டனாரைப் (பீஷ்மர்) பார்த்து அடைக்கலம் புகுந்த உயிரைப் பாதுகாத்தலினால் உளதாம் பயனை வினவ, பீஷ்மர் சிபியின் கதையைக் கூறுகிறார்.***[37]

மகாபாரதத்தில் சிபி பற்றி பேசப்பட்டிருக்கிறது எனில் சிபிச் சக்கரவர்த்தி மகாபாரதத்திற்கு முன்னோ, அல்லது அதே காலத்துவனாகவோ இருந்திருக்கலாம். **இவன் வனத்திலிருக்கையில் தேவர் இவனது தவத்தைச் சோதிக்க இந்திரன் வேடனாகவும், அக்னி தேவன் புறாவாகவும் உருவடைந்து அரசன் காண வேடன் புறாவைத் துரத்தி, நேராகப் புறா அரசனிடம் அபயமடைந்தது. அரசன் வேடனை நோக்கி வேறு இறைச்சி தருகிறேன். இதை ஒழிக என வேடன் உடன்படாது இதனைத் தராது மறுக்கின், அப்புறாவின் நிறையுள்ள உன்னுடம்பின் இறைச்சி தருக என, அரசன் மகிழ்ந்து அதன்படி ஒரு துளையிட்டு அதில் புறாவை நிறுத்தித் தன்னுடலின் இறைச்சி முழுதும் அறுத்திட்டனன். இடுந்தோறும் புறவு இட்ட தட்டு தாழ்ந்தவர உடம்பில் வேறு மாமிசம் இல்லாமையால் அரசன் தானே துளையில் ஏறத் தேவரிருவருங் களித்து அரசனுக்கு தரிசனந் தந்து உடலிற்றசை வளரச் செய்து சுவர்க்கம் அளித்தனர்.**[38]

இப்படிப்பட்ட பெருமையையுடைய சிபிச் சக்கரவர்த்தியின் மரபில் வந்தவனே என்று சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடுகிறார் நப்பசலையார். எப்படிப்பட்ட வல்லமை படைத்த அரசர்களையும் போரில் அழிக்க வல்லவன். சோழனின் செயல் நஞ்சை உடைய பாம்புகூட அஞ்சும்படி பெரிய மலையின் பிளவுகளில் இடிதாக்குவது போல விளங்கும் என்கிறார்.

இப்பாடலில் சோழனின் வீரமும் அவன் பகைவரை வெல்லும் செயல்கண்டு பாம்பு கூட அஞ்சும் என்று கூறிவிட்டு சிபியின் வழித்தோன்றலே என்கிறார். சோழன் கொடைத் திறமைக்கோ, தன்னிடம் அடைக்கலம் தேடி வந்த உயிர்க்கு சோழன் ஆதரித்ததற்கோ வள்ளலான சிபியின் தொன்மம் உவமையாக வரவில்லை. சிபியின் பரம்பரையில் வந்தவனே என்று கூறிவிட்டு சோழனின் வீரத்தைப் பற்றிக் கூறுகிறது பாடல். சிபி என்று குறிப்பிடும்போது கருணை உள்ளத்திற்கு எடுத்துக்காட்டாகும் எனலாம். இப்பாடல்(புறம். 37) வெண்மையான

வேலுடன் சினங்கொண்ட தானையை உடையவனுமான சோழனின் வழித் தோன்றல் என்கிறார். ஆக சிபியைக் கருணைக் குணத்திற்கு கூறுவதை விடுத்து சோழமன்னனின் வீரத்திற்கு உவமையாக கூறுகிறார் புலவர்.

அடுத்த பாடலிலும் (39) சோழனை இதே நப்பசலையார் பாடுகிறார். புறாவின் வருத்தத்தைப் போக்க துலாக்கோலில் தானே ஏறிநின்ற சோழன் (சிபி) வழித்தோன்றலே அதனால் இரப்பவர்க்குத் தருதல் உன்னுடைய இயல்பின்றிப் புகழ் அல்ல என்று பாடிய புலவர் சோழனின் வள்ளல் தன்மைக்குக் காரணமே சிபிச் சக்கரவர்த்தியின் மரபில் வந்ததால் என்று கூறுகிறார். இதே பாடலில் (புறம். 39) விண்ணில் அவுணர்களால் அமைக்கப்பட்ட அரண்களைச் சோழ மன்னன் ஒருவன் அழித்தான். அப்படிப்பட்ட மரபில் வந்த கிள்ளி வளவனின் போரில் வெல்லும் வீரம் இயல்பாக உள்ளது என்கிறார். ஆக ஒருவனின் குணத்தை நிர்ணயிப்பது அவனது பரம்பரை ஆகும் என்று கூறுவதற்காகப் புலவர் சிபி பற்றிய தொன்மங்களை உவமையாக்கியுள்ளதாகக் கருதலாம்.

மற்றுமொரு பாடலில் (புறம். 46) சோழன் கிள்ளி வளவன், மலையமான் மக்களை யானைக் காலால மிதித்துக் கொல்ல உத்தரவு இட்டான். இதைக் கண்ட புலவர் கோவூர்க்கிழார் புறாவின் துயர்துடைத்த சிபியின் மரபில் வந்தவனே! மெல்லிய தலையையுடைய இச்சிறுவரோ யானையைக் கண்டதும் அழுகையை மறந்தனர். மகிழ்வுடன் யானைக் கண்டு ரசித்தனர் என்று கூறுகிறார். இப்பாடலில் ஐந்தறிவு கொண்ட புறாவுக்கு அடைக்கலம் தந்த சிபியின் மரபில் வந்துவிட்டு, மலையமான் குழந்தைகளை யானைக் காலால் மிதித்துக் கொல்லும்படி ஆணையிடுவது உனக்கு அழகா? என்று மறைமுகமாக கேட்பதாகக் கொள்ளலாம். சோழனின் செயல் விரும்பத்தக்கதன்று என்பதைச் சுட்டிக்காட்ட இப்பாடலில் சிபியின் தொன்மம் பயன்படுத்தப்பட்டுள்ளதாகக் கருத இடமுள்ளது.

சோழ மன்னனின் வீரம், கொடைப் பண்பு முதலியவற்றுக்கும் கொடுமையான செயல்களை (புறம்பும்) அவன் செய்யாதிருக்கவும் சிபிச்

சக்கரவர்த்தியின் தொன்மம் பாடலில் எடுத்தாளப்பட்டுள்ளது எனலாம். ஒரு அரசனின் வீரச்செயலுக்கும் விரும்பத்தகாத செயலுக்கும் சிபியின் தொன்மத்தைக் கூறி அரசனுக்கு அறிவுரை கூறும் வழக்கம் இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தானைத் தாமப்பல் தண்ணனார் பாடிய பாடலிலும் (புறம். 43) சிபி மன்னன் தொன்மம் பேசப்படுகிறது.

மாவளத்தானும் கண்ணனாரும் வட்டாடினர். வட்டுக்காய்கள் காணாமற் போனதால் கோபங்கொண்ட சோழன் காய்களைப் புலவர் மீது வீசினான். புலவர், 'நீ என்னை வருத்தினாய், புறாவின் அல்லல் தீர்த்த சோழன் மரபில் வந்தவனில்லை' என்றார். இதனால் தன் தவறை உணர்ந்து மாவளத்தான் வருந்தினான். அவன் வருத்தத்தைக் கண்டு புலவர் தவறுக்கு வருந்துவது நின் குடியின் சிறப்பு. நீ சோழ மரபினனே என்று வாழ்த்தியதாகப் பாடல் அமைந்துள்ளது.

இப்பாடலிலும் சோழ மன்னனின் நற்குணம் அவன் புறாவின் துன்பம் துடைத்த சிபியின் மரபில் வந்ததால்தான் மன்னனான உனக்கு நற்பண்புகள் அமையப்பெற்றுள்ளன என்று குறிப்பாக உணர்த்த இத்தொன்மம் பயன்பட்டிருக்கிறது எனலாம். பொதுவாக புறநானூற்றில் பேசப்பட்ட சோழ மன்னர்களின் நற்பண்புகளின் அளவு கோலாக அந்நாட்களில் சிபிச் சக்கரவர்த்தியின் தொன்மம் இருந்து வந்திருக்கிறது எனலாம்.

மற்றுமொரு புறநானூற்றுப்பாடலில் (233) வேள் எவ்வி எனனும் சிற்றரசனை வெள்ளெருக்கிலையார் பாடுகிறார்.

> ***பா அடி யானை பரிசிலர்க்கு அருகாச்***
> ***சீர்கெழு நோன்தாள் அகுதைக்கண் தோன்றிய***
> ***பொன் பினை திகிரியின் பொய்யாகியரோ*** (புறம். 233: 2-4)

இப்பாடலில் பரந்த அடியினையுடைய யானையைப் பரிசிலர்க்குக் குறைவில்லாமல் கொடுக்கும் சிறப்பினையும் வலிய முயற்சியையும் உடையவன்

அகுதை என்னும் வள்ளல். **மதுரையில் இருந்த ஒரு வள்ளல் ஏற்பார்க்கு யானை கொடுப்பவன். போர் வல்லன் இவனைப் புகழ்ந்த புலவர் கபிலர்**[39] என்று அகுதை மன்னன் குறிப்பிடப்படுகிறான். வேள் எவ்வி என்ற சிற்றரசன் போர்க்களத்தில் எதிரிகளால் மார்பில் வேல் பாய அவன் இறந்தான். புலவர் வேள் எவ்வி மேல் கொண்ட பிரியத்தால் புலவர் அகுதை எனும் வள்ளலிடம் பொன்னால் ஆன சக்கரம் இருந்தது. அகுதை மன்னனை யாரும் வெல்ல இயலாது என்ற கருத்து நிலவியது. ஆனால் ஒரு போரில் அகுதை இறந்து போனான். அதனால் அவன் வைத்திருந்த பொன் சக்கரத்தின் புகழும் பொய்யானது. அதுபோல எவ்வி மறைந்தான் என்று செய்தியும் பொய்யாகப் போகட்டும் என்கிறார்.

இப்பாடலில் அகுதை மன்னனின் தொன்மம் உவமையாக வந்துள்ளது. வேள் எவ்வி வள்ளல்தன்மையுடையவன். **ஒரு வேளாளனாகிய வள்ளல் வெள்ளெருக்கிலையார் என்னும் தமிழ்ப் புலவராற் பாடல் பெற்றவன். தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியனால் வெல்லப்பட்டவன்**[40] என வேள் எவ்வி பற்றி குறிப்பிடப்படுகிறது.

அகுதை போல வேள் எவ்வி வள்ளலாக இருந்தவன். இருவரும் புலவரால் பாடப்பட்டிருந்தனர். அகுதை மதுரையில் இருந்த வள்ளல் என்று வரலாறு கூறுகிறது. அகுதை போரிட்டு மாண்டான். வேள் எவ்வியும் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியனால் வெல்லப்பட்டான் எனும்போது அகுதையும், வேள் எவ்வியும் போர்க்களத்தில் மாண்டனர் என்பதை அறிய முடிகிறது. அதனால் வேள் எவ்விக்கு அகுதையை உவமையாக்கியது பொருத்தமானதாக அமைந்துள்ளது எனலாம்.

புறநானூற்றுப் பாடல்களுக்குப் பிறகு அரசர் தொன்மம் உவமையாக பயன்பட்டுள்ளது சிறுபாணாற்றுப்படையில் எனலாம். சிறுபாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் நல்லியக்கோடன் எனும் சிற்றரசன். இவ்வரசனிடம் பரிசு பெற்றுத் திரும்பும் சிறுபாணன் ஒருவன், வழியில் கண்ட வறுமை நிலையிலுள்ள பாணனை இவ்வரசனிடம் ஆற்றுப்படுத்துகிறான்.

நல்லியக்கோடன் சிற்றரசன் மட்டுமல்ல சிறந்த வள்ளலாக இருந்தான் என இப்பாடல்களில் சிறப்பிக்கப்படுகிறது. வறுமையில் உழன்று தன்னை நாடி வருபவர்களுக்குத் தேரையும், குதிரைகளையும், வெள்ளை எருதுகளையும், பாகனோடு யானைகளையும், அணிகலன்கள் முதலியவற்றையும் அளிக்கும் வள்ளல் இந்நல்லியக்கோடன் ஆவான். **சிறுபாணாற்றுப்படை எனும் இச்சிறந்த நூல் ஓய் நானாட்டு நல்லியக்கோடன் என்னும் வள்ளலைப் புகழ்ந்து பாடப்பட்டதாகும். இவன் இப்போதுள்ள திண்டிவனத்தைச் சார்ந்ததும் முற்காலத்தில் ஓய்மானாடு என வழங்கப்பட்டதுமான நிலப்பகுதியை ஆண்ட குறுநில மன்னனாவான். இவன் மாவிலங்கை எனும் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு செங்கோல் செலுத்திய ஓவியர் என்னும் அரசர் குடியில் தோன்றியவன். இவ்வள்ளல் கடையெழு வள்ளல்களுக்குப் பின் தான் ஒருவனே வள்ளன்மையால் அவர்களுக்குச் சமமாக விளங்கிப் பெரும்புகழ் பெற்றவன். வரிசையறிதல், வரையாது கொடுத்தல் முதலிய பரிசிலர் விரும்பும் பண்பு நலம் உடையவன்.**[41] நல்லியக்கோடன் வள்ளன்மையில் சிறந்து விளங்கியதால் நல்லூர் நத்தத்தனார், வள்ளல்கள் எழுவரையும் இவனுக்கு உவமையாகச் சொல்கிறார்.

வள்ளல்கள் எழுவராக பாரி, ஓரி, காரி, ஓய், அதிகன், நள்ளி, பேகன் முதலியோர் ஆவர். வள்ளல்தன்மை என்ற பண்பை கூறும் விதமாக நல்லியக்கோடனுக்கு இவ்வள்ளல்கள் உவமையாக வந்துள்ளனர்.

வள்ளல்களின் பாரி தன் தேரைத் தடுத்த முல்லைக் கொடிக்கு, தன் தேரையே கொடுத்தான். பேகனோ குளிரால் வாடும் மயிலுக்கு இரக்கமுற்றுப் போர்வையைத் தந்தான். ஆக, மனிதரல்லாதவற்றுக்கும் (முல்லைக்கொடி, மயில்) கொடையளித்த பாரியும், பேகனும், தன்னை நாடி வந்தவர்க்கு அருளும் நல்லியக் கோடனுக்கு உவமையாக்கியிருப்பது நல்லியக்கோடனின் வள்ளல் தன்மை மிகச் சிறப்புடையது என்ற எடுத்துக்காட்டுவதின் நோக்கமாக இவர்கள் (பாரி, பேகன்)

உவமை வரிசையில் இடம்பெற்றிருக்கலாம்.

அதியமான் தனக்குக் கிடைத்த அரிய சக்தியுடைய நெல்லிக்கனியைத் தான் உண்டு தனக்கு ஆயுளை கூட்டிக் கொள்ளலாமல், ஔவைக்கு கொடுத்தத் தன்னலமற்ற பண்பாளன் எனலாம்.

ஆய் எனும் வள்ளல் கூட தனக்குக் கிடைத்த ஒளிமிக்க நீலமணியினையும், நாகத்தால் தாம்பெற்ற கலிங்கத்தையும் விருப்பத்தோடு இறைவனுக்குக் கொடுத்தான். இவர்கள் இருவரையும் நல்லியக்கோடனுக்கு உவமையாக்கி யிருப்பது, அவனை உயர்த்திச் சொல்வதற்கு எனலாம். ஏனெனின் உவமையின் விதிப்படி, 'உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும்' (பொருளதிகாரம் - உவமையியல் - நூற்பா. 8) உவமையும் பொருளும் படிப்பவர், கேட்பவர் ஏற்குமளவுக்கு ஒத்து இருக்க வேண்டும். தமக்குத் தோன்றியவற்றை-யெல்லாம் உவமையாகக் கூறாது எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்புடையன என உலகத்தார் ஒத்துக் கொள்ளத்தக்கவற்றை உவமையாகக் கூறுதல் வேண்டும் என வெள்ளை வாரணனார் அந்நூற்பா விளக்கத்தில் கூறுகிறார். இதை வைத்து ஆராயும்போது நல்லியக்கோடனின் கொடைத் தன்மைக்கு உவமையாக மிக உயர்ந்த தன்னலமற்ற கொடைச் சிறப்புடையவர்கள் ஆய், அதியமான் ஆகியோர் கூறப்படுவது நல்லியக்கோடனுக்குச் சிறப்பைச் சேர்க்கின்றது.

நல்லியக்கோடன் தன்னிடமுள்ளவற்றைத் தன்னை நாடி வருபவர்களுக்கு ஈந்தான். ஆனால் ஆயும், அதியமானும் தமக்கு எதிர்பாராதவிதமாகக் கிடைத்த அரிய சக்திபடைத்த நீலமணியையும், கலிங்கத்தையும், நெல்லிக்கனியையும் பிறருக்குக் கொடுத்தனர். இன்னும் சொல்லப்போனால் தன்னிடம் எதையும் நாடி வராதவர்களான இறைவனுக்கும், ஔவைக்கும் நீலமணியையும், நெல்லிக்கனியையும் ஈந்தது. மிகச் சிறந்த வள்ளல்தன்மைக்கு சிறந்த எடுத்துக்காட்டு எனலாம். ஆயும், அதியமானும் நல்லியக்கோடனுக்கு உவமையாக வந்திருப்பதின் நோக்கம் என்னவெனில், **ஒரு செய்தியைச் சொல்லும்போது**

*அதனைக் கேட்பவர் நன்றாக, தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகவும், ஒரு பொருளை எழுதும்போது அதைப் படிப்பவர் மனத்தில் அப்பொருள் நன்றாகப் பதிய வேண்டும் என்பதற்காகவும் சொல்பவரும் எழுதுபவரும் உவமையைக் கையாளுகின்றனர். உவமை என்பவள் ஒரு திறம்பட்ட நடிகை அவள் பல்வேறு கோலம் புனைந்து இலக்கியம் என்ற அரங்கில் பாங்குற நடிக்கக் கூடியவள் என்று பரிதிமாற் கலைஞர் கூறுவார்.*[42]

மேற்கண்ட கருத்துக்கேற்ப நல்லியக்கோடனின் வள்ளல்தன்மையை செம்மையாகக் கூறப் புலவர் வள்ளல்களின் தொன்மத்தை உவமையாகக் கையாண்டிருக்கின்றார். இவ்வள்ளல்களில் நல்லியக்கோடனின் ஒத்த சிறப்பியல்புகள் கொண்டவர்களாக காரி, நள்ளி, ஓரி போன்ற வள்ளல்களைக் குறிப்பிடலாம். இவர்கள் மூவரும் இரவலர்க்கு வேண்டிய அளவு கொடை அளித்தவர், தன்னை நாடி வந்தவர் மனம் மகிழ அவர் இல்லத்திற்கு இயன்ற பொருள்களைக் குறிப்பறிந்து நல்கியவர், குரிய மலைகளை உடைய நாடுகளைக் கூத்தாடுவார்க்குக் கொடுத்தவர். இவர்களைப் போலவே நல்லியக்கோடனும் கொடை வழங்கியவன் என்று இச்சிறுபாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் நல்லியக்கோடனின் சிறப்புகள் சொல்லப்பட்டுள்ளன. அதோடு நல்லியக்கோடனுக்கு உவமையாக கடையேழு வள்ளல்களின் தொன்மம் பயன்படுத்தியது ஒரு மன்னன் தன்னை நாடி வருபவர்க்கு மட்டுமல்லாது, புலவரிடத்தும் இசைக் கலைஞர்களிடத்தும், அஃறிணைப் பொருள்களிடத்தும் இரக்கம் காட்டுதல், இறைவனிடம் பக்தி செலுத்துதல், தன்னலமற்ற பண்புடன் இருத்தல் போன்ற பண்புகள் அரசனுக்கு இருக்க வேண்டும் என்று வலியுறுத்துவதற்கும் அத்தகைய மன்னர்கள் அக்காலத்தில் இருந்தனர் என்பதை எடுத்துக்காட்டும் நோக்கமாகவும் வள்ளல்களின் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன எனலாம்.

பதிற்றுப்பத்து இலக்கியம் சேர அரசர்களைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற இலக்கியமாகும். இதன் நான்காம் பத்தில் காப்பியாற்றுக் காப்பியனார் எனும் புலவர் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் எனும் சேர மன்னனைப் புகழ்ந்து பாடுகிறார். பாடல் வரிகளாவன,

**தூங்கு எயிற் கதவம் காவல் கொண்ட**

**எழூஉ நிவந்தன்ன, பரேர் எறுழ் முழவுத் தோள்** (31: 18-20)

என்று அமைந்துள்ளது. இப்பாடலில் வண்டன் எனும் ஒரு சோழ மன்னனின் தொன்மம் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளது. தேவர்களுக்கு அஞ்சித் தம்மை பாதுகாத்துக் கொள்ள அசுரர்கள் அமைத்த மூன்று அரணங்களை வண்டன் எனும் சோழன் அழித்தான். அரணங்கள் என்பது கோட்டைகள் என்று அகராதியில் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. 'அரணங்களை அழித்த பருத்த வலிமையுடைய முழவினை ஒத்த தோள்களை உடையவனும், புகழைத் தன்னிடத்தே நிறுத்தியவனும், பல்வகைச் செல்வங்களை உடையவனுமாகிய வண்டன் என்ற கொடை வள்ளலைப் போன்றவன் நீ' என்று புலவர் சேர மன்னனை வாழ்த்துகிறார்.

சேரமன்னனின் சிறப்பைக் கூற மேற்கண்டத் தொன்மம் உவமையாக எடுத்தாளப்பட்டதின் நோக்கத்தை ஆராயும்பொழுது கீழ்காணும் கருத்துகள் அறியப்படுகின்றன.

1. மன்னன் என்பவன் கொடைக்குணம் மட்டுமின்றி வீரத்திலும் சிறந்து விளங்க வேண்டும் என்பது.

2. மன்னர்களின் தோள் வலிமை, வீரம் வானுலகத்திலுள்ள தேவர், அசுருடன் ஒப்புமைப்படுத்தப்பட்டிருப்பது அக்கால மன்னர்களின் வீரத்தின் சிறப்பைக் காட்ட எனலாம்.

3. சேரனைப் புகழ்ந்து பாட சோழ மன்னனை உவமையாக்கியிருப்பது புலவர்களைப் பொறுத்தவரை சிறந்த மன்னர்கள் யாராயிருந்தாலும் சேர, சோழ, பாண்டியர் என்று பாகுபாடு பாராமல் புகழ்ந்து பாடப்படுவர் என்பது.

புலவர் தொன்மைத்தை உவமையாகக் கையாண்டதின் மூலம் மேற்கண்ட கருத்துகளை அறிய முடிகின்றது எனலாம்.

சேரமன்னரின் வீரத்திற்குச் சிறப்புச் சேர்க்க சோழமன்னன் என்று பொதுவாக குறிக்கப்பட்டுள்ளது. தூங்கெயில் எறிந்த தொன்மம் உவமையாகப் புறநானூறு (39), சிறுபாணாற்றுப் படை (80-81) ஆகிய நூல்களிலும் தொடிதோட் செம்பியன் என்ற பொதுப் பெயரில் குறிப்பிடுகிறது. புறநானூற்றைத் தவிர பதிற்றுப்பத்து, சிறுபாணாற்றுப் படை, இவற்றில் சேர மன்னனுக்கும், சிற்றரசனுக்கு உவமையாகச் சோழ மன்னர் தொன்மம் உவமையாக்கப் பட்டிருப்பது சிறப்பு எனலாம். சேர மன்னன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கு உவமையாகச் சோழ மன்னனின் தொன்மம் உவமையாக வந்ததின் நோக்கம் புலவரின் பரந்துபட்ட மனம் என்று கூறலாம். அக்காலத்துப் புலவர்கள் சாதனை படைத்த மன்னர்கள் அனைவரையும் புகழும் குணமுடைவராயிருந்தனர் எனபது தெரிகின்றது. சேரர்களும் சோழர்களைப் போலவே போரில் வென்று நாட்டை ஆண்டனர். **தூங்கெயில் எறிந்த செம்பியன் சிறந்த வீரன் என்பது சங்க காலப் புலவர் கருத்து. இவனை நினைவூட்டித் தம் சோழ அரசர்க்கு வீரவுணர்ச்சி ஊட்டல், அப்புலவர் வழக்கமாக இருந்தது.**[43]

வீரத்தை சிறப்பாகக் கூற இத்தூங்கெயில் எறிந்த அரசர் தொன்மம் உவமையாக வந்துள்ளது என்று அறிய முடிகிறது. சோழ மன்னன் போன்று சேரன் களங்காய் நார்முடிச் சேரலும் தன் ஆட்சிக் காலத்தில் போரில் வெற்றி கண்டவன் என்பது கீழ்க்காணும் கருத்தாகத் தெரிகிறது என்பது **நார்முடிச் சேரல் நெடுமிடல் அஞ்சியை வென்று அவனது நாட்டை கைப்படுத்திக் கொண்ட** வரலாறு

***உள்ளது. இவ்வரசன் காலத்தில் இவனுடைய தலைநகரில் போர் அவை (Military Academy) இருந்ததாக கூறப்படுகிறது. போர் துறைகளாவன மற்போர், விற்போர், வாட்போர், வேற்போர், மழுப்போர், தேர், குதிரை, களிறுகளை ஊர்தல் முதலியனவாம்.[44]***

சோழர், சேரர் என்று பாகுபாடு பாராமல் வீரனான சேர மன்னனுக்கு இன்னொரு வீரனான சோழ மன்னனின் தொன்மம் உவமையாக வந்ததின் நோக்கத்தை ஆராயும்போது, எந்த அரசர் என்றாலும் வீரத்தோடு சிறப்பாக ஆண்டிருந்தால் அவன் மற்ற அரசர்களக்கு உவமையாவான் என்பதை மன்னர்களுக்கு அறிவுறுத்தும் பொருட்டு புலவர் இத்தொன்மத்தைக் கையாண்டிருக்கலாம். அதோடு புலவருக்குச் சேரர், சோழர் என்ற பாகுபாடு கிடையாது. நல்ல செயல்கள் எங்கிருப்பினும் உவமையாகக் கூறப்பட்டு உயர்த்தப்படுவர் என்பதை பாடல் மூலம் அறிய முடிகிறது.

மதுரைக்காஞ்சியின் பாட்டுடைத் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். மன்னனுக்கு நிலையாமைக் கருத்துகளை கூறுவதற்காக மாங்குடி மருதனார் பாடியது இந்நூலாகும். பாண்டிய மன்னனுக்குப் பற்று நீங்கி வாழ்தலே வீடுபேறு அடையச் சிறந்த வழி என்று கூறவந்த புலவர் (202-204). பாண்டியனின் சிறப்பைக் கூறுகிறார். ஒரு பொய் கூறுவதால் தேவருலகத்தை அடையும் பேறு கிட்டுவதாயினும் அதனை விரும்பாதவன் தேவர்கள் பகைவராய் ஆனாலும் பகைக்கு அஞ்சாதவன். தென்திசை நிலத்தில் உள்ள மலைகள் எல்லாம் நிறையும்படி வாணன் என்ற சூரன் வைத்துள்ள சீரிய பொருள் திரளைப் பெறுவதாயினும் பிறர் கூறும் பழி நமக்கு வருமென்று நீ விரும்பமாட்டாய் என்று புலவர் பாடுகிறார்.

இப்பாடலில் வாணாசுரனின் தொன்மம் உவமையாக வரவில்லை எனினும், பாண்டிய மன்னனின் பண்பைப் படிப்பவர் எளிதில் புரிந்து கொள்ளக் கருவியாக

இத்தொன்மம் வந்துள்ளது எனலாம். *வாணாசுரன் பல சாஸ்திரங்களைப் பெரியவர்களிடம் கேட்டு வருகையில் சிவலிங்க மகிமையையும், சிவ பூஜா விசேஷங்களையுங் கேட்டு சிவபூஜை செய்ய விரும்பி சிவபெருமானை நோக்கிப் பலநாள் தவஞ் செய்தனன். இவன் தவத்திற்கு வந்த சிவபெருமான் வேண்டிய வரமளித்தார். வானாசுரன் சிவ பூசை செய்து பல கோடி காலம் எல்லாப்போகங்களையும் அனுபவித்தான்.*[45] தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பல சிற்றரசர்களை வெற்றி கொண்டவன் தலையாலங்கானம் எனும் இடத்தில் ஏழு அரசர்களுடன் போரிட்டு வெற்றி கண்டவன் என்று வரலாறு கூறுகிறது. இவன் *சமணரைப் பேணியவன். இவனைப் பற்றிய செய்திகள் மீனாட்சிபுரம் தாமிழிக் கல்வெட்டுகளால் அறியப்பெறுகின்றன. வானநூல் அறிஞரான நந்தி என்னும் சமணப் பெரியாருக்கு இந்த நெடுஞ்செழியன் மலைக்குகையில் கற்படுக்கைகளைச் சமைத்துக் கொடுத்தான் என்ற செய்தியை இக்கல்வெட்டால் அறிய முடிகிறது.*[46] இம்மேற்கோளின்படி பாண்டிய மன்னன் சமண சமயத்தை ஆதரித்தவன் என்பது புலனாகின்றது.

சமணக் கொள்கையில் முக்கியமானது ஆசை கூடாது என்பது. அதன்படி இப்பாண்டிய அரசன் ஆசையற்றவனாக இருந்திருக்கலாம். கெட்ட வழியில் நடக்காமல் ஒழுக்கத்தை கடுமையாகக் கடைப்பிடிப்பவர்கள் சமணக் கொள்கையைப் பின்பற்றுபவர்களாக இருந்துள்ளனர். பாடலில் புலவர் கூறுவதுபோல வாணாசுரனின் செல்வம் கிடைத்தாலும் பிறர் பழி ஏற்காதவன் என்ற கூற்று பாண்டிய மன்னனின் கொள்கைச் சிறப்பைக் காட்ட இத்தொன்மம் பயன்பட்டிருக்கலாம்.

தமிழர் பண்பாட்டின் கருவூலமாக இருப்பது அக இலக்கியங்கள் எனலாம். புற இலக்கியங்கள் அரசருக்கும், வாழ்வியல் நெறிகளுக்கும் வழிகாட்டுகிறது. அக இலக்கியம் களவு பற்றியும், களவு வாழ்க்கையின் நெறிமுறைகள் பற்றியும், கற்பு

வாழ்வு பற்றியும், கற்பு வாழ்வில் ஆடவர், மகளிரின் கடமைகள் பற்றியும் வழிகாட்டுகிறது எனலாம். உலக வாழ்க்கை என்பது இல்லறத்தை தன்னையே நிலைக் களமாகக் கொண்டது. இல்லறம் என்பது கற்பு வாழ்க்கையாகும். இவ்வாழ்க்கையில் ஆணும், பெண்ணும் பின்பற்ற வேண்டிய நெறிகளை இலக்கியம் கூறுகிறது. இச்சங்க இலக்கியங்களில் இடம்பெற்ற அகத்திணை நூல்களின் மூலம் தமிழர் பண்பாட்டை அறிவதோடு, அன்றைய வாழ்வில் நடைபெற்ற நிகழ்வுகளையும் அறியமுடிகிறது எனலாம்.

இந்த அக இலக்கியத்தில் அரசர் தொன்மம் உவமையாக வந்திருப்பது நற்றிணையில் (216) மட்டும் எனலாம். அதுவும் ஒரு பாடலில் மட்டும் இடம்பெற்றுள்ளது. தலைவன் மேல் கொண்ட அன்பால் பரத்தை கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. தலைவனை அடைய முடியாவிடினும், அவர் ஊரில் இருக்கும்போது அவரைக் கண்டு மகிழ்ந்த பரத்தை, தலைவன் ஊரைவிட்டுச் சென்றதற்கு வருந்துகிறாள். கண்ணில் விழுந்த தூசியை கைவிலக்குவது போல தான் கொண்ட துன்பத்தைத் தலைவர் போக்காவிடினும் அவர் இல்லாத ஊர் பெருந்துன்பத்தைச் செய்கிறது. கணவனை இழந்த திருமாவுண்ணி (கண்ணகி) தன் மார்பகத்தை அறுத்து எறிந்தாள். இச்செய்தி கேட்டவர்கள் கேட்ட அளவிலே விட்டுவிடுவர். ஆனால் அவள் மேல் உண்மையான அன்பு உடையவர் மட்டும் அவள் நிலைக்கு வருந்துவார்கள். அதுபோல தலைவன் பிரிவால் தலைவி வருந்தினாலும், தன்னைப் போல துயரம் கொண்டிருக்கமாட்டாள் என்று கூறுவதாகப் பாடல் முடிகிறது. அப்பாடலாவது

> ***ஏதிலாளன் கவலை கவற்ற***
> ***ஒரு முலை அறுத்த திருமாவுண்ணிக்***
> ***கேட்டோர் அனையர் ஆயினும்***
> ***வேட்டோர் அல்லது பிறர் இன்னாரே*** (நற். 216: 7-10)

இப்பாடலில் கண்ணகியின் தொன்மம் உவமையாக இடம்பெற்றுள்ளது பொருத்தம் எனலாம். ஆனால் ஒரே ஒரு முரண்பாடு கண்ணகியை உவமை காட்டி தலைவிப் பாடுவதாகப் புலவர் கூறவில்லை. ஒரு பரத்தை பாடுகிறாள். கண்ணகியும் தலைவனை இழந்து நிற்கிறாள். பரத்தையிடமும் தலைவன் இருக்கவில்லை. அயலான் செய்த செயலால் கண்ணகி வருத்தம் மேலிட மார்பகத்தை அறுத்து எறிந்தாள். பரத்தையின் வாழ்விலும், விதி செய்த செயலால் தலைவனை இழந்து வருந்தி வாடுகிறாள். பரத்தையின் துயரத்தினை நன்கு விளக்கும் முகமாகப் புலவர் திருமாவுண்ணி தொன்மத்தை உவமையாக எடுத்தாண்டுள்ளார் எனலாம்.

## தொகுப்புரை

இந்த இயலில் இதிகாசத் தொன்மங்கள் புராணத் தொன்மங்கள், பழமரபுக் கதைகள் (அரசர் தொன்மங்கள்) இவை உவமையாகப் பயன்பட்டதின் நோக்கங்கள் ஆராயப்பட்டன. இதிகாசம் எனும் போதும் மகாபாரதமும், இராமாயணமும் ஆகும். இவ்விதிகாசங்களின் நிகழ்ச்சிகள் புற இலக்கியத்திலும் அக இலக்கியத்திலும் உவமையாகப் பயன்பட்டுள்ளது. புற இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவனுக்கும், குறிப்பிட்ட இடத்தில் காணப்படும் காட்சிக்கும் கொடைத் தன்மைக்கும் விளக்கமாக இதிகாசத் தொன்ம உவமைகள் பயன்பட்டுள்ளன. அக இலக்கியத்தில் சூழலுக்கு உவமையாக வந்து களவு வாழ்க்கையின் தன்மையை எடுத்துக்காட்ட இதிகாச உவமைகள் பயன்பட்டுள்ளன.

புராணத்தொன்மங்கள் சிவன், திருமால், முருகன் எனப் பிரிக்கப்பட்டு புற, அக இலக்கியத்திற்கு உவமையாக வந்துள்ளன. இதுவும் அரசருக்கும், களவு வாழ்க்கையில் சூழலுக்கும், தலைவனின் சிறப்பைக்கூறும் நோக்கமாகவும் பயன்பட்டுள்ளது. அதிலும் சிவன் பற்றிய தொன்மங்கள் உவமையாக வரும் பொழுது சிவனின் திருவிளையாடல்களை மையமாகக் கொண்டு உவமையாகப்

பயன்படுகிறது. சிவன் தொன்மம் உவமைகளாக அதிக அளவில் கலித்தொகையிலும், மிகக் குறைந்த அளவாக சிறுபாணாற்றுப்படையிலும் வந்துள்ளன.

அரசனின் சிறப்புக்கும், அவன் பண்புக்கும் சிவனின் முக்கண்ணும், சிவன் முப்புரம் எரித்தலும் (புறநானூற்றில்) உவமையாக வந்துள்ளன. புறநானூற்றைப் பொறுத்தவரை உவமையாகப் பாண்டியன் இலவந்திகைக்கும் அதியமானுக்கும் சிவன் தொன்மம் வந்துள்ளது. கலித்தொகையில் சூழலுக்கும், ஏறு தழுவுதலுக்கும் உவமையாக்கப்பட்டுள்ளது.

திருமால் தொன்மம் உவமையாக மன்னனின் சிறப்புக்கு வந்துள்ளது. பெரும்பாலும் திருமால் தொன்ம உவமைகளில் பலராமன் தொன்மம் அதிகம் வருகிறது. பொதுவாகப் புராணத் தொன்மங்களான சிவன், திருமால், முருகன் ஆகிய தொன்மங்கள் புற இலக்கியத்தில் பாட்டுடைத்தலைவனுக்கும் அக இலக்கியத்தில் சூழலுக்கும் தலைவனுக்கும் உவமையாக வந்துள்ளன. அரசர் தொன்மங்கள் பெரும்பாலும் புற இலக்கியத்தில் உவமையாக வந்துள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. ஒப்பியல் இலக்கியம், க. கைலாசபதி, ப. 109.
2. புதிய கோணம் (இலக்கியக் கட்டுரைகள்), அ.ச. ஞானசம்பந்தன்
3. வியாசர் விருந்து, ராஜாஜி, வீட்டும பருவம், முதற்போர்ச் சருக்கம், வில்லிபாரதம், ராஜகோபாலாச்சாரியார், பக். 18, 19.
4. வில்லிபாரதம், டாக்டர் ஜெகத்ரட்சகன், ப. 308.
5. பக்தி இலக்கியக் கொள்கை, முனைவர் சிவ. மங்கையர்க்கரசி, ப. 73.
6. தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், கார்த்திகேசு சிவத்தம்பி, ப. 44.
7. அபிதான சிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 72.
8. மேலது, ப. 659.
9. சங்க இலக்கியம் ஒரு கண்ணோட்டம், டாக்டர் பு. பாலாஜி, வி.பு. புருஷோத்தமன், ப. 26.
10. அபிதான சிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 825.
11. தசாவதாரம், ஏ.எஸ். வழித்துணை ராமன், ப. 136.
12. பக்தி இலக்கியக் கொள்கை, முனைவர் சிவ. மங்கையர்க்கரசி, ப. 60.
13. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 285.
14. மேலது, ப. 1050.
15. மேலது, ப. 1047.
16. மேலது, ப. 1280.
17. சங்ககாலச் சோழ வேந்தர்கள், க. சண்முகசுந்தரம், ப. 126.

18. பத்துப்பாட்டு மூலமும் உரையும், உரையாசிரியர், பொதுவன் அழகன், ப. 29.

19. மேலது, ப. 294.

20. நீங்களும் சுவையுங்கள், தெ.பொ.மீ., ப. 71.

21. சங்கத் தமிழர் வாழ்வியல், மு. சண்முகம்பிள்ளை, ப. 156.

22. ஸ்ரீகந்தபுராணம், ரா. சரஸ்வதி, ப. 138.

23. தமிழ் இலக்கியக் கொள்கை, க.த. திருநாவுக்கரசு, ப. 64.

24. தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் - அரசியல், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு.

25. மேலது, பக். 192, 193.

26. மேலது, ப. 366.

27. சங்கத் தமிழர் வாழ்வியல், மு. சண்முகம்பிள்ளை, ப. 292.

28. மேலது, பக். 295, 299.

29. செந்தமிழ் அகராதி, ந.சி. கந்தையா, ப. 217.

30. தமிழ்நாட்டு வரலாறு, பேரா. காவ்யா சண்முகசுந்தரம், பக். 790, 791.

31. முருகன் சாட்சி, டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், ப. 100.

32. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 949.

33. தெய்வீக கதைகளும் கலைகளும், எம். நாராயண வேலுப்பிள்ளை, ப.10.

34. பாவம் தீர்க்கும் பாகவதம், பக்த சிரோன்மணி திருமருகல் சிங்கார வேலனார், பக். 165, 166.

35. ஸ்ரீமஹாபாகவதம, வேணுகோபாலாச்சார்யரால் மொழிபெயர்க்கப்பட்டது, ப. 705.

36. பாண்டியர் வரலாறு, டி.வி. சதாசிவ பண்டாரத்தார், ப. 7.

37. சோழர் சரித்திரம், ந.மு. வேங்கடசாமி நாட்டார், பக். 26, 27.

38. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 644.

39. மேலது, ப. 7.

40. மேலது, ப. 1519.

41. சங்க இலக்கியம், சிறுபாணாற்றுப்படை, புலவர் கோ. வில்வபதி, பக். VIII, X.

42. இலக்கிய மணிகள், புலவர் அரங்கநடராசன், ப. 47.

43. தமிழ்நாட்டு வரலாறு, தொகுப்பாசிரியர் பேரா. காவ்யா சண்முகசுந்தரம், ப. 486.

44. சேரர் வரலாறு, அ. சிதம்பரனார், திருமந்திரமணி துடிசைக்கிழார், பக். 68, 69.

45. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 1075.

46. சங்க காலத் தமிழக வரலாறு, மயிலை சீனி வேங்கடசாமி, ப. 157.

# தொன்ம உவமைகள் பயன்பாட்டின் நோக்கம்

தொன்மங்கள் இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் என்ற வகைகளாகச் சொல்லப்படுகின்றன. பழமரபுக்கதைகள் கதைகளாகவும் இதிகாசமும், புராணமும் கதைகளாகவும், செய்திகளாகவும் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. தொன்மங்கள் இடம்பெற்றதின் நோக்கம் மக்களுக்குச் செய்திகளைத் தெரியப்படுத்துவது ஆகும். தொன்மங்கள் கதை வடிவில் உவமைகளாக இலக்கியத்தில் இடம்பெறும்பொழுது, அவை கூறும் செய்திகளின் நோக்கத்தை ஆராய ஏதுவாகின்றது.

தொன்மங்கள் உவமைகளாகப் பாடலின் சூழலுக்கும், பாத்திரத்திற்கும் பயன்பட்ட விதத்தை வைத்து புலவரின் அறிவு நுட்பத்தையும், அவர் கூற விரும்பும் கருத்தையும் அறிய முடிகின்றது. பாடலின் நிகழவுக்கும், அதிலுள்ள பாத்திரங்களுக்கும் தொன்ம உவமைகள் பொருத்தமாக இருப்பதை வைத்து நோக்கம் இதுவாகயிருக்கலாம் என ஈண்டு ஆராயப்படுகின்றன.

இந்த இயலின் உட்தலைப்புகளாக இதிகாசம், புராணம், பழமரபுக்கதைகள் என்று பிரிக்கப்பட்டு அவை உவமைகளாகப் பயன்பட்டதின் நோக்கம் ஆராயப்படுகின்றன.

### இதிகாசத் தொன்மங்கள் – நோக்கம்

இராமாயணமும், பாரதமும் இதிகாசத் தொன்மங்களாகும். இதிகாசம் என்பது உண்மையில் நடந்த நிகழ்வுகளா? புனைந்துரைக்கப்பட்டதா? என்ற கருத்துகள் ஒருபுறமிருக்க இதிகாசம் இலக்கிய வழி கூறவிரும்பும் கருத்துகளை அறிய முடிகிறது. **இதிகாசத்தொன்மங்கள் பெரும்பாலும் இல்பொருட் கதைகளே! கற்பனையே அவற்றின் அடிப்படை ஆயினும், மனிதனது சில**

***சிந்தனைகள், இலட்சியங்கள், நம்பிக்கைகள் ஆகியவற்றின் திரண்ட உருவச் சின்னமாக அவை மிளிர்கின்றன.***[1] என்பதால் அக்கால மனிதனின் சிந்தனைக் கடத்தியாக இதிகாசம் தொன்மங்கள் இருந்துள்ளன. அன்றைய காலத்தின் நடைமுறையைப் புலவர் தன் படைப்பின்வழி வெளிப்படுத்துகிறார். இதிகாசத் தொன்மங்கள் புலவர் கூற விரும்பும் கருத்துக்கு மேலும் செறிவைக்கூட்டுகின்றன எனலாம்.

இதற்கு கலித்தொகைப் பாடலில் அமைந்துள்ள இதிகாசத் தொன்மைத்தைச் சான்றுகாட்டலாம் தலைவன், தலைவியை பிரிந்து செல்லவிருக்கிறான். தோழி, தலைவன் கடந்து செல்லும் சுரத்தின் காட்சியைக் கூறி, இப்படிப்பட்ட சுரத்தைக் கடந்து செல்லும் தலைவனே என்கிறாள், இப்பாடலில் சுரத்தின் காட்சிக்கு மகாபாரதத் தொன்மத்தை உவமையாக்குகிறார். அழல் சூழ்ந்த இடத்திலிருந்து யானை தன் கூட்டத்தோடு வெளியேறுகிறது. இக்காட்சி

***ஒள்ளூரு அரக்கில்லை வளிமகன் உதைத்துத்தன்***
***உள்ளத்துக் கிளைகளோடு உயப்போடு வான் போல*** (கலி 25: 7-8)

என்கிறார் புலவர். அதாவது துரியோதனன் சூழ்ச்சியால் தீ வைக்கப்பட்ட அரக்கு மாளிகையிலிருந்து தன் சுற்றத்தோடு வெளியேறிய யானை வீமன் போன்றிருந்தது அந்த யானை என்கிறார் புலவர். யானையின் செயலுக்கு வீமனின் செயலை உவமையாக்குகிறார் வீமனின் செயல் பற்றிய உவமையை யானைக்குக் கூறினாலும் இவ் வீமன் தொன்மம் பயன்படுத்தப்பட்டத்தின் நோக்கங்களாகக் கீழ்க்காணுபவற்றைக் குறிப்பிடலாம்.

1. களவு வாழ்க்கை என்பது காட்டைப் போன்றது. கொடிய மிருகங்களும், கரடு முரடான முட்பாதைகளும், ஆறலைக் கள்வர்களும் நிறைந்த பகுதியே காடாகும். காட்டில் வாழ்வது என்பது பல இன்னல்களைத் தந்து மீளாத துயரில் ஆழ்த்திவிடும். இது போல களவு வாழ்க்கை, பிரிவு, அலர் போன்ற துன்பங்கள் நிறைந்தது. இத்தகைய களவு வாழ்வு என்பது காட்டைப் போன்றது என்பதை

புலவர் குறிப்பால் உணர்த்துகிறார் எனலாம். களவு வாழ்க்கையின் தன்மையை விளக்க காடு பற்றிய செய்திகள் உதவுகின்றன.

2. வீமன் அழலிலிருந்து மீண்டு தன் சுற்றத்தோடு வெளியேறுகிறான். அதுபோல தலைவன் மற்றவர் கூறும் அலர் மொழியிலிருந்து மீண்டு தலைவியோடு மணம் புரிய வேண்டும் என்பதைத் தோழியின் கூற்றாய் புலவர் குறிப்பால் உணர்த்த இப்பாரத தொன்மத்தை மிகப் பொருத்தமாய் உவமையாக்கியுள்ளார் எனலாம். ***அகத்தில் இருக்கும் சிறப்பு என்னவென்றால் எதனையும் வாய்திறந்து பட்டவர்த்தனமாக வெளிப்படையாகச் சொல்லும் மரபு இல்லை. சுட்டி உணர்த்தும் முறைமையே உண்டு. அகத்தில் வரும் கூற்றுகள் எல்லாவற்றிலும் இப்பண்பைக் காணலாம். அகத்துக்குரிய விடயங்களை இயற்கைப் பின்புலத்திலே வைத்துச் சூசமாகச் சொல்வார்கள். உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிகென அமைக்கும் முறைதான் உள்ளுறை***[5] இம் மேற்கோள் சுட்டுவதுபோல தொன்மங்கள் உள்ளுறுத்து கூறுவதற்காகப் பயன்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

அடுத்ததாக இராமாயணத் தொன்மம் உவமையாகப் பயின்று வரும் சங்க இலக்கியப் பாடல் ஒன்றைக்காணலாம் மன்னன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியின் கொடைச் சிறப்பைக் கூறுகின்றது. இம் மன்னனிடம் பெருஞ்செல்வம் பெற்ற புலவன் பாடுவதாகப் பாடல் அமைந்துள்ளது. புறநானூற்றில் (378) வரும் இப்பாடலில் புலவரின் சுற்றத்தார் மன்னனிடமிருந்து பெற்ற பொன் ஆபரணங்களை எங்கு அணிவது என்று அறியாமல் விரலில் அணிபவற்றைச் செவியிலும், செவியில் அணிபவற்றைக் கழுத்திலும் அணிந்தனர். இக்காட்சிக்கு இராமாயணத் தொன்மத்தை உவமை கூறுகிறார்.

> ***கடுந்தெறல் இராம னுடன்புணர் சீதையை***
> ***வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை***
> ***நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்***

**செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தா அங்கு**
**அறாஅ அருநகை இனிது பெற்றிகுமே** (புறம், 378: 18-22)

என்கிறார் புலவர். சீதையை அரக்கன் இராவணன் கவர்ந்து சென்ற போது, தான் போகுமிடத்தை இராமனுக்குத் தெரிவிப்பதற்காகச் சீதை தன் அணிகலன்களை நிலத்தில் எறிந்தாள். அந்த அணிகலன்களைக் கண்டெடுத்த சிவந்த முகத்தையுடைய மந்திக் கூட்டம் அவ்வணிகலன்களை எங்கு அணிவது என்று அறியாமல் காதில் அணிவதைக் கழுத்திலும், கழுத்தில் அணிவதைக் கையிலும் மாற்றி மாற்றி அணிந்தது போலிருந்தது புலவரின் சுற்றத்தாரின் செயல் என்கிறார்.

இத்தொன்மத்தை உவமையாகப் புலவர் பயன்படுத்தியதின் நோக்கங்கள் கீழ்காணுமாறு.

1. குரங்குக் கூட்டத்திற்கு அணிகலன் பற்றிய அறிவு கிடயாது. அதே போன்று புலவரின் சுற்றத்தாரும் ஏழ்மை நிலமையில் உழன்றதால் பொன்னால் ஆன அணிகலன்கள் பற்றி அவர்களும் அறியாமல் இருந்தனர் எனக் கொள்ளலாம்.

2. குரங்குகள் கூட்டமாக வாழும் பண்புடையன, அதுபோல புலவரின் சுற்றத்தாரும் ஒன்றாகக் கூடி வாழ்ந்துள்ளதால் தொன்மம் பொருத்தமாக ஆளப்பட்டுள்ளது எனலாம்.

3. சீதை வீசிய அணிகலன்கள் இராவணனிடமிருந்து இராமன் தன்னைக் காப்பாற்றுவான் என்ற நோக்கத்தில் போடப்பட்டன அதே போன்று ஏழ்மை எனும் அரக்கன் பிடியிலிருந்து புலவரின் சுற்றத்தைக் காக்க மன்னனால் அணிகலன்கள் அளிக்கப்பட்டன என்ற வகையிலும் இத்தொன்மம் பொருத்தமாக ஆளப்பட்டுள்ளது. புலவரின் சுற்றத்தாரின் வறுமையைச் செம்மையாகப் பதியச் செய்யப் புலவர் இந்த இராமாயணத் தொன்மத்தை மிகப் பொருத்தமாக உவமையாக்கிருக்கிறார் எனலாம்.

மற்றொரு இராமாயணத் தொன்மம் உவமையாகப் பயின்று வரும் பாடல் கலித்தொகையில் (38) காணப்படுகிறது. களவு வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களைக் கூறி, தலைவியை விரைவில் மணம் புரியுமாறுத் தோழி கூறுகிறாள். இப்பாடலில் புலவர், தலைவனின் நாடு எப்படிப்பட்ட காட்டை உடையது என்று தோழி வாயிலாக நிறுவுகிறார் யானையின் பார்வைக்கு வேங்கை மரம் புலி வடிவம் போன்றிருந்தது. அதனால் மரத்தின் அடிப்பகுதியில் தன் கொம்பைக் குத்தி அதை வாங்கமாட்டாது காடே அதிரும்டி ஒலி யெழுப்பும் காட்டை உடைய மலை நாடனே என்கிறார். யானையின் இச்செய்கைக்கு இராவணன் தொன்மத்தைப் புலவர் உவமையாக்கியுள்ளார்.

இறைவனும் இறைவியும் அமர்ந்திருக்கும் இமயமலையை, பத்து தலையையுடைய இராவணன் அம்மலையின் கீழ் தன் கைகளைச் செருகி எடுக்க முடியாமல் திணறியது போலிருந்தது யானை வேங்கை மரத்தடியில் தன் கொம்பைக் குத்தி நின்ற காட்சி என்கிறார் இதைப் பாடலில் கூறும்பொழுது,

> **இமையவில் வாக்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
> **உமையமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக**
> **ஐயிரு தலையின் அரக்கர் கோமான்**
> **தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத்து – அம்மலை**
> **எடுக்கல் செல்லாது உழப்பவன் போல**
> **உறு புலி உருஏய்ப்பப் பூத்த வேங்கையைக்**
> **கனுவுகொண்டு அதன் முதல் குத்திய மதயானை**
> **நீடு இருவிடர் அகம் சிலம்பக் கூய், தன்**
> **கோடு புய்க்கல்லாது, உழக்கும் நாட! கேள்!**
> **ஆர் இடை என்னாய் நீ அரவு அஞ்சாய் வந்தக்கால்**
> **நீர் அற்ற புலமே போல் புல்லென்றாள், வைகறை**
> **கார்பெற்ற புலமே போல் கவின் பெறும்: அக்கவின்**
> **தீராமல் காப்பது ஓர்திறன் உண்டேல், உரைத்தைக்கான்.**

என்கிறார். இப்பாடலில் தொன்ம உவமை பயன்படுத்தியதின் நோக்கத்தை ஆராயும்போது தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களைக் கூறி, தலைவன் தலைவியைக் காண முடியாது போனால் தலைவி வாட்டமுற்று அழகு கெடுகிறாள் என்பதை

> **இருள் இடை என்னாய் நீ இரவு அஞ்சாய் வந்தக்கால்**
> **பொருளில்லான் இளமைபோல் புல்லென்றாள்,**
>
> **.................................................................................**
>
> **மறம் திருந்தார் என்னாய் நீ மலையிடை வந்தக்கால்,**
> **அறம் சாரான் மூப்பே போல் அழிதக்காள்,** (கலி. 38)

இவ்வாறு தோழி கூற்றாகப் புலவர் கூறுகிறார். இப்பாடலில் தோழி மூலமாகத் தலைவனைக் களவு வாழ்க்கையை நீட்டிப்பது கூடாது. மணவாழ்க்கை மேற்கொள்ள வேண்டும் என்பது உணர்த்தப்பட்டுள்ளது.

இராவணன் தன் பலத்தின் மேலுள்ள அதிகமான நம்பிக்கையினால் மலையினடியில் கையைச் செருகி எடுக்க இயலாமல் வருந்தினான். அதுபோல தலைவனும் தான் தலைவியின் மேல் கொண்டுள்ள அதிகமான அன்பின் காரணமாக, களவு வாழ்வில் ஈடுபட்டு பல இன்னல்களை அனுபவிக்கின்றான். களவுக் காலத்தில் இன்னல்கள் என்றால், யாரும் அறியா வண்ணம் அஞ்சி அஞ்சித் தலைவியைக் காண வருவது, இரவுநேரத்தில் ஆபத்துகள் நிறைந்த பாதையில் தலைவியைக் காண வருவது மற்றவர்கள் கேலிப் பேச்சிற்கு ஆளாதல். அதனால் தலைவி இத்செறிக்கப்படுதல், இதன் காரணமாகத் தலைவன் 'மடலேறுதல்' போன்ற துன்பங்களை அடைவது இதெல்லாம் களவுக் காலத்தில் தலைவன் தலைவி எதிர்கொள்ளும் இன்னல்களாகும், இராவணன் இமயமலைக்குள் கையைச் செருகி எடுக்க இயலாது வருந்தியது போல தலைவன் களவுவாழ்வை நீட்டித்து வருந்த வேண்டாம் என்பதைக் கூறப் புலவர் இத் தொன்மத்தைப் பொருத்தமாகப் பயன்படுத்தியுள்ளார். **தொன்மவியல் ஒரு சமுதாயத்தின் பண்பு நலனையும்,**

உள்ளத்தையும் ஆழ்ந்து ஆய்கிறது. தொன்மங்கள் – தொல்லுருக்கள் ஒரு மக்கள் கூட்டத்தின் நம்பிக்கைகளையும், அச்சங்களையும் விருப்பங் களையும் குறியீடாக எடுத்துரைக்கின்றன.[3] இம்மேற்கோளுக்கிணங்க சங்கப்புலவர்கள் தாங்கள் கூறவிரும்பும் கருத்துகளுடன் தொன்மங்களை உவமைகளாக ஆக்கி இலக்கியத்திற்கு மேலும் அழகு சேர்த்துள்ளமை தெரிய வருகின்றது. இத்தொன்மம் இராமாயணத்தில் இராவணன் சீதையிடம் சொல்லப்படுவதாக உள்ளது. அக்காலத்தில் இராமாயணத்தில் நடைபெற்றதாகச் சொல்லப்பட்ட சிறு நிகழ்ச்சியும் மக்களிடையே வாய்மொழிக் கதைகளாகப் பேசப்பட்டிருக்க வேண்டும். இதனாலேயே புலவர் இந்த இராவணன் தொன்மத்தை உவமையாகக் கையாண்டிருக்கிறார் எனலாம்.

மற்றுமொரு அகப்பாடலில் மகாபாரதத் தொன்மம் உவமையாகப் பயின்று வந்துள்ளது. கலித்தொகையில் உள்ள ஒரு பாடலில் (139) தலைவன் தலைவி ஈடுபடும் களவு வாழ்க்கையில் ஏற்படும் மடலேறுதல் என்ற வழக்கம் குறிப்பிடப்படுகிறது. மடலேறும் தலைவன், சான்றோரை நோக்கி, ‘அரசன் தான் தவம் செய்தலினின்றும் நீங்கி, துறக்கத்திற் சேரலை வழுவுதலினாலே ஆன்றோர் அவ்வழுவுதலினின்று அரசனை மீட்டுத்தவம் செய்வித்து உயர்ந்த நிலை உடைய சுவர்க்கத்திலே போகச் செய்து துயர்தீர்த்தாற் போல என் துயரத்தினது தன்மையைப் போக்குதலும் நுமது தலையாய கடனாகும்’ என்கிறான். இதையே பாடல் வரிகள்,

> **அறிந்தனிர் ஆயின் சான்றவிர் தான்தவம்**
> **ஒரீஇத் துறக்கத்தின் வழீஇ ஆன்றோர்**
> **உள்ளிடப்பட்ட அரசனைப் பெயர்த்தவர்**
> **உயர்நிலை உலகம் உறீஇ யாங்கென்**
> **துயர்நிலை தீர்த்தல் நுந்தலைக் கடனே** (கலி: 139: 33-37)

என்கின்றன. இப்பாடலில் அரசனை மீட்டுத் தவம் செய்வித்து உயர்நிலையை அடையச்செய்தது போல, தன்னையும் துயரிலிருந்து மீட்கும் படி தலைவன்

கூறுகிறான். அரசன் என்று குறிப்பிடப்படுவது பாண்டவர்களின் முன்னோர்களில் ஒருவனான யயாதி ஆவான். பாண்டவர்களின் முன்னோர்களின் வரைபடம் மூலம் கீழ்க்காணுமாறு விளக்கப்படுகின்றது.




மேற்கண்ட கலித்தொகைப் பாடலின் (139) கருத்துக்கு போவதற்கு முன் யயாதியின் தொன்மம் பற்றிய செய்திகளை அறிந்து கொண்டால், இப்பாடலின்

நிகழ்வுக்கும், தொன்மத்திற்கும் இடையே உள்ள ஒப்புமை விளங்கும். தொன்மம் பயன்படுத்தப்பட்டுள்ள நோக்கத்தையும் முழுமையாக அறிய இயலும்.

யயாதி என்ற அரசன் தன் முதல் மனைவி தேவயாணி அறியாவண்ணம் சன்மிஷ்டை என்ற பெண்ணை மனைவியாக ஏற்றுக்கொண்டு வாழ்கிறான். இச்செயல் முதல் மனைவியான தேவயாணியின் தந்தை சுக்ராச்சாரியாருக்குத் தெரிந்து விடுகின்றது. அதனால் சுக்கிரரின் சாபத்திற்கு யயாதி ஆளாகிறான். சாபத்தின்படி மூப்பு அடைந்து வருந்துகிறான். சிற்றின்பத்தின் மீது கொண்ட தீராத அவாவினால் தன் மகன் பூருவிடமிருந்து அவன் இளமையை வாங்கி யயாதி சிற்றின்பத்தில் மூழ்கினான். பின்பு சிற்றின்ப ஆசை தீராது, மேலும் மேலும் வளரும்' என்ற உண்மையைப் புரிந்துகொண்ட யயாதி, தன் மகனுக்கு இளமையை அளித்து, தன் மூப்பை வாங்கிக் கொண்டு தவம் செய்து சொர்க்கம் அடைந்தான் என்று இதிகாசம் கூறுகின்றது.

இந்த யயாதியைப் புலவர் தலைவனுக்கு (கலி. 139) உவமையாகக் காட்டுவதோடு, தலைவன் கூற்றாகவும் இதனைக் கூறுகின்றார். இப்பாடலின் தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கத்தை ஆராயும்பொழுது,

- ☆ யயாதி சிற்றின்பத்தின் மேல்கொண்ட ஈடுபாட்டினால் இன்னலுற்றான். அதேபோன்று தலைவனும் களவு வாழ்க்கையில் கொண்ட ஈடுபாட்டால் இன்னல் அடைகிறான்.

- ☆ யயாதி திரும்ப முதுமை பெற்று, தவம் செய்து சொர்க்கம் அடைந்தான். அதேபோல தலைவனும் களவு வாழ்க்கையிலிருந்து வெளிவந்து தலைவியை மணம்முடித்து இன்ப வாழ்க்கை வாழ விரும்புகிறான்.

சோதிடக் கணிப்புப்படி சுக்கிரரின் அருட்பார்வை இருந்தால்தான் ஒருவனின் இல்லற இன்பம் சிறப்பாக இருக்கும் என சோதிட சாத்திரம் மூலம் தெரிகிறது. யயாதிக்கு சுக்கிரருடைய அருட்பார்வை இல்லாது போனதால்தான் சிற்றின்ப நுகர்வுக்கு ஏற்ற இளமையை இழந்து இன்னல்களை அடைந்தான் என இதிகாசம் கூறுகின்றது.

கலித்தொகைப் பாடலிலும் (139) தலைவனும் தலைவியுடன் இல்லற வாழ்க்கை மேற்கொள்ள மடலேறுகிறான். அவ்வாறு மடலேறும் தலைவன் யயாதியைக் குறிப்பிடும் பொழுது சுக்கிரரின் அருள் இல்லறத்திற்குத் தேவை என்பதை சுட்டாமல் சுட்டவே புலவர் பாடலில் யயாதி தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்துகிறார் எனலாம். இதன் மூலம் பின்வரும் கருத்துகள் புலனாகின்றன.

1. ஒருவனுக்கு ஒருத்தி என வாழாவிடில் யயாதி பெற்ற துன்பத்தைப் பெற நேரிடும்.
2. சிற்றின்பம் என்பது நிலையற்றது. காட்டுத்தீ போல மேலும் மேலும் அதிகமாகி மனிதனை அழித்துவிடும்.
3. சுக்கிரர் அருள் கிடைக்காவிடில் ஒருவனால் இல்லறத்தில் ஈடுபட இயலாது, இதுபோன்ற கருத்துகளை களவு வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் தலைவன் மூலமாக புலவர் அறிவுறுத்த இந்த யயாதி தொன்மத்தை பயன்படுத்தி யுள்ளார் எனலாம்.

மகாபாரதத்தில் இடம்பெற்ற ஒரு பாத்திரத்தை உவமையாகக் கொண்டு பதிற்றுப்பத்தில் உள்ள ஒரு பாடல் (14) உள்ளது. இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனின் சிறப்பைக் கூற வந்த புலவர் நிலம், நீர், வளி, விசும்பு என்ற நான்கின் அளப்பு அரியையே, நாள், கோள், திங்கள், ஞாயிறு, கனை அழல் ஐந்து ஒருங்கு புணர்ந்த விளக்கத்து அனையை:

**போர்த்தலை மிகுந்த ஈர் ஐம்பதின்மரொடு**
**துப்புத்துரை போகிய துணிவுடை ஆண்மை**
**அக்குரன் அனைய கைவன் மையையே** (பதிற்றுப். 14: 1-7)

என்கிறார். துரியோதனன் முதலிய கௌரவர் நூற்றுவரும் போர் செய்வதிலே வல்லவர் ஆவர். அவர்களுக்குத் துணைவலியாகும் வகையில் இறுதிவரையில் உதவியாக இருந்தவனும் அஞ்சாமையுடையவனுமாகிய அக்குரனை யொத்த பெருங்கொடைச்சிறப்பினை உடையவன் நெடுஞ்சேரலாதன் என்கிறார் புலவர்.

கௌரவருக்கு துணையாய் நின்ற அக்குரன் என்றதால் கர்ணனாக இருக்கலாம் எனவும்; அதற்கு ஆதாரம் கிடைக்கவில்லை என்றும் உ.வே.சா. குறிப்பிடுகின்றார். அக்குரனே கர்ணன் எனக் கருத்தில் கொண்டு ஆராயும்பொழுது சேரலாதனின் வாழ்க்கை நிகழ்வுகளும் கர்ணன் தொன்மமும் ஒற்றுமையுடையதாக உள்ளதைக் காணமுடிகிறது. பதிற்றுப்பத்துப் பாடல் மூலம் சேரலாதன் பற்றிய செய்திகளும், பாரதச் செய்திகள்வழி கர்ணன் தொன்மமும் கீழ்க்கண்டவாறு அட்டவணையிடப்படுகின்றன.

| எண் | நெடுஞ்சேரலாதன் | கர்ணன் |
|---|---|---|
| 1. | போரில் போர் புரியும் வீரர்களுக்கு அவர்களைப் பாதுகாக்கும் பொருட்டு போரில் புகுந்த வீரர்களுக்கு மார்புக் கவசமாய் விளங்குபவன். | கர்ணன் கௌரவப்படைகளைக் காக்கும் பொருட்டு போர் புரிந்தான். கௌரவர்களுக்கு மிகவும் பக்கபலமாக இருந்தான் எனப் பாரதம் கூறுகின்றது. |
| 2. | தன்னைப் பாடிய புலவருக்குத் தேவை யான செல்வத்தை வழங்குபவன் இச்சேர லாதன் என்று புலவர் பாடுகிறார். | தன்னை நாடி வந்தவர்களுக்கெல்லாம் கொடை அளிப்பவன் கர்ணன். |
| 3. | சேரலாதன் போர் செய்தலை விரும்பி நின்ற வலிமையுடையவன் எனப் புலவர் பாடுகிறார். | கர்ணனும் துரியோதனுக்காகப் போரை விரும்பி ஏற்றுப் போரிடும் வலிமையுடை யவன் என பாரதச் செய்தி கூறுகின்றது |
| 4. | ஒருமுறை சேரலாதனுக்கும், சோழ மன்னன் வேல்பஃறாடைக்கைப் பெரு நற்கிள்ளிக்கும் போர் மூண்டது. நற்கிள்ளி வேற்போரில் வல்லவன் என்பது அவன் பெயரிலே உள்ளது. | "குருசேத்திரம்" எனுமிடத்தில் நடந்த பாரதப் போரில் கர்ணனும் விற்போரில் வல்லவனான அர்ச்சுனனுடன் போர் புரிந்தான் எனப் பாரதம் கூறுகிறது. |
| 5. | நற்கிள்ளியுடன் நடந்த போரில் சேரலாதன் உயிர் நீங்குகிற தருணத்தில் கழாத்தலையார் எனும் புலவர் அவனைக் கண்டு பாடி அவனது கழுத்திலிருந்த ஆரத்தைப் பரிசாகக் கேட்டார். சேர லாதன் ஆரத்தை வழங்கி மாண்டான். | போர்க்களத்தில் பாரதப்போரில் கர்ணன் உயிர் நீங்குகிற தருணத்தில் கிருஷ்ணர் அந்தணர் வடிவில் கர்ணனை யாசித்து இதுவரை அவன் செய்த புண்ணியங் களனைத்தையும் தானமாகக் கேட்டார். கர்ணன் அத்தானத்தை வழங்கி இறந்தான். இது பாரதம் கூறும் செய்தியாகும். |

ஆக சேரலாதனுக்கும் கர்ணனுக்கும் உள்ள ஒற்றுமைகளை மனதில் கொண்டு புலவர் நெடுஞ்சேரலாதனுக்குக் கர்ணனைப் பொருத்தமாக உவமையாக்கியுள்ளார். புலவர் இவ்விருவருக்கும் உள்ள பொருத்தத்தை மனதில்கொண்டு இத்தொன்மத்தை உவமையாக்கிப் பாடலுக்கு நயமும் சிறப்பும் சேர்த்துள்ளார்.

மற்றுமொரு சங்க இலக்கியப் பாடலில் மகாபாரதத்தொன்மத்தை உவமையாகப் புலவர் கையாண்டுள்ளது கீழ்க்காணுமாறு அமைகிறது.

முல்லை நிலத்தில் ஆயர்குல வழக்கமாயிருந்த ஏறு தழுவுதல் எனும் நிகழ்வை முல்லைக் கலிப் பாடல் வழியாக அறிய முடிகிறது. ஏறுதழுவுதல் என்பது ஒரு வீர விளையாட்டாகும். ஆயர் குலத்து ஆடவர்கள் தாங்கள் விரும்பும் பெண்டிரைக் காளையை அடக்கியபின் திருமணம் புரிந்தனர். பலவிதமான காளைகள் அணிவகுத்து வர, அவற்றை இளைஞர்கள் எதிர்த்து நின்று அடக்குவர். அந்த நிகழ்ச்சிகளை விளக்க புலவர்கள் இதிகாசத் தொன்மங்களைப் பல இடங்களில் உவமையாக்கி யுள்ளனர். இதற்குச் சான்றாக ஒரு சில பாடல்களைக் கூறலாம். ஒரு பாடலில் ஏறுதழுவிய பின்னர் தொழுத் தோற்றத்திற்கு பாரதப் போர்க்களத்தை உவமை கூறுகிறார் புலவர். இதை,

**புரிபு மேல் சென்ற நூற்றுவர் மடங்க**
**வரிபுனை வல்வில் ஐவர் அட்ட**
**பொருகளம் போலும் தொழுஉ** (104: 57-59)

என்ற வரிகளில் தெரிவிக்கின்றார். அதாவது ஏறுதழுவிய பின்னர் காணப்படும் தொழுத் தோற்றம் போரை விரும்பி மேலே சென்ற நூற்றுவர்கள் தோல்வி அடையுமாறு, வரிந்துக் கட்டப்பெற்ற வலிமை படைத்த வில்லினை உடைய பாண்டவர்கள் போரிட்ட போர்க்களம் போன்றிருந்தது என்கிறார். இதில் இளைஞர்களுக்கும், காளைகளுக்கும், பாண்டவர்களையும் நூற்றுவரான கௌரவர்களையும் உவமையாகக் காட்டியுள்ளார். ஏறுதழுவுதல் நடந்து முடிந்த தொழுத் தோற்றத்திற்குப் பாரதப் போர் நடந்த போர்க்களத்தை உவமையாக்கியமை பொருத்தமாக உள்ளது எனலாம்.

ஏறுதழுவுதல் எனும் நிகழ்ச்சி இன்றளவும் தென்மாவட்டங்களில் குறிப்பாக மதுரைக்கு அருகிலுள்ள கிராமப்புறங்களில் நடந்து வருகின்றன. இன்று அவ்வீரவிளையாட்டை "ஜல்லிக்கட்டு" என்று கூறுகின்றனர். அன்றைய காலத்தில் காளையை அடக்குவது திருமணத்திற்காக நடத்தப்பட்டது. இன்று ஆண்களின் தைரியத்தையும் வீரத்தையும் காட்டும் முகமாக நடந்து வருகின்றன.

ஏறுதழுவுதலில் காளைகளுக்கும், இளைஞர்களுக்கும் நடக்கும் நிகழ்வுகளில் கூரிய கொம்புகளுடன் சீறிவரும் காளைகள் தன்னை அடக்குபவரை,

**வரி பரிபு இறுபு குடர் சோரக் குத்தி – தன்**
**கோடு அழியக் கொண்டானை ஆட்டி**
**வாடா வெகுளி எழல் ஏறு – திரிபு உழக்கும்**

என்ற வரிகள் மூலமாய் எலும்புகள் முறியவும், குடர்கள் சரியவுமாகக் குத்திப் பின்னர்த் தன் கொம்புகளின் வலிமை அழியுமாறு தழுவிக் கொண்டிருந்தவனை அங்குமிங்கும் ஆட்டி, அலைக் கழித்துத் திரிந்து கலக்கும் குறையாத கோபத்தினை உடைய அழகிய ஏறு என்று ஏறுதழுவுதலில் நடக்கும் நிகழ்ச்சியைக் கூறுகிறார் புலவர்.

ஏறு தழுவிய பின்னர் உள்ள தொழுத் தோற்றத்திற்குப் பாண்டவரும் நூற்றுவரும் போரிட்ட போர்க்களம் உவமையாக காட்டப்படுகின்றது. இவ்விரண்டு நிகழ்வுகளுக்குமுள்ள ஒற்றுமைகளைக் கீழ்க்கண்ட முறையில் அட்டவணைப்படுத்தலாம்.

| எண் | ஏறுதழுவுதலுக்குப்பின் தொழுத்தோற்றம் | பாரதப் போர்க்களம் |
|---|---|---|
| 1. | ஏறு தழுவும் நிகழ்வுக்கு முன்னர் பறைகள் மிகுந்த ஒலியுடன் முழங்கின. இதனை "பறை எழுந்து இசைப்ப பல்லவர் ஆர்ப்ப" (கலி. 104: 29) என்கிறது பாடல்வரி | "குரைசெய் வான் பனைக் குப்பைகள் யாவினும் முரச கால முழங்கின சாலவே" (வீட்டும பருவம் முதற்போர்ச் சருக்கம்) என்று பாண்டவ கௌரவப் போர் தொடங்குவதற்கு முன்பு ஒலித்தலைச் செய்யும் பறைகள் முழங்கின என்கிறது பாடல்வரி (வில்லிபாரதம், ராஜ கோபாலாச்சாரியார், பக். 18, 19) |

| எண் | ஏறுதழுவுதலுக்குப்பின் தொழுத்தோற்றம் | பாரதப் போர்க்களம் |
|---|---|---|
| 2. | இறைவனின் கணிச்சி படைபோலக் கொம்புகள் சீவப்பட்ட ஏறுகளை ஒரு சேரத் தொழுவினுள் புகவிட்டதைப் பாடல் வரிகள்<br>"சீறு அரு முன்பினோன் கணிச்சி போல்<br>ஏறு தொழூஉப் புகுந்தனர்" (கலி. 101: 8) | "கொற்றவர் தம்மை யேழக்<br>குரோணிவெஞ் சேனையோடும்<br>பற்றுடை யசல மாகும் பான்மையால்<br>வியூக மாக்கி"<br>ஏழு அக்குரோணி என்னும் தொகை உடைய சேனையோடும், சேனைத் தலைவர்களாகிய அரசர்களைத் தொடர்ச்சியுடைய மலை என்று சொல்லும் தன்மையுடைய வியூகம் ஆக்கி நின்றதாகத் தெரிகிறது (மேலது) |
| 3. | மைந்தர் தழுவுதலினாலே எலும்புகள் முறிந்து, முறிந்து தசைகள் சிதறிப் பரவிக் கிடந்தன. இதைப் பாடல்,<br>"மறுத்து மறுத்து மைந்தர் சார<br>தடிகுறை இறுபு இறுபு தாயின கிடப்ப"<br>(கலி 104: 52-53)<br>என்கிறது. | "உற்ற வன்றலை சிந்திட வோச்சினான்<br>அற்ற தன்றலை கொண்டவ னுந்தனைச்<br>செற்ற வன்றலை சிந்திட வீசினான்"<br>என்று வீரர் இருவரில் ஒருவன் வாள் படையோடு நின்று எதிர்வந்தவன் தலை சிந்தும்படி வீசினான். அற்ற தலையைக் கொண்டவனும், தன் தலை அறுத்தவன் தலை சிதறும்படி வாளை வீசினான் என்று பாரதப் போரின் ஒரு காட்சி விளக்கப்படுகிறது (மேலது). |
| 4. | ஏறுகளும், பொதுவரும் தம்முள் மாறு படுகையில் பல்வேறு இசைக் கருவிகள் முழங்கின. இதைப் பாடல் வரிகள்,<br>"கார் எதிர் கலிஓலி கடி இடி உருமின்<br>இயம் கறங்க" (கலி. 105: 24)<br>எனக் கூறுகின்றன. | பாரதப்போர் தொடங்குமுன் பறை ஒலிக்க, முரசுகள் அதிர, கிருஷ்ணர் வலம்புரி சங்கு கொண்டு ஒலியெழுப்ப போர் தொடங்கியதாகக் கூறப் பட்டுள்ளது. |
| 5. | மிகுந்த வலியுடைய ஏற்றை நகை நெகிழ விடாது வெற்றி கொள்வாய். அவ்வாறு செய்தால் எம் ஆய மகளை அடையலாம் என்று தோழி தலைவனிடம் கூறுகிறாள். இதனை,<br>"............. கண்ணஞ்சா ஏற்றை<br>விடாஅது கொள்குவை ஆயின்:<br>படாஅகை<br>ஈன்றன ஆயமகள் தோள்"<br>என்கிறது பாடல். | பாரதப் போரில் வீடுமன் கௌரவர் களுக்குப் பெரும் வலிமை சேர்த்தார் அவரைப் போரில் வீழ்த்தியபின்<br>"வென்றனம் இனிநாம் என்று மெய்ம்<br>முகில் வண்ணன் சொல்ல"<br>என்ற வரிகளில் இனிநாம் பகைவரை வெற்றி பெற்றுவிட்டோம் என்று கண்ணன் கூறினான் (வில்லிபாரதம் டாக்டர் ஜெகத்ரட்சகன், ப. 328)[4]<br>பாரதப் போரிலும் கௌரவர்களை வென்றால் பாண்டவர்களுக்கு நாடு கிடைக்கும் என்ற நிலை இருந்தது. |

ஏறுதழுவுதலில் தலைவன் காளையை அடக்கினால், வெற்றி பெற்றதாகக் கொள்ளப்பட்டு தலைவியைத் திருமணம் செய்து கொள்ள இயலும். அதேபோல் பாரதப்போரில் வீடுமனை அழித்ததால் பாண்டவர் வெற்றி பெற்றதாகக் கொள்ளப்பட்டு நாட்டைப் பெறமுடியும் என்ற செய்தி உள்ளது. இவ்வாறு ஏறுதழுவிய தொழுத்தோற்றத்திற்கும், பாண்டவர் போரிட்ட போர்க்களத்திற்கு உள்ள பல ஒற்றுமைகள் உள்ளதால் ஏறுதழுவுதல் பாடல்களுக்கு புலவர் பாரதப் போர் தொன்மத்தை உவமையாகக் கையாண்டுள்ளார் எனலாம்.

தொழுத்தோற்றத்திரற்கு உவமையாகப் போர்க்களம் என்று பொதுவாகக் கூறாமல் பாண்டவர் போரிட்ட போர்க்களம் என்று பாரதத் தொன்மத்தை உவமையாக்கியிருப்பதன் காரணங்களாகக் கருதப்படுவன.

1. பாரதப் போரில் பாண்டவர் எண்ணிக்கையை விட, கௌரவர் எண்ணிக்கை அதிகம், அதுபோல ஏறுதழுவுதலில் காளைகளின் எண்ணிக்கையை விட, காளைகளை அடக்க முன்வரும் பொதுவர் எண்ணிக்கை அதிகம், இதைக் குறிப்பாக உணர்த்த பாரதத் தொன்மத்தை பயன்படுத்தியிருக்கலாம்.

2. பாரதப் போரின் தொடக்கத்தில் வெற்றி பெறுபவர் பாண்டவரா? கௌரவரா? என்று அறிய இயலாது. அதுபோல ஏறுதழுவுதலிலும் ஏறுகளா? பொதுவர்களா என்று வெற்றி பெறுபவர் யாரென அறிய இயலாது.

3. தங்களை வெல்ல எண்ணும் பாண்டவர்களைத் தாக்கி வெற்றி பெற முயன்றனர் கௌரவர்கள். அதுபோல தம்மை அடக்கி வெல்ல எண்ணும் பொதுவரை சாவக்குத்தி வெற்றி பெற முயன்றன காளைகள் என்பதை தொன்ம உவமை பார்த்த வழியாக உணர்த்துகிறார் புலவர் எனலாம். ஆகவே மேற்கண்ட கருத்துகளின் ஒற்றுமையை மனதில்கொண்டு புலவர் பாரதத் தொன்மத்தை உவமையாக்கியிருப்பதாகக் கொள்ளமுடியும்.

மற்றுமொரு சங்கப் பாடலில் பாரதத் தொன்மம் உவமையாகப் பயின்று வந்துள்ளது. கலித்தொகையில் (52) தலைவன், தலைவியைக் காணவரும்

தருணத்தில் அவன் வருகை எழுப்பும் ஒலியானது யானை வருவது போலவும், புலி வருவது போலவும், ஊரிலுள்ளோர் நினைப்பார்கள் எனக் கூறப்பட்டுள்ளது. இதனை,

*ஐது அகல் அல்குலாள் செய்குறி நீ வரின்*
*ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்*
*களிறு என ஆர்ப்பவர்; ஏனல் காவலரே*

என்றும்

*ஐதுஅகல் அல்குலாள் செய்குறி நீ வரின்*
*கறிவளர் சிலம்பில் வழங்கலானாய்*
*புலி என்று ஓர்க்கும், இக்கலி கேழ் ஊரே*
*விலங்கு ஓரார் மெய் ஓர்ப்பின், இவள் வாழாள் இவள் அன்றி*
*புலம்புகழ் ஒருவ! யானும் வாழேன்;*
*அதனால் பொதி அவிழ் வைகறை வந்து நீ குறைகூறி*
*வதுவை அயர்தல் வேண்டுவல்! அங்க*
*புதுவை போலும் நின்வரவும் இவள்*
*வதுவை நாண் ஒடுக்கமும் காண்குவல் யானே* (கலி. 52)

எனப் பாடுகிறார் புலவர். தலைவன்தான் வருகிறான் என ஊரார் அறிந்து விட்டால், தலைவியின் களவு வெளிப்பட்டுவிடும். அவ்வாறு வெளிப்பட்டு விட்டால் தலைவி உயிர் வாழமாட்டாள். அவளை இழந்து தானும் வாழ இயலாது. அதனால் விரைவில் வந்து தலைவியை மணந்து கொள் எனத் தோழியின் கூற்றாகக் கூறிவிட்டு புதியவனைப் போல தலைவி வீட்டாரிடம் தலைவன் வந்து பெண் கேட்பதையும், தலைவி நாணத்துடன் திருமணக் கோலத்தில் தலைவனருகில் இருக்கும் காட்சியை தான் காண வேண்டுமென்கிறாள் தோழி. இப்பாடலில் தலைவனுடைய நாட்டின் மலைச்சாரலில் காணப்படும் ஒரு காட்சிக்கு பாரதக்

காட்சியை உவமையாக்குகிறார். தன்னைத் தாக்க வந்த புலியை சினந்து அதன் நெஞ்சைத் தன் கூறிய கொம்பால் குத்திக் கொன்ற யானையையுடைய மலைநாடனே என்று தலைவனைத் தோழி விளிக்கிறாள். இதில் யானையின் செயலுக்கு இதிகாசத் தொன்மமும், புராணத் தொன்மமும் உவமையாக வந்துள்ளன. ஒரே காட்சிக்கு இரு தொன்மங்களை உவமையாகப் பயன்படுத்திப் புலவர் தான் கூற விரும்பும் கருத்துக்கு வலுச் சேர்க்கிறார் எனலாம். அத்தொன்மங்களாவன:

நூற்றுவர்க்குத் தலைவனாகியத் துரியோதனனைப் பாரதப் போரில் வீமன் தொடையில் அடித்து உயிரைப் போக்கியது போல யானை புலியின் நெஞ்சைப் பிளந்து கொன்றது. அதன்பின் அந்த யானை மல்லர்களைக் கொன்ற திருமாலின் தோற்றத்தைப் போன்று கம்பீரமாகச் சென்றது என்பது கீழ்க்காணும் பாடலில் விளக்கப்பட்டுள்ளது. அப்பாடல்:

***முறம்செவி மறைப் பாய்வு முரண் செய்த புலிசெற்று***
***மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்***
***குறங்கு அறுத்திடுவான் போல், கூர்நுர் மடுத்து, அதன்***
***நிறம் சாடி முரண் தீர்ந்த நீள்மருப்பு எழில்யானை***
***மல்லரை மறம் சாய்ந்த மால் போல் தன்கிளை நாப்பன்***
***கல் உயர் நனஞ்சாரல் கலந்து இயலும் நாட!***

என்கிறார் புலவர். யானையின் செயலுக்கு வீமனையும் யானையின் தோற்றத்திற்குத் திருமாலையும் உவமை காட்டியிருப்பதன் நோக்கத்தை ஆராயும்பொழுது புலவர் தோழி வாயிலாக தலைவனுக்குக் கூற விரும்பும் கருத்துகளை அறிவுறுத்த இத்தொன்மங்களை எடுத்தாண்டுள்ளார் எனலாம். இவ்விரு தொன்மங்களும் போரிட்டு வெற்றி பெற்றவர்களான வீமனையும், திருமாலையும் கூறுகின்றன. அக இலக்கியத்தில் தலைவன் விரைவாக மணம்

செய்து கொள்ளக்கூறும் பாடலில் போரிட்டு வெற்றி பெற்ற தொன்மப் பாத்திரங்கள் உவமையாகக் காட்டப்பட்டுள்ளன. இத்தொன்மங்களை ஆண்ட நோக்கத்தை ஆராயவும் பொழுது கிடைக்கும் செய்திகளாகவன.

1. வீமன் -துரியோதனன் ஆகியோர் இடையில் பகை மூண்டதால் போர் நடந்தது. இதுபோல தலைவன் - தலைவி ஆகியோர் இடையில் களவு ஏற்பட்டதால் பிறருக்குத் தெரிந்துவிடும் ஆபத்து உண்டானது.

2. துரியோதனனின் தொடையில் அடித்தால் அவன் மாண்டுவிடுவான் என்ற சூட்சமத்தை அறிந்து கொண்டு வீமன் அச்செயலைச் செய்து வெற்றி பெற்றான். அது போன்று தலைவன், புதியவனைப் போல வந்து பெண் கேட்டால், திருமணம் நடக்கும் என்ற சூட்சுமத்தைக் கூறுகிறாள் தோழி.

3. வீமனுக்குத் துரியோதனன் எதிரி என்பது போன்று தலைவனுக்கு, தலைவனின் களவு வாழ்வைப்பிறர் அறிந்தால் அதுவே தலைவனின் களவு வாழ்க்கைக்கு எதிரியாகிவிடும் என்பதைக் குறிப்பாகக் கூறுகிறார்.

4. வீமன் துரியோதனனை வீழ்த்தி வெற்றிபெற்றான் அது போலத் தலைவனும் ஊரார் பேச்சுக்களை வீழ்த்துவது போன்று தலைவியை மணம் செய்து கொண்டு வாழ்வில் வெற்றி பெற வேண்டும் என்று தோழி கூறுவதாகப் பொருத்தமாக இத்தொன்மம் ஆளப்படுகின்றது

5. மல்லர்களைத் திருமால் அழித்தது போல, தலைவன் தனக்கெதிராக உருவாகும் சூழலை அழித்துத் தலைவியை மணம் செய்து கொள்ள வேண்டும் என்பதற்காகக் கூறப்பட்டிருக்கலாம்

6. வீமனும், திருமாலும் தங்களைக் காத்துக் கொள்ள துரியோதனனையும் மல்லர்களையும் வீழ்த்தி வெற்றி பெற்றனர். இதுபோல தலைவனும் தலைவியுடனான தங்கள் அன்பைக் காத்துக் கொள்ள அலர் போன்ற

இன்னல்களை வென்று விரைவில் திருமணம் முடித்து வாழ்வில் வெற்றிபெற வேண்டும். என்பதற்காகவும்,

7. தன்னைக்கொல்ல வந்த மல்லர்களை அழித்து திருமால் தன்னைக் காத்துக் கொண்டு இவ்வுலகிற்கு அருளியது போலத் தலைவனும் ஊரார் தூற்றும் அலரிலிருந்து தன்னைக் காத்துக் கொண்டு, தலைவியை மணந்து கொள்வதின் மூலம் அவளுக்கு அருள் செய்ய வேண்டும் என்பதற்காகவும் சொல்லப்பட்டிருக்கலாம்.

**மல்லரை மறம் சாய்த்த மால் போல்**

என்ற வரிக்கேற்ப திருமால், தன் கிருஷ்ணாவதாரத்தில் தான் கம்சனால் ஏவப்பட்ட மல்லர்களை அழிக்கின்றார்.

**தன்கிளை நாப்பன்**

என்பதற்கேற்ப கிருஷ்ணர் எல்லோராலும் விரும்பப்பட்டவர். கோபியர்களின் மனங்கவர் கள்வன் என ஸ்ரீமத் பாகவத புராணம் கூறுகின்றது. கிருஷ்ணன் மேல் அழியாக் காதல் கொண்டிருந்ததைக் குலசேகர ஆழ்வார்,

**வார் மணற் குன்றில் புலர நின்றேன்**
**வாசுதேவா உன் வரவு பார்த்தே**

என ஆறாம் திருமொழிப் பாடலில் பாடுகிறார். மணற்குன்றில் உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டு பொழுது விடியுமளவும் காத்திருந்தேன் என கிருஷ்ணரை நோக்கி, குலசேகர ஆழ்வார் கூறுவது போல இச்சங்கப்பாடலும் தலைவனின் வருகைக்காக தலைவியும் எதிர்நோக்கிக் காத்திருக்கிறாள் என்று கூறுகின்றது. இக்கிருஷ்ண தொன்மத்தை சங்க இலக்கியப் பாடலோடு ஒப்புமைப் படுத்தினால்,

| **தொன்மம்** | **பாடல் இடம்பெற்றவைகள்** |
|---|---|
| கிருஷ்ணர் | ——> தலைவன் |
| பக்தி | ——> களவு |
| அடியவர்/கோபியர் | ——> தலைவி |
| மல்லர் | ——> அலர் |
| கம்சன் மல்லரை ஏவுதல் வருகைக்குக் காரணம் | ——> ஊரார் அலரைத் தூற்றுதல் எழுவதற்கு காரணம் |

என்ற இந்த வகைகளிலெல்லாம் இத்தொன்மங்கள் பொருத்தமுறக் கையாளப்பட்டுள்ளன எனத் தெளிவாகின்றன.

அடுத்ததாக, சிறுபாணாற்றுப்படையில் (238-239) நல்லியக்கோடனின் கொடைப் பண்பிற்குப் பாரதத் தொன்மம் உவமையாக வந்துள்ளது. நல்லியக்கோடானிடம் பரிசு பெற்ற பாணன், மற்றொரு பாணரிடம் ஆற்றுவித்துப் பாடுவதாகப் புலவர் பாடலை அமைத்துள்ளார். அப்பாடல்வரிகளாவன:

**கா எரி யூட்டிய கவர்கணைத் தூணிப்**
**பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்**
**பனிவரை மார்பன், பயந்த நுண்பொருட்**
**பனுவலின் வழாஅப் பல்வேறு அடிசில்** (238-241)

என்று நல்லியக்கோடன் அளிக்கும் சுவையான உணவுக்குப் பாரதத் தொன்மத்தை உவமையாகக் கொள்கிறார் புலவர். சமையற்கலையில் சிறந்தவன் எனப் புகழப்பட்டவன் வீமன். அப்படிப்பட்ட வீமன் எழுதிய மடைநூலின் (சமையற்கலை நூல்) படி சமைத்த அறுசுவை உணவை அளிப்பவன் நல்லியக்கோடன் ஆவான் என்கிறார் புலவர். இப்பாடலில் வீமனைக் குறிப்பிடும்பொழுது காண்டவ வனத்தை

எரித்த அருச்சுனனின் உடன்பிறந்தவன் என்ற குறிப்பு உள்ளது. இப்பாடலின் மூலம் அருச்சுனன் காண்டவன வனத்தை எரித்தச் செய்தியும் வீமன் சமையற்கலையில் வல்லவன் என்ற செய்தியும் தெரிய வருகின்றன.

மேற்கண்டப் பாடலில் இடம்பெற்ற தொன்மத்திற்கும் பாடல் தலைவன் நல்லியக்கோடனிற்கும் ஒப்புமைப்படுத்தி ஆராயும்பொழுது தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கங்களைத் தெளிவாக அறியமுடிகின்றது.

1. அருச்சுனன் தன்னை நாடி வந்த அக்கினி பகவானின் பசிப்பிணி தீரும் பொருட்டு காண்டவ வனத்தை அழித்து உதவினான். அதுபோல நல்லியக்கோடன் தன்னை நாடி வருபவருக்குப் பசிப்பிணி தீரும் பொருட்டு உணவளித்து உதவினான்.

2. அருச்சுனன் போர் புரிவதில் வல்லவன் என்று இதிகாசம் கூறுகிறது. அதுபோன்று நல்லியக்கோடனும் போரில் வல்லவன் என்பதை

   ***ஆண் அணி புகுதலும் அழிபடை தாங்கலும்***

   ***வான்மீக் கூற்றத்து வையவர் ஏத்த..........*** (சிறுபாண்.216 - 218)

   என்ற சிறுபாணாற்றுப் பாடல் வரிகள் கூறுகின்றன.

பொதுவாக சங்க இலக்கியப் பாடல்களில் உவமையாக வரும் பாரதத் தொன்மங்களில் பெரும்பாலும் வீமனே உவமையாகக் கூறுப்படுகிறான். அப்படியிருக்க இச்சிறுபாணாற்றுப்படையில் வீமனுடன் அருச்சுனன் பற்றிய தொன்மம் பயன்பட்டுள்ளது. நல்லியக்கோடனின் சிறப்பை உயர்த்திக் கூறவே வீமனையும், அருச்சுனனையும் மிகப் பொருத்தமான வகையில் புலவர் உவமை யாக்கியிருக்கிறார்.

இதிகாசத் தொன்மங்கள் பெரும்பாலும் கலித்தொகையில் உவமைகளாக ஆளப்பட்டுள்ளன. அதுவும் குறிப்பாக பாடலில் கூறப்படும் காட்சிக்கு

உவமைகளாக வந்துள்ளன. அதிலும் பெரும்பான்மையாக விலங்குகளின் செயல்களுக்குத் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன. அதிகமான அளவில் வீமன் தொன்மங்களே உவமை காட்டப்படுகின்றன. காட்சிகளுக்கு உவமையாகக் கூறப்படும் தொன்மங்களைப் பாடலின் முதன்மை பாத்திரங்களான தலைவன், தலைவியோடு ஒப்புமைப்படுத்தி ஆராயும்பொழுது, தொன்மங்கள் பொருத்தமாகவும், பல செய்திகளைத் தருவதாகவும் உள்ளன. அகப்பாடலில் வந்துள்ள தொன்ம உவமைகள் மூலமாகப் புலவர் களவு வாழ்க்கை பற்றித் தாம் கூறவிரும்பும் கருத்துகளை பாடல் பாத்திரம் வழியாக உலகிற்கு உணர்த்த விழைகிறார் எனலாம்.

### புராணத் தொன்மங்கள்

புராணங்கள் என்பவை கடவுளரின் திருவிளையாடல்கள், அவதாரக் கதைகள், கடவுள் பற்றிய செய்திகளை உள்ளடக்கியவை ஆகும். இப்புராணங்கள் கடவுளைப் பற்றிச் சொல்லும்போது மனிதனுக்கு வேண்டிய நல்ல கருத்துக்களைக் கூறி, மனிதனை நல்வழிப்படுத்துகிறது. அதுபோல சங்க இலக்கியமும் தமிழர் வாழ்க்கை முறையை இலக்கியத்தின் மூலம் விளக்குகிறது. சங்க காலத்தில் உவமைகளாகப் புராணக் கதைகள் ஒரு சில வரிகள் அமைப்பில் வந்துள்ளன. புராணகாலம் - சங்ககாலம் இடையே உள்ள காலவரையறைப் பற்றி ஆய்ந்தவர் கூறும் கருத்துகளாவன: ***இந்து சமய வரலாற்றில் ஏறத்தாழ கி.மு. 2000 முதல் கி.மு. 500 வரையில் வேதகாலம் (The Vedic Period) எனவும், கி.மு. 500 முதல் கி.மு. 200 வரையில் மனு தர்ம சாத்திரக் காலம் (the Manudharma Sutra Period) எனவும், கி.மு. 200 முதல் கி.பி. 300 வரையில் இதிகாசக் காலம் (the epic period) எனவும், கி.பி. 300 முதல் கி.பி. 750 வரையில் புராண காலம் (the puranic period) எனவும், கி.பி. 750 முதல் கி.பி. 100 வரை தத்துவ தரிசனக் காலம் (the darshana period) எனவும், கி.பி. 1000***

முதல் கி.பி. 1800 வரையில் இடைக்காலம் (the medieval period) எனவும், கி.பி. 1800க்குப் பிறகு தற்காலம் (the Modern period) எனவும் கொள்ளப் படுகிறது. பல அனுமானங்களின் அடிப்படையிலான இக்கணக்கீடு ஒரு அணுகுமுறையே யன்றி இறுதியானதன்று. தமிழ இலக்கிய வரலாற்றில் ஏறக்குறைய கி.மு. 300 முதல் கி.பி. 300 வரை சங்ககாலம் என்று கருதப்படுகிறது.[5]

புராண காலம் கி.பி. 300 முதல் கி.பி. 750 வரை என்றால் சங்க காலத்துக்குப் பின் புராணங்கள் எழுத்து வடிவில் வந்தது என்பது தெரிகின்றது. சங்க காலத்துக்குப் பின் வந்த புராணங்கள் எப்படி சங்க இலக்கியத்தில் இடம்பெற்றிருக்க முடியும்? என்ற கேள்வி எழுகிறது. அதற்கு விடையாகக் கீழ்காணும் கருத்தை எடுத்துக்காட்டலாம். பாரத நாட்டு இலக்கிய வகைகளுள் ஒன்று புராணமாகும். புராண இலக்கியத்தின் தோற்றத்தை அறுதியிட்டுக் கூற இயலாது. வேத காலத்திற்கு முன்பு புராணங்கள் பழைய கதைகளாக வழங்கி வந்தன. அதர்வண வேத காலத்திலேயே புராணங்கள் சிறந்த இலக்கியங்களாக கருதப்பட்டன.[6] இவ்வாறாக வந்த புராணங்கள் சங்க இலக்கியத்தில் உவமைகளாக புலவர்களால் கையாளப்பட்டுள்ளன.

### புராணத் தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கம்

சங்க காலத்திற்குப் பின் பக்தி இலக்கியக் காலம் வளர்ச்சியடைந்தது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் பக்தி இலக்கியத்தை வளரச் செய்தவர்கள் ஆவர். சங்க காலத்திலேயே பக்தி வித்திடப்பட்டது எனலாம். சங்கப் பாடல்களில் அகப் பாடல்களிலும், புறப்பாடல்களிலும் கடவுளர் பற்றிய கதைகள் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளன. கடவுளர் பற்றிய கதைகளே புராணங்கள் எனப்பட்டன. சிவன், திருமால், முருகன் என்ற மூன்று தெய்வங்களைப் பற்றிய கதைகள்,

குறிப்புகள் சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இம்மூன்று தெய்வங்களின் வழிபாடு அன்றைய காலத்தின் முதன்மையான வழிபாடாக இருந்திருக்க வேண்டும். மக்களிடையே அக்கடவுளர் பற்றிய கதைகள் புழக்கத்தில் இருந்திருக்கும். அதனாலேயே புலவர்கள் அக்கதைகளைப் பாடல்களில் உவமையாக்கித் தந்துள்ளனர் எனலாம். அகஇலக்கியத்திலும், புற இலக்கியத்திலும் கடவுளர் தொன்மங்கள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டதின் நோக்கம் இந்தத் தலைப்பில் ஆராயப்படுகின்றது.

முதலாவதாக, சிவன் பறிய தொன்மங்களைக் காணலாம். சிவன் பற்றிய தொன்மங்கள் இடம்பெற்ற இலக்கியங்களாகக் கலித்தொகை, புறநானூறு, மலைபடுகடாம் என்ற மூன்றும் அமைகின்றன. இதனைக் கீழ்க்காணும் வரைபடம் விளக்குகிறது.




இதுதவிர சிறுபாணாற்றுப்படை, பதிற்றுப்பத்து, மதுரைக்காஞ்சி, அகநானூறு இவற்றிலும் சிவன் தொன்மம் உவமையாக வந்துள்ளது.

### கலித்தொகை கூறும் சிவன் தொன்மங்கள்

சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான கலித்தொகையில் சிவன் தொன்மங்கள் பெருமளவில் உவமையாக கையாளப்பட்டுள்ளன. அதிலும் பாலைக்கலி தவிர்த்து மற்ற எல்லாத் திணைகளிலும் சிவன் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன. மருதக் கலியில் கற்பு வாழ்விற்கும், மற்ற மூன்று கலிகளில் (குறிஞ்சி, நெய்தல், முல்லைக் கலிகள்) களவு வாழ்விற்கு உவமையாகச் சிவன் தொன்மங்கள் வந்துள்ளன.

குறிஞ்சிக் கலியில் ஒரு பாடலில் தலைவன் தலைவியைக் காண இரவு நேரத்தில் வருகிறான். அப்போது தோழி தலைவனிடம் தலைவியின் நிலைமைப் பற்றிக் கூறி விரைவில் திருமணம் செய்துகொள்ளுமாறு கூறுகிறாள்.

நீ அடையும் துன்பத்தைக் கூறக் கேட்ட தலைவன் வேங்கை மலரும் காலத்தை எதிர்பாரா நின்று, பெருத்த முன் கையினையுடைய மூங்கில் போன்ற நின்தோளை வரைந்து கோடற்க வருவான் என்பதை,

**நின்உறு விழுமம் கூறக்கேட்டு**
**வருமே, தோழி! நன்மலை நாடன்**
**வேங்கை விரிவு இடம்நோக்கி**
**வீங்கு இறைப் பணைத் தோள் வரைந்தனன் கொளற்கே**

(கலி. 38: 23-26)

என்கிறாள் தோழி. புலவர் தலைவனின் நாடு எத்தகையது என்று கூறும்போது வேங்கைப் பூ பூத்த மரத்தை புலி என்று யானையானது நினைத்து தன் கொம்புகளை மரத்தினடியில் செருகி எடுக்க மாட்டாது அலறியது. இப்படிப்பட்ட காட்டை உடைய மலை நாடனே என்கிறார். இதில் யானையின் அச்செய்கை எப்படி உள்ளதென்றால் இறைவன் சிவபெருமான இறைவி உமையம்மையுடன் உயர்ந்த இமயமலையில் இருந்தபோது, அரக்கர்களின் தலைவனான இராவணன்

இமய மலையை எடுத்ததற்காகக் கைகளைக் கீழே செருகிக் கைகளை எடுக்க இயலாமல் வருந்தியது போலிருந்தது என்று கூறுகிறார் புலவர். இதனைப் பாடல் வரிகள் (38).

**இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக** (38: 1-2)

என்று கூறுகிறது. சிவன் தொன்மம் இங்கு உவமையாக ஆளப்பட்டுள்ளது. சிவன் தொன்மத்தை இப்பாடலில் மிகப் பொருத்தமாகப் புலவர் கையாண்டுள்ளார். அப்பொருத்தங்களாவன:

1. சிவன் உமையோடு இருந்த மலையை இராவணனால் எவ்வாறு எடுக்க இயலவில்லையோ அதுபோல, தலைவன் தலைவியுடன் இணைந்து இருந்ததால், (இணைதல் என்பது திருமணம் முடித்தல் என்று பொருள்படக் கூறப்படுகிறது) ஊரார் பேசும் அலரால் ஒன்றும் செய்ய இயலாது. அலர் செயலிழந்து போய்விடும் என்ற அளவில் இவ்வுவமை மிகப் பொருத்தமாக ஆளப்பட்டு தோழியின் நோக்கம் இதுவாகும் என்று புலவர் குறிப்பால் கூறுவதாகக் கொள்ளலாம்.

2. சிவன் தன் இடப் பாகத்தைத் தன் துணைவியான சக்திக்குத் தந்தவர். அதனால் அர்த்தநாரீஸ்வரன் என்று பெயர் பெற்றவர். இதை மாணிக்க வாசகர் தன் திருவாசகத்தில்,

   **தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்**
   **பால்வெள்ளை நீரும் பசுஞ்சாந்தும், பைங்கிளியும்**
   **சூலமும், தொக்க வளையும் உடைத் தொன்மைக்**
   **கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத் தும்பீ!**

   என்று சிவன் பாதி, உமை பாதியாக நிற்கும் அர்த்தநாரி வடிவத்தைப் பாடுகிறார். அப்படிப்பட்ட சிவன், சக்தியைப் போலத் தலைவனும்

இமய மலையை எடுத்ததற்காகக் கைகளைக் கீழே செருகிக் கைகளை எடுக்க இயலாமல் வருந்தியது போலிருந்தது என்று கூறுகிறார் புலவர். இதனைப் பாடல் வரிகள் (38).

**இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக** (38: 1-2)

என்று கூறுகிறது. சிவன் தொன்மம் இங்கு உவமையாக ஆளப்பட்டுள்ளது. சிவன் தொன்மத்தை இப்பாடலில் மிகப் பொருத்தமாகப் புலவர் கையாண்டுள்ளார். அப்பொருத்தங்களாவன:

1. சிவன் உமையோடு இருந்த மலையை இராவணனால் எவ்வாறு எடுக்க இயலவில்லையோ அதுபோல, தலைவன் தலைவியுடன் இணைந்து இருந்ததால், (இணைதல் என்பது திருமணம் முடித்தல் என்று பொருள்படக் கூறப்படுகிறது) ஊரார் பேசும் அலரால் ஒன்றும் செய்ய இயலாது. அலர் செயலிழந்து போய்விடும் என்ற அளவில் இவ்வுவமை மிகப் பொருத்தமாக ஆளப்பட்டு தோழியின் நோக்கம் இதுவாகும் என்று புலவர் குறிப்பால் கூறுவதாகக் கொள்ளலாம்.

2. சிவன் தன் இடப் பாகத்தைத் தன் துணைவியான சக்திக்குத் தந்தவர். அதனால் அர்த்தநாரீஸ்வரன் என்று பெயர் பெற்றவர். இதை மாணிக்க வாசகர் தன் திருவாசகத்தில்,

**தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்**
**பால்வெள்ளை நீரும் பசுஞ்சாந்தும், பைங்கிளியும்**
**சூலமும், தொக்க வளையும் உடைத் தொன்மைக்**
**கோலமே நோக்கிக் குளிர்ந்து ஊதாய் கோத் தும்பீ!**

என்று சிவன் பாதி, உமை பாதியாக நிற்கும் அர்த்தநாரி வடிவத்தைப் பாடுகிறார். அப்படிப்பட்ட சிவன், சக்தியைப் போலத் தலைவனும்

தலைவியை விட்டுப் பிரியாமல் மணம்செய்து வாழவேண்டும் என்று தோழி உள்ளுரையாகக் கூறுவதாகக் கொள்ளலாம்.

3. சிவனும் உமையும் இமயமலையை இருப்பிடமாகக் கொண்டமர்ந்து போல, தலைவனும் தலைவியும் களவு வாழ்வை விடுத்து மலைபோன்ற நிலையான கற்பு வாழ்க்கைக்குள் செல்ல வேண்டும் என்பதை கூறுவதற்காக 'மலைநாடன்' என்று தோழி குறிப்பிட்டாள் எனக் கருதவும் ஏது உள்ளது. புலவர் இப்பாடலில்,

**இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**

என்று சிவனை மட்டும் குறிப்பிடாமல் "உமை அமர்ந்து உயர்மலை இருந்தனனாக" என்று உமையாளையும் சேர்த்துக் கூறியதிலிருந்து இரு செய்திகள் புலப்படுகின்றன.

4. சிவனொடு உமையும் குறிப்பிடப்படுவதால் தலைவனும் தலைவியோடு என்றும் பிரியாதிருக்க வேண்டுமெனின் மணம் செய்து கொள்ள வேண்டும், என்பதற்கு இத்தொன்மம் ஆளப்பட்ட நோக்கம் நிறைவேற்றப்பட்டுள்ளது. கடவுளைக் கூட தனித்து வணங்கும் வழங்கும் தமிழரிடையே அக்காலத்தில் இருந்திருக்கவில்லை என்ற கருத்து இத்தொன்மம் மூலம் புலனாகிறது. இன்றும் சிவத் தலங்களில் சக்திக்கும் தனிச் சந்நிதி இருக்கின்றது என்பதை எண்ணிப் பார்க்கத்தக்கது,சிவன் தன் தேவியுடன் இருக்கும் இத்தொன்மத்தைக் கையாண்டதன் மூலம் களவு வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் தலைவனை மண வாழ்க்கைக்குள் வரவழைக்கும் பொருட்டு இத்தொன்மப் பயன்பாடு முழு வெற்றி பெற்றுள்ளது எனக் கூறலாம்.

அடுத்ததாக சிவன் தொன்மம் கையாளப்பட்டுள்ள மருதக் கலிப்பாடல் (81) ஒன்றைக் காணலாம்.

மைஅறு விளங்கிய மணிமருள் அவ்வாய் தன்
மெய்பெறா மழலையின் விளங்கு பூண் நனைத்தர,
பொலம் பிறையுள் தாழ்ந்த புனை வினை உருள் கலன்
நலம் பெறு கமழ் சென்னி, நகையொடு துயல்வர (81: 1-4)

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

பாலோடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்
கால் வல்தேர் கையின் இயக்கி நடை பயிற்றா
ஆல் அமர் செல்வன் அணிசால் பெருவிறல்
போல வரும் என் உயிர் (81: 7-10)

என்ற இப்பாடலில் தலைவன் பரத்தையின் பொருட்டுப் பிரிந்து சென்று, பின்னர் தன் வீட்டிற்கு வந்து தலைவி அறியாத வண்ணம் சிறைபுறத்தே நிற்கிறான். இதையறியாத தலைவி தலைவன்பால் மனவருத்தத்தில் உள்ளாள். விளையாடிக் கொண்டிருக்கும் தன் சிறுமகனின் அழகைத் தோழியிடம் புகழ்ந்து சொல்கிறாள். பால் உண்பதை மறந்து விட்டு, முற்றத்திலே உருட்டி விளையாடும் தேரைக் கையால் தள்ளியவாறே மகன் நடைபயிலுகின்றான் ஆலமர் செல்வனின் அழகிற் சிறந்த முருகனைப் போல என் உயிரான என் மகனும் இதோ வருகின்றான் என்கிறாள் தலைவி.

தலைவன் பரத்தையரிடத்தே இருப்பதைப் பாணன் கூற, மனம் வருந்தி தன் மகனின் மழலைச் சொற்கள் தன் மனவருத்தத்தைப் போக்கும் மருந்தாக இருக்கும் என்று மகனை பேசச் சொன்னபோது, அவன் தன் தந்தையைக் கண்ணுற்று தந்தையைக் குறிக்கும் விதமாக “அத்தத்தா” என்று திரும்பத் திரும்பக் கூறுகிறான் என்கிறாள் தலைவி.

மேற்கண்ட பாடலில் “ஆலமர் செல்வன்” என்ற சொல் சிவனையே குறிக்கும். சிவபெருமான் தெற்குத் திசை நோக்கி ஆலமரத்தின் கீழிருந்து அறம் உரைத்தான் என்று புராணம் கூறுகிறது. ஆலமர் செல்வனின் மகன் அழகிற் சிறந்த

முருகப்பெருமான் போன்ற அழகுடன் இருந்தான் தன் மகன் என்று தலைவி கூறுகிறாள்.

தன் மகனின் அழகிற்கு கடவுளின் மகனான முருகனை உவமை கூறியிருப்பதன் நோக்கம் ஆராயத்தக்கது.

1. முருகன், சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியவர் என புராணம் கூறுகின்றது. முருகன் பிறப்பில் சிவனின் துணைவியான சக்திக்கு பங்கு இல்லை. சிவனின் துணைவி என்பதால் முருகனின் தாயாகக் கருதப்படுகிறாள். முருகன் அவதாரத்தில் சிவனுக்கே முக்கியத்துவம் உள்ளது. இவ்வாறுள்ள முருகன் சிவன் தொன்மத்தை, தலைவியின் மகனுக்கு உவமையாக்கியிருப்பது பொருத்தமாக அமைந்துள்ளது. ஏனெனில் தலைவி தன் மகன் மீது தீராத அன்பு கொண்டிருந்தாலும், மகன் தன் தந்தை மேல் அன்பு கொண்டவனாக 'அத்தத்தா' என்று கூறுகிறான். இதைத் தலைவி "நோய் நாம் தணிக்கு மருந்து" எனப் பாராட்ட ஓவாது அடுத்தடுத்து அத்தத்தா என்பான் என்று கூறுகிறாள். எனவே தந்தை மேல் அன்பு கொண்டு தந்தையைக் கூப்பிடும் மகனுக்கு, சிவனாகிய தந்தையால் பிறந்த முருகன் தொன்மத்தைப் பொருத்தமான சிறப்பான உவமையாகப் புலவர் கையாண்டுள்ளார்.
2. சிவன் தன் துணைவியான உமையைத் தவிர மற்றொரு பெண்ணான கங்காதேவிக்குத் தன் சிரசில் இடமளித்திருந்தார் எனப் புராணம் கூறுகின்றது. அதுபோல இப்பாடலின் தலைவனும் தன் தலைவியைத் தவிர மற்றொரு பெண்ணிடம் (பரத்தையிடம்) மையல் கொண்டிருந்தான்.
3. கங்கை பலரின் தாகத்தை தீர்த்து, தேகத்திற்கு சுத்தத்தை அளிக்கிறது. பரத்தை பலரின் உடல்வேட்கையைத் தீர்த்து, அவர்களின் தேகத்திற்கு சுகத்தை அளிக்கிறாள். ஆகவே இப்பாடலில் எல்லா வகையிலும் சிவன்

தொன்மம் மிகப் பொருத்தமான உவமையாகிறது எனலாம். இக்கருத்துகளைக் கூறாமல் கூறவே சிவன் தொன்ம உவமை பயன்படுத்தப்பட்டுள்ளதாகக் கொள்ளலாம்.

மருதக்கலியில் மற்றுமொரு பாடலில் (83) சிவன் தொன்மம் உவமை வந்துள்ளது. தலைவன் பரத்தையரிடம் சென்று திரும்பி வந்து சிறைப்புறமாய் நிற்கிறான். தலைவி தன் மகனை விளையாட அழைத்துப் போகுமாறு தோழியுடன் அனுப்பி வைத்தாள். திரும்பி வர தோழி தாமதப்படுத்த, தோழி வந்தவுடன் தாமதத்திற்கான காரணத்தைத் தலைவி கேட்டாள். பனங்குரும்பைகளை கழி நுனியில் பொருந்தியத் தேரை தலைவியின் மகன் உருட்டி விளையாடியபோது அகன்ற மனையை நோக்கி வராது நின்றான். அம்மனையிலிருந்த இளமகளிர், ஆலமர் செல்வனின் மகனான முருகனின் திருநாள் வந்ததோ என சிலம்பொலிக்க வாயிலுக்கு வந்தனர். வாயிலுக்கு வந்தனர். இவன் இன்னானெனை அறிந்ததும், இவனை தன் இல்லத்திற்கு அழைத்தனர். இவனும் அவர்களோடு சென்றுவிட்டான். இதுவே தாமதத்திற்கான காரணம் என்று தோழி கூறுவதாக உள்ள பாடல் வரிகளாவன:

**பெரு மடற் பெண்ணைப் பிணர்த் தோட்டுப் பைங்குரும்பைக்**
**குடவாய்க் கொடி பின்னல் வாங்கி, தளரும்**
**பெரு மணித் திண்தேர்க் குறுமக்கள் நாப்பண்.**
**அகல் நகர் ன் தருவானாக புரி நெகிழ்பு**
**நீல நிரைப்போது உறு காற்கு உலைவன போல்**
**சாலகத்து ஒல்கிய கண்ணர், 'உயர் சீர்த்தி**
**ஆல் அமர் செல்வன் அணிசால் மகன் விழாக்**
**கால்கோள் என்று ஊக்கி, கதுமென நோக்கி,**
**திருந்து அடி நூபுரம் ஆர்ப்ப இயலி, விருப்பினால்**
**கண்ணும், நுதலும், கடவுளும், கவ்வியார்க்கு** (83: 8-17)

**வேற்று ஆனாத் தாயர் எதிர் கொள்ள, மாற்றாத**
**கள்வனால் தங்கியது அல்லால், கதிபாதி**
**ஒள்ளிழாய்! யான் தீது இலேன்.** (83: 23-25)

என்கிறது பாடல் வரிகள். இப்பாடலிலும் ஆலின் கீழ் இருந்த இறைவன் என்று சிவனைக் குறிப்பிடுகின்றார். இறைவனுடைய மகன் என்பது முருகனைக் குறிப்பிடுகின்றது. ஏனெனில் இறைவனின் இன்னொரு மகனான பிள்ளையார் வழிபாடு பிற்காலத்தில் ஏற்பட்டது. சங்க இலக்கியத்தில் முருகன் வழிபாடு மட்டும் இருந்துள்ளது என்பதை இலக்கியம் மூலம் அறிய முடிகிறது.

**ஆல்அமர் செல்வன் அணிசால் மகன் விழாக்**
**கால்கோள் என்று ஊக்கி** (83: 14-15)

என்கின்ற இப்பாடல் வரிகளும்

**ஆல்அமர் செல்வன் அணிசால் பெரு விறல்**
**போல வரும் என் உயிர்** (81: 9-10)

என்கின்ற பாடல் வரிகளும் ஒரே கருத்துகளைக் கொண்ட பாடல்களுக்கு உவமையாகின்றன. இரு பாடல்களிலும் பரத்தையரிடமிருந்து திரும்பிய தலைவன் சிறைப்புறமாய் நிற்க, தலைவி தன் மகனைப் பற்றி தோழியிடம் கூறுவதாக அமைந்துள்ளன. மேற்கண்ட இரு மருதக்கலிப் பாடல்களிலும் (81, 83) பாடப்படும் பொருள் ஒன்றுதான். அதுபோல் அதில் பயின்று வரும் சிவன் தொன்ம உவமையும் ஒன்றாக உள்ளது. சிவனும், முருகனும் தந்தை தனயன் என்ற உறவின் அடிப்படையில் ஒன்றாகப் பாடல்களில் சுட்டப்படுகின்றனர்.

சங்க காலத்திலிருந்து மனித உறவுகளுக்கு தெய்வ உறவுகளை உவமைப் படுத்திக் கூறியுள்ளனர். **தெய்வங்களை மனித நிலைப்படுத்தி அம்மனித நிலையின் இன்றியமையா உணர்ச்சி பாவங்களை அத்தெய்வத்தின் மேல் ஏற்றி முழுமத அனுபவத்தையுமே சமூக அனுபவ குறியீடுகளில் (ஆண்டான் – அடிமை; காதலன் – காதலி; தகப்பன் – பிள்ளை, தாய் – பிள்ளை, நண்பன்) வெளிப்படுத்தும் முயற்சிதான் பக்தி முறையாகும். சைவ வைணவ மதங்களில் நிலவிய ஐதீகங்கள் (Myths) தெய்வங்களை மனிதப் பண்புப் படிமத்தில் நோக்க உதவின.**[6] இந்த வகையில் தெய்வங்களின் தொன்மங்கள்

இலக்கியம் வாயிலாக உவமையாகச் சொல்லும்பொழுது படிப்பவர் மத்தியில் ஆழப்பதிகிறது. தொன்மங்கள் எனும்போதே அன்றைய காலக்கட்டத்தில் நடந்ததாகச் சொல்லப்படுவதாகும். அதிலும் புராணத் தொன்மங்கள் என்கின்றபோது தெய்வங்களுக்கு மனிதப் பண்புகளை ஏற்றி கடவுளின் துணைவி, கடவுளின் பிள்ளை எனக் கூறப்படுகிறது. தெய்வங்களுக்கு ஏற்றிக் கூறுவதினாலேயே கடவுளர் தொன்மங்கள் இலக்கியக் காட்சிகளுக்கு உவமையாகப் பொருந்திவருகிறது. தாம் கூற விரும்பும் பாடலின் கருத்தை தொன்மம்வழி இலகுவாக மனதில் பதிவு செய்ய புலவர் கையாளும் உத்தியாகத் தொன்மம் வழிசெய்து, இலக்கியத்திற்குச் சுவை கூட்டுகிறது எனலாம். சிவன் தொன்மங்கள் பயின்றுவரும் சில முல்லைக்கலிப் பாடல்களில் சிவன் காளையின் தோற்றத்திற்கு உவமையாகக் காட்டப்பட்டுள்ளான். முல்லைக்கலியில் சிவன் தொன்மம் இடம்பெற்றதைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.




இந்நான்கு பாடல்களில் சிவனின் தோற்றமும், சிவன் திருவிளையாடலும் உவமையாக வந்துள்ளன. அது மட்டுமல்லாமல் விலங்கினமான காளைக்கும் கடவுள் உவமையாகிறார்.

முல்லைக்கலிப் பாடலில் (101) கரிய எருதானது கண்ணி சூடிய பொதுவனைச் சாடி, குடர் சரியக் குத்தி குலைப்பதன் தோற்றம் ஊழி முடிவிலே பசிய நிறத்தைத் தன் பாகத்தே உடைய கடவுள், உயிரினங்களை அழிக்கும் எருமைக்கடா மீது ஏறிவரும் கூற்றுவனுடைய நெஞ்சைப் பிளந்து, குடரைக் கூளிக்கு இட்டு அதன் வயிற்றை நிரப்புவது போன்றிருந்தது என்கிறார் புலவர்.

இப்பாடலில் தலைவிக்கு, தோழி தலைவன் ஒரு நாள் வந்து ஏறு தழுவி தலைவியைத் திருமணம் செய்துகொள்வான் என ஆற்றுவித்தாள். இப்பாடலின் கருத்துக்குச் சிவன் தொன்மத்தை உவமையாக்கியதன் நோக்கத்தை ஆராயும்பொழுது, ஏறுதழுவுதலில் தன் மேல் பாய்ந்த இளைஞனை குடர் சரியக் குத்திய காளை, ஊழிமுடிவில் கூற்றுவனைக் கொன்ற சிவன், பாடல் கருத்து என்ற மூன்றுக்கும் உள்ள இயைபுகள் கீழே அட்டவைணப்படுத்தப்பட்டுள்ளன.

| எண் | பாடல் கருத்து | ஏறுதழுவுதல் | சிவன் தொன்மம் |
|---|---|---|---|
| 1. | தலைவிக் கற்பு மணத்திற்காகப் போராடுதல் | எருது ஆயர்குலப் பொதுவர்களுடன் சண்டையிடுதல் | சிவன் கூற்றுவனுடன் எதிர்த்து நிற்றல் |
| 2. | தலைவி, தலைவனுக்கு ஏறுதழுவுதலில் என்ன நடக்குமோ என்று அச்சம் கொண்டாள் | காளையை எதிர்க்கும் இளைஞன் என்ன நடக்குமோ என்றும், காளை தன்னைச் சாடுபவன் ஏது செய்வானோ என்றும் அச்சம் கொண்டது | சிவனால் எதிர்க்கப்பட்ட கூற்றுவன் சிவனின் சினத்தைக் கண்டு அச்சம் கொள்ளல் |
| 3. | தலைவன் வராததால் தலைவி வருத்தமடைதல் | காளைகளும் ஏறு தழுவினவரும் புண் பெற்று வருந்தினர் | சிவனின் செய்கையால் கூற்றுவன் வருத்தம் அடைதல் |

இப்படி பல ஒற்றுமைகள் உள்ளன. முடிவாக சிவன் கூற்றுவனைக் கொன்றது போல தலைவனும் காளையை அடக்கி தலைவியை மணம் முடிப்பான் என்று தோழி மறைமுகமாய் தலைவிக்கும் கூறுவதாகக் கொள்ளலாம். தலைவன் காளையை அடக்கித் தலைவியைக் கைபிடிப்பான் என்று குறிப்பாகக் கூறுவதினால் இதை எளிதாகப் புரிய வைப்பதற்குப் புலவர் சிவன் தொன்மத்தை மிகப் பொருத்தமாக உவமையாக்கியுள்ளார் எனலாம்.

முல்லைக்கலியின் மற்றொரு பாடலிலும் (103) மேற்கண்ட பாடலின் கருத்தைப் போல தலைவன் விரைந்து வந்து ஏறுதழுவி தலைவியை மணப்பான் எனத் தோழி தலைவியை ஆற்றுவிப்பதாக உள்ளது. இப்பாடலில் உவமையாகச் சொல்லப்படும் சிவன் தொன்மத்திலும் சிவன் கூற்றுவன் நெஞ்சைப் பிளந்த நிகழ்ச்சியை உவமையாகக் கூறுகிறார்.

முல்லைக்கலிப் பாடலை எழுதிய புலவர் சோழன் நல்லுருத்திரன் இரு பாடல்களிலும் (101, 103) சிவன் தொன்மத்தை உவமையாக ஆண்டுள்ளார். பாடலின் கருத்தும் இருபாடல்களும் ஒன்றாகவே அமைந்துள்ளன.

முதல் முல்லைக்கலிப் பாடலில் (101),

> ***இடரிய ஏற்று எருமை நெஞ்சு இடத்து இட்டு***
> ***குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்*** (101: 24-25)

என்று கூறி எருதின் தோற்றத்திற்கு ஊழிக்கால முடிவிலே கூற்றுவன் நெஞ்சைப் பிளந்த சிவன் போலிருந்தது என்கின்ற புலவர், முல்லைக்கலி (103)யின் மற்றொரு பாடலில்,

> ***ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடத்து இட்டு***
> ***சீற்றமொடு ஆர்உயர் கொண்ட ஞான்று, இன்னன்கொல்***
> ***கூற்று என உட்கிற்று என் நெஞ்சு***

என்று தோழி கூற்றாக இரு பாடல்களிலும் புலவர் கூறுகிறார். முதல் பாடலில் ஊழிக் காலத்தில் உயிர்களைக் கவரும் கூற்றுவன் நெஞ்சைப் பிளந்த சிவன் போன்று எருது இருந்தது என்கிறார். இரண்டாவது பாடலில் (103) எருதை அடக்க முயன்ற பொதுவனுக்கு கூற்றுவனுடைய நெஞ்சத்தைக் காலால் உதைத்துப் பிளந்திட்டுச் சீற்றத்துடன் உயிரைப் பறித்த இறைவன் சிவன் இப்படித்தான் இருந்தானோ என்று நெஞ்சம் அச்சம் கொண்டது எனக் கூறுகிறார்.

முதல் பாடலில் (101) எருதுக்கு சிவன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. இரண்டாவது பாடலில் (103) அதே சிவன் தொன்மம் எருதை அடக்கும் பொதுவனுக்கு உவமையாக வருகிறது. ஆனால் இப்பாடலில் கூற்றுவனுடைய நெஞ்சத்தைக் காலால் உதைத்துப் பிளந்திட்ட சிவன் என்று கூறுகிறார். இதில் ஊழிக்காலம் என்று குறிப்பிடாததால், சிவன் மார்க்கண்டேயர் பொருட்டு கூற்றுவனின் நெஞ்சைக் காலால் உதைத்துப் பிளந்திட்ட தொன்மத்தை எடுத்துக்கொண்டு இப்பாடல் கருத்தோடு, ஒப்புமைப்படுத்திக் காணும்பொழுது பல செய்திகள் புலனாகின்றன.

**மார்க்கண்டேயன் வரலாறு**

மார்க்கண்டேயனின் ஆயுள் பதினாறு வயது வரைத்தான் என்பது விதி. மார்க்கண்டேயனுக்குப் பதினாறு வயதாகும்போது, அவரின் தாய் தந்தையர் கலங்கினர். ஏற்கனவே மிகுந்த சிவபக்தியுடைய மார்க்கண்டேயர் சிவபூசை செய்தார். அச்சமயம் கூற்றுவன் மார்க்கண்டேயரின் உயிரைக் கவர்ந்து செல்ல வந்தான். மார்க்கண்டேயர் சிவலிங்கத்தை இறுகக் கட்டிக் கொண்டு சிவன் நாமத்தை உச்சரித்தார். அப்போது கூற்றுவனால் மார்க்கண்டேயர் மீது வீசப்பட்ட பாசக்கயிறு சிவன் மேல் விழுந்தது. அதுகண்டு சிவன் கோபங்கொண்டு கூற்றுவனை காலால் எட்டி உதைக்க, கூற்றுவன் மாண்டுபோனான். பின்னர் இறைவன் மார்க்கண்டேயருக்கு நீண்ட ஆயுளை நல்கி அருள் புரிந்தார் என்று மார்க்கண்டேய புராணம் சொல்கிறது. இத்தொன்மம் உண்மை என்பதற்குச் சான்றாக, ***திருக்கடவூர் வீரட்டானம் என்ற ஊர் சிவன் மார்க்கண்டேய முனிவர் பொருட்டு யமனை உதைத்த தலமாகும்*** என்று கூறப்பட்டுள்ளதைக் காட்டலாம்.

பாடல் கருத்துக்கும் இப்பாட்டில் கூறிய தொன்ம உவமைக்குமுள்ள ஒற்றுமைகளாவன:

பாடல்

| | உவமை | கருத்து |
|---|---|---|
| 1. | மார்க்கண்டேயரைக் காக்கும் பொருட்டு சிவன் கூற்றுவனை உதைத்தான் | பெண்ணை மணக்கும் பொருட்டு இளைஞன் காளையை எதிர்த்துப்போரிட்டான். |
| 2. | சிவன் மார்க்கண்டேயரின் பக்திக் காக கூற்றுவனை எதிர்த்தார் | தலைவன் தலைவியின் மீது கொண்ட காதலுக்காக ஏறுதழுவுதலில் காளையை எதிர்த்தான் |
| 3. | சிவபிரான் கூற்றுவனின் நெஞ்சைப் பிளந்தார் | இளைஞன், காளையை வருத்தி அதன் மேல் ஏறிய செயல். |
| 4. | கூற்றுவன் மார்க்கண்டேயர் உயிரை எடுக்க முனைந்தான் | எருது இளைஞனைக் கொல்ல முயன்றது |
| 5. | கூற்றுவன் தன் உயிரை மாய்க்க வந்தபோதும் மார்க்கண்டேயன் சிவனைப் பற்றிக்கொண்டான் | எருது தன்னை தாக்கிய போதும் துணிச் சலுடன் இளைஞன் அதைப் பற்றிக் கொண்டு அடக்க முயன்றான். |

இப்படியாகப் பாடல் காட்சிக்கு உவமையாக வந்த சிவன் தொன்மம் மிகச் சிறப்பாகப் பொருத்தி வருவதால் புலவர் இத்தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்தியிருக்கிறார் எனலாம். காளைக்குச் சிவனை உவமையாக்கியதும் அல்லாமல் சிவன் கூற்றுவனைச் சினத்தால் உதைத்த தொன்மத்தை பயன்படுத்தியிருப்பதன் நோக்கம் யாதெனில் காளையின் சீற்றத்தின் தன்மையை பல வார்த்தைகள் கொண்டு விளக்காமல் தொன்மத்தைக் கூறிப் பொருத்தமாய் விளக்குவதற்கு புலவர் கையாண்ட உத்தி ஆக இருக்கலாம்.

மற்றொரு முல்லைக்கலிப் பாடலில் (104) எருதின் வலிமைக்கு முக்கண்ணனாகிய சிவபெருமானின் உருத் தோற்றத்தினை உவமையாக்கியுள்ளார். அப்பாடல் வரி:

*முக்கணான் உருவே போல் முரண் மிகு குரலும்* (104: 12)

என்று எருதிற்குச் சிவன் உவமையாகிறார். இப்பாடலில் எருதின் வலிமைக்கு, சிவன் போன்ற வலிமையுடையது என்று கூறாமல், முக்கண்ணனாகிய சிவனின் உருவினை ஒத்த வலிமையையுடைய எருது என்கிறார்.

இப்பாடலில் எருதுக்கு உவமையாக சிவன் சொல்லப்பட்டதால், இவ்விரண்டிற்குமுள்ள பொது கருத்துக்களை ஆராயும்போது சில செய்திகள் கிட்டுகின்றன.

1. சிவனின் வாகனம் காளை என்று புராணம் கூறுகிறது. சிவனையே சுமந்து நிற்கும் காளை வலிமையுடையதாக இருக்க வேண்டும். ஆகவே புலவர் காளையின் வலிமைக்கு சிவனின் வலிமையை உவமையாக்கியிருக்கலாம்.

2. படைத்தல், காத்தல், அழித்தல் என்று மூன்று தொழில்களை முறையே பிரம்மன், திருமால், சிவன் செய்வதாகப் புராணம் கூறுகிறது. ஏறுதழுவுதல் நிகழ்ச்சியில் தன்னை அடக்க முயற்சிப்பவனைக் குத்திக் கொல்கிறது காளை. இவ்விடத்தில் காளை அழித்தல் தொழிலை நிகழ்த்துவதால், புலவர் சிவனை உவமையாக்கியுள்ளார் என்றும் அனுமானிக்கலாம்.

இப்பாடலில் வரும் சிவன் தொன்மத்திற்குப் பாடல் கருத்தை தொடர்பு படுத்தி பார்க்கும்பொழுது அது,

1. முக்கண்ணனாகிய சிவன் என்றதால், சிவனின் மூன்றாவது கண்ணாகிய நெற்றிக் கண் எப்பொழுதும் திறப்பதில்லை. சினம் ஏற்பட்டால்தான் அக்கண் திறக்கும். அதுபோல ஏறுதழுவுதல் என்பது வீரத்தை வெளிப்படுத்தும் காரணத்திற்காக நடக்கும்போது, காளையானது தன்னை அடக்க வரும் பொதுவனை சினங்கொண்டு தாக்கும்.

2. சிவனின் மூன்றாவது கண் திறந்தால் எதிரேயிருப்பவை எரிந்து இல்லாது போகும். அதுபோல பொதுவன் காளையை அடக்கி வெற்றி பெற்றால் தலைவியை

மணப்பது மூலம் அலர் இல்லாது போகும் என்ற இவ்வகையிலும் இத்தொன்மப் பயன்பாடு சிறப்புற ஆளப்பட்டுள்ளது.

சிவன் தொன்மத்தை உவமையாக்கிய புலவர் முக்கண்ணனாகிய சிவன் என்று கூறியதன் மூலம் பாடல் கருத்துக்கும், உவமிக்கப்படும் எருதுக்கும் சிறப்புச் சேர்க்கவே தொன்மத்தை பயன்படுத்தியுள்ளார். சிவனின் மறுபெயர் முக்கண்ணன் என்று புராணம் கூறுகிறது. அக்காலத்தில் இறைவனின் கதைகளை மட்டுமல்லாமல், இறைவனின் அங்கங்கள் பற்றியும் தெரிந்துள்ளனர். அதன் சிறப்பையும் தெரிந்து வைத்துள்ளனர். அதனால் புலவரும் இலக்கியத்தில் மேம்பட்ட கருத்துக்கு உவமையாக அவற்றைப் பயன்படுத்திப் பதிவு செய்திருக்கிறார்.

அடுத்ததாக மற்றொரு முல்லைக்கலிப் பாடலில் (105) ஏறுதழுவுதலுக்கு முன் செய்யப்படும் சடங்குகளும், அதற்கான ஏற்பாடுகளும் கூறப்படுகின்றன. இப்பாடலில் எருதிற்குச் சிவனை உவமையாக்கியுள்ளார் புலவர்.

***பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற்று அணிபோல***
***இரும்பினர் எருத்தின் ஏந்து இமில் குராலும்*** (105: 13-14)

என்கிறது பாடல். பெரும் பெயர் கொண்ட கணிச்சிப்படையோனின் நீலமணித் திருமிடற்றின் அழகு போல் இருந்தது. ஏந்தின திமிலையுடைய கபில நிறமுடைய எருது என்கிறார் புலவர். நீலமணித் திருமிடற்றை உடையவன் என்று சிவனைக் குறிப்பிடுகிறார். ஒரு முறை தேவர்களும், அசுரர்களும் அமுதம் வேண்டி மேருவை மத்தாகவும், வாசுகி என்ற ஐந்து தலை நாகத்தைக் கயிராகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனர். அப்போது வாசுகி நாகமானது நஞ்சைக் கக்கியது. அதை மற்றவர்கள் உண்டுவிடக் கூடாது என்று சிவன் அந்நஞ்சைத் தான் எடுத்து வாயில் போட்டு விழுங்கினார். இதைக் கண்ட உமை தன் கரங்களால் சிவனின் கண்டத்தைப் பிடித்தாள். இதனால் நஞ்சு அக்கண்டத்திலேயே நின்று விட்டது.

அதனால் சிவனின் கழுத்து நீல நிறமானது. இதிலிருந்து சிவபெருமான் நீலகண்டன் என்று அழைக்கப் பெற்றார்.

புலவர் எருதின் சிறப்பை நன்கு வலியுறுத்த வேண்டுமென்று சிவன் தொன்மத்தை உவமையாக்கியுள்ளார். ஏறுதழுவுதலில் ஆயர் ஏறுதழுவத் தொடங்கியதும் எருதுகள் வரிசையாக வந்து பொதுவரை நீண்ட மருப்பினால் குத்திச் சாடி தழுவுவதற்கு இடங்கொடாமல் அவரை நீக்கி நிறுத்தின.

***. . . . . . . . . . . . . கோட்டுவாய்ச் சாக்குத்தி***
***கொள்வார்ப் பெறாஅக் குரூஉச் செகில் காணிகா –***
***செயிரின் குறை நாளால் பின் சென்று சாடி***
***உயிர் உண்ணும் கூற்றமும் போன்ம். . .***

என்ற வரிகளில் உள்ளபடி எருது தன்னை அடக்க முயலுகின்ற ஆயரைக் குத்திக் கொன்ற செயல் வாழ்நாள் குறைகின்ற காலத்தே அவர் பின்னே சென்று வருத்தி உயிரை உண்ணும் கூற்றுவனைப் போன்றிருந்தது என்கிறார் புலவர். இப்படிப்பட்ட எருதிற்குச் சிவன் உவமையாகிறார். சிவன் ***சலந்தரன் கர்வமடைந்து தம்மிடம் யுத்தஞ்செய்ய எண்ணி கையிலையை நோக்கி வருகையில் அவன் முன் விருத்தராய்ச் சென்று சக்கரங் காலால் கீறியெடுப்பித்து, அச்சக்கரத்தால் அவனுடலைப் பிளப்பித்துச் சலந்தராரி யெனப்பட்டார்.***[8] இதிலிருந்து அறியப்படும் செய்தியானது, சிவனைப் போல எருதும் தன்னை எதிர்ப்பவர்களைக் கூற்றுவன் போலக் கொன்றுவிடும் என்று கருத்துத் தோன்றுகிறது.

இதனால்தான் புலவர் எருதின் சீற்றத்திற்கு நேரடியாக உவமை கூறாமல், நீலமணித் திருமிடற்றின் அழகு போலுள்ள ஏந்தின திமிலையுடைய கபில நிறத்தைக் கொண்ட எருது என்று ஏறுதழுவுதலில் எருதின் செயல் எப்படியிருக்குமென்று கூறுவதற்கு ஒரு வரியில் சிவன் தொன்மத்தை

உவமையாக்கியுள்ளார். சிவன் பிறருக்காகத் தாம் நஞ்சுண்ட போதிலும் தன்னை எதிர்த்த அசுரர்களைக் கொன்று வெற்றி கண்டவர். இதுபோலக் காளையும் பிறருக்காக உழைக்கின்றது ஏறுதழுவுதல் என்று வரும்போது, தன்னை அடக்க முயல்பவரை சாவக் குத்திக் கொல்கின்றன. இத்தன்மையிலும் சிவன் தொன்மத்தோடு பாடல் கருத்து ஒத்துப் போகுமாறு புலவர் பாடலை அமைத்துள்ளமை சிறப்பு எனலாம்.

சிவன் தொன்மம் பயின்றுவரும் மற்றுமொரு நெய்தற்கலிப் பாடலில் தலைவி பிரிவுத் துன்பத்தில் வாடுகிறாள். நாணம் கடந்து, பொழுதொரு புலம்பி, அறிவு அழிந்து மொழிந்தாள். எப்போது தம் இல்லத்தில் அவனைக் காண்பேனோ என்று கூடலிழைத்தாள். கூடலிழைத்தல் என்பது கண்களை மூடிக்கொண்டு தலையில் வட்டமிடுதலாகும். முடிவில் வட்டம் முழுமை பெற்றால் தலைவன் வருவான் என்றும் வட்டம் முழுமை பெறாவிடில் தலைவன் வரமாட்டான் என்றும் பொருள் கொள்ளும் மரபு அக்காலத்தில் இருந்துள்ளதை அறிய முடிகிறது. இதைப் புலவர்,

***கோடு வாய் கூடாப்பிறையை, பிறிது ஒன்று***
***நாடுவேன், கண்டனென்; சிற்றிலுள் கண்டு*** (142: 24-25)

தலைவியால் வரையப்பட்ட வட்டம் முழுமை பெறாமல் பிறை வடிவமாக நின்று விடுகிறது. இதைக் கண்ட தலைவிக்கு வானிலுள்ள பிறைச் சந்திரன் நினைவுக்கு வருகிறது. வானத்திலுள்ள பிறை ஒருநாள் முழுமதியாகும். அம்முழுமதி தலைவனைப் பிரிந்திருக்கும் தன்னை வருத்தும் என்று தன் ஆடையால் அப்பிறையை மூடுகின்றாள். அவ்வாறு பிறையை மறைத்ததால் நீலமணி மிடற்றையும், கொன்றை மாலையையும் உடைய சிவபெருமான், முன்பு தான் சூடிய அந்தப் பிறையைத் தேடுவானோ? எனக் கேட்பதாகப் பாடல் அமைந்துள்ளது. அவ்வரிகளாவன:

*. . . . . . . ஆங்கே*

*ஆடையான் மூஉய் அகப்படுப்பேன் சூடிய*

*காணான், திரிதரும்கொல்லோ – மணிமிடற்று*

*மாண்மலர்க் கொன்றையவன்?* (142: 25-27)

என்கிறார் புலவர்.

1. சிவன் நீலமணி மிடற்றை உடையவன்.
2. சிவன் கொன்றை மாலையை விரும்பி அணிபவன்
3. பிறை சூடிய சிரத்தைக் கொண்டவன்

போன்ற புராணச் செய்திகளைப் புலவர் பாடலில் பதிவு செய்கின்றார். மேலும் இப்பாடலில் (142) தலைவி, சூரியனை நோக்கி அது மலைஉச்சியை அடையும்போது தன் தலைவனைக் கண்டுபிடித்துத் தரும்படி கூறுகிறாள். அவ்வரிகளாவன,

*கதிர் பகா ஞாயிறே! கல் சேர்தி ஆயின்*

*அவரை நினைத்து, நிறத்து என்கை தீட்டித்*

*தருகுவை ஆயின், தவிரும்* (142: 37-39)

மேலும் தன் தலைவனைத் தேடுவதற்குச் சுடரின் ஒளிக் கதிர்களைக் கடன் கேட்கிறாள். இதைப் புலவர்,

*மைஇல் சுடரே! மலைசேர்தி நீ ஆயின்,*

*பௌவநீர்த் தோன்றிப் பகல் செய்யும் மாத்திரை*

*கைவிளக்காகக் கதிர் சில தாராய்!* (142: 41-43)

என்கிறார். இறுதியில் தலைவன் வந்துவிட தலைவி இன்பமடையவதாக பாடல் முடிகிறது.

. . . . . . . . . . . . . . எல்லீரா
நல்கிய கேள்வன் இவன் – மன்ற மெல்ல
மணியுள் பரந்த நீர் போலத் துணிவாம்
கலம் சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தளிந்து நலம்பெற்றாள்

என்று பாடல் கூறுகிறது. இப்பாடலில் இயற்கையில் நடவாத நிகழ்ச்சிகள் பல இடம்பெறுகின்றன. அவை:

1. பிறை வளராமலிருக்க ஆடையால் மறைப்பது,

2. பிறையைக் காணாமல் சிவன் தேடுவானோ எனக் கேட்பது,

3. சூரியனிடம் தலைவனைக் கண்டுபிடித்து தரச் சொல்வது,

4. சுடரின் ஒளிக்கதிர்களைத் தலைவனைத் தேடுவதற்குக் கடன்கேட்பது,

இதுபோன்ற கருத்துகளை பாடலில் அமைத்துப் புலவர் பாடியதன் நோக்கத்தை ஆராயும்பொழுது தலைவனைப் பிரிந்த தலைவிக்கு பிரிவுத் துன்பத்தின் தாக்கத்தினால் நடக்க இயலாத அரிய செயல்களும், நடைமுறைக்கு உகந்த செயல்களாகத் தோன்றும் என்று புலவர் கூறாமல் கூறுவதற்காக இப்பாடலை இவ்வாறு பாடியிருக்கலாம். இப்பாடலின் கருத்தோடு சிவன் தொன்மத்தை ஒப்பீட்டு நோக்கும்போது புலவரின் நோக்கத்தைத் தெள்ளத் தெளிவாக அறியமுடிகிறது. அவை,

1. சிவனைப் பிறையின்றிக் காண இயலாது. அதுபோல, தலைவியும் தலைவன் இல்லாது வாழ மாட்டாள் எனக் குறிப்பால் உணர்த்தப் புலவர் சிவன் தொன்மத்தைக் கையாண்டிருக்கலாம்.

2. ஆடையால் மறைத்த பிறையைச் சிவன் காணாது தேடுவானோ, எனக் கேட்பது மூலமாய்ப் புலவர், பிரிந்த தலைவனைக் காணாது தலைவி தேடுகிறாள் என்பதற்கு பொருத்தமாக அமைந்துள்ளது தெரிகிறது.

3. சிவன் மேல் மனிதப் பண்பை ஏற்றிப் பிறை காணாது தேடுவான் என்று கூறுவதன்மூலம் தலைவியின் பிரிவுத் துன்பத்திற்கு முன் கடவுள், மனிதன் எனும் பாகுபாடு கிடையாது என்பதைப் புலவர் சுட்டாமல் சுட்டுகிறார் என்பதாகக் கொள்ளலாம்.

பிரிவுத் துன்பத்தில் ஆட்பட்டிருக்கும் தலைவிக்குச் சிவன் கடவுள் என்றும், அவன் மனிதன் போல, தன் பொருளைத் தேடும் இயல்பிற்கு அப்பாற்பட்டவன் என்றும் இவையெல்லாம் புலப்படாத அளவிற்குத் தலைவி துன்பத்தில் உள்ளாள் என்பதைக் கூற புலவர் கையாண்ட தொன்ம உத்தியாக இதனைக் கொள்ளலாம்.

இன்றைய காலகட்டத்திலும் ஏதேனும் துன்பம் வரும்பொழுது கடவுளை அவன் இவன் என ஒருமையில் விளிப்பது மனிதர்களின் பழக்கமாக உள்ளது.

ஆக புலவர் ஒரு தொன்மத்தைக் கூறி பல கருத்துகளை ஊற்று நீர் போன்று தருகிறார். இந்த வகையில் தொன்மம் சங்க இலக்கியத்தில் பெரும்பங்கு வகிக்கின்றது எனலாம்.

சிவன் தொன்மம் உவமையாகப் பயின்று வரும் மற்றுமொரு நெய்தற் கலிப்பாடலில் (150) தலைவன் பொருள் ஈட்டப் போய்விடுகிறான். தலைவி பிரிவுத் துன்பத்தால் வாடுகிறாள். அவளை ஆற்றுப்படுத்தி தோழி கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

கங்கையைச் சடையிலே மறைத்துள்ள சிவன் போன்று நின் நிறம் பசந்து, நீ வருந்துமாறு தலைவன் கைவிட மாட்டான். அழகிய வடிவிடைய ஏற்றினை ஊர்தியாகக் கொண்ட சிவன் போன்று நின் நிறம் இழந்து போதலை தலைவன் விரும்பமாட்டான். கோடைக்காலத்தே வெம்மை கொண்ட பரந்து குன்றுகளையுடைய காட்டைக் கடந்து பொருள் ஈட்டச்செல்லும் தலைவன், பிறைத் திங்களைத் தலையில் சூடிய சிவனின் பொன்னாற் செய்த தலைக் கோலங்கள் தாழ்ந்து தொங்கினாற்போல நின் கூந்தல் காய்கின்ற காட்சியைக் கண்டால் தலைவன் பொருள் ஈட்டச் செல்ல மாட்டான் என்று தோழி கூறுகிறாள்.

இதனைப் பாடல் வரிகள்,

> *'ஓதுக்கு அரியநெறி' என்னார் ஒண் பொருட்டு அகன்றவர்*
> *புதுத்திங்கட் கண்ணியான் பொன்பூண் ஞான்று அன்ன, நின்*
> *கதுப்பு உலறும் கவினையாய் காண்டலும் காண்பவோ?*
>
> (150: 16-18)

இவ்வாறு புலவர் தோழியின் கூற்றாகக் கூறி இறுதியில் பெறுதற்கரிய ஆதிரை நாளினையுடைய சிவபெருமானின் திருமார்பு அழகுபெற மலர்ந்த செண்பகம் பருவம் பொய்யாதவாறு பூப்பதுபோலத் தலைவன் பருவங்கழிதற்கு முன்னரே வருவார் எனத் தோழி தலைவிக்கு ஆறுதல் அளிக்கிறாள், இதனை,

> *அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த*
> *பெருந்தண் சண்பகம் போல, ஒருங்கு அவர்*
> *பொய்யார் ஆகுதல் தெளிந்தனம்*
> *மை ஈர் ஓதி மடமொழியோயே* (150: 20-23)

என்று பாடல்வரிகள் கூறுகின்றன.

இப்பாடலின் தலைவன் கடந்துபோகும் வெஞ்சுரத்தின் வெம்மைக்கு உவமையாகச் சிவன் திரிபுரத்தை எரித்தபோது ஏற்பட்ட வெம்மையுடைய நெருப்பைக் கூறுகிறார். கொடுமைகள் செய்த அவுணர்களின் திரிபுரம்இருந்த கோட்டைகளைச் சிவன் எரித்தார் என்பது புராணம் கூறும் செய்தியாகும். இதுபோன்று தலைவனும் காட்டில் பரவியிருந்த நெருப்பையும், கொடூர விலங்குகளையும், தெளிவில்லாத கடினமான மலைப்பாதையையும் கடந்து செல்கிறான். சிவன், முப்புரம் இருந்த கோட்டைகளை வீழ்த்தி வெற்றி பெற்றது போலத் தலைவனும் காட்டில் நிலவும் கொடுமைகளைக் கடந்து செல்வான் என்று தோழி கூறுகிறாள். தோழி வாயிலாகப் புலவர்கூறும் இக்கூற்று தலைவியின் அச்சத்தைப் போக்குவதற்காகக் கூறப்படுகின்றது எனலாம். கொடுமையை அழிக்கச்

சிவன் திரிபுரம் எரித்து வெற்றிகண்டது போல, வறுமையை அழிக்கத் தலைவன் பொருள் ஈட்டச் சென்று வெற்றியுடன் திரும்புவான் என்று தலைவி அவள் கொண்ட துன்பத்தைக் கைவிட புலவர் பயன்படுத்தும் கருவியாகத் தொன்மம் விளங்குகின்றது எனலாம்.

இப்பாடலில் புலவர், தோழி கூற்றாக அமையும் மற்றொரு சிவன் தொன்மத்தைக் கூறுகிறார். தலையில் கங்கையை மறைத்துள்ள சிவன் போன்று நின்நிறம் பசந்து நீ வருந்துமாறு உன்னைத் தலைவன் கைவிட மாட்டான் என்கிறார். சிவன் போன்று நின் நிறம் பசந்து போகுமாறு என்று கூறாமல், தலையில் கங்கையை மறைத்துள்ள சிவன் போன்று நின் நிறம் பசந்து போகுமாறு என்று புலவர் கூறுவதன் நோக்கத்தை ஆராயும்பொழுது, தலைவனின் உயர்வை மேம்படுத்திக் கூறப் புலவர் இத்தொன்மத்தைக் கையாண்டுள்ளார் எனலாம்.

சிவன், இமயத்தில் ஊற்றெடுத்து வந்த கங்கையின் வேகத்தைக் கட்டுப்படுத்த தன் தலையில் தாங்கிக் கொண்டு பின்பு பூமியில் கங்கையைத் தவழவிட்டு மண்ணுலகை வாழ வைத்தார் என்பது புராணம் கூறும் செய்தியாகும். இதுபோன்று தலைவனும் பொருள் ஈட்டுதல் எனும் கடமையை தன் சிரமேற்கொண்டு சென்று, திரும்பி வந்து தலைவியை வாழ வைப்பான் என்று கூறுவதற்காகப் புலவர் மேற்கண்ட சிவன் தொன்மத்தை கையாண்டுள்ளார் எனலாம்.

*பெருந்தண் சண்பகம் போல, ஒருங்கு அவர்*
*பொய்யார் ஆகுதல் தெளிந்தனம்* (150: 21-22)

என்ற வரிகளில் பருவம் பொய்க்காது மலரும், சிவனின் மார்பில் சூடியிருக்கும் குளிர்ந்த மலர்ந்த செண்பகம் என்று புலவர் கூறியுள்ளதன் நோக்கம் யாதெனின்,

1. மற்ற எத்தனையோ மலர்களிருக்க, செண்பகம் சிவனின் மார்பில் சூடும் சிறப்புப் பெற்றதைப் போலத் தலைவன் தலைவிக்கு அத்துணைச் சிறப்புடையவன் என்பதைக் கூறி இத்தகு சிவன் தொன்மத்தைப் புலவர் கையாண்டிருக்கலாம்.

2. மலர்ந்த குளிர்ந்த செண்பகம் மனத்திற்கும் கண்களுக்கும் மகிழ்ச்சி ஊட்டுவது போல, தலைவனின் வருகை தலைவிக்கு மகிழ்ச்சி ஊட்டும் என்பதை அழுத்தமாகப் புலவர் இத்தொன்மம் மூலமாய்ப் பதிவு செய்துள்ளார்.

மேலும் இப்பாடலில் புலவர்,

> **உருவ ஏற்ற ஊர்தியான் ஒள் அணி நக்கன்ன நின்**
> **உரு கிழ்ந்து இனையை பாய் உள்ளது உள்ளுபவோ?**
>
> (150: 13-14)

என்று பாடுகிறார். பிறைத் திங்களைச் சூடியவனான சிவனின் பொன்னாற் செய்த தலைக் கோலங்கள் தாழ்ந்து தொங்கினாற் போன்று தலைவியின் கூந்தல் காய்கின்ற படி தலைவன் வாட விடமாட்டான் என்று தோழி கூற்றில் புலவர் பாடியுள்ளார்.

புற இலக்கியத்திலும் சிவன் உவமையாகக் காட்டப்படுகிறார். எட்டுத்தொகை நூல்களுள் புறப்பொருளைக் கூறும் அதாவது, வீரம், கொடை, வாழ்வியல் முறைகள், அரசர்களின் மாண்பு ஆகியவைப் பற்றிப் பாடும் நூல் புறநானூறு ஆகும். இவ்விலக்கியத்தில் அரசர்களுக்குச் சிவன் தொன்மம் உவமையாக வருகின்றது. பாடப்படும் பாட்டுடைத் தலைவனின் முக்கியத்துவத்தைச் சிறப்பித்துக் கூற, சிவன் தொன்மத்தை உவமையாக்கி, அதன் மூலம் சிவன் பற்றிய அரிய தகவல்களைப் புலவர்கள் பதிவு செய்கிறார்கள்.

புறநானூற்றில் கடவுள் வாழ்த்து சிவனைப் பற்றி உள்ளது. மேலும் சிவன் அணியும் கொன்றை மாலை, ஊர்தியாகிய ஆனேறு, நீல நிறக் கண்டம்

உடையவன், அந்தணரால் போற்றிப் புகழப்பட்டவன், ஒரு பாகத்தே பெண் வடிவம் கொண்டவன் பிறையைச் சூடியவன் என்று பலவாறாக சிவபெருமானின் சிறப்புகள் புறநானூற்றில் சொல்லப்பட்டுள்ளன.

***புறநானூற்றைப் பொருத்தமட்டில் முதல் பாடலான கடவுள் வாழ்த்துப்பாடல் புறநானூறு தொகுக்கப்பட்ட காலத்தில் அத்தொகைக்காக எழுதிச் சேர்க்கப்பட்டது என்று தெரிகிறது.***[9] இக்கூற்றுப்படி கடவுள் வாழ்த்து பின்னர் சேர்க்கப்பட்டது என்றாலும், புறநானூற்றின் பாடல்கள் உவமைகளாகச் சிவன் தொன்மத்தைக் கூறுவதிலிருந்து, சிவன் பற்றிய செய்திகளும், கதைகளும் அந்நாட்களில் மக்களிடையே பேசப்பட்டு வந்திருக்க வேண்டும் என்பதும், அதனால்தான் புலவர்களும் அவற்றைத் தங்கள் கருத்துக்களை நன்கு வலியுறுத்தப் பயன்படுத்தியுள்ளனர் என்பதும் தெரியவருகின்றது.

புறநானூற்றுப் பாடல் ஒன்று (55) பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனின் சிறப்புகளைச் சொல்கிறது.

***ஓங்கு மலைப் பெருவில் பாம்புஞாண்***
***ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி***
***பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த***
***கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்***
***பிறைநுதல் விளங்கும் ஒருகண் போல***

என்கிறார் மருதனிளநாகனார். பாண்டியன் நன்மாறன் மூவேந்தருள் உயர்ந்தவன் என்று கூற வந்த புலவர் முப்புரத்தை எரித்துத் தேவர்களுக்கு வெற்றியைத் தேடி தந்த சிவனின் பிறை சேர்ந்த நெற்றியில் விளங்கும் கண் போன்ற சிறப்பை உடையவன் என்கிறார். சிவனைப் பாண்டியனுக்கு உவமை கூறும் புலவர் திரிபுரம் எரித்த சிவன் எனும் தொன்மத்தைக் கையாண்டுள்ளார்.

திரிபுரம் எரிந்த கதை

*தாரகாசூரன் குமரராகிய வித்துற்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் இவர்கள் மூவரும் சிவ பூஜாபலத்தால் பொன், வெள்ளி, இரும்பு கோட்டைகளைப் பெற்று, அக்கோட்டைகளுடன் பறந்து சென்று தேவர்களை வருத்தியிருந்தனர். இதனால் தேவர் சிவமூர்த்தியிடம் முறையிட விஷ்ணுமூர்த்தி, சூர்யசந்திரர்களைத் தேருருளை யாகவும், காலம், வானம், ஐம்பூதம், இந்திரியம் இவற்றை முறையே பார், மேலிடம், நுகம், முன் கொம்பு, கொம்புக்காதாரப் பொருள்களாகவும் புராணங்களைப் படமாகவும், உலோகாலோக பர்வதம் படியாகவும், அஷ்டகுல பர்வதங்கள் விதானமாகவும், அண்டமுகடு கொடுஞ்சியாகவும், இடைவெளி தட்டாகவும்,வேதங்களைக் குதிரை களாகவும், வாசுகியை நாணாகவும், மேருவை வில்லாகவும், பிரமனை முட்கோல் பிடித்துத் தேரைச் செலுத்தும் சாரதியாகவும் செய்வித்து தேர் முடிந்ததென்று கூறினர். சிவமூர்த்தி தேர்மேல் ஆரோகணித்து வில்லைக் கையிலேந்தி விஷ்ணு மூர்த்தியைப் பாணமாக்கி எய்யத் தொடங்குகையில் விஷ்ணுமூர்த்திக்கு மனதிலுதித்த இறுமாப்பை யெண்ணித் திரிபுரத்தை நோக்கியும் இவரது எண்ணத்தை எண்ணியும் சிவன் சிரித்தார். இச்சிரிப்பின் சுவாலையால் திரிபுரம் தீப்பற்றப்பட்டது. இதில் மேற்கூறிய மூன்று அசுரர் சிவபூசை விடாமல் இருந்தவராதலால் தீப்படாமல் காக்கப்பட்டனர்.*[10]

இப்பாடலில் புலவர் பாண்டிய நன்மாறனைப் புகழ்ந்து கூறவே இச்சிவன் தொன்மத்தைக் கூறுகிறார். சிவனின் நெற்றிக்கண் போன்றவன் பாண்டிய மன்னன் என்கிறார் புலவர். சிவனின் இருகண்களை விடுத்து நெற்றிக்கண்ணை உவமையாகக் காட்டுவதன் நோக்கத்தை ஆராயும்பொழுது அறியப்படும் செய்திகளாவன:

1. நெற்றிக்கண் மற்ற கண்களை விடச் சிறப்பானது. எப்பொழுதும் மூடியிருக்கும் நெற்றிக்கண்ணைத் திறந்து நோக்கினால் எதிரே இருக்கும் எதுவும் இல்லாது அழிந்துபோய்விடும். இதுபோன்று பாண்டிய மன்னன் பிற மன்னர்களை விடச் சிறப்பானவன் என்பதை வலியுறுத்த புலவர் இத்தொன்மத்தைக் கையாண்டுள்ளார் எனலாம்.

2. சிவன் சினம் கொள்ளும்போது நெற்றிக்கண் திறக்கப்பட்டு எதிரே இருப்பவரை அது அழித்துவிடும். அதுபோல பாண்டிய மன்னன் சினங் கொண்டு போரில் ஈடுபட்டால், அவன் எதிரிகள் அழிந்துபோய்விடுவர் என்பதை வலியுறுத்த புலவர் இந்தச் சிவன் தொன்மத்தை எடுத்தாண்டுள்ளார் என்று கூறலாம்.

3. நீலமணி மிடற்றன் என்று சிவன் போற்றப்படுகிறார். இதற்கு காரணமான நஞ்சை அருந்திய நிகழ்வு இப்பாடலில் உள்ளது. சிவன் பிறரைக் காக்கும் பொருட்டு அந்நஞ்சைத் தான் உண்டதுபோல, அரசனும் தன் குடிமக்களுக்காக தன் உயிரைப் பற்றி எண்ணாது, தன் மக்களின் நலத்தை மட்டும் பேணிக் காக்கவேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்தவும் பாண்டிய மன்னனின் நற்பண்புகளை வெளிப்படுத்தும் விதமாகப் புலவர் இத்தொன்மத்தைப் பொருத்தமுற பயன்படுத்தியுள்ளார்.

4. பாண்டியர் மதுரையை மையமாகக் கொண்டு ஆண்டனர். மதுரையில் தமிழ்ச் சங்கம் தோன்றியது. அச்சங்கத்தில் சிவன் தலைமை வகித்ததாக வரலாறு குறிப்பிடப்படுகின்றன. அதுமட்டுமின்றி, சிவன் சொக்கநாதராக வந்து மீனாட்சியை மணம் முடித்தது இம்மதுரையில் என்று புராணச் செய்தி கூறுகிறது. ஆகவே புலவர் மதுரையை ஆண்ட பாண்டிய மன்னனுக்குப் பொருத்தமான உவமையாக சிவன் தொன்மத்தைக் கூறியிருக்கலாம்.

5. சிவன் இன்னார், இனியார் என்று பார்த்து அருள்புரிவதில்லை இறைவன் முன் அனைவரும் சமம். இதுபோல, பாண்டியன் நன்மாறனும் மக்களில் வேண்டியவர், வேண்டாதவர் என்று வேறுபாடு காட்டாமல் இருக்க வேண்டும் என்றும் எல்லோருக்கும் சமநீதி தந்தருள வேண்டும் என்றும் மறைமுகமாய் அறிவுறுத்த, சிவன் தொன்மத்தைப் பயன்படுத்தியிருக்கிறார் எனக் கூறலாம்.

6. பாண்டிய மன்னனைச் சிவனின் நெற்றிக் கண்ணிற்கு உவமையாக்கி யுள்ளார். மற்ற இரு கண்கள் எப்போதும் பார்க்கும் தொழிலைச் செய்து கொண்டிருக்கும். ஆனால் தகுந்த நேரம் வரும்பொழுதுதான் சிவபெருமானின் நெற்றிக்கண் திறக்கும். இதுபோல பாண்டியன் நன்மாறன் தேவையேற்பட்டால்தான் போருக்குச் செல்வான். (நெற்றிக்கண் சினத்தில் திறப்பதால் போரில் ஈடுபடும் மன்னனும் சினத்தோடு போர் புரிவதால் போர் என்று எடுத்துக்கொள்ளப்பட்டது.) மற்ற சமயங்களில் தன் மக்களின் நலத்தில் கவனம் செலுத்துகிறவன் என்பதைக் குறிப்பால் உணர்த்த சிவனின் நெற்றியிலுள்ள கண் போன்றவன் என்று புலவர் கூறியிருக்கலாம்.

புறநானூற்றுப் பாடலில் (56) மன்னன் நன்மாறனை நக்கீரர் புகழ்ந்து பாடுகிறார். கடவுளர் நால்வரின் திறனுக்கு மாறனின் ஆற்றலை ஒப்புமைப் படுத்தியுள்ளார் புலவர். அப்பாடல் வரிகளாவன:

> ***கூற்று ஒத்தீயே மாற்று அருஞ் சீற்றம்***
> ***வலி ஒத்தீயே, வாலியோனை***
> ***புகழ் ஒத்தீயே, இகழுநர் அடுநனை,***
> ***முருகு ஒத்தீயே முன்னியது முடித்தலின்*** (56: 11-14)

என்கிறார். அதாவது சினத்தால் கூற்றுவனான சிவனை ஒத்தவனாவாய் என்கிறார். அழிக்கும் தொழிலுக்குரியவர் சிவன் என்பதால் கூற்றுவன் என்று கூறப்படுகிறார். வலிமையில் பலதேவனைப் போன்றுள்ளாய், புகழால் பகைவரைக் கொல்லும்

மாயோனை (திருமாலை) ஒத்து விளங்குகிறாய், கருதியது முடிப்பதில் முருகனுக்கு ஒப்பாவாய் என்கிறார். இப்பாடலில் இந்நான்கு கடவுளர்களின் கொடிகளும் குறிப்பிடப்படுகின்றன.

*இடபக்கொடி – சிவன்*
*பனைமரக்கொடி – பலராமன்*
*கருடக்கொடி – திருமால்*
*மயில்கொடி – முருகன்*

இதோடு மழுவேந்திய நீலகண்டன், கொல்லும் கலப்பையை உடைய பலராமன், வெற்றி வேலேந்திய முருகன் என்ற வந்தமையால், கொடியும் ஆயுதமும் குறிப்பிடப்படுவதால், பாண்டியன் நன்மாறன் போரில் அஞ்சாது ஈடுபட்டு வெற்றி பெறுபவன் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார் என்ற கொள்ளலாம். நான்கு கடவுளர்களை உவமையாக்கி பாண்டிய மன்னன் வலிமையும், பகைவரைக் கொல்லும் வீரமும், எண்ணியதை முடிக்கும் திறனும் உடையவனாய் இருக்க வேண்டும் என்று வாழ்த்துகிறார். ஒரு மன்னனுக்கு திறனும் வலிமையும் மட்டும் போதாது. சினமும் மெய்ப்பாடும் வேண்டும் என்கிறார். சிவன் அழித்தல் தொழில் புரிபவன் என்றும் ஊழிக்காலத்தே கூற்றுவன் போன்று உலகத்தை அழித்தல் தொழில் புரிபவன் என்றும் புராணம் கூறுகின்றது. சிவன் போன்று பாண்டிய மன்னனும் சினம்கொண்டு போரில் ஈடுபட்டால் யாவற்றையும் அழிக்கும் வல்லமையுடையவன் என்பதைக் கூறப் புலவர் இத்தொன்மத்தை மிகப் பொருத்தமாய் கையாண்டுள்ளார். மற்றொரு புறநானூற்றுப் பாடலில் அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் சிவனுக்கு ஒப்புமைப்படுத்தி வாழ்த்திப் பாடுவதாக ஒரு பாடல் அமைந்துள்ளது. அதியமான் பழமைமிக்க பெரிய மலையின் பிளவிடத்தில் அரிதான உச்சியில் சிறிய இலையையுடைய நெல்லியின் இனிய கனி கிடைக்கப் பெற்றான் அக்கனி இறவா நிலையைத் தரும் அபூர்வக் கனி. அக்கனியை அதியமான் தான் உண்ணாமல் ஔவைக்குக் கொடுத்தான். அக்கனியைப் பெற்ற ஔவை அதியமானை, பால் போன்ற பிறையணிந்த

நெற்றியுடன் பொலிவுற்ற திருமுடியையும் நீலமணி போலும் கரிய கழுத்தினையும் உடைய ஒருவனாகிய சிவபெருமான் போல நிலைபெறுவாயாக என்று வாழ்த்துகிறார்.

இப்பாடலில் சிவபெருமான் நஞ்சு உண்ட தொன்மம் உவமையாக வந்துள்ளது. நஞ்சை உண்டதால் சிவன் கழுத்து கருநீலமானதை நீலமணி போலும் கரிய கழுத்தினை உடையவன் என்று குறிப்பிடப்படுகிறது. இச்சிவன் தொன்மம் அதியமானுக்கு உவமையாக வந்ததின் தொடர்புகள் ஆராயும்பொழுது பல ஒற்றுமைகள் அறியப்படுகின்றன. அவை:



மேற்கண்ட ஒப்புமைகளை மனதிற்கொண்டு புலவர் அதியமானுக்கு சிவன் தொன்மத்தை உவமையாக்கியுள்ளார் எனத் தெரிகிறது. புறநானூற்றுப் பாடல்களில் மன்னனுக்கு உவமையாக சிவன் தொன்மம் வந்துள்ளது. மன்னனைக் கடவுளோடு ஒப்புமைப்படுத்திக் கூறும் மரபு அக்காலத்தில் புலவர்களிடையே இருந்திருக்கின்றது என அறியமுடிகிறது. இதை வள்ளுவர்,

*முறைசெய்து காப்பாற்றம் மன்னவன் மக்கட்*
*நிறையென்று வைக்கப் படும்* (குறள். )

என்று நடுநிலைப்படி ஆட்சி செய்பவனே அவன் நாட்டு மக்களால் கண்காணும் இறைவனென எண்ணப்படுவான் என்று மன்னனை கடவுள் நிலையில் வைத்துப் பேசுகிறார்.

மற்றொரு புறநானூற்றுப் பாடலில் (6) பாண்டிய மன்னன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிக்கிழார் பாடுகிறார். இப்பாடலில்,

*. . . . . நின்குடையே – முனிவர்*
*முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே* (புறம். 6: 17-18)

என்று முனிவரால் வணங்கப்பெறும் முக்கட் செல்வர் எனும் சிவபெருமானின் திருக்கோயிலை உன் வெண்கொற்றக் குடை வலம் வருவதற்குரிய வகையில் தாழ்ந்து விளங்கட்டும் என்கிறார். இப்பாடலில் சிவன் தொன்மம் உவமையாக வரவில்லை. பாண்டியமன்னன் பணிவுடைய குணநலத்தைப் பெற்றவனாக இருக்கட்டும் என்பதற்காக அவ்வாறு கூறுகிறார். பேரரசன் ஆனாலும் கடவுள் முன் அடியவனே என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது. மேற்கண்ட சிவன் தொன்மம் பயின்றுவரும் பாடல்களை நோக்கும்போது பொருளுக்காக அரசனைப் புகழ்ந்து பாடும் புலவர்கள் இருந்தாலும், சிவன் தொன்மம் பயின்றுவரும் இப்பாடல்களில் அரசனின் இயல்புகள் அரசன் மேல் கொண்ட அக்கறையோடு பாடப்படுவதை அறியமுடிகிறது.

பத்துப்பாட்டில் ஒன்றான மலைபடுகடாமில் (82-83) பாட்டுடைத் தலைவன் நன்னனின் சிறப்பைக் கூறுமுகமாக, நவிரமலையில் விளங்கும் காரியுண்டிக் கடவுள் என்று கூறப்படும் நஞ்சினை உணவாகக் கொண்ட இறைவன் சிவபெருமானைப் போல் ஆற்றல் உடையவன் நன்னன் என ஆசிரியர் கூறுகிறார்.

தேவர்கள் அமுது உண்டு வாழ ஒருவரும் உண்ண விரும்பாத நஞ்சை தான் உண்டவர் சிவபெருமான். நன்னனும் தம் மக்களின் நலனுக்காக வாழ்பவன் என்பதைக் கூறாமல் கூறுகிறார். சிவபெருமான் தேவர்களை நஞ்சை தானுண்டு காத்ததுபோல, நன்னனும் தம் மக்களுக்கு காவல் தெய்வமாக இருந்து காலம் எனும் பெருங்கடலில் ஏற்படும் நஞ்சு என்ற இன்னல்களை எதிர்கொண்டு மக்களை காப்பாற்றுவான் என்று புலவர் கூறுதற்கு சிவன் தொன்மத்தை மிகப் பொருத்தமாக மையாண்டுள்ளார்.

சிவன் தொன்மங்களைப் பொறுத்தவரை அகப்பாடல்களுக்கும் புறப்பாடல்களுக்கும் நன்கு பொருந்தி வருவதைக் காணலாம்.

### சிவன் தொன்ம உவமைகள் வழி அறியவரும் கருத்துகள்

1. சிவன் தொன்மம் சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை அக இலக்கியமான கலித்தொகையிலும், புற இலக்கியமான புறநானூற்றிலும் அதிக அளவில் உவமைகளாக கையாளப்பட்டுள்ளன.
2. சங்க இலக்கியப் பாடல்களில் சிவன் தொன்மத்தைப் பொறுத்தவரை சிவன் நஞ்சு உண்ட தொன்மம் அதிக அளவில் உவமையாக வந்துள்ளன.
3. பிறை சூடிய சிவன் தொன்மம் அதிகமாக அக இலக்கியத்தில் உவமையாக வந்துள்ளன.
4. சிவன் தொன்மத்தைப் பொறுத்தவரை சங்க இலக்கியப் பாடல்களில் திரிபுரம் எரித்த தொன்மமே அதிகம் உவமையாகப் பேசப்படுகின்றன.

5. சிவனின் நெற்றிக்கண் புற இலக்கியத்தில் உவமைகளாக வந்துள்ளன.

6. பல சங்க இலக்கியப் பாடல்களில் சிவனொடு முருகன் தந்தை மகன் என்ற உறவு நிலையில் உவமையாக கையாளப்பட்டுள்ளான்.

7. சிவனும் முருகனும் ஒரு சேர பெரும்பாலும் மருதநிலத் தலைவனுக்கு உவமையாக வருகின்றனர்.

8. சிவன் நஞ்சுண்ட தொன்மம் அகப்பாடலுக்கும், புறப்பாடலுக்கும் உவமையாக வந்துள்ளன.

9. சிவன் அழித்தல் தொழிலையுடையவன் என்று உவமைவழிக் காட்டப்படுகின்றது.

10. சிவன் புராணத் தொன்மத்தைப் பொறுத்தவரை சங்க இலக்கியப் பாடல்களில் சிவனின் துணைவியான உமை பற்றிய செய்திகள் அதிகமாகக் குறிப்பிடப்படவில்லை.

## திருமால் தொன்ம உவமைகள்

சங்க இலக்கியத்தில் சிவன் தொன்மம் போலவே திருமால் தொன்மங்களும் உவமையாக வந்துள்ளன. சிவன் போன்றே திருமாலுக்கும் மேனி வண்ணம், கொடி, படை, சிறப்பு போன்றவை சங்க இலக்கியத்தில் செய்தியாக வந்துள்ளன. மேலும் திருமாலின் அவதாரக் கதைகள் செய்தியாகவும், உவமையாகவும் வந்துள்ளன. உவமைகளை மட்டும் கணக்கில் கொண்டு ஆராயும்பொழுதுதான் பாடலில் கூறப்படாத உள்ளுறைக் கருத்துகளை அறிய முடிகிறது. புலவர், திருமால் தொன்மத்தை உவமையாக்கியதின் நோக்கம் புலப்படுகின்றது. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை திருமால் தொன்மம் உவமைகளாக கலித்தொகை, நற்றிணை, அகநானூறு, புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பதிற்றுப்பத்து, முல்லைப்பாட்டு போன்றவற்றில் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் மிக அதிக அளவிலான உவமைகள், கலித்தொகை மற்றும் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன.

புறநானூற்றைப் பொறுத்தவரை அரசர்களின் வீரத்திற்கும், சிறப்பிற்கும் திருமால் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன. எடுத்துக்காட்டாக ஒரு புறநானூற்று பாடலில் (56) பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனைக் கடவுளருடன் ஒப்பிட்டுப் போற்றுகிறார் புலவர் நக்கீரனார், இப்பாடலில்,

***புகழ் ஒத்தீயே, இகழுநர் அடுநனை*** (புறம். 56: 13)

என்று புகழால் பகைவரைக் கொல்லும் மாயோனை ஒத்து விளங்குவாய் என்று பாடுகிறார். இப்பாடலில் புகழால் மாயோனைப் போன்றவன் என்று கூறாமல், பகைவரை அழித்த மாயோனைப் போன்றவன் எனப் பாடுகிறார். திருமால் தன் அவதாரங்களில் பெரும்பாலும் அரக்கர்களையும் அசுரர்களையும் போரிட்டு அழித்ததாகப் புராணம் கூறுகிறது. இவற்றைக் கீழ்க்காணுமாறு விளக்கலாம்.

| **அவதாரங்கள்** | **வதம் செய்த அரக்கர்கள்** |
|---|---|
| 1. இராமன் | இராவணன் |
| 2. கிருஷ்ணர் | கம்சன், மற்றும் அவனால் ஏவப்பட்ட பல அசுரர்கள் |
| 3. நரசிம்மர் | இரண்ய கசிபு |
| 4. வாமனன் | மாவலி |

என்று கூறலாம். திருமால் காக்கும் கடவுளாகப் புராணங்களில் காட்டப்படுகிறார். அதுமட்டுமின்றி திருமால் தன் கிருஷ்ணாவதாரத்தில் தன்னைக் கொல்லவரும் அசுரர்களை அழித்தார் எனப் பாகவதபுராணம் கூறுகிறது. இதுபோன்று பாண்டிய மன்னனும் பகைவருடன் போரிட்டு வெற்றி பெறுகிறான் என்றும், பெறவேண்டும் என்றும், திருமாலின் புகழ் போன்று பெரும் புகழை அடையவேண்டுமென்றும் வாழ்த்த, திருமாலின் தொன்மத்தை உவமையாகப் புலவர் பொருத்தமாய் கையாண்டுள்ளார்.

மன்னனின் இன்றியமையாத கடமை என்பது தம் மக்களை காப்பதாகும். திருமால் அசுரர்களுடன் போரிட்டு மக்களுக்கு காக்கும் கடவுளானது போல மன்னன் பகைவருடன் போரிட்டு மக்களைக் காக்க வேண்டும் என்பதாலேயே புலவர் பாண்டிய மன்னனைக் காக்கும் கடவுளான திருமாலுடன் ஒப்பிட்டுள்ளார் எனலாம்.

அடுத்ததாக, மற்றுமொரு புறநானூற்றுப் பாடலில் (58) திருமால் தொன்மம் உவமையாகப் பயின்று வருகிறது. சோழ மன்னன் திருமாவளவனும், பாண்டிய மன்னன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒரே இடத்தில் ஒற்றுமையாய் வீற்றிருந்ததைக் கண்டு புலவர் காரிக்கண்ணனார்,

***பால்நிற உருவின் பனைக் கொடியோனும்***
***நீனிற உருவின் நேமியோனும்***

என்று பாடுகிறார். பால்நிற பனைக்கொடி உடைய பலராமனும் நீல வண்ணத் திருமாலும் போல ஒருங்கே இருக்கிறீர்கள் என்கிறார். பலராமன் திருமாலின் கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணருக்கு அண்ணனாக ஒன்றாக வளர்ந்தவர். நீங்கள் இருவரும் ஒற்றுமையுடன் இருந்தால் கடல் சூழ்ந்த இந்த உலகத்தின் வாயிலாக உண்டாகும் பயன் யாவும் உங்கள் கைவசப்படும். உங்கள் அன்பு கெழுமிய நெஞ்சில் பிரிவு உண்டாக்குபவர்களின் சொற்களை ஏற்காதீர்கள். போர்க்களத்தில் உங்களுடைய வேல் வெற்றி பெறட்டும். பகைவர் நாட்டில் புலக்கொடியின் சின்னமும் மீன் கொடியின் சின்னமும் பொறிக்கப்பட்டு மேன்மை அடையட்டும். பகைவருடைய நாடுகள் உங்களுக்குக் கீழ்ப்படட்டும் என்று புலவர் காரிக்கண்ணனார் சோழன் திருமாவளன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி ஆகியோரைப் பாடுகின்றார். இவ்விரு பெரும் அரசர்களும் நட்புக் கொண்டு வாழ்ந்தனர் எனத் தெரிகிறது.இப்பாடலில் திருமால் தொன்மம் உவமையாகப் பாடப்படுகிறது.

சங்ககாலத்தில் சேர, சோழ, பாண்டியர்களிடையே அத்துணை நட்புறவு இருந்ததில்லை என்பதைப் புறநானூற்றுப் பாடல்கள் வழி அறியலாம். எடுத்துக் காட்டாக புறநானூற்றில் (62) சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக் கைப்பெருவிறற் கிள்ளியும் ஒருவரோடு ஒருவர் போரிட்டபோது புலவர் கழாஅத் தலையார் பாடுகிறார். அடுத்த சான்றாக ஒரு பாடலில் (33) சோழன் நலங்கிள்ளி பாண்டிய நாட்டில் போர் செய்து ஏழுகோட்டைக் கதவுகளையும் அழித்து வெற்றிகொண்டு, தன்னுடைய புலிச்சின்னத்தைப் பொறித்தவன் என்று புலவர் கோவூர்கிழார் பாடுகிறார். ஆக மூவேந்தர்களுக்கும் நட்பு என்பது அரிதான ஒன்றாய் இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. இப்படிப்பட்ட சூழலில் நட்பாயிருக்கும் சோழ மன்னனையும் பாண்டிய மன்னனையும், பலராமன், கிருஷ்ணர் போல இணைந்து இருப்பீர்களாக என்று காரிக்கண்ணனார் பாடுவதின் நோக்கத்தை ஆராயலாம்.

1. பலராமனும் கிருஷ்ணரும் நண்பர்கள் இல்லை. அண்ணன் தம்பி ஆவார். அதாவது இரத்த சம்மந்தமுள்ளவர்கள் எவ்வாறு பாசத்துடன் பிரியாது இருப்பார்களோ, அதுபோல சோழனும் பாண்டியனும் பிரியாமல் இருக்க வேண்டும் என்பதற்குச் சொன்னதாகக் கொள்ளலாம்.

2. பலராமன், இராமாவதாரத்தில் இலட்சுமணனாக அரிய தொண்டு ஆற்றியதால் இராமன் தனக்கு அண்ணனாக இலட்சுமணனை பலராமனாக கிருஷ்ணாவதாரத்தில் அவதரிக்கச் செய்தான் என்று தசாவதாரக் கதைகள் கூறுகின்றது. அதுபோல சோழனும், பாண்டிய மன்னனும் யுகம் யுகமாய் இருவரும் இணைந்து இருக்க வேண்டும் என்பதைக்கூற புலவர் இத்தொன்மத்தைக் கூறியிருக்கிறார் எனக் கொள்ளலாம்.

3. போர்க்களத்தில் இருவரும் வெற்றி பெறுவதாக என வாழ்த்துகிறார் புலவர். இதுபோல பலராமனும், கிருஷ்ணரும் இணைந்து வதம்செய்த அசுரர்கள் பலர்.

1. தேறுகன்

2. பிரலம்பன்

3. துவாவிதன்[11]

பலராமன், கிருஷ்ணன் அவதார நோக்கம் அசுரர்களை போரிட்டு வெல்வது எனலாம். அதுபோல சோழனும் பாண்டியனும் போரில் வெற்றிபெறட்டும் எனப் புலவர் சொல்வதாகக் கொள்ளலாம்.

4. பலராமன் பனைக்கொடி உடையவன், கிருஷ்ணன் கருடக்கொடியை உடையவன் அதுபோல சோழமன்னன் புலிக்கொடியையும், பாண்டிய மன்னன் மீன் கொடியையும் உடையவர்கள் என்பதால், பலராமன், கிருஷ்ணன் போல பகைவர்களை வெல்லுங்கள் என்பதைக் குறிப்பால் உணர்த்துவதற்காக திருமால் தொன்மத்தை உவமையாக்கியிருக்கலாம். முடிவாக, திருமால் தொண்டு உவமையின் நோக்கம், சோழ பாண்டிய மன்னர்கள் இணைபிரியாமல் போரில் வெற்றி பெற வேண்டும் என்பதற்காகக் கூறப்பட்டிருக்கலாம்.

அடுத்ததாகப் புறநானூற்றுப் பாடலின் (57) புலவர் காரிக்கண்ணனார், பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனைப் பாடுகிறார்.

**வல்லார் ஆயினும் வல்லுநர் ஆயினும்**

**புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன** (57: 1-2)

என்று புலவர் பாடுகிறார். வல்லமையுடையவரானாலும் அவ்வாறு இல்லாத எளியவரானாலும் நின்னைப் புகழ்ந்து போற்றுபவர்களுக்குத் திருமால் போன்று துணை நின்று வாழவைக்கும் சிறப்புடைய பாண்டியன் நன்மாறனே! உன்னிடம் ஒன்றைக் கூறுகிறேன். பகைவர் நாட்டின் மீது நீ படையெடுத்துச் செல்லும்போது எதை வேண்டுமானாலும் அழித்து விடு. ஆனால் அவ்வூர் காவல் மரங்களை அழிக்காதே. அவை இளமையான மரங்கள்,. உன்னுடைய பெரிய யானைகளுக்கு அவை கட்டுத்தறிகளாக இருக்கத் தாங்காது என்று மன்னன் போர் புரிவதைக்

கைவிடுமாறு மறைமுகமாகத் தெரிவிக்கிறார். ஏனையவை அழிவிலிருந்து விரைவில் மீளும். ஆனால் நெடிது வளர்ந்த பெரிய மரத்தை மீண்டும் விளங்கச் செய்வது இயலாது என மேற்கண்ட பாடலில் புலவர் கூறுகிறார். இப்பாடல் மூலம் பாண்டிய மன்னனைப் போரிடுவதைக் கைவிட்டு காக்கும் கடவுளான திருமாலைப் போன்ற இயல்பினனாய் இருப்பாய் எனப் புலவர் மறைமுகமாய் கூறுகிறார் எனக் கொள்ளலாம்.

புராணங்கள் மூலம் கடவுளர்களின் கதைகள், சிறப்புகள், தன்மைகள் அறிய முடிகிறது. ***பொதுமக்களுக்குரிய வைதீகச் சமய நூல்களாக விளங்கியவை. புராணங்களும், இதிகாசங்களும் ஆகும். அவற்றின் நோக்கம் வரலாறு கூறுவதல்ல. இலட்சியங்களுக்கு உதாரணங்கள் காட்டுவதாகும்.***[12] இதன் அடிப்படையிலேயே சங்கப் புலவர்கள் கடவுளை மன்னனுக்கு உவமையாக்கி யமையை அறியமுடிகிறது. திருமால் அவதாரங்களில் இராமாவதாரத்தில் அரக்கர் குலத்தில் பிறந்தாலும் வீடணன் இராமரைப் போற்றுதல் செய்தவன். நியாயத்தின் பக்கம் நிற்க தன் அண்ணனான இராவணனையே எதிர்த்தவன். இறுதியில் இராமர் வீடணனை அரசனாக்கினார். அதேபோல கிருஷ்ணாவதாரத்தில் எளியவரான குசேலருக்கு அருள்புரிந்து குபேரனாக்கினார் என்று புராணங்கள் கூறுகின்றன. திருமால் போல நின்னைப் போற்றுபவர்களை வாழ வைப்பவனே என்று புலவர் உவமை காட்டுகிறார். திருமால் உவமையாக ஆக்கப்பட்டதால் மற்றவர்களுக்கு அரசன் காக்கும் கடவுளாக இருக்கவேண்டுமே தவிர போர் புரியும் போர்வீரன் போன்று இருக்கலாகாது என்றும், அரசன் போர்த்தொழிலைக் கைவிட வேண்டும் என்ற கருத்தையும் வலியுறுத்தப் புலவர் காக்கும் கடவுள் எனப்பட்ட திருமாலை உவமை காட்டுகிறார் எனக் கொள்ளலாம்.

புறநானூற்றுப் பாடலில் (77)

> ***. . . . . . . . . . . . . . . . தார்பூண்டு***
> ***தாலி களைந்தன்றுமும் இலனே***

என்று பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இடைக்குன்றூர்கிழார் பாடுகிறார். இப்பாடலில் திருமால் தொடர்புடைய ஐம்படைத்தாலி சுட்டப்படுகிறது. மன்னன் இளமையிலேயே போர் ஏற்ற பண்பினன் எனச் செழியனின் பண்பை பாராட்டிப் பாடுகிறார். முன் அணிந்த ஐம்படைத் தாலியை இன்னும் அவன் அகற்றவில்லை. பாலை அருந்துதலைவிட்டு இன்றுதான் உணவும் உட்கொண்டனன். சினத்துடன் எதிர்த்து வரும் புதிய வீரரைக் கண்டு மதிப்பதும், அவமதிப்பதும் செய்யாதவன். அவ்வீரரை அழுந்தப் பற்றிப் பரந்த வானத்தில் ஒலியெழுமாறு, பிணம் கவிழ்ந்து நிலத்தில் விழுமாறு கொன்றவன். அச்செயலை பெரியதாய்க் கருதித் தானே மகிழ்ந்ததும் இல்லை. அதனை எண்ணித் தன்னை உயர்வாக எண்ணும் எண்ணம் இல்லாதவன் எனப் பாடுகிறது இப்பாடலில் திருமால் தொன்மம் ஐம்படைத்தாலி என்ற சொல் மூலமாக வந்துள்ளது எனலாம். இதனை அபிதான சிந்தாமணி, **இது காத்தற் கடவுளாகிய திருமாலின் பஞ்சாயுத வடிவமாக பிள்ளைகட்கு ஐந்து மாதத்தில் கட்டப் படும் அணிகலன்**[13] என்கிறது.

அன்றைய காலகட்டத்தில் சிறுபிள்ளைகளுக்கு காலில் கொலுசும், தலையிற் குடுமியும், கையில் சிறிய வளையல்களும் மார்பில் ஐம்படைத் தாலியும் அணிவதும் மரபாக இருந்துள்ளது. நெடுஞ்செழியன் இன்னும் காளைப் பருவத்தை அடையவில்லை. காளைப் பருவம் அடைந்த ஒருவன் காலில் கழலும், தோளில் தொடியும், மார்பில் மாலையும் அணிந்திருப்பான் எனச் சொல்லப்படுகிறது. ஆகவே நெடுஞ்செழியன் இளமைப்பருவத்திற்கு முன்னுள்ள சிறார் பருவத்திலேயே பகைவரை வெல்வதை மிக எளிதாகச் செய்தவன் என்று வலியுறுத்துகிறார். ஐம்படைத்தாலியை அணிந்தவன் என்பதால், செழியனும் மக்களைக் காத்தலில் திருமால் போன்றவன் எனச் சொல்வதாகக் கூறலாம்.

மற்றுமொரு புறநானூற்றுப் பாடலில் (174) மலையமான் சோழி ஏனாதி திருக்கண்ணனை மாறோகத்து நப்பசலையார் பாடியுள்ளார்.

**இடும்பை கொள். பருவரல் தீர, கடுந்திறல்**
**அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு**

பிறருக்காக இரங்கும் தன்மையுடையவன் மலையமான், திருமாலுக்கு ஒத்தவனாகிறான். பகைவர்களை அழிக்கும் வீரத்தை உடையவன் மலையமான். திருமால் மல்லர்களை அழித்து வெற்றி கொண்டவன். மலையமானின் வீரத்தையும், பண்பையும் மேலும் மெருகூட்டிச் சொல்லவே இத்திருமால் தொன்மம் உவமையாகக் கையாளப்பட்டுள்ளது எனலாம். மேற்கண்ட பாடலில் திருமால் தொன்மம் உவமையாக வந்ததின் ஒற்றுமைகளை கீழ்க்காணும் அட்டவணை மூலம் விளக்கலாம்.

| எண் | பாடல் கருத்து | தொன்ம உவமை |
|---|---|---|
| 1. | மன்னன் மலையமான் | திருமால் |
| 2. | சோழ நாடு | உலகம் |
| 3. | சோழன் இல்லாதது | சூரியன் இல்லாதது |
| 4. | மலையமான் சோழனுக்கு உதவியது | திருமால் இராம அவதாரத்தில் சுக்ரீவ மன்னனுக்காக வாலியுடன் போர் தொடுத்து உதவியது. |
| 5. | மலையமான் சோழநாட்டின் துயரைப் போக்கியவன் | திருமால் உலக மக்களின் துயரைத் துடைப்பவன் |

மற்றுமொரு புறநானூற்றுப் பாடலில் (198) பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை பேரிசாத்தனார் பாடியுள்ளார். பாண்டியன் இலவந்திகை பள்ளித் துஞ்சிய நன்மாறன் புலவருக்குப் பரிசில் கொடுப்பதற்குக் காலம் நீட்டித்ததால், புலவர் மன்னனின் முன்னோரையும், மன்னனையும் போற்றிப் பாராட்டிவிட்டு பரிசில் வாங்காது சென்றார். சென்றபோது

இச்செயலை மறக்காமலிருக்கும்படி கூறிச் செல்வதாகப் பாடல் அமைகிறது. இப்பாடலில்

**ஆல் அமர் கடவுள் அன்ன நின் செல்வம்**
**வேல் கெழு குருசில் கண்டேன்**

எனத் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. வேந்தே! கனவிலும் நின் புகழையே கூறும் விருப்பத்தை உடையேன். என் நெஞ்சம் இன்புற்று மகிழ, ஆலிலையில் எழுந்தருளியுள்ள திருமால் போன்ற நின் செல்வத்தைக் கண்டேன். ஆதலால் விடைபெற்றுச் செல்கின்றேன். வாழ்க என வாழ்த்துகிறார். இப்பாடலில் இலவந்திகை மன்னனுக்குத் திருமாலை உவமைக் காட்டுகிறார். அதுவும் ஆலிலை மேல் எழுந்தருளியுள்ள திருமால் என்கிறார். செல்வத்துக்கு அதிபதி மகாலட்சுமி என்கிறது புராணம். மகாலட்சுமியை துணைவியாகக் கொண்டு தன் மார்பில் சூடியிருப்பவர் திருமால் என்கிறது புராணக் கதைகள். செல்வத்துக்கு அதிபதியையே துணையாகக் கொண்ட திருமாலைப் போன்று மன்னனுடைய செல்வத்தைக் கண்டேன் என்கிறார். ஊழிக்காலத்தில் உலகம் அழிந்து, பிரபஞ்சம் உற்பத்தியாகிற வேளையில், ஆலிலையில் திருமால் குழந்தையாகச் சமுத்திரத்தில் மிதந்ததாகப் புராணம் கூறுகிறது. இத்தொன்மத்தை இலவந்திகைக்கு உவமையாகக் கூறியதின் நோக்கங்களாவன:

1. உலகம் அழிந்து பிரபஞ்ச உற்பத்தியின் போதுள்ள திருமாலைக் கூறியதால், புலவர் தானும் ஏழ்மை நிலை அழிந்து மன்னனிடம் பொருள் பெற்றுப் புதிய வாழ்க்கையைத் தொடங்கக் காத்திருப்பதை அரசனுக்குச் சுட்ட புலவர் திருமாலை உவமையாக்கியிருக்கலாம்.

2. ஆலிலைமேல் எழுந்தருளிய குழந்தை வடிவத் திருமால் என்றதால் இலவந்திகையும் செல்வத்தைப் பெற்றிருந்தாலும், குழந்தை போன்று அதைக் கொடுக்கும் வகை அறியாதவன் எனச் சுட்டிக் காட்டியிருக்கலாம்.

3. ஆல் இலை மேல் எழுந்தருளிய திருமால் போன்று நின் செல்வத்தைக் கண்டேன் என்று புலவர் மன்னனை நோக்கிப் பாடுகிறார். செல்வத்துக்கு அதிபதியான மகாலட்சுமியை திருமால் துணையாகக் கொண்டிருந்தாலும் ஆல் இலையில் எழுந்தருளிய திருமால் வடிவம் குழந்தையாக இலைமேல் படுத்திருக்கும் என்பதால் மன்னன் இலவந்திகையும் இருந்தும் இல்லாதவனே என்று புலவர் கூற இத்தொன்மத்தைப் பயன்படுத்தியுள்ளார் எனலாம்.

4. திருமால் போன்று அரசனும் பெருஞ்செல்வம் உடையவன். உலகைத் திருமால் காப்பதுபோல், அரசனும் தம் நாட்டைக் காப்பாற்றுபவன். அடியவர் பக்திக்கு மனம் இரங்கி அருள் செய்யும் திருமால் போல மன்னன் இலவந்திகையும் தன்னை நாடி வரும் புலவருக்கு மனம் இரங்கி பரிசில்கள் கொடுத்து அருள் செய்ய வேண்டும் என்பதற்காக, இந்த உவமையைச் சொல்லியிருக்கலாம். முடிபாக இலவந்திகை மன்னன் புலவருக்குப் பரிசில் தரக் காலம் நீட்டித்ததால் திருமாலை உவமை கூறி அவன் செய்ய வேண்டுவதையும், அவன் செய்யாமல் விட்டதையும் அறிவுறுத்தத் திருமால் தொன்ம உவமையைப் பொருத்துமுற கூறியிருக்கலாம்.

அடுத்ததாக ஒரு பாடலில் (புறம். 229) சேரமான் யானைகட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்ற மன்னன் தன் இறுதிக்காலத்தில் தான் நோயில்லாதவனாக இருக்க வேண்டும் என்று வேண்டிய செய்தியும், அவன் இறப்பதற்கு முன் நடந்த அபசகுனங்களையும் கூறி அவன் இறந்தபின் அவனுடைய சிறப்பைக் கூறிப் பாடலை முடிக்கிறார் கூடலூர் கிழார். பங்குனி மாதத்தில் மீன் வீழ்ந்தால் அது அரசனுக்கு ஆகாது. மன்னன் இறப்பதற்கு முன் யானை இறந்தது, முரசு கிழிந்தது, வெண்கொற்றக்குடை கால் ஒடிந்தது, குதிரைகள் இயக்கமின்றிக் கிடந்தன போன்ற அபசகுணங்கள் நிகழ்ந்தது போல சேரவேந்தனும் தேவருலகம் அடைந்தான். ஆகையால் வளையணிந்த மகளிரால் விரும்பப்பட்ட துணையாகிய மாயோன் தனக்குத் துணையாகியவரையும் மறந்துவிட்டானோ? எனப் புலவர் கேட்பதாக

*ஒண் தொடி மகளிர்க்கு உறுதுணை ஆகி*
*தன்துணை ஆயம் மறந்தனன் கொல்லோ...*
*பகைவர் பிணிக்கும் ஆற்றல் நசைவர்க்கு*
*அளந்து கொடை அறியா ஈகை*
*மணிவரை அன்ன மாஅயோஒனே?* (புறம். 229: 23-27)

எனப் புலவர் கேட்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதில் மாயோன் என்று குறிப்பு சேரனைச் சேரும்.

திருமால் கிருஷ்ணாவதாரத்தில் கோபியர் எனும் பெண்களால் விரும்பப் பட்டவர். அதுபோல சேரவேந்தனும் தன் மனைவியரால் மிகவும் விரும்பப்பட்டவன் என்பதை கூற இத்தொன்மத்தைப் பயன்படுத்தியிருக்கலாம். தன்னை விரும்பிய பெண்களுடனே கிருஷ்ணர் இருந்துவிடவில்லை. ஒரு காலக்கட்டத்தில் கோபியர்களுடன் லீலைகள் புரிந்த கிருஷ்ணர், கம்ச வதை செய்து மன்னனாக முடிசூட்டிக் கொண்டார் என்று தசாவதாரக் கதைகள் கூறுகின்றன. அதுபோல சேரமானும் தன்னை விரும்பும் மனிதர்களை மறந்து சென்றுவிட்டான் என்பதைக் கூறுவதற்குச் சேரனை மாயோன் என்று பொருத்தமுறக் கூறுவதாகக் கொள்ளலாம்.

நற்றிணையில் காணப்படும் ஒரு பாடல் திருமால் தொன்மத்தை உவமையாக்கியுள்ளனர். தலைவன்பால் கொண்டுள்ள நம்பிக்கையை ஆராய தலைவி முற்படுகிறாள். அதற்குத் தோழி, ‘அவன் தகுதியுடையவன், இத்தனை நாள் பழகியபிறகு நட்புக்குறித்து இப்போது ஆராய்வது சரியல்ல; தலைவன் நல்லவனே’ என்று கூறுவதாக அமைந்துள்ளது பாடல்.

தலைவனுடைய நாட்டிலுள்ள மலையை மாயோனைப் போன்ற பெரிய மலை என்றும், அவனுக்கு முன்பிறந்த வெள்ளை நிறத்தையுடைய பலதேவனைப் போன்று வெண்மையாய் விளங்கும் அருவி என்றும் பாடியுள்ளார் புலவர்.

சான்றோர் தம்மோடு நட்புக் கொள்ள விரும்பியவர்களின் குணங்களை முதலில் ஆராய்ந்து பார்த்துப் பின்பு நட்புக் கொள்வர் என்கிறாள் தோழி, இப்பாடலில் திருமால் தொன்மம் உவமையாகப் பயன்பட்டதின் நோக்கத்தை ஆராயும்பொழுது,

***மாயோன் அன்ன மால் வரைக் கவாஅன்***

***வாலியோன் அன்ன வயங்கு வெள்அருவி*** (32: 1-2)

என்ற வரிகளில் இயற்கைச் சூழலுக்குத் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. திருமால் கிருஷ்ணாவதாரத்திலும், இராமாவதாரத்திலும் நட்புக்கு நல் உதாரணமாக இருந்தார் என்பதை அறிய முடிகிறது. இராமாவதாரத்தில் சுக்ரீவன், குகன், விபீஷணனுடன் நட்புகொண்டு தன் சகோதரர்கள் ஆவார்கள் என்று இராமர் கூறுவதாக வந்துள்ளது.

பாரதப் போரில் கிருஷ்ணர் பாண்டவர் பக்கமிருந்து வெற்றிப்பெறச் செய்தார். ஆக இப்பாடலில் தலைவனின் நாட்டிலுள்ள மலைக்கும், அருவிக்கும் திருமாலை பலதேவனை உவமையாகச் சொல்லி தலைவனின் நட்பும் அதுபோல அப்பழுக்கற்றது என்று தோழி கூறாமல் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

பதிற்றப்பத்தில் இடம்பெற்றுள்ள இரண்டாம் பத்தில் குமட்டூர் கண்ணனார் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் புகழ்ந்துப் பாடுகிறார். அதில் சேரலாதன், மண்ணுலகில் வாழும் உயிர்கட்கெல்லாம் குறைவுபடாமல் கொடுக்கும் ஈகையினையும், கடிய வலிமையினையும் உடையவன் என்றும் இறைவனுடைய ஆலயங்களுக்கெல்லாம் சிறந்த அணிகலன்களைக் கொடுப்பவன் என்றும் காண்போருக்கு இன்பம் தரும் சிறப்புமிக்க திருமாலைப் போன்று குறைவற்ற புகழ் குறையாமல் வாழும் பண்பு கொண்டவன் என்றும் கீழ்க்காணும் பாடல் வரிகளில் குறிப்பிடுகிறார்.

*நெடியோன் அன்ன நல்இசை*

*ஓடியா மைந்தே! நின்பண்பு பல நயந்தே* (15: 39-40)

என்கிறார் புலவர்.

இப்பாடல் வரிகளில் சேரலாதனுக்குத் திருமால் உவமையாக்கப் பட்டிருக்கிறார். சேரலாதனுக்கும் திருமாலுக்குமுள்ள ஒற்றுமைகளை ஆராய்ந்ததில் கிடைக்கப்பெற்றச் செய்திகள் கீழ்காணுமாறு:

| எண் | சேரலாதன் | திருமால் |
|---|---|---|
| 1. | பாசறையில் தங்கி போர்செய்வதில் நீண்ட காலத்தைச் செலவழித்தான் என்று கீழ்க்கண்ட பாடல்வரிகள் ***மரம் கொல் மழகளிறு வழங்கும் பாசறை*** (பதிற். 16: 1) | திருமால் கிருஷ்ணாவதாரத்தில் பாண்டவர்களுடன் நீண்டகாலம் தங்கி பாரதப்போர் மேற்கொண்டார் |
| 2. | பிழைசெய்த பகைவர் பணிந்தபோது அவர்களை மன்னிக்கும் பொறுமைக் குணமும், புகலிடம் இல்லாதவருக்கு பாதுகாப்பு அளிக்கும் அருட்குணமும் உடையவன் நெடுஞ்சேரலாதன் என்கிறார் புலவர்.<br>***பெரிய தப்புநர் ஆயினும் பகைவர் பணிந்து திறைபகரக் கொள்ளுநை ஆதலின் துளங்குபிசிர் உடைய மாக்கடல் கடம்பு அறுத்து இயற்றிய நீக்கி*** (பதிற்று. 16: 2-5) | திருமாலும் பிழைசெய்த பணிபவர் களை மன்னிக்கும் குணமுடையவர். நிற்கதியாகி நிற்பவருக்குப் பாது காப்பளிக்கும் அருட்குணமுடையவர் என்று இதிகாசம் வழி அறிய முடிகிறது.<br>(எ-கா.) கௌரவர் சபையில் துகிலுரியப்பட்டபோது முதலில் வணங்காது பிழைசெய்த திரௌபதி தன்னை கைதூக்கி வணங்கியதும் அவளைக் காத்து அருளினார். |

சேரலாதனின் உயர்பண்புகள் திருமால் தொன்மத்தோடு ஒத்துப் போவதால், சேரலாதன் இறைக்கு ஒப்பானவன் என்ற கூற்றை மறைமுகமாய் வலியுறுத்த திருமால் தொன்மம் உவமையாகப் பயன்பட்டுள்ளது எனலாம். அதுமட்டுமல்லாது, சேர நாட்டில் திருமாலின் ஓர் அவதாரமான "வாமனன்" அவதாரம் நடைபெற்றதாகப் புராணம் கூறுகிறது. சேர நாட்டை ஆண்ட "மாவலி" அரசன் பொருட்டு அவதாரம் எடுத்து வந்து பூமியைத் தானமாகப் பெற்ற வரலாறு யாவரும் அறிந்ததே. இன்றும் "ஓணம்" எனும் பண்டிகை மாவலி மன்னன் நினைவாகக் கொண்டாடப்படுகிறது.

இத்தனை புராணப் பின்னணி கொண்ட சேரநாட்டை ஆண்ட சேரலாதனுக்குத் திருமால் உவமையாக வந்தது பொருத்தமே. புலவர் திருமால் தொன்மத்தை ஒப்புமைக் கருதி உவமையாக்கியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

திருமால் தொன்மம் உவமையாக அகஇலக்கியமான கலித்தொகையிலும் அமைந்துள்ளது. கலித்தொகையைப் பொறுத்தமட்டில் பாலைக் கலியில் இருபாடல்களுக்கு திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளன. இருபாடல் களிலும் பலராமரும் உவமையாகக் காட்டப்பட்டுள்ளார். இப்பாடல்களில் பலதேவன் எனக் குறிப்பிடப்படுகிறார். பிரிவும் பிரிதல் நிமித்தமும் பாலையின் உரிப்பொருள் என்பதால் இவ்விரு பாடல்களிலும் தலைவன் பிரிவால் வாடும் தலைவிக்கு தோழி ஆறுதல் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. இருபாடல்களிலும் (பாலைக்கலி. 26, 36) இளவேனிற் காலம் குறிப்பிடப்படுகிறது.

***ஒரு குழை ஒருவன் போல்: இணர் சேர்ந்த மராஅமும்*** (பாலைக்கலி 26)

என்று தொடங்கும் பாடலில் தலைவன் வேற்று நாட்டிற்கு வேந்தன் பொருட்டு பிரிந்து சென்றுவிட்டான். பிரிவுத் துன்பத்தால் வாடும் தலைவிக்குத் தோழி தேறுதல் கூறித் தேற்றுகிறாள். இப்பாடலில் இளவேனிற்காலத்தே பூக்கும் பூக்களுக்கு தெய்வங்கள் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. நீர் பொருகின்ற

கரையிடத்தே அழகுற நின்ற ஒரு பூங்குழையை உடைய பலதேவனைப் போலப் பூத்திருக்கும் பூங்கொத்துகள் உடைய வெண்கடம்பு, கதிரவனைப் போலப் பூத்திருக்கும் செருந்தியும், மன்மதனைப் போல மலர்ந்திருக்கும் காஞ்சியும், காமனின் தம்பியான சாமனைப் போலப் பூத்திருக்கும் ஞாழலும், இடபக் கொடியுடைய இறைவனைப் போன்று மலர்ந்த இலவமும் என்கிறது பாடல். இதில் பலதேவன் எனும் பலராமர் போன்று பூத்திருக்கும் வெண்கடம்பு என உவமை கூறப்பட்டுள்ளது.

> ***பருத்தியும் செல்வன்போல் நனை ஊழ்ந்த செருந்தியும்***
> ***மீன் ஏற்றுக் கொடியோன் போல் மிஞிறு ஆர்க்கும் காஞ்சியும்***
> ***ஏனோன்போல், நிறம் கிளர்பு கஞலிய ஞாழலும்***
> ***ஆன் ஏற்றுக் கொடியோன் போல் எதிரிய இலவமும்***

என இப்பாடல் வாசிப்பின் மூலம் சில செய்திகளை அறியமுடிகிறது. அவை:

1. திருமால் அவதாரங்களில் பலராமருக்கு என்று தனிக்கதைகள் இல்லை (இராமர், கிருஷ்ணர், வாமனன் போன்ற கதைகள் போல பலராமருக்கு என்று என்று தனிக்கதைகள் இல்லை). கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணனுக்கு அண்ணனாக வரும் பலராமர் பற்றி கிருஷ்ணருடனே உவமையாகக் காட்டப்பட்டுள்ளார் எனலாம்.

2. மன்மதனை காமன் என்றும், அவன் தம்பியை சாமன் என்றும் சொல்லும் வழக்கு உள்ளது.

3. ***. . . . . . . . ஆங்கு***

***தீது தீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோல*** (கலி. 26:6)

என்பதில் குற்றமற்ற சிறப்பினை உடைய ஐவர் என்பது பஞ்சபாண்டவர்களைக் குறிப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது.

4. இடபக் கொடியைக் கொண்ட இறைவன் என்பது சிவனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இடப வாகனத்தை உடையவர் சிவன் என்று புராணம் கூறுகிறது.

இளவேனிற் காலத்தே வந்துவிடுவதாகத் தலைவன் தூது அனுப்பி யுள்ளான். அப்படிப்பட்ட இளவேனிற் காலத்தில் பூக்கும் பூக்களுக்குத் தெய்வங்களை உவமை கூறியிருப்பது, இத்தெய்வங்கள் தலைவனைக் கொண்டு வந்து தலைவியிடம் சேர்த்துவிடும் என்ற நம்பிக்கையின் பொருட்டுப் புலவர் பாடியுள்ளதாகக் கொள்ளலாம். நம்பிக்கையை நிலைநிறுத்த இப்பாடல் தொன்மத்தை கையாண்டிருக்கலாம்.

அடுத்த பாலைக்கலிப் பாடலில் (36) இயற்கைக் காட்சியை விளக்க பலராமர் தொன்மம் உவமையாகக் கூறப்படுகிறது. பிரிந்துசென்ற தலைவன் காதலிலிருந்து நிங்கிவிட்டாரோ? தன்னை மறந்துவிட்டாரோ? தலைவனைக் காண்போமா? என்று பல கேள்விகளைக் கேட்கும் தலைவியை ஆற்றுவிக்கிறாள் தோழி. இயற்கை காட்சிகளுக்கு உவமை கூறும்போது, கொடிய வலிய கலப்பைப் படையினைக் கொடியாகக் கொண்ட நம்பி மூத்தபிரான் பலதேவன் தோளில் பசிய துளசி மாலையை அணிந்திருப்பதுபோல, வெண் கடம்பின் உயர்ந்த இடத்தே மயில்கள் அனைத்தும் சீர்மையுடையவாய் விளங்கின என்கிறார் புலவர்.

இப்பாடலிலும் வெண்கடம்பிற்கு பலராமர் தொன்மம் உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. மூத்தபிரான் என்று கிருஷ்ணருக்கு மூத்தவர் எனச் சொல்லப்படுகிறது. இப்பாடலின் வரும் காட்சிக்கு பலராமன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அக்காலக்கட்டத்திற்கு முன் வாய்மொழியாகப் பேசப்பட்ட கடவுளர் தொன்மத்தோடு பலராமன் தொன்மமும் பேசப்பட்டுள்ளது என அறியமுடிகிறது. பலராமர் கிருஷ்ணபிரானின் அண்ணன் என்பதை மேலும் மேலும் பதிவு செய்யப் புலவர் பலராமர் பற்றிய தொன்மங்களை உவமையாகச் சொல்லியிருக்கலாம்.

ஆயர் இன மக்களின் வாழ்க்கை முறையை களவு ஒழுக்கத்தின் வழியாகக் கண்முன் காட்டுகிறது. இம்முல்லைக்கலி எனலாம். இவ்விலக்கியத்தில் சில பாடல்களில் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளன.

முல்லைக்கலிப் பாடல் (103) ஏறு தழுவி வெற்றி பெற்றவர் செயலைப் பாடுகிறது. அன்றைய காலகட்டத்தில் அதுவும் முல்லைநில மக்களிடையே இளைஞன் ஒருவன் தன் வீரத்தை உறுதி செய்ய, காளையை அடக்கிக் காட்ட வேண்டும் என்ற மரபு இருந்துள்ளது தெரிகிறது. அவ்வாறு காளையை அடக்குபவனே ஆயர்குலப் பெண்ணை திருமணம் செய்துகொள்ள முடியும். இதன் மூலம் அக்காலப் பெண்களும் வீரத்தைச் சிறப்பாக மதித்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

ஆயர் ஏறுதழுவிய பாங்கினைத் தோழி தலைவியிடம் விளக்குகிறாள். தன்னை அடக்க வந்த இளைஞர்களைத் தன் கொம்புகளால் எருதுகள் குத்தின. நீங்காத சினத்துடன் எதிர்த்து வந்த காளையைச் செவியோடு பிடித்து, அடக்கித் தழுவும் இளைஞனைப் பார், பகைவர் விடுத்த பிடரிமயிர் கொண்ட குதிரையை வாயைப் பிளந்து கொன்ற சமயத்தில் மாயவனும் இப்படித் தானிருந்திருப்பானோ? என அச்சங்கொண்ட மனதோடு தோழி கூறுகிறாள்.

**ஓவா வேகமோடு உருத்துத் தன்மேல் சென்ற**
**சேஎச் செவிடுதற் கொண்டு பெயர்த்து ஒற்றும்**
**காயாம்பூங் கண்ணிப் பொதுவன் தகை கண்டை**
**மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை**
**வாய்பகுத்து இட்டு புடைத்த ஞான்று, இன்னன் கொல்**
**மாயோன் என்று உட்கிற்று என் நெஞ்சு** (கலி. 103: 51-55)

இப்பாடலில் குதிரையை வாயைப் பிளந்து கொன்ற மாயோன் என்று திருமால் குறிப்பிடப்படுகிறார். கம்சனால் அனுப்பப்பட்டவன் 'கேசி' எனும் குதிரை முகம்

கொண்ட அசுரன். அவன் கிருஷ்ணரைக் கொல்வதற்காக வந்தவன். அவ்வசுரனைக் கிருஷ்ணர் வாயைப் பிளந்து கொன்றார் என்று பாகவத புராணம் கூறுகிறது.

கிருஷ்ணரால் தன் உயிருக்கு ஆபத்து என்ற நிலையில், கோகுலத்திலேயே கிருஷ்ணரைக் கொன்றுவிடுமாறு குதிரை முகம் கொண்ட அசுரனைக் கம்சன் அனுப்புகிறான் என கிருஷ்ணாவதாரக் கதைக் கூறுகிறது. அக்கம்சன் போல காளையும் தன்னை கொன்று விடுவானோ இந்த இளைஞன் என்று பயந்து இளைஞனைக் குத்திக் கொல்ல முயன்றது. கம்சன் தன் தங்கை தேவகியின் ஏழு குழந்தைகளை கொன்றவன். அதுபோலக் காளையும் தன்னை காத்துக்கொள்ள தன் மேல் பாய்ந்த பொதுவரைக் குடல் சரிய குத்தியது. கிருஷ்ணர் அசுரனைக் கொன்றதுபோல இளைஞனும் காளையை அடக்கி நின்றான். காளையின் செயலுக்கும், முடிவில் காளையை வெற்றி கொண்ட இளைஞனின் சிறப்பிற்கும் விளக்கம் தருவதே இத்தொன்மத்தின் நோக்கமாக இருக்கிறது எனலாம். இந்த ஒற்றுமையைப் புலவர் மனதில் கொண்டு காளைக்குக் கம்சனை உவமையாக்கியிருக்கலாம். அடுத்ததாக,

> ***. . . . . . . . பனைக் கொடிப்***
> ***பால்நிற வண்ணன் போல்பழி, தீர்ந்த வெள்ளையும்***
> ***பொருமுரண் மேம்பட்ட பொலம் புணபுகழ் நேமி***
> ***திருமறு மார்பன் போல் திறன் சான்ற காரியும்*** (104: 7-10)

இப்பாடலில் ஓங்கி ஒளிவீசும் பனைக் கொடியினையுடைய பால் போன்ற நிறமுடைய பலராமனைப் போன்றிருந்தது வெற்றை நிற எருது என்றும், புகழ்பெற்ற சக்கரப்படையை உடையவனும், திருமகளை மார்பிலே கொண்டவனுமான மாயோனின் நிறமுடைய கரிய எருது என்று புலவர் பாடுகிறார்.

வெள்ளைநிற எருதுக்கு பலராமரும் கரிய நிற எருதுக்குத் திருமாலும் உவமையாக வந்துள்ளனர். இதே பாடலில் மற்றொரு இடத்தில் தன்மேல்

பாய்ந்தவனை இடைவிடாது குத்தும் காளையின் தோற்றம் நீலநிறமான மாயோன் போன்றிருந்தது என்று மட்டும் கூறாமல் பாம்பானது நிலவை விழுங்கி விடும்போது ஏற்படும் நீலநிறம் போன்ற நிறத்தையுடைய மாயோன் போன்றிருந்தது என்கிறார்.

இப்பாடலில் எருதின் நிறத்திற்குத் திருமாலை உவமையாக்கிய நோக்கம், எருதின் வன்மையைச் சிறப்பிக்கச் சொல்லப்பட்டதாகக் கொள்ளலாம். இதில் தலைவியின் அலர் அச்சம் நீங்கியதும், தலைவனுக்கு தலைவியை மணம் செய்விக்கப் பெரியவர்கள் உடன்பட்டது நிலவை விழுங்கி விடுவிக்கும் நீல நிறம் போலுடைய மாயோன் போன்றிருந்தது எனக் குறிப்பிடுகிறது. இதில் அலர் அச்சத்திற்கும் தலைவன் தலைவியை வருத்தின துன்பத்திற்கும் நிலவை பாம்பு விழுங்கியதும், பாம்பு நிலவை விழுங்கி விடுவித்ததற்கு தலைவன் - தலைவி திருமணம் செய்விக்க உடன்பட்டதும் குறிப்பாகக் கூறப்படுகிறது எனக் கருதலாம். இப்பாடலைப் பொறுத்தவரை திருமாலின் மேனி நிறம் ஏறுதழுதலில் ஈடுபடும் காளைக்கு உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. கூடவே சந்திர கிரகண நிகழ்வும் சுட்டப்படுகிறது. இதனால் இலக்கியம் மூலம் கடவுளர் கருத்தும், அறிவியல் நிகழ்வும் உவமைகளாக காட்டியப் புலவரின் அறிவுத்திறன் வெளிப்படுகிறது

மற்றொரு முல்லைக்கலிப் (105) பாடலிலும் ஏறுதழுவதலில் பங்கு பெறும் எருதுக்கு திருமால், பலராமர் தொன்மம் உவமையாக வந்துள்ளது. சக்கரப் படையோன் வாய்வைத்து ஊதிய சங்கு போல விளங்கும் வெள்ளைச் சுட்டி உடைய கரிய எருது என்றும் பலராமன் திருமார்பிலே விளங்கும் ஒளி படைத்த மாலை போல, சிவந்த மறுவினை உடைய வெள்ளை எருது என்றும் புலவர் உவமை கூறுகிறார். இப்பாடலில் திருமால் கையில் வைத்திருந்த சங்கும் பலராமன் மார்பில் சூட்டிய மாலையும் காளைகளின் அடையாளங்களுக்கு உவமையாகி யுள்ளது.

குருசேத்திரப் போர் தொடங்குமுன் கிருஷ்ண பரமாத்மா சங்கு எடுத்து ஊதியப் பின் போர் தொடங்கினதாக பாரதம் மூலம் அறியப்படுகிறது. எருதின் நெற்றியில் சிறிய அளவிலான சங்கைக் கயிற்றால் கட்டியிருப்பர். எவ்வாறு கிருஷ்ண பரமாத்மா சங்கெடுத்து ஊதியதும் போர் தொடங்கியதோ அதேபோல சங்கை நெற்றிச் சுட்டியாக அணிந்திருந்த காளை தொழுவத்தினுள் வந்ததும் ஏறு தழுவுதல் நிகழ்ச்சித் தொடங்கியதாகப் பாடல் அமைந்துள்ளது. பலராமன் மார்பில் சூடியுள்ள மாலைபோல, சிவந்த மறுவினையுடைய வெள்ளை எருது எனும்போது, கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணரைக் கொல்ல கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களைக் கிருஷ்ணருடன் பலராமரும் சண்டையிட்டு ஒழித்தார்கள் என்று புராணம் வழி அறியலாம். பலராமர் கம்சனால் மல்யுத்தத்திற்கு ஏவப்பட்ட **முஷ்டிகனையும் அவன் தம்பி கூடனையும் கொன்றார்.**[14] ஆகவே எண்ணற்ற அசுரர்களுடன் போரிட்டு வென்ற பலராமனை உவமையாகச் சொல்வதின் நோக்கம் ஏறுதழுவுதலில் இடம்பெற்ற காளைகளும் அவ்வாறு போரிட்டு வெற்றிபெறும் தன்மையுடையவை என்பதை மறைமுகமாய்ச் சுட்டுவதாகக் கொள்ளலாம்.

அடுத்ததாக, திருமால் தொன்மம் பயின்றுவரும் ஒரு பாடலில் (நெய்தற் கலி. 123) தலைவி தலைவனைச் சந்திக்க இயலாதபடி காவல் காக்கப்படுகிறாள். அதனால் துயரப்படுகின்றாள். தலைவனை நோக்கிப் போகும் எண்ணங்களைப் பார்த்து பாடுவதாக பாடல் அமைந்துள்ளது.

> **கருங்கோட்டு நறும் புன்னை மலர் சினை மிசைதொறும்**
> **கரும்பு ஆர்க்கும் குரலினோடு, இருந்தும்பி இயைபு ஊத**
> **ஒருங்குடன் இம்மென இமிர்தலின் பாடலோடு**
> **அரும் பொருள் மரபின் மால்யாழ் கேளாக் கிடந்தான் போல்**

என்று பாடல் அமைந்துள்ளது. இதில் இரவு நேரத்தில் தும்பிகள் ஒருங்கு சேர்ந்து எழுப்பும் ஒலியும், சுரும்புகள் மலர்களை நுகர்வதற்காக எழுப்பும் ஒலியும், யாழ் இசைப்பது போல இருப்பதைக் கேட்டு திருமால் பள்ளி கொண்டிருந்தார்.

எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கும் பெரிய கடலும் ஒலியடங்கி உறக்கம் மேற்கொண்டிருந்தது. இப்பாடலில் திருமால் பள்ளிகொண்ட கோலம் உவமையாக்கப்பட்டுள்ளது.

கடலுக்கு ஒலியடங்கி உறக்கம் மேற்கொள்வது என்பது என்றும் நடவாத செயலாகும். அதுபோல தும்பிகள், சுரும்புகளின் இம்மென்ற ஓசை பாடலோடு யாழ் மீட்டுவது போன்று, அதைக் கேட்டு திருமால் பள்ளிகொள்வது என்பதும் கற்பனைக்கு அப்பாற்பட்ட செயலாகும். கடல் கூட ஒலியடங்கி அமைதியான உறக்கம் கொள்ளும். திருமாலும் பள்ளிக்கொண்டு தூங்குவார். ஆனால் தலைவனைக் காணாது காவலிலுள்ள தலைவிக்குத் தூக்கம் என்பது இல்லாத ஒன்றாகும் என்பதைச் சொல்லாமல் சொல்ல இத்தொன்மம் உவமையாக்கப்பட்டிருக்கலாம்.

திருமால் மற்றும் கடல் துயில் கொண்டதாகப் பாடலில் கூறப்படுவதால் உலகமே நிம்மதியாகத் துயில் கொள்ளும் வேளையிலும் களவில் ஈடுபட்ட தலைவி காவலில் வைக்கப்படுவதால் எல்லையில்லாத் துன்பத்தால் தலைவனை நினைத்து துயில் கொள்ள இயலாமல் தவிக்கிறாள் என்பதைப் புலவர் உள்ளுறையாக வைத்துப் பாடுவதற்கு இத்தொன்மம் உவமையாக வந்து உதவுகிறது எனலாம்.

மற்றுமொரு திருமால் தொன்மம் உவமையாக வந்த நெய்தற் கலிப்பாடல் (124) தலைவன் பொருள்வயிற் பிரிந்து திரும்பி வந்த நிலையில், களவு வெளிப்பட்ட பின்னரும் தலைவியைத் திருமணம் முடிக்கத் தாமதிக்கின்றான். அவனிடம் தலைவியின் துன்பத்தை எடுத்துக் கூறியத் தோழி திருமணம் விரைவில் செய்க என்பதாகப் பாடலுள்ளது.

> *ஞாலம் மூன்று அடித் தாய முதல்வற்கு முது முறைப்*
> *பால் அன்ன மேனியான் அணி பெறத் தைஇய*
> *நீலநீர் உடை போல,*

என்கிறார் புலவர். உலகம் மூன்றையும் தன் திருவடியினால் அளந்த முதல்வனாய் திருமாலுக்கு மூத்தவனாகிய பால் போன்ற மேனியனான பலராமன் அழகுபெற அணிந்திருந்த நீலநிற ஆடையைப் போல உள்ளது அழகு பெற்ற வெண் திரையினை உடைய கடல் என்கிறார் புலவர். ஊரார் அவர் தூற்றுகின்றனர். தலைவனால் ஏற்பட்ட காமநோயினால் தலைவி மிகுதியும் வாடுகிறாள். அவருடைய பிறை போன்ற நுதலில் பசலை படர்ந்து களவு வாழ்வை ஊராருக்குக் காட்டிவிட்டது.

தலைவி தன் இயற்கையான அழகையெல்லாம் இழந்து உன் பொருட்டு வாடுகிறாள். தலைவன் பிரிவால் இழந்த நலம் மீண்டும் கிடைக்கத் தலைவனே நீ உன் தேரினைச் செலுத்தி தலைவியின் மனையிடத்தே விரைந்து செல்வாயாக என்கிறாள் தோழி.

இப்பாடலில் கடலுக்கு பலராமனின் நீலநிற ஆடை உவமையாக வந்துள்ளது. உலகை மூன்றடி அளந்த திருமாலின் மூத்தவன் பலராமன் என்று சொல்லப்பட்டுள்ளது. திருமாலின் வாமன அவதாரத்தில் வாமனனாக வந்த திருமால் மாபலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டார். சிறிய உருவத்தில் வந்த திருமாலிடம் மாபலி தருகிறேன் என்று உறுதியளிக்க, வாமனன் பெரிய ரூபம் எடுத்து ஓரடியில் பூமியை அளந்தார். இரண்டாவது அடியால் வானத்தை அளந்தார். மூன்றாவது அடி எங்கே எனக் கேட்க, மாபலி தன் தலையைக் காட்ட, அரசன் தலையில் கால் வைத்து பூமிக்குள் வாமனன் அரசனை அமுக்கினார் என்று தசாவதாரக் கதை கூறுகிறது.

உலகை மூன்றடியினால் அளந்த திருமாலுக்கு மூத்தவனான பலராமன் அணிந்த நிலநிற ஆடையைப் போன்ற கடல் என்று குறிப்பிடப்படுகிறது. பலராமனுக்கு **யமுனை இரண்டு நீல வஸ்திரங்களும், ஒரு பொன் மாலையும் அளித்தது. ஆகையால் அதையணிந்து நீலாம்பரன் எனப் பெயரடைந்தார்.**[15]

இப்பாடலில் வந்துள்ள திருமால், பலராமன் தொன்ம உவமைகள் மறைமுகமாய் சில செய்திகளைக் காட்டுகிறது எனலாம். திருமணத்திற்குக் காலம் தாழ்த்திய தலைவனின் பிரிவாலும், ஊரார் தூற்றும் அலராலும் வாடும் தலைவியின் நிலையைத் தோழி தலைவனுக்குக் கூறி திருமணம் முடிக்கத் தூண்டுகிறாள். இப்படிப்பட்ட களவு வாழ்க்கையை எடுத்துக்கூறும் பாடலில் கடவுளர்களான திருமால், பலராமர் தொன்மம் உவமையாகப் பயன்பட்டிருப்பதின் நோக்கத்தை ஆராயும்பொழுது ஒப்பீட்டு நிலையில் சில செய்திகளை அறியலாம். அவை:

| | |
|---|---|
| திருமாலிடம் மூன்றடி தருவதாக வாக்கு கொடுத்த மாபலி இறுதியில் துன்பப் பட்டது போல, தலைவன் தலைவியை மணப்பேன் என்று உறுதியுடன் இருந் தவன், மணக்க வராததால் தலைவி துன்பப்படுகிறாள் என்று கூறலாம். | பலராமனுக்கு யமுனை நீலநிற ஆடை அளித்ததுபோல, தலைவன் தலைவிக்கு காதல் வாழ்வை பரிசாக நல்கினான் எனலாம் |
| மாபலி, தன்னால் மூன்றடி கொடுக்க முடியும் என்று கர்வப்பட்டது போல, தலைவியும் களவுவாழ்க்கையில் வெற்றி கொண்டு கற்பு வாழ்வு வாழ்வேன் என்றிருந்தும், தலைவன் தன்மேல் கொண்ட அன்பால் கர்வப்பட்டிருந்தவள் இன்று மாபலி அழிந்ததுபோல காம நோயால் அழிகிறாள் எனச் சொல்லாம். | பலராமனுடைய நீலநிற ஆடையைப் போன்ற கடல் என்பதால், அழகியல் உணர்வுகளைக் கொடுத்த கடல் போன்ற களவு வாழ்க்கையில், கடுமையான அலர் எனும் அலைகளின் நடுவே நீந்தி கரை யெனும் கற்பு வாழ்வை அடையவேண்டும் எனத் தலைவனுக்கு மறைமுகமாகச் சொல் வதாகக் கொள்ளலாம். |

இப்பாடலில் கூறிய திருமால் தொன்ம உவமைகள் பாடலின் கருத்துகளுக்கு மிகப் பொருத்தமாகப் பொருந்தி வருகின்றன என்று கூறமுடியும்.

அடுத்து நெய்தற்கலிப் பாடல் (134) தலைவன் பிரிந்து சென்றதால் வாடிய தலைவி கடலும், மணலும், மரமும் அவளது துயரம்கண்டு துன்பம் அடைந்த

தாகவும் தலைவன் வருவான் எனச் சொல்லிய அளவில் தலைவன் வந்துவிட தலைவியின் துன்பம் நீங்கியது எனக் கூறுகிறது பாடல். இப்பாடலில் சூரியன் மேற்றிசை மறைவதற்கு திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அப்பாடல் வரிகளாவன:

> ***மல்லரை மறம் சாய்த்த மலர்த்தண்தார் அகலத்தோன்***
> ***ஒல்லாதார் உடன்று ஓட, உருத்து, உடன் எறிதலின்***
> ***கொல்யானை அணிநுதல் அழுத்திய அழிபோல்***
> ***கல் சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்*** (134: 1-4)

என்கிறார் புலவர். அலர்ந்த தண்ணிய மாலையை அணிந்த திருமார்பை உடைய மாயோன், பகையாய மல்லர்களின் வலிமையை அழித்தான். பகைவர் ஒரு சேர வந்து சினந்து போரிட்ட காலத்தே அவர் ஓடும்படியாக அவர்தம் கொல்யானையின் அழகிய மத்தகத்திலே ஆழ்த்திய சக்கரப்படை போலிருந்தது. சூரியன் தான் பரப்பிய ஒளிக்கற்றைகளைத் தன்னிடத்தே வாங்கிக் கொண்டு மேற்றிசை மலையை அடைந்து மறைந்த காட்சி எனப் புலவர் பாடுகிறார்.. இப்பாடலில் இயற்கை காட்சியான சூரியனின் மறைவதற்குத் திருமால் தொன்மம் உவமையாக வந்தாலும், இப்பாடலின் முக்கிய கருத்துக்கும் இத்தொன்மம் ஒத்ததாக அமைகிறது எனலாம். அதாவது தலைவன் பிரிந்து சென்ற நிலையில் தலைவி வாடுகிறாள். பின்பு தலைவன் வந்துவிடுகிறான். இதுபோல மாயோன் மல்லர்களை அழித்த நிகழ்வு ஆகிய இவ்விரண்டையும் ஒப்புமைக்கொண்டு நோக்கினால் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.



இப்பாடலின் மையக் கருத்துக்குத் திருமால் தொன்மம் உவமையாக வரவில்லை என்றாலும், அப்பாடலில் வரும் ஒரு செய்திக்குத் தொன்மம் உவமையாக வந்துள்ளது. மையக் கருத்துடன் அவ்வுவமையைத் தொடர்புபடுத்தும் போது பொருத்தமாகிறது. இது சங்க இலக்கியப் புலவரின் தனித்திறனைக் புலப்படுத்துகிறது எனலாம். அத்துடன் திருமால் தொன்மம் பாடலின் கருத்துக்குச் செறிவூட்டுவதாகவும் வருகின்றது.

இன்னுமொரு பாடலில் (நெய்தற்கலி 140) மடல் ஏறுவேன் என்று முற்பட்ட தலைவன் ஊரில் உள்ளவர்கள் தனக்காக இரக்கம் கொள்ளாமல், பாராமுகமாக இருக்கின்றார்களே. ஒருவருக்கு உதவுதல் சான்றோர் கடமை அல்லவா? என்று கோபமுற்றான், நெடியோனாகிய திருமாலின் மகனாகிய மன்மதன் தன்னை அழிக்க விரும்பினான் எனத் தலைவன் கூறுகிறான். பின்பு ஒருத்தி தன் உடம்பில் மன்மதனால் கொடுக்கப்பட்ட அழகுடன் தோன்றி தன்னுடைய கண்களால் என் நெஞ்சாகிய அரண் இடிந்து போகுமாறு செய்தாள் என்கிறான்.

தலைவி தலைவனைக் கவர்ந்து களவு வாழ்க்கை மேற்கொண்டு, அதற்காக மடலேறும் தருவாயில் இதற்குத் திருமாலின் மகனாகிய மன்மதனே காரணம் என்று தலைவன் கூற்றாகப் பாடல் அமைந்துள்ளது. தலைவியால் ஏற்பட்ட காமநோயைத் தீர்க்குமாறு தலைவன் சான்றோரை வேண்டுகிறான். இப்பாடலில் திருமால் மகனாகிய மன்மதன் என்னை அழிக்க விரும்பினான் என்று வந்துள்ளது. ***மன்மதன் கிருஷ்ணாவதாரத்தில் கிருஷ்ணருக்கும் ருக்மணிக்கும் பிரத்யும்னன் என்ற பெயரில் மகனாகப் பிறந்தவன். இவன் ஆன்மாக்களுக்குக் காமத்தை விளைவித்து வம்ச விருத்தி செய்விப்பவன்***[6] என்பதால் தலைவன், திருமாலின் மகனாகிய மன்மதனால் ஏற்பட்டது இக்காம நோய் என்கிறான். இதற்குதான் காரணமல்ல. கடவுள் தான் காரணம். அதனால் தனக்கு ஏற்பட்ட காமநோயைத் தீர்த்து வைப்பது சான்றோருக்கு கடமை என்று மறைமுகமாய் சொல்லுவது போலக் கொள்ளலாம். காமநோயைத் தீர்த்து

வைப்பதற்கு தலைவியைத் தனக்கு மணமுடித்து வைக்குமாறு தலைவன் வேண்டுகிறான்.

அடுத்ததாக நெய்தற்கலியில் மற்றுமொரு பாடல் (145), தலைவன் பிரிந்து சென்றதால் வாடும் தலைவி ஊராரைப் பார்த்தும், நிலவை நோக்கியும், சூரியனை நோக்கியும் தலைவனைக் கூட்டி வரும்படியும், தலைவனிடம் சென்று தலைவியின் குறையைக் கூறும்படியும் தன் மேல் சுடுகின்ற காமத்தீயைப் போக்குமாறு மேகத்தை மழைபொழியச் சொல்லுவதுமாய் பாடல் அமைந்துள்ளது. இறுதியில் தலைவன் வந்துவிட, மாயவன் மார்பில் திருமகள் சேர்ந்தாற்போல தலைவன் மார்பில் தலைவி சேர்ந்தாள் என்கிறது பாடல். அப்பாடல் வரியாவன:

***மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர*** (145: 64)

தலைவன் மார்பில் தலைவி சேர்ந்ததற்குத் திருமால் மார்பில் திருமகள் சேர்ந்தது உவமையாக வந்துள்ளது. திருமால் தன் துணைவியான திருமகளை ஒருபோதும் விட்டுப் பிரியாதவர் என்று பாகவதம் மூலம் அறியமுடிகிறது. இராமாவதாரத்தில் சீதையாகவும், கிருஷ்ணாவதாரத்தில் ருக்மணியாகவும் திருமகள் அவதரித்தாள் என்று புராணம் கூறுகிறது. அதுபோல தலைவன் - தலைவி பிரியாமலிருக்க வேண்டும் என்பதற்காக இத்தொன்ம உவமையைப் புலவர் பயன்படுத்தியிருக்கலாம். பாடலின் பொருளுக்கு தொன்மம் உவமையாக வரும்போது மேற்கண்ட கருத்து போல பல கருத்துகளை வெளியிட ஏதுவாகின்றது. புலவரின் உள்ளக்கிடக்கும் இதுவாக இருக்கலாம் என அனுமானிக்க முடிகிறது.

கலித்தொகை போன்று மற்றுமொரு அகஇலக்கியமான அகநானூற்றில் திருமால் தொன்மம் உவமையாகப் மூன்று பாடல்களில் வந்துள்ளது எனலாம்.

முதலாவதாக பாடல் (அகம். 59) வரிகளில் (6-7) திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. தலைவன் பிரிவால் வாடும் தலைவிக்குத் தோழி

ஆறுதலாகத் தலைவன் விரைவில் வருவார் எனக் கூறுகிறாள். தலைவியின் அழகைப் பார்த்துப் பாராட்டியதையும் மறந்து தலைவன் பொருளீட்டச் சென்றுள்ளான். அவ்வாறு அவர் போகும் பாதையில் எதிர்ப்படும் காட்சியை விளக்கி அக்காட்சிக்குத் திருமால் தொன்மம் உவமையாக்கப்பட்டுள்ளது.

தலைவன் செல்லும் பாதையில் பெண் யானை உண்ணட்டும் என்று ஆண் யானை மரக்கிளையை வளைத்துக் கொடுக்கிறது. இக்காட்சி எப்படி உள்ளதென்றால் யமுனை ஆற்றில் நீராடிய ஆயமகளிர் குளிர்ந்த தழையை உடுத்திக் கொள்ளட்டும் என்று குருந்த மரக்கிளையின் மேல் ஏறி நின்று, அதனை மிதித்து, கிளையை தாழ்த்திக் கொடுத்த கண்ணபிரான் போலிருந்தது என்கிறார் புலவர். பெண் யானைக்கு உதவும் ஆண் யானையைப் பார்த்ததும் தலைவியின் நினைவு வந்து தலைவன் விரைந்து வந்துவிடுவான் என்று தோழி கூறுகிறாள். இப்பாடலில் வரும் ஒரு சூழலுக்கு திருமால் அவதாரமான கிருஷ்ணர் தொன்மம் உவமையாக வந்துள்ளது. ஆய மகளிருக்கு இரக்கப்பட்டு கிருஷ்ணர் அருளுதல் போல, தலைவி மீது இரக்கம் கொண்டு தலைவன் விரைவில் வந்து அருளுவார் என்பதை உள்ளுறையாக வைத்துப் புலவர் கூற்றாகத் தலைவிக்கு உணர்த்த இத்தொன்மம் பயன்பட்டிருக்கலாம்.

அடுத்த (அகம். 175) பாடலில் தலைவனைப் பிரிந்து வாடும் தலைவியிடம், தோழி வருந்த வேண்டாம் எனக் கூறியதும், அதற்குத் தலைவி தலைவன் கடந்து சென்ற பாலை வழிப் பாதையின் கருமையையும், அவன் நிச்சயம் வந்துவிடுவேன் என்று சூளுரைத்ததையும் கூறுகிறாள்.

மேகமானது பாண்டியன் நெடுஞ்செழியன் போரிட்டு வென்ற வேற் படையைக் காட்டிலும் பெரிதாக மின்னியது. அவன் அறைந்த முரசு சத்தம்போல இடிஇடித்தது. அதிகமான ஆரங்களையுடைய சக்கரப்படையைக் கொண்ட திருமாலின் மார்பிடத்தே உள்ள பல நிற வண்ண மாலைகள் போல் வானில்

வானவில் தோன்றியது. மேகம் மண் பயன்பெறுமாறு மழை பெய்யுங் காலத்துத் தாம் மேற்கொண்ட செயலை முடித்துக்கொண்டு வருவனே் என்று கூறிச் சென்ற தலைவன் வரவில்லையே எனத் தலைவி வாடுகிறாள். இப்பாடலில் வானத்தில் வரும் வானவில்லிற்கு திருமால் மார்பில் உள்ள மாலைகள் உவமையாக்கப் பட்டுள்ளன. தலைவன் மழைக்காலத்தில் திரும்பி வருவேன் என்று சொல்லிப் போனதாக குறிப்பு உள்ளது. வானத்தில் பல வண்ணங்களிலுள்ள வானவில் தோன்றினால் மழை வராது என்பதாகச் சொல்வார். மழை இல்லாத காலத்திலே வானவில் தோன்றும். தலைவன் வரும் காலம் மழைக்காலம் என்பதால் அக்காலம் இன்னும் வரவில்லை. அதனால் தலைவி வருந்தத் தேவையில்லை. மழைக்காலம் வந்ததும் தலைவன் கூறிச் சென்றது போலவே வருவான் எனக் கொள்ளலாம். வானவில்லுக்கு திருமால் மார்பிலே சூடிய வண்ணமாலையைச் சொல்வது திருமாலின் மேல் அக்காலத்திலிருந்த பக்தியை வெளிப்படுத்துகிறது.

மற்றுமொரு அகநானூற்றுப் பாடலில் (220) தலைவன், இரவு நேரத்தில் தலைவியைக் காணச்செல்கையில் தோழி தலைவனிடம் அவன் பிரிந்தபோது வாடுகிறாள் தலைவி. அதனால் தலைவியின் அழகு கெடுகிறது. அதைப்போக்க வழிசொல்லுமாறு தலைவனை வேண்டி தலைவியை மணந்து கொள்ளுமாறு கூறுகிறாள்.

தலைவன் பிரிவில் தலைவி வாடுகிறாள், இதில் திருமால் தொன்மமான பரசுராமர் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அரசர் குலத்தை அழித்த பரசுராமர் செய்த வேள்வியில் இடம்பெற்ற உயர்ந்த காவலையுடைய வேள்வித்தூண் போன்று யாரும் காணமுடியாத எம் தலைவியின் மார்பகத்தை நினைக்கும் போதெல்லாம் நீதான் வந்து நின்று வருத்துகின்றாய் எனத் தலைவனிடம் தோழி கூறுகிறாள். இப்பாடலில் தலைவிக்கு, பரசுராமர் செய்த வேள்வியிலுள்ள மிகுந்த காவலிலுள்ள வேள்வித் தூணை உவமையாகச் சொல்கிறார் புலவர். வேள்வி

நெருப்பின் தாக்கத்திலுள்ள வேள்வித் தூணை தலைவனைப் பிரிந்து வாழும் தலைவிக்கு உவமை கூறியுள்ளார் புலவர். நெருப்பின் வெப்பத்தில் வேள்வித் தூண் இருப்பதுபோல தலைவனால் ஏற்பட்ட பிரிவுத் துன்பத்தில் தலைவி, அனலில் நிற்பது போலத் துயரப்படுகிறாள் என்பதைச் சுட்டப் புலவர் இத்தொன்மத்தை உவமையாகப் பாடலின் கருத்துக்கு பொருந்தி வருமாறு அமைத்துள்ளார் எனலாம். தலைவியின் துன்பத்தையும், அவள் மிகுந்த காவலிலுள்ளாள் என்பதையும் குறிப்பால் உணர்த்தவும் இத்தொன்மம் பயன்பட்டுள்ளது என்று கூறலாம்.

பத்துப்பாட்டிலுள்ள ஆற்றுப்படை இலக்கியங்களில் ஒன்று பெரும் பாணாற்றுப்படையாகும். கடியலூர் உருத்திரங்கண்ணனார் பேரியாழ் இசைக்கும் பெரும்பாணனை காஞ்சித் தலைவன் தொண்டைமான் இளந்திரையனிடம் ஆற்றுப் படுத்துகிறார். ஆற்றுப்படுத்துவது என்பது காஞ்சி சென்று இளந்திரையனை நாடினால் தாம் பெற்றதுபோல ஏராளமாய்ப் பொன், பொருள் பெறலாம் என்று சொல்வதாகும்.

பெரும்பாணாற்றுப்படையில் மூன்று இடங்களில் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளன. பாடலின் தலைவனான தொண்டைமான் இளந்திரையனைச் சிறப்பிக்க திருமால் சார்ந்த உவமை பயன்பட்டுள்ளது (பெரும்பாண். 29-30). இளந்திரையன் திருமாலின் வழிவந்தவன் என்பதை விவரிக்க், பெரிய நிலத்தை அளந்து கொண்டவனும் திருமகளாகிய மறுவினை அணிந்த மார்பை உடையவனும் கடல் வண்ணனுமாகிய திருமால் மரபினன், கடல் அலைகளால் கரை சேர்க்கப்பட்ட சோழ மன்னன் மரபில் வந்தவன் திரையன் என்று குறிப்பிடப்படுகிறது.

இதில் பெரிய நிலத்தை அளந்து கொண்டவன் என்பது திருமால் அவதாரத்தில் ஒன்றான வாமன அவதாரத்தில் மூன்றடி நிலத்தைத் தானமாகப்

பெற்ற தொன்மம் சுட்டப்பட்டுள்ளது. திரையனிடம் சென்றால் பொன்னும் பொருளும் தான தர்மம் செய்வான் என்று ஆற்றுப்படுத்தும் பாடல் வரிகளில் நிலத்தைத் தானம் கேட்ட வாமன அவதாரத் தொன்மம் உவமையாக உணர்த்தியது பொருத்தமாகும். சங்குகளில் சிறந்தது வலம்புரிச் சங்கு என்று சொல்லப்படுவது போல மூவேந்தர்களில் சிறப்பானவன் திரையன் என்று சொல்லுகிறார் புலவர்.

தன்னைப் புகழ்ந்து பாடும் புலவருக்கு வேண்டியதெல்லாம் வாரி வழங்குபவன் திரையன். அவன் எல்லாவிதத்திலும் பெருமையுடையவன். ***திரையனின் தந்தை சோழன் கிள்ளிவளவன் – தாய் நாகநாட்டு இளவரசி பீலிவளை. இவனைக் கடல் திரை தந்ததால் திரையன் என அழைக்கப்பட்டான்.***[17] இதுபோல திருமாலும் கடலில் பாம்பணையில் பள்ளிகொண்டவர். இச்செய்தியால் திரையனுக்கும், திருமாலுக்கும் உள்ள தொடர்பு ஒத்துப் போகிறது. தொண்டைக் கொடி சுற்றி வந்ததால் தொண்டைமான் இளந்திரையன் எனப்பட்டான் என விளக்கம் கிடைக்கிறது. தொண்டைமான் இளந்திரையனின் தன்மையைக் கூறக் கேட்ட மாத்திரத்தில் மனக் கவலை கெட்டு ஒழியும் என்கிறார் புலவர். திருமாலின் அவதாரக் கதைகளையும், அவன் பாடல்களையும் கேட்ட மாத்திரத்தில் மனக்கவலை ஒழியும் என்பார் வைணவ பெரியார்கள். திருமாலைப் போல மக்களைக் காப்பதில் சிறந்தவன் திரையன் என்றுச் சுட்டிக்காட்டுவது இத்திருமால் தொன்மத்தின் நோக்கம் எனக் கொள்ளலாம்.

அடுத்ததாக பெரும்பாணாற்றுப் பாடலில் (372-373) காஞ்சியிலுள்ள திருமால் திருத்தலமாகிய திருவெஃகா எனும் இடம் சிறப்பிக்கப்படுகிறது. பூங்கொத்துக்களை உடைய காந்தள் அடர்ந்த மலைகளிடத்தே யானை கிடந்தாற்போன்று பாம்பணையில் பள்ளிகொண்ட திருமாலின் திருப்பதியான திருவெஃகாவை அடையலாம். அங்குள்ள திருமாலை வாழ்த்திச் சிறிதுநேரம் யாழ்

இசைத்து பின் செல்லலாம் என்று திரையனிடம் பரிசில் பெறச் செல்லும் பாணர்கள் கூற்றாகப் பாடல் அமைந்துள்ளன. திருமாலுக்கு அதாவது பள்ளிகொண்ட பெருமாள் யானை கிடந்தாற்போன்று பள்ளி கொண்டிருந்ததாக உவமையாக்கியுள்ளார் புலவர். பாணர்கள் பரிசில் பெறச்செல்லும் வழியில் கோயில்களையும் பல குடியிருப்புகளையும் கடந்து செல்வதும் அப்படி கடந்து செல்லும் வேளையில் திருமால் தலத்தின் சிறப்பையும் பாடுவர். காஞ்சியில் திருமாலின் தலத்தில் வழிபாடு இருந்துள்ளமையை இதன்மூலம் அறிய முடிகிறது. திருவெஃகா என்பது ***இப்போதுள்ள சின்ன காஞ்சி வரதராசப்பெருமாள் கோயில்***[18] ஆகும். திரையன் கடலில் வந்தவன் அதேபோன்று திருமாலும் கடலில் பள்ளிகொண்டதால், திருமாலுக்கு, திரையனுக்கும் ஒப்புமையின் பொருட்டு இந்த உவமை பொருந்துகிறது. அதுமட்டுமின்றி திரையன் ஆட்சியின் கீழுள்ள கோவிலைக் குறிப்பிடும்பொழுது அது திருமால் உறையும் கோவிலைக் கூறுவது மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது.

மற்றுமொரு இடத்தில் (பெரும்பாண். 402-403) காஞ்சி நகரின் சிறப்பைக் கூறும்போது உவமையாகத் திருமால் தொன்மத்தைப் பயன்படுத்தியுள்ளது தெரிகிறது. ***காஞ்சிமா நகரமானது நீலநிற உருவம் கொண்ட திருமால் படுத்திருப்பது போலவும், திரையனின் அரண்மனையானது திருமாலின் கொப்பூழில் தோன்றிய நான்முகன் அமர்ந்திருக்கும் தாமரையின் பொகுட்டு போலவும் அமைந்திருக்கும். காஞ்சி மாநகரம் தாமரை என்றால் அரசன் திரையனின் அரண்மனை தாமரை பொகுட்டு ஆகும்.***[19] ஆக திரையன் திருமால் மரபில் வந்தவன் என்பதற்குப் பொருத்தமாய் அவன் ஆண்ட ஊரிலுள்ள கோவிலுக்கும், ஊருக்கும் திருமால் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன.

நற்றிணையில் (32) ஒரு பாடலில் தலைவனுடன் தலைவி நட்புக் கொண்டு பழகிய பின்னர் அவனைக் குறை கூறி வெறுக்கிறாள். இச்செயலைத் தோழி கண்டித்துச் சொல்லும்போது திருமால் தொன்மம் உவமையாக வருகின்றது.

மாயோனைப் போன்று பெரிய மலையும், அங்கு அவனுக்கு முன்பிறந்த வெள்ளை நிறத்தவனான பலதேவனைப் போன்ற வெண்மையான அருவியும் உடைய மலைக்குத் தலைவன் என்று தலைவனைக் கூறுகிறாள் தோழி. நட்பு குறித்து இப்போது ஆராய்வது பயனில்லை. இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னரே ஆய்ந்து பின் நட்புக் கொண்டிருக்க வேண்டும் என்கிற தோழி தலைவன் நல்லவனே என்று புலப்படுத்துகிறாள்.

மாயோனாகிய திருமால் கரிய நிறமுடையவர் என்பதால் மலைக்கு உவமையாகவும், பலராமர் வெண்மை நிறம் என்பதால் அருவிக்கும் உவமையாக்கப் பட்டிருக்கிறார்.

பொதுவாக அகப்பாடல்களில் திருமால் தொன்மம் உவமையாகப் பயன்படும்போது திருமாலுடன் பலராமரும் சேர்த்து உவமையாகிறார். காரணம் அறிய ஆராயும்போது பெரும்பாலும் திருமால் தொன்மம் என வரும்போது கிருஷ்ணாவதாரமே உவமையாக வருகின்றது. கிருஷ்ணாவதாரத்தில் மாயோன் இளவயதில் கோபியர் சூழ வாழ்ந்தவன் என்றும், ராதையுடன் களவு வாழ்க்கை வாழ்ந்தவர் என்றும் புராணங்கள் கூறுகின்றன. கிருஷ்ணருடன் பலமராமரு இணைந்து இருந்ததால் அகப்பாடல்களில் பெரும்பாலும் இவ்விருவரே (மாயோன், பலராமர்) உவமையாக வந்துள்ளனர்.

பதிற்றுப்பத்தில் (15: 38-39) சேரலாதன், இந்த உலகின் கண் நிலை பெற்றுள்ள உயிர்களுக்கெல்லாம் குறைவில்லாமல் ஈகை உடையவன். இறைவன் இருக்கும் ஆலயங்களுக்குச் சிறந்த அணிகலன்களை நல்குபவன் கண்டதும் இன்பம் தருதலையுடைய சிறப்புமிக்க திருமாலைப் போன்று குறைவற்ற புகழை அடைந்து வாழும் பண்பு உடையவன் என்கிறார் புலவர். சேரலாதனின் சிறப்பை ஈகைக் குணத்தை மேம்படுத்திச் சொல்ல திருமால் உவமையாக்கப்பட்டிருக்கிறார் எனலாம். கண்டதும் இன்பம் தருதலையுடைய திருமால் போன்று என்பது குலசேகர ஆழ்வார்

பாடிய பெருமாள் திருமொழி தொகுப்பிலிருந்து ஒரு பாடல் (647) வரியைச் சான்றாகக் கூறலாம்.

*. . . . . . . . . . . . . பொன்னி*
*திரைக்கையால் அடி வருடப்*
*பள்ளிக்கொள்ளும்*
*கருமணியைக் கோமளத்தைக் கண்டு*
*கொண்டு என் கண்ணிணைகள்*
*என்று கொலோகளிக்கு நாளே*

என்று ஆழ்வார் திருமாலைப் பாடியது போல சேரலாதன் தன்னை நாடி வருபவர் தேவையை பூர்த்திசெய்து அருளுபவன் என்பதற்காக மன்னனை திருமாலுடன் ஒப்பிட்டு இவ்வுவமை ஒப்பீடு செய்து கையாளப்பட்டிருக்கலாம்.

அடுத்ததாக முல்லைப்பாட்டில் (2) வினையின் பொருட்டு பிரிந்த தலைவனை நினைத்து வாடும் தலைவியைக் கண்டு தலைவன் வரும்வரை பொறுமையுடனிரு என்று முதுபெண்டிர் கூறுகின்றனர். அதனால் அவள் பொறுமை காத்தாலும் அவள் மனம் அவனை நினைத்துக் கொண்டேயிருக்கிறது தலைவிக்காக மற்றவர்கள் விரிச்சி கேட்கின்றனர். அச்சமயம் கடல்நீரைக் குடித்து எழுந்த மேகம், மலைகளில் தங்கி மாலைப்பொழுதில் பெருமழையாகப் பொழிந்தது. மேகம் மழை பொழிந்த காட்சி சக்கரத்தோடு வலம்புரிச் சங்கினை ஏந்திய கைகளையும், திருமகளை வைத்திருக்கும் மார்பினையும் உடைய திருமால், வாமனனாகச் சென்று இரந்தபோது மாவலி தானம் கொடுப்பதாகச் சொல்லி, நீரை வாமனனின் கையில் விட்டவுடன் விண்ணையும், மண்ணையும் தொடுவது போன்று திருமால் உயர்ந்தது போல இருந்தது என்கிறார். இப்பாடலில் மேகம் மழைபொழிதற்கு திருமால் தோன்மம் உவமையாக வந்துள்ளது.

இப்பாடலில் தலைவி தலைவனுடன் நட்புகொண்டு பிரிய விழைகிறாள். அதன் காரணமாய் மனம் வாடுகிறாள். அவளைத் தேற்றுகின்றனர். பாடலின் கருத்திற்குப் பதிலாக பாடலில் இடம்பெறும் காட்சிக்குத் திருமால் தொன்மம் உவமையாக வந்துள்ளது. மழை பொழியும் மேகத்திற்கு, வாமன அவதாரத்தில் மூன்றடி மண் கேட்டு மூன்றாவது அடியை மாபலி அரசனின் தலையில் அழுத்தி அழித்தது போல, தலைவியும் மாவலி போலத் துன்பப்படுகிறாள் என்பதற்கேற்ப இந்த உவமைப் பொருத்தமாக வந்துள்ளது எனலாம். அதேபோல திருமால் வாமனனாக வந்து மாபலிக்கு மோட்சம் அளித்ததுபோல தலைவனும் விரைவில் வந்து தலைவியை வருத்தத்திலிருந்து மீட்டு மகிழ்ச்சி கொடுப்பான் என்பதற்காகப் புலவர் இத்திருமால் தொன்மைத்தை பயன்படுத்தியிருக்கலாம்.

### திருமால் தொன்ம உவமைகள் மூலம் அறியவருவன

1. திருமால் அவதாரக் கதைகளே பெரும்பாலும் உவமையாக வந்துள்ளன.
2. திருமாலின் மேனிவண்ணம், கொடி, படை போன்றவை உவமையாக வந்துள்ளன.
3. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை மிகுந்த அளவில் கலித்தொகை யிலும், புறநானூற்றிலும் திருமால் உவமையாக ஆக்கப்பட்டிருக்கிறார்.
4. புறநானூற்றில் அரசர்களுக்குத் திருமால் தொன்மம் உவமையாகக் கூறப்படுகிறது.
5. அதிலும் குறிப்பாக காக்கும் கடவுளாகத் திருமால் உள்ளதால் அரசர்களின் கடமையான மக்களைக் காப்பது என்பதற்குத் திருமால் உவமையாகச் சுட்டப்படுகிறார் எனலாம்.
6. அகப்பாடல்களான கலித்தொகையில் தலைவன் தலைவியின் பிரிவுச் சூழலில் திருமால் உவமைகள் பயின்று வருகின்றன.

7. சங்க இலக்கியத்தில் திருமால் அவதாரக் கதைகள் உவமையாகக் கையாளப்பட்டுள்ளன. அவற்றுள் பல பாடல்களில் பலராமர் திருமாலுடன் இணையாக உவமித்துக் குறிப்பிடப் படுகிறார்.

8. திருமால் அவதாரக் கதைகள் எனும்போது அவற்றுள் கிருஷ்ணாவதாரமும், வாமன அவதாரமும் அதிகமாக உவமைகளாக வந்துள்ளன.

9. அரசர்களின் வீரத்திற்குத் திருமால் உவமையாக வரும்பொழுது மல்லரை வதம் செய்த நிகழ்வும், கேசி எனும் அசுரனை வதம் செய்த தொன்மமும் உவமையாக வந்துள்ளன.

10. உவமையாக வருவனவற்றில் திருமால் அவதாரத்துடன் திருமாலின் மேனி வண்ணமும், அவன் பள்ளிகொண்டிருப்பதாகக் கூறப்படும் கடலும் கூடுதலாக உவமையாக வந்துள்ளன.

## முருகன் தொன்மம் உவமைப் பயன்பாடு – நோக்கம்

கடவுளர்களில் தமிழ்க்கடவுள் என்று வணங்கப்படுபவர் முருகக்கடவுள் எனலாம். சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரை முருகன் தொன்மம் செய்திகளாகவும் உவமைகளாகவும் வந்துள்ளன. செய்தியாக வந்தால் அதன் நோக்கம் தெரியப்படுத்துதல் என்ற அளவுடன் முடிந்துவிடுகிறது எனலாம். ஆனால் உவமையாகத் தொன்மம் பயன்படும் பொழுது அதன் நோக்கம் என்று ஆராயும்போது பல கருத்துகளை அறியமுடிகிறது. சங்க இலக்கியத்தில் முருகன் தொன்மம் உவமையாக வந்தவிதம் பற்றி கீழ்க்கண்ட வரைவடம் மூலமாய் அறியலாம்.




மேற்கண்ட ஆறு விதங்களில் முருகன் தொன்மம் உவமையாக அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் முருகன் தொன்ம உவமைகள் ஒவ்வொரு பாடலிலும் இடம்பெற்ற அளவு பற்றி அறிய அடுத்துவரும் வரைபடம் உதவுகிறது.

**முருகன் தொன்ம உவமைகள பயன்பாட்டு விவரம்**




முருகன் தொன்ம உவமைகள் பயன்பாடு அகநூல் எனப்படும் அகநானூற்றிலும் புறநூல்களில் புறநானூற்றிலும் மற்ற நூல்களைக் காட்டிலும் அதில் சற்று கூடுதலாக முருகன் தொன்ம உவமைகள் உள்ளன எனலாம். புராணம் என்பது கடவுளரின் கதைகளை, அவதாரங்களை, திருவிளையாடல்களை கூறுபவை. அப்படிப்பட்ட புராண நிகழ்ச்சிகளைச் சங்க இலக்கிய காட்சிகளுக்கு உவமையாக கூறுவதின் மூலம் மறைமுகமாய் ஒரு செய்தியைப் புலப்படுத்த விழைகிறது எனலாம். **புராணம் என்றால் பழைய வரலாறு நாடோடிப் பாடல் என்று சில பாடல் பாடி வருகிறோம். அவை மக்களுக்கு எல்லாம் பொதுப்**

***பாடல்கள். புராணம் என்பவை உலகோடிக் கதைகள். உலகம் முழுவதும் வெவ்வேறு வடிவில் இவை வழங்கி வருகின்றன. இக்கதைகள் வெறுங்கதைகள் அல்ல. இவற்றின் பொருளாழம் நம் ஆராய்ச்சிக்கு எட்டுவதில்லை***[20] என்ற மேற்கண்ட கருத்துக்கேற்ப புராண வரிசையில் முருகன் தொன்மம் உவமையாக வந்து சங்க இலக்கியத்தில் பல செய்திகளைத் தருகிறது எனலாம்.

### முருகன் தொன்ம உவமைப் பயன்பாடு

அக இலக்கியத்தைப் பொறுத்தவரை முருகன் தொன்மம் பெரும்பாலும் தலைவன் சிறைப்புறத்ததாயிருக்க, அவனுக்குச் சொல்வது போல, தோழியோ, தலைவியோ முருகன் வெறியாட்டு நடந்ததைத் தலைவனிடம் கூறி விரைவில் திருமணம் செய்யுமாறு வலியுறுத்துவதாக அமைந்துள்ளது எனலாம்.

தலைவன் பிரிவால் தலைவியின் மேனியில் வேறுபாடு ஏற்பட்டது இதை அறியாத தலைவியின் தாய், வேலன் வெறியாட்டு நடத்தினாள். வெறியாட்டில் தலைவியின் உடல் மாற்றம் எதனால் வந்தது என்று கூறுவர். அப்படிக் கூறவில்லை என்றால் தலைவி களவு வாழ்வில் ஈடுபட்டாள் என்று ஊராருக்குத் தெரிந்துவிடும். ஆகவே அவளை விரைவாக வரைந்து கொள் என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துவாள். வேலன் வெறியாட்டு என்பது அன்றைய காலகட்டத்தில் கடைப்பிடிக்கப்பட்ட பழக்கவழக்கத்தில் ஒன்றாகும். இவ்வெறியாட்டு ஒரு நிகழ்வாக பல பாடல்களில் (அகநானூறு: 22, 98, 138, 232; குறுந்தொகை: 111, 263) இடம்பெற்றுள்ளது. தலைவன் தலைவி களவு வாழ்க்கை இடையூறின்றி, திருமணத்தில் முடிய தலைவி முருகனுக்கு பலி சிதறி வேண்டிக் கொள்வதாக ஐங்குறுநூறு 259ஆம் பாடலில் இடம்பெற்றுள்ளது. ஆகவே பலி சிதறுதல் சங்க கால மக்களின் நம்பிக்கையாக இருந்துள்ளது என அறிய முடிகிறது.

தலைவியின் மேனி மாறுதலுக்கு முருகனே காரணம் என்று வேலன் கழங்கு பார்த்துச் சொன்னார். வேலன் கழங்குக் குறி என்பது ***கழற்சி விதைகளை***

*முருகன் முன்னிலையில் பரப்பி, வேலன்தன் கையிலுள்ள சிறுபைகள் கட்டிய கோலினால் அக்காய்களை அள்ளி எடுக்கும்போது நேரும் குறிப்புக் கண்டுக் கூறுவதாகும். இக்கழங்குக்குறி, தாய்மார் தங்கள் பெண்களின் மேனி வேறுபாட்டின் காரணத்தை அறியவும், தாங்கள் எண்ணியது கை கூடுமா என்று அறியவும் இவ்வகையான குறிகளைக் கேட்பதில் ஈடுபடு கின்றனர்*[21] என அறிஞர்கள் விளக்கம் அளித்துள்ளனர். தோழி கழங்குகுறிக்குச் சொல்வது போல தாயிற்குக் கூறுகிறாள். தலைவியின் மேனியை வருந்தச் செய்தவன் இளமயில்கள் ஆடி மகிழும் வள்ளிக் கொடி படர்ந்த விரிந்த காட்டிற்கு உரிமையுடையனாகிய மக்களுள் ஒருவனே. ஆண்டவனான வெற்றியை உடைய வேலன் அல்ல எனக் கூறுவதாகப் பாடல் (ஐங்குறு. 250) உள்ளது. இப்பாடலில் தலைவனைச் சொல்லும்போது மயில்கள் ஆடிய, வள்ளிக்கொடி படர்ந்த காட்டிற்கு உரிமையுடையவர்களில் ஒருவன் என்கிறார். ஆக முருகனின் வேலன் வெறியாட்டு எனும் இந்நிகழ்வு தலைவி-தலைவன் களவு வாழ்வை வெளிப்படுத்தி, அவர்கள் கற்பு மணம் புரிவதற்கு காரணமாகின்றது எனலாம்.

மற்றுமொரு பாடலில் (ஐங்குறுநூறு 308) தலைவன் பிரிவதாகத் தோழியிடம் கூறுகிறான். அதற்குத் தோழி தலைவியை விட்டுப் பிரியாமலிருப்பதே சிறந்தது என்கிறாள். கூடவே முருகப்பெருமான் விரும்பி உறைகின்ற இப்பெரிய மலையை அவர்விட்டு பிரியும் போது நீயும் எம்மைவிட்டுப் பிரிவாயக என்று கூறுகிறாள். இப்பாடலில் வரும் முருகன் தொன்மம் பயன்பட்டதின் நோக்கம் யாதெனின் தலைவன், தலைவிக்குள் பிரிவு என்பது நிகழக்கூடாது என்பதைச் சொல்ல, முருகன் தான் உறையும் மலையை விட்டுப் பிரியும்போது தலைவனாகிய நீயும் பிரிவாய் என்பதாகக் கொள்ளலாம்.

*பல் இருங் கூந்தல் மெல்லிய லோள் வயின்*
*பிரியாய் ஆயினும் நன்றே: விரி இணர்க்*

*கால் எறுழ் ஒள் வீ தாஅய*

*முருகு அமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே* (ஐங். 308)

என்று முருகன் விரும்பி உறையும் மலை என்று குறிப்பிட்டதால் முருகன் மலையைவிட்டு நீங்கமாட்டான். அதுபோன்று தலைவனும் தலைவியை விட்டு நீங்கக் கூடாது என்று அறிவுறுத்த புலவர் இம்முருகன் தொன்மத்தைப் பயன்படுத்தியுள்ளார் எனக் கூறலாம். தலைவன்- தலைவி வாழ்விற்கு முருகன் உள்ளான் அவன் காப்பாற்றுவான் என்பதை மறைமுகமாய் கூறுவதற்காகவும் இத்தொன்மம் கையாளப்பட்டுள்ளது எனலாம். குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்குமிடம் என்று வாய் மொழி வழக்கு சொல்லப்படுகிறது. ஆகவே மலை எங்கெல்லாம் உள்ளதோ அங்கு முருகன் எழுந்தருளியிருப்பான். இம்முருகன் தொன்ம உவமை மூலம் புலவர் தலைவன்-தலைவிக்கிடையே பிரிவு என்பதே இருக்கக் கூடாது என்பதை உணர்த்த தோழி கூற்றாகக் கூறுகிறார் எனலாம்.

கலித்தொகையில் ஒரு பாடல் (81: 9-10) தலைவன், பரத்தையின் பொருட்டு தலைவியைப் பிரிந்து சென்று பின் வருகிறான். தலைவி தோழியிடம் தன் மகனின் அழகையும் ஆபரணங்களையும் வருணித்துக் கூறுகின்றாள். தன் மகன் பால் உண்ணாமல் முற்றத்தில் தேரை உருட்டி நடைபயிலா நின்றான். அவன் மழலை மொழியில் 'அத்தத்தா' என்று தன் அப்பாவைக் கூப்பிட்டதில் மகிழ்ந்து, 'ஆலமர் செல்வனின் அழகிற் சிறந்த முருகனைப் போலுள்ளவனே, உன் தந்தையின் பிரிவினரால் மருந்தறியாமல் துன்பப்பட்ட என் நெஞ்சிற்கு நீ பேசும் மழலை அமுதத்தை உண்டாற்போல இனிமையாய் உள்ளது' என்கிறாள் தலைவி.

இப்பாடலில் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளதின் நோக்கங்களாவன:

1. தலைவி தன் மகனின் அழகைப் புகழ்கிறாள். முருகன் என்றால் அழகானவன் என்று கூறுவர். முருகு என்றால் அழகு எனப் பொருள்

கூறப்படுகிறது. இதன்மூலம் தன் மகனும் முருகன் போன்று அழகானவன் எனத் தலைவி வலியுறுத்த முனைகிறாள்.

2. தலைவி தன் மகனின் அழகைப் புகழ்கிறாள். முருகன் என்றால் அழகானவன் என்று கூறுவர். முருகு என்றால் அழகு எனப் பொருள் என்று கூறப்படுகிறது.

3. தலைவி, அன்பாய் பேணி வளர்த்தாலும், மகன் மழலை மொழியில் தன் அப்பாவையே அழைக்கிறான். முருகனுக்கும் உமை தாயாக இருந்தாலும் ஓம் என்னும் பிரணவ மந்திரப் பொருளை தன் தந்தையான சிவனுக்கே அருளினான் எனப்புராணம் வழி அறியமுடிகிறது.

4. தலைவி தன் மகனின் அழகையும், அவன் அணிந்த அணிகலன்களையும் புகழ்ந்து கூறுகிறாள். கமழும் தலையிற் கிடந்த பொன்னால் செய்த பிறையுள் சேர்ந்த முத்து வடத்தோடே நெற்றியிலே தொங்கும் சுட்டி அசைய, இடையிடையே இடுப்புத் தெரிய நெகிழக் கட்டிய சிற்றாடை கிண்கிணி ஒலி எழாமல் பாதங்களில் படிந்து தடுத்தது என்று சிவபெருமானின் மகனாகிய முருகனைப் போல்வரும் என் மகனே என்கிறாள். இதேபோல் முருகப் பெருமானும் பாலகனாயிருந்தபோது புகழப்படுகிறான். ***இரண்டு தண்டைகளும், நவரத்தினங்களினால் இழைத்த வேலைப்பாடமைந்த இரண்டு பாதஸர சதங்கைகளும், இடுப்பின் கீழ கட்டியுள்ள அரைஞாணில் கோர்க்கப்பட்டுள்ள கிங்கிணி மணிகளும், மார்பில் அணிந்திருக்கும் மாலைகளும், குழந்தை (முருகன்) இப்படி அப்படி அசையும்போதும் நடக்கும் போதும் ஜல்ஜல் என்ற இனிய ஒலிகளை ஏற்படுத்திக் கொண்டிருந்தன***[22] என்று முருகன் பாலகனாய் வருணிக்கப்படுகிறான். மேற்கண்ட பாடலில் தலைவியினுடைய மகனின் அழகை சிறப்பித்துக் கூற முருகன் தொன்மம் பயன்பட்டுள்ளது. முருகனின் அழகை

சிறப்பித்துப் பாடியது போலத் தலைவியும் தன் மகனின் அழகைச் சிறப்பித்துக் கூறுகிறாள். இதன்மூலம் தன் மகன் முருகனுக்கு ஒப்பானவன் என்று கூறுவதற்கு முருகன் தொன்மம் உவமையாகப் பயன்பட்டுள்ளது எனலாம்.

இதேபோல் மற்றொரு கலித்தொகை பாடலில் (83: 14-15) தலைவன் பரத்தையின் பொருட்டு பிரிந்து சென்று திரும்பி வந்து சிறைப்புறத்தானாகத் தலைவி அறியாது நிற்கிறான். தலைவியின் மகனை வெளியே கூட்டிப்போன தோழி காலம் நீட்டித்து வருகிறாள். இதைக்கண்டு கோபமுற்றத் தலைவி கால தாமதத்திற்குக் காரணம் என்னவென்று கேட்கிறாள். அதற்குத் தோழி, பனங் குரும்பைகளில் செய்த சக்கரங்களால் ஆன சிறு தேரைக் கட்டி இழுத்துக் கொண்டு நடக்க, பரத்தையர் களுக்கு நடுவே அவர்கள் தளர்ந்து ஒதுங்கும்படி உன் மகன் நகருக்குள் வந்தான். இதைச் சாளரங்கள் வழியாகப் பார்த்த பெண்கள் ஊரில் முருகன் திருவிழா தொடங்கிவிட்டது என்று நினைத்து விரைந்துவந்து பார்த்தனர். இவனிடம் வந்து, நீ எங்கள் வீட்டில் தங்கிச் செல்வாயானால் உன் தந்தை எங்கள் நலனை உண்டு பின் நினையாமல் கைவிட்டமையால் ஏற்பட்ட வருத்தம் குறையும் என்று தங்கள் வீட்டுக்கு அழைத்துப் போயினர். அதனால் காலம் நீட்டித்தது என்கிறாள்.

இப்பாடல் மூலம் முருகப்பெருமானுக்கு என்று தனித் திருவிழா நடந்ததும், அத் திருவிழா நாளில் தேர் வருவதும் அறிய முடிகிறது. மக்கள் அனைவரும் உயர்வு தாழ்வின்றி சரிசமமாய் தேர்பார்த்ததும் பாடல் கூற்று வழி இளமகளிர் (பரத்தையர்) சிலம்பொலிக்க அணுகி வந்து பார்த்தனர் என்று அக்கால பழக்க வழக்கம் தெரிகின்றது.

அடுத்து முருகன் தொன்மம் பயின்றுவரும் கலித்தொகைப் பாடல் வரிகள் (27) கூறும் செய்திகளாவன: தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று விடுகிறான்.

இளவேனிற் காலத்தே திரும்பி வருவேன் என்று கூறியவன் வரவில்லை. தலைவி தோழியிடம் நம் சாயல் அழிந்தமை கண்டு கேலி செய்வன போல மலை மேலேயிருந்த மயில்கள் ஆரவாரித்து ஆடாமல் நின்றன. ஊராரும் ஆரவாரித்து அலர் தூற்றா நின்றனர். கடலிடத்து மாமரமாகி மறைந்து நின்ற சூரனை வெற்றி வேலால் எறிந்து கொன்ற முருகப் பெருமான் வீற்றிருக்கும் திருப்பரங்குன்றத்தில் அவனுக்காக நடைபெறும் விளையாட்டைக் காணத் தலைவன் வருவானோ வரமாட்டானோ என்று தோழியிடம் கூறுகிறாள் தலைவி.

இப்பாடலில் வந்த முருகன் தொன்மம் உவமையாக வரவில்லை. ஆயினும் குறிப்பால் பொருள் உணர்த்த இத்தொன்மம் கையாளப்பட்டுள்ளது எனலாம். இப்பாடலின் கருத்திற்கும் இப்பாடலில் இடம்பெற்ற தொன்மத்திற்கும் உள்ள ஒற்றுமை கீழே அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளது.

| எண் | பாடல் கருத்து | தொன்மம் |
|---|---|---|
| 1. | தலைவன் வராததால் துயரத்தால் சாயல் அழிந்ததில் வருத்தம் மறைந்துள்ளது. | கடலிடத்தே உள்ள உருவம் கரந்து மா மரமாகி சூரன் மறைந்துள்ளான் |
| 2. | தலைவன் வருகைக்காகத் தலைவி வாடுதல் | முருகன் வருகைக்காகத தேவர்கள் வேண்டியதாக புராணச்செய்தி கூறுகின்றது. |
| 3. | தலைவன் வரவால் பிரிவுத்துன்பம் நீங்கும் | முருகன் வரலால் தேவர்களின் துயர் நீங்கும் |

இப்பாடலில் தொன்மம் உவமையாக வரவில்லை என்றாலும், பாடலின் கருத்துக்கு ஏற்றாற் போல தலைவன் தலைவியிடம் திரும்பிவரும் வரை, தலைவியின் நிலை என்பது போர்ப்பாசறையில் நின்று போராடும் நிலைதான் என்பதை அறிவுறுத்தப் புலவர் சூரனை போரில் வென்ற முருகன் தொன்மத்தை பாடலில் வைத்துப் பாடியுள்ளார். இவ்வகையில் இந்த தொன்மம் இப்பாடலில் இடம்பெற்றுள்ளது மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது. அடுத்ததாக முருகன் தொன்மம் பயின்று

வரும் குறிஞ்சிக் கலிப்பாடலில் (40: 11) தலைவன் சிறைப்புறமாக நிற்க தலைவியும், தோழியும் உரையாடுகின்றனர். களவொழுக்கம் இன்பத்தைத் தருவதாக நினைத்துக் கொண்டு அதில் ஈடுபட்டிருந்தான் தலைவன். திருமணம் செய்து கொள்ளாமல் தலைவன் காலம் நீட்டித்தது தலைவிக்குத் துன்பத்தை தந்தது. அதனால் அவள் தலைவனைப் பழித்துப் பாடுகிறாள்.

தோழி தலைவனைப் புகழ்கிறாள். தன்னைச் சேர்ந்தோரது துன்பத்தை நீக்கும் தலைவனது மலையில, கைகள் இரண்டையும் குவித்து கொடிச்சியர் முருகனைத் தொழுவதுபோல தேன் நிறைந்து அசையும் கொத்தாக உள்ள காந்தட் பூ அத்தேன் கீழே சொட்ட நிமிர்ந்து விளங்கும். தலைவனது மலையில் தான் கூடிய மகளிரின் இயற்கை அழகு குறையுமாயின், அவர்களை விடத் தான் மிகுதியாக வருத்தம் அடைபவர்களைக் கொண்ட தலைவனது மலையில் இல்லறப் பண்பாடு தெரியாத ஆண் குரங்கு பெண் குரங்கு கூட்டத்தில் சென்று, அப்பெண் குரங்கிடம் தன் மணவிருப்பத்தைச் சொல்லும் தன்மையினை உடையது. அத்தகைய தலைவனின் மலையே இத்தகைய குரங்குகளைக் கொண்டது அம்மலை என்று தலைவனுடைய மலையைப் புகழ்கிறாள். தலைவனது மலையே இத்தகைய நற்பண்பைக் கொண்டிருந்தது என்றால், மலைக்குச் சொந்தமான தலைவன் நற்பண்புகளை கொண்டிருப்பான். உறதியாக தலைவியை கற்புமணம் புரிவான் என்பதை குறிப்பால் உணர்த்தி தலைவன் மலையைப் புகழ்ந்து பாடுகிறாள்.

ஆனால் தலைவி மகளிரின் இன்பத்தை அனுபவித்து குளிர்ந்த மலைச் சாரலில் மலரில் மகரந்தம் உண்ணும் வண்டு அதனை விட்டுப் பறப்பதுபோல் செல்பவனுடைய மலையாக இருக்கிறது தலைவனுடைய இம்மலை எனப் பழித்துப் பாடுகிறாள். தலைவிக்கு களவு வாழ்க்கையில் விருப்பம் உள்ளது என எண்ணிக் கொண்டிருந்த தலைவனுக்கு தலைவி இயற்பழித்துப் பாடுவதைக் கேட்டதும் விரைவாய் அவளை மணம்புரியவேண்டும் என உணருகிறான். இப்பாடலில் மலைவாழ் மகளிர் முருகனைத் தொழுவது போலப் பூத்துள்ளது

காந்தட்பூ என்று தொன்மம் உவமையாக வருகிறது. முருகனின் மனைவியரில் ஒருத்தி வள்ளி. இவள் வேட குலத்தில் பிறந்து மலையில் வாழ்ந்தவள் என்று புராணம் கூறுகிறது. மலைவாழ் மக்கள் அனைவருக்கும் தெய்வமான முருகனை மணக்கிறாள் என்று புராணக் கதை கூறுகிறது.

தோழியின் கூற்றாக வரும் இத்தொன்மம் உவமை மறைமுகமாய் தலைவிக்கு ஒரு செய்தியைக் கூறுவது போலுள்ளது எனலாம். அதாவது மலைவாழ் மகளிர் போல தலைவியான நீயும் முருகனை வணங்கு, தலைவன் விரைவாக மணம் முடிக்க வருவான். முருகன் வள்ளியை மணந்ததுபோல, தலைவன் தலைவியை மணப்பான் என்று புலவர் குறிப்பால் உணர்த்த இத்தொன்மம் பயன்பட்டுள்ளது எனலாம்.

கலித்தொகையில் முல்லைக்கலியைப் பொறுத்தவரையில் ஏறுதழுவுதலில் ஈடுபடும் காளையின் தோற்றத்திற்கு உவமையாக முருகன் தொன்மம் பயின்று வருகிறது. ஒரு பாடலில் (104: 14) மாமரத்தின் வடிவில் நின்ற அசுரனைக் கொன்று புறங்கொடாத வேலினையுடைய வல்லனாய முருகனின், நிறம் போன்ற சிவந்த எருது எனப் புலவர் பாடியுள்ளார்.

சூரனை வதம் செய்யும் வேளையில் கோபத்தால் முகம் சிவந்து காணப்படும் முருகனைப் போன்று சிவந்த எருது என்றும், முருகனைப் போல சீற்றத்துடன் உள்ள எருது என்றும் கொள்ளலாம்.இப்பாடலில் முருகன் தொன்ம உவமையின் நோக்கம் யாதெனின் எருதின் நிறத்தையும், எருது கொண்டிருந்த சீற்றத்தின் தன்மையையும் காட்டுவதற்காக இத்தொன்மம் பயன்பட்டிருக்கலாம். தன் எதிரியான சூரனை வதம் செய்யும்போது முருகப்பெருமான் எத்துணை சீற்றத்துடன் இருந்தாரோ அதுபோல எருது தன்னை எதிர்த்து நிற்கும் இளைஞன் மேல் சீற்றத்துடன் பாய்ந்தது எனலாம். முருகனிடமிருந்து சூரன் எப்படி தப்ப முடியவில்லையோ அதுபோல சீற்றத்துடனுள்ள காளையிடமிருந்து அதை எதிர்க்கும் எந்த இளைஞனும் காயமில்லாமல் தப்பமுடியாது என்பதை உணர்த்த

மிகச் சரியாக பாடலின் பொருளுக்கு ஒத்துப்போவது போல முருகன் தொன்ம உவமையைப் புலவர் கையாண்டுள்ளார் எனலாம்.

அகநானூற்று பாடலில் (59) பொருள் ஈட்டச் சென்ற தலைவன் வராததால் தலைவி வருந்துகிறாள். வரைந்து தலைவன் வருவான் என தோழி ஆற்றுப்படுத்துகிறாள். இப்பாடல் தலைவியின் கூற்றாக வருகிறது. முருகன் தொன்மம் பயன்படுத்தியதின் நோக்கம் மறைமுகமாய் ஒரு பொருளை உணர்த்துவது போல உள்ளது எனலாம்.

முருகன் சினம் மிக்கவன். சூரபன்மாவினையும், அவன் சுற்றத்தாரையும் அழித்தவன். ஒளிபொருந்திய இலை போன்ற தோற்றத்தையுடைய நீண்ட வேற்படையைக் கொண்டவன். அம்முருகப் பெருமானுக்குரிய மலையான திருப்பரங்குன்றத்தில் நல்லந்துவனரால் பாடப்பட்ட சந்தன மரங்கள் மிகுந்து உள்ளன. அம்மலையிலுள்ள சுனையில் பூத்த செங்கழுநீர் மலரால் அழகு செய்யப்பட்ட கூந்தல் அசையும் தலைவியின் முதுகைப் பாராட்டியதைத் தலைவன் நினைத்துப் பார்க்காமல் சென்றுவிட்டான் என்கிறாள் தலைவி.

முருகன் தொன்மம் இப்பாடலில் பயன்படுத்தியதின் நோக்கம் பற்றி ஆராய்ந்தால் முருகன் சினம் மிக்கவன். சூரனையும் அவன் சுற்றத்தாரையும் அழித்தவன் என்று சொல்வது தலைவனை எச்சரிப்பது போல உள்ளது எனலாம். சூரன் போல தலைவனும் தலைவிக்குக் கெட்டது செய்தால் முருகன் தண்டிப்பான் எனவும், அதனால் தலைவன் தலைவிக்குத் துன்பம் கொடுக்காமல் விரைவில் திரும்ப வேண்டும் என்று மறைமுகமாய் கூற முருகன் தொன்மம் பயன்பட்டுள்ளது எனலாம். மேலும் நீண்ட வேற்படையினை உடையவன் என்பதால் தலைவியின் பிரிவுத் துன்பத்தை அழிப்பவன் முருகன். தன் குறையைப் போக்கித் தலைவனை விரைவாய் கொண்டு வந்து சேர்ப்பான் என தலைவி நம்பிக்கையுடன் கூறுவதாகக் கொள்ளலாம். பொதுவாக இப்பாடலில் முருகனுக்குரிய மலையாகக் கருதப்படும் திருப்பரங்குன்றம் என்று புலவர் கூறாமல், முருகன் சினம் மிக்கவன் சூரனையும்

அவன் சுற்றத்தையும் அழித்தவன் ஒளி பொருந்திய நீண்ட வேற்படையினை உடையவன் என்று குறிப்பிட்டுச் சொல்லி தலைவி வாயிலாக தலைவனுக்கு எச்சரிக்கை செய்யும் மு்கமாகவும், தனக்குத் தானே தலைவி நம்பிக்கை ஊட்டிக் கொள்வதற்கும் இம்முருகன் தொன்மத்தைப் புலவர் பயன்படுத்தியுள்ளார் எனக் கொள்ளலாம். மேற்கண்ட கருத்துகளைப் பாடலில் நேரடியாகப் புலவர் கூறாமல், மறைமுகமாய்ப் புரிந்து கொள்ளுதற்கு ஏதுவாக இத்தொன்மம் அமைந்துள்ளது என்று கூறலாம்.

அடுத்ததாக அகநானூற்றுப் பாடலில் (120) களவொழுக்கத்தில் ஈடுபட்டிருக்கும் தலைவன் தலைவியைக் காணப் பகல் பொழுதில் வந்து செல்கிறான். இரவில் தலைவி தலைவன் இல்லாது வருந்துவதைத் தோழிக் காண்கிறாள். அதனால் தலைவனிடம் எம் ஊரில் இரவில் தங்கிச் செல்க. அப்படிச் செல்வதால் உனக்கு என்ன துன்பம் வந்துவிடப் போகிறது? எனக் கேட்கிறாள். இப்பாடலில் அந்தி நேர வானத்தில் கொக்கின் கூட்டம் வரிசையாய் பறந்து செல்வது, முருகக் கடவுளின் மார்பின்கண் விளங்கும் ஆரத்தைப் (முத்துமாலை) போன்றது என்ற வர்ணனை வருகிறது. இதைப் பாடல்,

***நெடுவேள் மார்பின் ஆரம் போல***
***செவ்வாய் வானம் தீண்டி, மீன்அருந்தும்***
***பைங்காற் கொக்கினம் நிரைபறை உகப்ப*** (அகம். 120: 1-3)

என்று முருகனின் மார்பு மாலை இப்பாடலில் உவமையாக வந்துள்ளது. தலைவன் இரவு நேரத்தில் தலைவியைக் காண வந்தால் பிறர் அறியக்கூடும். அதனால் தலைவி இற்செறிக்கப்படுவாள். பிரிவுத் துன்பம் தலைவனை வாட்டும். அதனால் தலைவன் தலைவிக்கு மாலை சூட்டி மணம் செய்துகொள்ள முனைவான் என்ற நோக்கில் தலைவனைத் தோழி தூண்டுவதற்குச் சொல்லப்பட்டதாகக் கொள்ளலாம்.

அகநானூறு 149ஆம் பாடலில் தலைவன் பொருள் ஈட்டவேண்டிப் புறப்பட நினைக்கிறான். ஆனால் தான் பிரிந்து சென்றால் தலைவி கண்ணீர் விடுவாள். அதனால் தலைவி வருந்தும்படி போகமாட்டேன் என்கிறான். இடைவிடாது நடைபெறும் விழாக்களை உடைய முருகனது திருப்பரங்குன்றத்து ஆழமான சுனையில் பூத்த குவளை மலர்கள் இரண்டு ஒன்று சேர்ந்தது போலுள்ள தலைவியின் செவ்வரி படர்ந்த குளிர்ந்த கண்கள் கலங்குமாறு சுரம் கடந்து அரிதான பொருள் எளிதாக கிடைத்தாலும் தலைவியைப் பிரியமாட்டேன் என்கிறான் தலைவன். பொதுவாக இலக்கியத்தில் கண்களுக்கு உவமையாக குவளை மலரைச் சொல்வதுண்டு. இப்பாடலில் இடைவிடாது விழாக்கள் நடைபெறும் முருகனது திருப்பரங்குன்றத்து மலையிலுள்ள சுனையில் பூத்த குவளை மலர் போன்ற கண்கள் என்கிறார்.இப்படிக் கூறுவதின் நோக்கம் என்னவெனில் என்று ஆராய்ந்தால் முருகன் தெய்வயானையை மணந்த இடம் திருப்பரங்குன்றம் என்று புராணம் சொல்கிறது.

சூரனை வதம் செய்த தலமாக புராணத்தில் சொல்லப்படுவது செந்திலம்பதி (தற்போது திருச்செந்தூர்) ஆகும். அத்தலத்தில் மிகுந்த சினங்கொண்டு தன் கடமையை முடிக்கும் நிலையில் முருகன் காட்சி தருகிறார் எனலாம். ஆனால் திருப்பரங்குன்றம என்பது முருகனின் திருமணத் தலம், மகிழ்ச்சியும் இடைவிடாது விழாக்களில் கொண்டாட்டமுமாய் முருகன் வீற்றிருக்கும் தலம் இது எனலாம். இதனால் களவொழுக்கத்தில் திருப்பரங்குன்றம் வெகுவாகக் குறிக்கப்படுகிறது எனலாம். இடைவிடாது விழாக்கள் நடைபெறும் முருகனது திருப்பரங்குன்றம் என்று பாடலில் குறிக்கப்படுவது தலைவனும் தலைவியும் பிரியாமல் இணைந்து இருந்தால் அவர்களுக்கும் விழா நடப்பது போல கொண்டாட்டமும் மகிழ்ச்சியும் கிட்டும் என்று குறிப்பாக உணர்த்துவது போலுள்ளது எனலாம்.

அடுத்ததாக அகநானு’று 158ஆம் பாடலில் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. தலைவன் தலைவியைக் காண வந்து சிறைப்புறத்தில் நிற்கிறான். தோழி இதையறிந்து செவிலித்தாய்க்குக் கூறுவது போலத் தலைவனுக்குச் சொல்கிறாள். களவொழுககம் குறித்துத் தலைவியின் தந்தை தலைவியை கடிந்துகொண்ட செய்தியைக் கூறுகிறாள் தோழி. முருகன் சீற்றத்தைப் போன்ற சீற்றத்தையும் மிக்க வலிமையினையும் உடைய எம் தந்தை புலிக்கூட்டத்தைப்போன்ற நாய்கள் தொடர்ந்து வர வேட்டையாடுதலைக் கைவிட்டு வீட்டிலிருக்கிறார். அப்படி யிருக்கையில் தலைவி எப்படி தலைவனைக் காண வருவாள்? என்று தலைவியின் அச்ச உணர்வினைக் கூறுகிறாள்.

இப்பாடல் முருகனின் சீற்றமும் வலிமையும் தலைவியின் தந்தையினுடைய சீற்றத்திற்கு வலிமைக்கும் உவமையாக வந்துள்ளன. முருகன் சீற்றத்தோடு இருந்தது எதிரியான சூரபன்மனை வதம் செய்யும் சமயத்தில் எனலாம். முருகனின் சீறற்த்தையும் வலிமையையும் கொண்ட எம் தந்தை என்பதால், தலைவனுக்கு எச்சரிக்கை செய்வது போலக் களவொழுக்க வாழ்வை தலைவன் நீட்டித்து இருந்தால் தலைவியின் தந்தையின் சீற்றத்திற்கு ஆளாவான் என்றும் அதனால் விரைவில் தலைவியை மணம்செய்து கொள்க என்றும், களவொழுக்க வாழ்வில் தொடர்ந்து ஈடுபட வேண்டாம் என்றும் குறிப்பாகக் கூறுவதாகக் கொள்ளலாம்.

இதே போன்று களவொழுக்கம் பற்றி, மற்றொரு அகநானூற்று 272ஆம் பாடல் கூறுகிறது. தலைவியின் தாய்க்குத் தெரிந்துவிட்டபடியால் தலைவி காவலில் வைக்கப்பட்டாள். தலைவியை காணாது தலைவன் கையில் வேலுடன் தலைவி வீட்டிற்குள் புகுந்தான். அவன் தோற்றத்தைக் கண்டு தாய் அவனை முருகனே என நினைத்துப் புகழ்ந்து பாராட்டினாள். அவனைத் துதித்தாள். இரவுக்குறி வந்த தலைவன் சிறைப்புறமாய் நின்ற போது, அவன் கேட்குமாறு இனித் தலைவனுடன் தாம் கொண்ட நட்பு என்னவாகுமோ? என்று பயப்படுகிறாள் எனப் பாடல் கூறுகிறது.

இப்பாடலில் தலைவனின் தோற்றத்திற்கு முருகனின் தோற்றம் உவமையாக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து அன்றைய காலகட்டங்களில் முருகன் வழிபாடு சிறப்பாகயிருந்தது என்றும் கையில் வேலையும் அழகிய உருவத்தையும் கொண்டிருந்தால் அவர்கள் முருகனாகவே கொண்டாடப்பட்டார்கள் என்பதையும் அறிய முடிகிறது. இப்பாடல் மூலம் கடவுளின் வேடம் களவு வாழ்வில் தலைவியைக் காணத் தலைவனுக்கு உதவுகின்றது எனலாம். தலைவனை முருகன் என்று நினைத்து துதித்த அன்னை தலைவியின் களவொழுக்கத்திற்கு இவனே காரணம் என்று தெரிந்துவிட்டால் ஏற்கமாட்டாள். அதனால் தலைவன் தலைவி நட்பை தொடரமுடியாமல் போகுமோ? என்ற அச்சத்தில் தங்கள் நட்பு என்னாவதோ? என்று கலங்குகிறாள். அதனால் தலைவனை மறைமுகமாய் திருமணம் ஏற்பாடு செய்யுமாறு தூண்டுவதற்கு இப்பாடலில் உவமையாக வந்த முருகன் தொன்மம் ஒரு கருவியாகிறது எனலாம்.

பத்துப்பாட்டிலும் இடம்பெற்றுள்ள குறிஞ்சிப்பாட்டு எனும் அகநூலில் மூன்று பாடல்களில் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. அவற்றை இனிக் காணலாம்.

**குறிஞ்சிப்பாட்டு** 116ஆம் பாடலில் தலைவன் தலைவியைக் காண வருகின்றான். அவனது தலை, காது, மார்பு, கை, இடை, கால் ஆகிய உறுப்புகளில் அணிந்துள்ள அணிகளைப் பற்றிக் கூறுவது கேசாதிபாத வர்ணனை எனப்படும். தலைவன் தலைமயிரை எப்படியெல்லாம் பேணுகிறான் என்று புலவர் கூறுகிறார். எண்ணெய் பூசி, மயிர்ச் சாந்தணிந்து ஈரம் புலர விரலால் விடுத்தும் அகில் புகையூட்டியும் அகிலின் நெய் பூசியும் பாதுகாத்தமையால் கரிய நிறத்துடன் நீண்டு விளங்குகிறது. தலைமகனின் மயிரின் எழில் நலத்தை முதலில் கண்டு வியந்தனர். தோழியும், தலைவியும் பலவகையான வண்ணமலர்கள் மாலைகளாகத் தொடுத்தது போல, தலைவனும் பலவகையாகப் பூத்த மலர்களால் ஆன மாலை அணிந்து வந்தான். தலைவனின் அழகும் ஆற்றலும் முருகப்பெருமானோ என்று அச்சத்தைத் தோற்றுவிப்பதாயிற்று என்கிறது பாடல்.

இப்பாடலில் தலைவனின் அழகும், ஆற்றலும் முருகப்பெருமான் போன்றிருந்தது என்றில்லாமல் முருகப்பெருமானோ என்று அச்சத்தை தோற்றுவிப்பதாயிற்று என்பதாக உள்ளது. இதன் உட்கருத்தை ஆராயும்பொழுது இருவிதமாகக் கூறலாம்.

1. தலைவனின் அழகும் ஆற்றலும் முருகப்பெருமான் போன்றுள்ளதால், முருகனைப் போல் தலைவனும் போர் போர் என்று எதிரிகளை அழிப்பதையே பிறப்பின் நோக்கமாகக் கொண்டிருப்பானோ? அப்படிக் கொண்டிருந்தால் தலைவிக்குத் துன்பம் ஏற்படுமே என்ற அச்சத்தின் வெளிப்பாடாக இப்படிக் கூறியிருக்கலாம்.

2. மற்றுமொரு கோணத்தில் ஆராய்ந்தால் அழகும், ஆற்றலுமுடைய முருகனுக்கு மனைவியர் இருவர் போல, அழகும், ஆற்றலுமுடைய தலைவனுக்கு அவன் மேல் ஆசைப்பட்டு தலைவியைத் தவிர இரண்டாவதாக வேறு எந்தப் பெண்ணும் ஆசைக்கொண்டு மனைவியாக வந்துவிடுவாளோ என்று தலைவியின் அச்சத்தை வெளிப்படுத்த தலைவனின் அழகும் ஆற்றலும் முருகப்பெருமானே என்று அச்சம் எனும் உணர்ச்சியை வெளிப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

அடுத்ததாக மற்றொருக் குறிஞ்சிப்பாட்டில் (51) இயற்கைச் சூழலுக்கு முருகன் தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்தியுள்ளார் புலவர். மேகத்தின் இடியோசை முரசு அதிர்வது போலவும், அதன் மின்னலின் ஒளி முருகப்பொருமான் அசுரர்களைக் கொல்வதற்கு உயர்த்திய வேலின் விளக்கம் போலவும் உள்ளது என்கிறார். தலைவனுடன் அருவியில் நீராடி, சுனையில் விளையாடி இனிய பாடல்களைப் பாடிக் களித்தோம் என்கிறார். ஈரக் கூந்தலைப் பிழிந்து உலர்த்தி, அத்தனை நேரம் விளையாடியதில் எம் கண்களின் உள்ளிடமெல்லாம் சிவந்தது என்று தோழி கூற்றாகப் பாடல் அமைந்துள்ளது. இப்பாடலில் வரும் காட்சிகள் குறிஞ்சி நிலமான மலையும் மலை சார்ந்த இடத்திலும் நடப்பதால், குறிஞ்சி நிலத் தெய்வமான முருகன் உவமையாக்கப்பட்டது பொருத்தம் எனலாம். இடியின் ஓசை முரசு அதிர்வது போலவும், மின்னலின் ஒளியானது முருகப்பெருமான் அசுரர்களைக் கொல்வதற்கு உயர்த்திய வேலின் விளக்கம் போலவும் உள்ளதாகப் பாடல்

வருகிறது. களவு மேற்கொண்ட சூழலில் போருக்குப் போகும் முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. இது சற்ற முரணாகத் தெரிந்தாலும் உட்கருத்தை ஆராயும்போது, மின்னல் வானத்தில் பார்க்கும்போது வெள்ளிக்கோடு போல அழகாய்த் தெரிந்தாலும் அது உயிரைக் கொல்லும் தன்மையது. அதனாலேயே முருகன் அசுரர்களை கொல்வதற்கு உயர்த்திய வேல்போல இருந்தது என்கிறார் புலவர். களவு வாழ்க்கை என்பது ஆபத்து நிறைந்தது என்பதை உள்ளுரையாகக் கூறுவதற்கு முருகனின் போர் நிகழ்வுகளைப் புலவர் உவமை காட்டுவதாகக் கொள்ளலாம்.

அக இலக்கியங்களில் புராணத் தொன்மங்களைப் பொறுத்த வரை அவை உவமையாகப் பயன்படும்பொழுது ஆண்டதன் உட்கருத்துகளை ஆராய ஆராயப் பல செய்திகளை அவை தருகின்றன. புற இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவனுக்கும் முருகனுக்கும் ஒப்புமையை மறைமுகமாய் எடுத்துக் கூறுவதாகக் கொள்ளலாம். ***புராணத்தின் முக்கிய நோக்கம் பரமார்த்திக தத்துவங்களை மக்களின் பொது உடைமையாக்குதலாம். மனதில் மேலான எண்ணங்களைக் கற்பனை பண்ணுவதற்கே புராணக் கதைகள் அமைக்கப்பட்டுள்ளன.***[33]

### முருகன் தொன்மம் – உவமைப் பயன்பாட்டின் நோக்கம் : புறஇலக்கியம்

சங்க இலக்கியத்தின் இருபிரிவுகளில் ஒன்று புறம். புற இலக்கியத்தில் பெரும்பாலும் தொன்மம் வீரத்திற்கே உவமையாகக் கூறப்படுகிறது எனலாம். அத்துடன் வள்ளல்தன்மைக்கு, பரம்பரையின் சிறப்பிற்கும், உருவச் சிறப்பிற்கும் உவமையாக வந்துள்ளது. இதனைக் கீழ்க்கண்ட வரைபடம் விளக்குகிறது.



**வீரம்:** புறநானூற்றைப் பொறுத்தவரை அரசர்களின் வீரத்திற்கும் போர் புரிதலுக்கும் உவமையாக முருகன் தொன்மம் எடுத்தாளப்பட்டுள்ளது. ***குறிப்பிட்ட ஓர் இன மக்களுடைய அண்டத் தோற்றம் பற்றிய எண்ணங்களையும், இயற்கை இகழ்ந்த நிகழ்ச்சிகள் பற்றிய மரபுகளையும் கதை வடிவில் கடந்தகால நிகழ்ச்சிகளாக எடுத்துரைப்பது தொன்மம் (Myth) எனப்படும். மக்களுடைய தெய்வங்கள் மாவீரர்கள், பண்பாட்டுக் கூறுகள், சமய நம்பிக்கைகள் போன்ற வலவற்றை தொன்மம் படம்பிடித்துக் காட்டும். அறிவினால் புரிந்துகொள்ள இயலாத பலவகையான பண்டை நிகழ்ச்சிகளை, செய்திகளைத் தெளிவுபடுத்த முயலுவதே தொன்மத்தின் நோக்கமாகும்.***[23] இது போலவே புறநானூற்றில் அரசர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிக்கு உவமையாக வரும் முருகன்தொன்மங்கள் கடந்தகால நிகழ்வுகளை எடுத்துரைக்கின்றன. அரசர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்வுகளைக் கோடிட்டு காட்டுவது போல உவமை பயன்பட்டுள்ளது எனலாம். எடுத்துக்காட்டாக புறநானூற்று 14 ஆம் பாடலில் சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதனை கபிலர் பாடுகிறார். அரசனின் வீரத்தைச் சொல்லும்போது, அவனின் கை வலிமை பற்றிக் கூறி, பெண்டிரை வருத்தும் மார்பையும் போரிடுவோர்க்கு நடுக்கத்தை உண்டு பண்ணும் வலிமையையும் கொண்டவனாய்ப் போரில் முருகவேளை ஒத்துத் தோன்றுவாய் என்பதாகப் பாடல் அமைந்துள்ளது.

> *. . . . . . . . . . . . . . . . . . நல்லவர்க்கு*
> *ஆர் அணங்கு ஆகிய மார்பின், பொருநர்க்கு*
> *இரு நிலத்து அன்ன நோன்மை,*
> *செரு மிகு சேஎய்! – நிற் பாடுநர் கையே* (புறம். 14: 16-19)

இப்பாடலில் வலிமையில் முருகனைப் போன்றவன் என்றிருந்தாலும் பொருள் மாறுபடப் போவதில்லை. ஆனால் குறிப்பாகப் போரில் முருகவேளை

ஒத்துத் தோன்றுவாய் என்று குறிப்பிட்டதின் நோக்கம் யாது என்று ஆராயும் போது முருகப் பெருமானின் அவதாரச் சிறப்பே சூரபன்மனை வதம் செய்வதற்கு எனலாம். முருகன் சூரனைக் கொல்வதற்காகவே சிவனால் படைக்கப்பட்டார் என்று புராணம் கூறுகிறது. குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என்று முருகனைக் கூறும் வழக்கு உண்டு. பெரும்பாலும் மலையின் மேலுள்ள கோவில்கள் முருகன் ஆட்சிபுரிந்து அருள்செய்யும் கோவிலாக இருக்கும் எனலாம். ஆனாலும் சூரனை வதம் செய்து சிறப்புப் பெற்றது கடற்கரையில் கோயில் கொண்டு முருகன் ஆட்சி புரிந்தான் என்று புராணம் மூலம் அறிய முடிகிறது. அதுபோலவே சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன், ***இனிய சுனைகளையும் செல்வ வளச் செழுமையையும் கொண்ட பக்க மலைகள் பல சூழ்ந்த நாட்டுப்பகுதியில் ஆண்டான். இவனது பல வெற்றிகளுக்குப் பின் மேலைக் கடற்கரையில் இருந்த நறவுப் பட்டினமும் இவனது ஆட்சிக்கு உட்பட்டது எனலாம்.***[24]

அது மட்டுமல்லாமல் தேவர்கள் சூரனால் பெரும் அவதிக்குள்ளானார்கள். அவர்களின் துயரம் துடைக்கவும், தேவர்களுக்குக் காவலாகவும் முருகன் அவதரித்தான் என்று புராணம் கூறுகிறது. இதுபோன்ற சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனும் ***வில்லோர் மெய்ம்மறை என்று இவன் குறிப்பிடப்படுகிறான். வில்லோர் குடியினர் குதிரை மலைப் பகுதியில் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு மார்பு கவசம் போன்று பாதுகாவலாய் விளங்கினான்***[25] என்று கூறப்படுகிறது. ஆக செல்வக்கடுங்கோ வாழியாதனின் வாழ்வு நிகழ்வுகளுடன் இம்முருகன் தொன்மம் ஒப்புமை கொண்டுள்ளது அறியப்படுகிறது. ஆகவே புலவர் இப்பாடலில் முருகன் தொன்மத்தை உவமையாக்கியதன் நோக்கத்தைத் தெளிவாக அறியமுடிகிறது எனலாம்.

மற்றுமொரு புறநானூற்று 120ஆம் பாடலில் புலவர் கபிலர் பாரியைப் புகழ்ந்து பாடும்போது, பகைவரது புறங்கொடுத்து ஓடும் வீரக்கழல்களின்

ஆரவாரத்தைக் கேட்டு நாணிப் பின்செல்லாது போரிடுதலை விரும்பி எதிர்நின்று போரிடும் இயல்புடையவன் என்றும் முருகக் கடவுளுக்கு ஒப்பானவன் என்றும் கூறுகிறார். பாரியின் போர்த் திறனைச் சிறப்பாகக் கூறுவதற்கு முருகக் கடவுளுக்கு ஒப்புமைப்படுத்துகிறார். இப்பாடலில் முருகன் தொன்மம் உவமையாக வரவில்லை. பாரி முருகனைப் போல் போரிடும் திறம் பெற்றவன் என்று கூறாமல், போரிடுவதில் முருகனுக்கு நிகரானவன் என்கிறார். முருகன், சூரனை அழித்து போரில் வெற்றி பெற்றதால், பாரியும் போர்களில் தவறாமல் வெற்றி பெறுபவன் என்று குறிப்பால் உணர்த்துகிறார் புலவர்.

இதே புறநானூற்று 56ஆம் பாடலில் நன்மாறனை மதுரைக் கணக்காயனார் புகழ்ந்து பாடுகிறார். மன்னனுக்கு உவமையாகச் சிவன், பலராமன், கண்ணன் என்று கூறிய புலவர், கொடியாக மயிலையும், பிணிமுகம் எனும் யானையை ஊர்தியாகவும் கொண்டு கருதியது முடிப்பவன் முருகவேள். முருகவேள் போன்ற தன்மையுடையவன் நீ என்கிறார்.

முருகப் பெருமான் புராணத்தில் தந்தையாகிய சிவனின் கட்டளையை ஏற்றுக்கொண்டு சூரபன்மனைப் போரிட்டு அழிக்க வேண்டும் என்று கருதி வீரவாகுடன் போரில் ஈடுபட்டு வெற்றி கண்டார். அதேபோல வள்ளியை மணம் முடிக்க வேண்மென்று கருதி, மணமுடித்து வெற்றியும் கண்டார் என அறிய முடிகிறது. அதனாலேயே புலவர் கருதியது முடிப்பவன் முருகவேள் என்கிறார்.

மன்னன் நன்மாறன் ***பகைவர்களை காய்வதில் இவன் ஞாயிறு போன்றவன். புலவர்களுக்கு நலம் சொரிவதில் திங்கள் போன்றவன்*** என்பது போல முருகப்பெருமான் தேவர்களைக் காப்பாற்றுவதில் திங்கள் போன்றவன். சூரபன்மன் உள்ளிட்ட அசுரர்களுக்கு ஞாயிறு போன்றிருந்தவன் என புராணம் வழி அறியமுடிகிறது.

பெரிய மன்னர்களை மட்டுமல்ல சிற்றரசர்களையும் புலவர்கள் புகழ்ந்து உவமையோடு பாடியுள்ளனர் என்பது தெரியவருகிறது. மலையனை வடம்

வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் புகழ்ந்து பாடுகிறார். போரில் வென்றவனும், தோற்றவனும் புகழ்ந்து போற்றும் தன்மையில் நீ ஒருவனாயினாய் நிலத்தை உழுத வலிய எருது பின் வைக்கோலைத் தின்றாற்போல உனது முயற்சியால் செய்த பொருளை யாவர்க்கும் அளித்துப் பின்னர் நீ விரும்பி உண்ணும் கள் நல்ல அமிழ்தமாவதாக உன்னை நட்பாகவும், பகையாகவும் பெற்றவர்களுக்கு பெருமழைக்கு இருப்பிடமாகவும் அமைந்த உயர்ந்த மலையையுடைய திருத்தக்க முருகக்கடவுளுக்கு ஒப்பாவாய் என்று கூறுகிறார்.

இப்பாடலிலிருந்து மன்னன் மலையனின் கொடைக் குணத்தை நன்கு அறிய முடிகிறது எனலாம். உன்னை நட்பாகவும் பகையாகவும் கொண்டவர்களுக்கு உயர்ந்த மலையையுடைய முருகக் கடவுளுக்கு ஒப்பாவாய் என்கிறார் புலவர்.

முருகப்பெருமான் பகை, நட்பு, விருப்பு, வெறுப்பு எதுவுமில்லாமல் பாரபட்சமில்லாமல் எல்லோரிடமும் அருள் செய்யும் கடவுளுக்குரிய பண்புடன் விளங்குபவர். அதுபோல மலையனும் தன் குடிமக்கள் அனைவருக்கும் ஒன்று போல அருள் செய்பவன் என்று கூறப் புலவர் மலையனுக்கு உவமையாக முருகன் தொன்மத்தை பயன்படுத்தியிருக்கலாம். **மலையன் என்பவனை மலையமான் திருமுடிக்காரி என்று வழங்குவர். குதிரையின் பெயரும் காரி என்பதே. இவன் மாரி போன்ற வன்மையுடையவன்.**[27]

மாரி எப்படி நல்லவர், தீயவர் என்று பாராது மழை பொழிகிறதோ அது போல முருகப்பெருமானும் நல்லவருக்கு அருளுவதோடு தீயவனான சூரபன்மனுக்கும் போரின் இறுதியில் அவன் கேட்டதற்கு இணங்க சேவலாகவும், மயிலாகவும் ஆக்கிக் கொண்டார் என்று புராணம் கூறுகிறது. அதுபோல மலையனும் எல்லோருக்கும் அருளியவனாய் இருந்தான் போலும். அதை மறைமுகமாய் வெளிப்படுத்த முருகனுக்கு ஒப்பாவாய் என்றார். அதிலும் உயர்ந்த மலையையுடைய முருகனுக்கு ஒப்பாவாய் என்று கூறி, மலையனின் சிறப்பை மேலும் உயர்த்திக் காட்டுகிறார் எனலாம்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனை மதுரை மருதன் இளநாகனார் பாடிய பாடலில் (புறம். 55) மன்னன் பரிசில் தர கால நீட்டித்தான். இருந்தும் புலவர் அவனை வாழ்த்திப் பாடுகிறார். அதற்கு முருகன் தொன்மம் உவமையாகப் பயன்படுகிறது. செந்திலம்பதி நெடியோனாகிய முருகவேள் நிலைபெற்ற அழகிய அகன்ற துறை. அத்துறையில் பெருங்காற்று திரட்டுவதால் குவிந்த மணல் மேட்டிலுள்ள மணலின் எண்ணிக்கையினும் பல காலம் வாழ்வாயாக என்கிறார் புலவர். இப்பாடல் மூலம் மன்னன் பரிசில் தரக் காலம் நீட்டித்தாலும், புலவர் பெருந்தன்மையுடன் இருந்து வாழ்த்தியுள்ளார் என அறியமுடிகிறது. மேலும் இப்பாடலில் பயன்படுத்தும் தொன்ம உவமையைப் பாடலின் கருத்தோடு ஆராய்ந்து பார்த்தால், பல செய்திகளைக் கண்டறிய முடிகிறது. அவை:

1. முருகன் அறுபடை வீடு கொண்டவன் என்று புராணம் கூறினாலும், சங்க இலக்கியத்தில் திருப்பரங்குன்றமும், திருச்சீரலைவாய் எனப்படும் செந்திலம்பதியாகிய திருச்செந்தூரும் சிறப்புறப் பேசப்பட்டுள்ளது. மற்ற அறுபடை வீடுகள் அவ்வளவாக சங்க இலக்கியங்களில் பேசப்பட வில்லை.

**ஈதலால் ஒருவனுக்கு இன்பமும் புகழும் பெருகும் ஈதலோடு ஒருவனுடைய நற்குணங்களும் அற நிலை திறம்பா நடுநிலைமையும் போர் வெற்றியும் ஒருவனது வாழ்க்கையில் பெருமிதத்தை உண்டாக்கும். தொல்காப்பியரும் கல்வி, அஞ்சாமை யோடு கூடிய வீரம், கொடை, புகழ் என்பனவே பெருமித வாழ்க்கைக்கு அடிநிலை என்பார்.**

**உதவி வேண்டியார்க்குச் சிறிதும் காலம் தாழ்த்தாது கண்ணுக்கு நேர்ந்த இடையூற்றைக் கை சென்று தடுப்பதைப் போல உதவுதல் வேண்டும். இதனை,**

***கண்ணுறு விழுமம் கைபோல் உதவி***

***நம் உறுதுயரம் களையார் ஆயினும்***[28] (நற். 216: 3-4)

என்பது தொல்காப்பியம் பற்றி, நற்றிணைப் பாடல் கூறும் கருத்துகளாகும். கொடை கொடுத்தலின் சிறப்பும், அதனைக் கொடுக்க காலம் நீட்டித்ததும் தவறான பண்பாகும் என அறிய முடிகிறது.

2. 'செந்திலம் பதியிலுள்ள துறையின் மணல் எண்ணிக்கையைவிட பலகாலம் வாழ்வாயாக' என்று கூறுகிறார் புலவர். செந்திலம்பதி, முருகன் போரிட்ட தலமாகும். ஒரு மன்னனுக்குரிய குணங்களாகக் கூறப் படுபவை. வீரமும், கொடைச் சிறப்புமாகும் எனலாம். பரிசில் தரக் காலம் நீட்டித்த நீ என்றும் போரிட்டிரு என்று சபித்துச் சொல்லாமல் சொல்வதற்கு முருகன் போரிட்ட கடற்கரையைக் குறிப்பிட்டுள்ளார்.

3. மணலின் எண்ணிக்கையைக் காட்டிலும் பலகாலம் வாழ்வாயாக என்கிறார் புலவர். பரிசில் தர தாமதித்த நீ கடற்கரை மணலுக்கு ஒப்பானவன். கடற்கரையிலுள்ள மணலைக் கொண்டு எவ்வித பயனுமில்லையோ அதுபோல உன்னால் எந்த பயனுமில்லை என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

4. மேலும் கடற்கரையிலுள்ள மணலைக் கொண்டு எதையும் ஆக்க முடியாது. அதுபோல பரிசில் தர நீட்டித்ததால் நீயும் அக்கடற்கரை மணல் போன்று யாருக்கும் பயன்தராதவன் என்பதைக் குறிப்பாக கொள்ளலாம்.

வாழ்த்திப் பாடுவதாகப் பாடல் அமைந்தாலும் முருகன் தொன்ம உவமைப் பயன்பாட்டின் நோக்கம் பற்றி ஆராயும்போது பரிசில் தராத மன்னனைப் பழித்துப் பாடும் பொருள் பாடலுள் மறைந்துள்ளதை அறிய முடிகிறது எனலாம். ஆக, இத்தொன்மங்கள் புலவர் வெளிப்படையாகப் பாடாத செய்திகளைப் பொருத்திக் காட்ட துணை செய்கின்றன எனலாம்.

இதேபோல மற்றோரு பாடலில் (புறம். 209) மூவன் எனும் சிற்றரசன் பரிசில் தரக்காலம் நீட்டித்தமையால் பெருந்தலைச் சாத்தனார் அவனைப் புகழ்ந்து பாடுகிறார். இறுதியில் நீ ஒரு பரிசும் கொடுக்கவில்லை என்றாலும் நான் வருந்தமாட்டேன். நீ நோய் இன்றி இருப்பாயாக என்று வாழ்த்துகிறார். பெரிய மலை போன்ற மார்பினை உடைய போரை விரும்பும் முருகவேளைப் போன்றவனே என்கிறார்.

இப்பாடலிலும் பரிசில் தராத மன்னனை வாழ்த்தினாலும் போரை விரும்பும் முருகவேளைப் போன்றவனே என்கிறார் புலவர். பரிசில் தராத நீ வாழ்நாள் அனைத்தும் போரிட்டுக் கொண்டேயிருப்பாயாக என்று மறைமுகமாய் புலவர் கூறுவதாகக் கொள்ளலாம். மலையன் கொடைச் சிறப்பைப் பாராட்டி உயர்ந்த மலையையுடைய முருகனுக்கு ஒப்பாவாய் என்றார் ஒரு புலவர். அதேபோல பாரியைப் பற்றிய பாடலில் முருககடவுளுக்கு ஒப்பானவன் என்று பாடுகிறார் கபிலர். பாரி வள்ளல்களில் சிறந்தவன் என்று இலக்கியம் கூறுகிறது.

ஆனால் பரிசில் தராது காலம் நீட்டித்த அரசர்களாக பாண்டியன் இலவந்திகையையும், மூவன் எனும் சிற்றரசனையும் புகழ்ந்து பாடிய புலவர்கள் முருகன் போரிட்ட தலத்தையும், போரை விரும்பும் முருகனையும் உவமையாக்கி யுள்ளதால் பாடலில் சொல்லப்படாத கருத்தைக் கூற முருகன் தொன்மம் உதவியாக உள்ளன. இதை தொன்மங்கள் பயன்படுத்தியதின் நோக்கமாகக் கருதலாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் புலவர் கல்லாடனார் புகழ்ந்து பாடுகிறார் (புறம். 23) பாண்டியனின் பகைவர்களை அழிக்கும் வீரத்திற்கு முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது. கடம்ப மாலையை அணிந்த, சூரபன்மாவைக் கொன்றவனுமாகிய முருகவேளின் ஏவலராகிய கூளிச் சுற்றம் போன்ற கூர்மையான நல்ல அம்புடன் வளைந்த வில்லுடைய பாண்டியனின் வீரர்கள் கைக்கொள்ளுமளவு கொண்டபின் எஞ்சிய பொருளைப் பகைவர்கொண்டு உணவாக்காதவாறு விளைநிலங்கள் அழிக்கப்

பட்டது. செழியனால் அழிந்த பகைவர் தம் மனைவியர் தம் தம் மக்களுக்காக உயிர் வாழ்ந்து கைம்மை நோன்பு மேற்கொண்டு வேளைக் கீரையை உணவாகக் கொள்வர் என்று பாடுகிறார் புலவர்.

இப்பாடலில் முருகனின் வீரம் உவமையாக வந்துள்ளது. முருகனின் ஏவலராகிய கூளிச் சுற்றம் போன்ற கூர்மையான நல்ல அம்புடன் வளைந்த வில்லையுடைய பாண்டியன் என்கிறது பாடல். முருகன் ஏவலராகிய அதாவது பணியாளர்களாகிய கூளிச் சுற்றம், முருகன் நினைத்த மாத்திரத்தில் அவர் இட்ட வேலையைச் செய்து முடிக்கும். கூளிச்சுற்றம் என்பதற்கு அகராதி காட்டும் விளக்கம்:

***கூட்டம்***
***படை வீரர்கள்***
***படைத் தலைவன்***
***வேட்டுவர்***
***குறவர்***[29]

என்பதாகும். முருகனின் கூளிக்கூற்றம் போன்று நினைத்த உடனே பகைவர்களை அழிக்கவல்ல வில்லையும் அம்பையும் உடையவன் பாண்டியன் என்கிறார் புலவர். முருகனின் கூளிச்சுற்றம் தோல்வியடையாதது போல பாண்டியனின் வில் அம்பிலிருந்து பகைவர்கள் தப்ப முடியாது என்பதைக் குறிப்பாகக் கூறுவது போலுள்ளது எனலாம்.

அடுத்ததாக, பத்துப் பாடலில் ஒன்றான பெரும்பாணாற்றுப் பாடலில் (75-76) கீழ்க்காணும் கருத்துகள் வருகின்றன.

பாணன் பொருள் பெறவேண்டி மன்னனைக் காணச் செல்லும் வழியில் வருவோர் போவார் பற்றியும் அவர்கள் தோற்றம் பற்றியும், ஆறலைப் போரில் ஈடுபட்ட வலிமையுடைவர்கள் என்றும் கூறுகிறது பாடல். அவர்கள் இடுப்பில் உடைவாள் செருகியிருந்தார்கள். கடம்பின்கண் அமர்ந்த முருகனை ஒத்த

வீரத்தையும் வேலேந்திய கையினையும் புறமுதுகிட்டு ஓடாத தன்மையையும் கொண்டவர்கள் என்கிறது பாடல்.

**கடம்பு அமர் நெடுவேள் அன்ன, மீளி**
**உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்** (பெரும்பாண். 75-76)

எனும் இப்பாடலில் அக்காலத்தில் ஊரில் வாழும் மக்கள் வீரமுடன் இருந்தது முருகன் தொன்மம்வழி அறியப்படுகிறது.

பெரும்பாணாற்றுப்படை 457-459ஆம் பாடல் வரிகளில் மன்னன் திரையனை பாணன் போற்றிய போது முருகனின் தொன்மம் வருகிறது. இப்பாடலில் மன்னன் திரையனின் சிறப்பை விளக்கும் நோக்கமாக முருகன் தொன்மம் உவமையாகக் காட்டப்பட்டுள்ளது.

கடலிற் சென்று ஓடி ஒளிந்த சூரபன்மனைக் கொன்ற முருகனைப் பெற்ற பெருமையுடைய துணங்கை கூத்தினைக் கொண்ட இறைவியாகிய கொற்றவையை பாராட்டிப் பேய்கள் புகழ்தல் போன்ற அமையாத கொடையை யுடைய நின்னைப் புகழ்ந்து வந்தேன் என்கிறார் புலவர். இப்பாடலில் கொற்றவையைப் பேய்கள் புகழ்ந்து பாடுதல் போன்ற அமையாத கொடை யுடைய நின்னைப் புகழ்ந்து வந்தேன் என்று கூறியிருந்தால் பொருள் மாறிவிடப் போவதில்லை. ஆனால் முருகன் சூரபன்மனைக் கடலில் மாமரமாய் ஒளிந்து நின்றபோது தன்வேலால் இருகூறாகப் பிளந்து கொன்றான். அவரின் அன்னை யாகிய கொற்றவை என்று கூறுகிறது பாடல். இதன் நோக்கம் என்னவெனில் திரையனும், முருகனைப் போன்று அவன் பகைவர்கள் எங்கு ஓடினாலும் அவர்களை அழித்து வெற்றி காண்பவன் என்பதைக் குறிப்பாக உணர்த்த இத்தொன்ம உவமையைப் பயன்படுத்தியுள்ளார் எனலாம்.

மதுரைக்காஞ்சியில் பாண்டிய மன்னன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் புகழ்ந்து பாடும்போது, அவனது வீரப் பண்பிற்கு முருகனின் வீரம் உவமையாக ஆக்கப்பட்டுள்ளது. முருகன் பகைவர் மேல் செல்வது போலத் தடையறப் பகைவரிடம் போர் குறித்துச் சென்று, மழை

போன்று அம்புகளைத் தூவி பகைவர்களைக் கொன்றவன், பகைவர்களின் நாடுகள் அழியுமாறு அவர்கள் தங்கியுள்ள மதில்களைக் கைப்பற்றி அவர்களுக்கு உதவி புரியும சுற்றத்தார்களையும், சுற்றத்தார்களின் வலிமையினையும் போக்கினாய் என்கிறார் புலவர்: ***நெடுஞ்செழியன் சிறுவனாக இருந்தபோதே பட்டம் ஏற்றான். அவன் மீது சேரன், சோழன் என்ற முடியுடைவேந்தர் இருவரும் திதியன், எழினி முதலிய ஐம்பெரும் வேளிரும் படையெடுத்தனர். இளைஞனான நெடுஞ்செழியன் இப்பகைவரை யான் வெல்லேனாயின் குடிபழி தூற்றுங் கோலேனாகுக! மாங்குடி மருதனைத் தலைவனாகப் பெற்ற புலவர் பெருமக்கள் எனது நாட்டைப் படாது ஒழிவாராக என்று சூளுரைத்துப் போருக்கெழுந்தான். எழுவரோடும் போர் புரிந்தான். இறுதியில் தலையாலங்கானம் (இன்றைய தலையாலங்காடு) என்னும் இடத்தில் அவர்களை முற்றிலும் முறியடித்தான். அதனால் தலையாலங் கானத்துச் செருவென்றவன் என்ற விருதுப்பெயர் பெற்றான்.***[30] இதுபோல முருகனுடன் ***பலவாறும் போர் செய்து களைத்த சூரன் இறுதியில் அழிவுற்றான். உடல் இருகூறாகிச் சேவலும், மயிலுமானது. சேவல் கொடியாயிற்று, மயில் முருகனின் வாகனமாயிற்று.***[31]

முருகன் சேவல் கொடியோன் மயில் வாகனன் எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டான் என்பது அறியமுடிகிறது. முருகன் இளைஞனாய் இருந்தபோது சூரபன்மனுடன் போர்புரிந்து வெற்றி கண்டான். நெடுஞ்செழியனும் இளவயதில் போர் புரிந்து வென்றுள்ளான். முருகன் திருச்சீரலைவாய் எனப்படும் இடத்தில் (தற்போது திருச்செந்தூர்) சூரபன்மன் உடன் பல அசுரர்களைப் போரிட்டு வென்றான் - நெடுஞ்செழியனும் தலையாலங்கானம் (தற்போது தலையாலங்காடு) எனுமிடத்தில் பகை அரசர்களை வென்று வெற்றி கண்டான். அவ்விடத்தில் வெற்றி கொண்டதால் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என அழைக்கப்பட்டான். ஆக முருகனுக்கும், பாண்டிய மன்னனுக்கும் இருக்கும் ஒற்றுமைப் பண்புகளை மனதில் கொண்டு பாண்டிய மன்னனுக்கு முருகன் தொன்மம் உவமையாக வந்துள்ளது சிறப்பு எனலாம்.

மலைபடுகடாம் செய்யுளில் மன்னன் நன்னனுக்கு முருகப்பெருமானின் ஆற்றலும், வீரமும் உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. வெல்லும் போரில் வல்ல முருகனைப் போன்ற ஆற்றலையும், அழகினையும் உடைய நன்னன் என்று புலவர் பாராட்டியுள்ளார். *நன்னன் ஏழுமலைப் பகுதியைப் பெற்றிருந்தமையால் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்து வேள் என்று பெயர் பெற்றான். ஆஅய் எயினன் மிக்க வீரமுடையவன். அகுதை எனும் மன்னன் ஆஅய் எயினனுக்கு நடுங்கியிருந்தான். இத்தகைய மேம்பாடு கொண்ட இவ்ஆஅய் எயினன் நன்னனது படைத்தலைவனாகிய மிஞிலி அவனோடு போர் தொடங்கினான். அப்போது அந்நன்னன் தனது பேய் கூட்டத்து அருகில் நின்று கூறிய கட்டளையை மேற்கொண்டு வந்தெதிர் நின்று போர் தொடங்கி நண்பகற்பொழுதில் வேலாலெறிந்து ஆஅய் எயினனைக் கொன்றான்.*[32] இவ்வகையான வாழ்க்கைக் குறிப்புகளை உடைய நன்னனை முருகப் பெருமானுக்குரிய வரலாற்று நிகழ்வுகளாகக் குறிப்பிடப்படும் புராணக் கருத்துகளுடன் ஒப்புமைப்படுத்தினால் கீழ்க்காணும் ஒற்றுமைகள் காணப் பெறுகின்றன.

| எண் | முருகன் | நன்னன் |
|---|---|---|
| 1. | முருகன் மலைகள் தோறும் கோவில் கொண்டவன். | நன்னன் ஏழுமலைப்பகுதியை ஆண்டவன் |
| 2. | முருகனின் எதிரியாகக் கருதப்பட்ட சூரபன்மன் மிக்க வலிமையுடையவன் சூரபன்மனுக்கு தேவர்கள் அஞ்சி நடுங்கினர். | நன்னனின் எதிரியான ஆஅய் எயினன் மிகுந்த ஆற்றலுடையவன். வீரமுடையவன் அகுதை எனும் அரசர் அவனுக்குப் பயந்து நடுங்கினான். |
| 3. | முருகனின் படைத்தளபதி வீரபாகு. முருகனின் கட்டளையை ஏற்று சூரபன்மனைக் கொல்ல உதவினான். | நன்னனின் படைத்தளபதி மிஞிலி. நன்னன் கட்டளைப்படி ஆஅய் எயினனைக் கொன்றான். |
| 4. | வேலால் சூரன் கொல்லப்பட்டான். | வேலால் ஆஅய் எயினன் கொல்லப் பட்டான். |

இவ்வாறாகப் பல ஒற்றுமைகள் இருக்கும் நன்னனுக் முருகன் உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது பொருத்தம் எனலாம். முருகன், நன்னன் இருவரின் ஒற்றுமைகளை மனதிற் கொண்டுப் புலவர் முருகன் தொன்மத்தை இப்பாடலில் உவமையாக எடுத்தாண்டுள்ளார் எனத் தோன்றுகிறது.

பொருநராற்றுப்படைப் பாடல் வரிகளில் (130-132) மன்னன் கரிகாலச் சோழனின் சீற்றத்திற்கு முருகனின் சீற்றம் உவமையாக்கப்பட்டுள்ளது. கரிகாலனும் தன் இளமைக்காலத்தில் சேர, பாண்டியர்களை போரில் வென்று வெற்றி பெற்றான். அதுபோல முருகனும் தன் இளவயதில் சூரனுடன் போரிட்டு வென்றான். கரிகாலன் பிறக்கும்போதே பகைவரை உடையவன் என்று வரலாறு கூறுகிறது. அதேபோல முருகப் பெருமான் அவதரித்ததே தேவர்களின் பகைவனான சூரனை அழிப்பதற்கு எனப் புராணம் கூறுகிறது. முருகனைப் போலப் பேரில் வல்லவன், சீற்றமுடையவன் கரிகாலன் என்று புலப்படுத்த முருகன் தொன்மத்தை உவமையாகப் பயன்படுத்தியுள்ளது பொருத்தமாக உள்ளது. இதே போன்று பதிற்றுப்பத்து (11-5) பாடலில் முருகன் தொன்மம் சேரலாதனுக்கு உவமையாகிறது. நடுக்கடலில் போரிட்ட முருகவேளுக்கு அஞ்சி சூரபத்மன் மாமரத்தின்பின் ஒளிந்து கொண்டான். பிறருக்கு அச்சத்தை உண்டாக்கும் அவுண வீரர்கள் அம்மரத்திற்குக் காவலிருந்தனர். முருகன் அம்மாமரத்தினை வேரோடு அழியுமாறு செய்து சூரபன்மனையும் அழித்தான். பின் பிணிமுகம் என்ற தன் போர்க்களிற்றின் மீது ஏறி அம்முருகப் பெருமான் வெற்றி உலா வந்தான். சேரலாதனும் கடலிடத்துப் பகைவரை வென்று களிறேறி வீதியுலா வந்தான் என்கிறார் புலவர்.

சேரலாதனின் செயல்கள் முருகப் பெருமான் சூரனை வதம் செய்த செயல்போல இருந்ததால் முருகனின் தொன்மம் உவமையாக்கப்பட்டுள்ளது மிகச் சிறப்பாகப் பொருந்தியுள்ளது. ஒரு பொருளுக்கோ, நபருக்கோ உவமை கூறும்போது அதனை ஒத்த வேறு பொருள் உவமையாக வரும் என்பது அடிப்படை

விதி. அதற்கு ஏற்றாற்போல சேரலாதனின் வீரத்திற்கு முருகனின் செயல்கள் ஒத்து இருந்ததால் புலவர் முருகனின் தொன்மத்தை உவமையாக கையாண்ட நோக்கத்தில் வெற்றியடைந்துள்ளார் எனக் குறிப்பிடலாம்.

**முருகன் தொன்ம உவமைகள் மூலம் அறிய வரும் செய்திகள்**

1. முருகன் தொன்மத்தைப் பொறுத்தவரை அகப்பாடல்களுக்கும் புறப்பாடல்களுக்கும் வெவ்வேறு விதமாக பயன்பட்டுள்ளன எனலாம்.
2. அகப்பாடல்களில் பெரும்பாலும் அக்கால வழக்கமான முருகன் வெறியாட்டு நிகழ்வு களவுப் பாடல்களில் பெரும்பங்கு வகிக்கின்றன.
3. தலைவன் - தலைவியின் சிறுவயது மகனின் அழகிற்கு முருகன் அழகு உவமையாகக் கூறப்படுகின்றன. அவ்வாறு முருகன் ~~அழகு~~ குறிப்பிடப்படும் போது சிவனின் மகன் என்றே கூறப்படுகின்றான்.
4. அகப்பாடல்களில் முருகன் குடியிருக்கும் மலையின் அழகும், அதன் வளமையும் முருகனின் அழகும், முருகன் பிறப்பும் உவமையாக வருகின்றன எனலாம். அதோடு முருகன் மேற்கொண்ட போர் செ உவமையா வருகி
5. முருகனின் அறுபடை வீடு குறிப்பிடப்படுகின்றது.
6. புறப்பாடல்களில் வீரம், பரம்பரைச் சிறப்பு, வள்ளல்தன்மை, உருவத் தோற்றம் இவற்றிற்கு உவமைகளாக முருகன் தொன்மம் பயன்பட்டுள்ளது எனலாம்.
7. முருகன் அரசர்களின் போர் புரியும் திறனுக்கு உவமையாகிறான் எனலாம்.
8. அரசர்களின் வீரம் பற்றிக் கூறும்போது முருகன் - சூரபன்மன் போர்க் காட்சிகள் உவமைகளாக காட்டப்பட்டுள்ளன எனலாம்.

9. அகப்பாடல்களுக்கும், புறப்பாடல்களுக்கும் உவமையாக முருகன் - சூரபன்மன் போர் நிகழ்வுகள் காட்டப்படுகின்றன.

10. முருகனின் அறுபடை வீடுகளில் திருப்பரங்குன்றமும், முருகனின் சூரபன்மனுடன் போரிட்ட, தலமாகிய செந்திலம்பதியும் திருச்செந்தூரும் சுட்டப்படுகின்றன.

ஆகவே தொன்மங்கள் உவமையாகும்போது படிப்பவரின் கற்பனை உணர்வுகளுக்குக் களமாகவும், பாட்டின் பொருளுக்கு ஆழமான கருத்துக்களையும் இவை உள்ளடக்கி உள்ளன எனலாம்.

**பழமரபுக் கதைகள் (எனும் அரசர் தொன்மங்கள்) தொன்ம உவமைகளின் நோக்கம்**

சங்கப் புற இலக்கியங்கள் அரசர், குறுநிலமன்னர்களின் புற வாழ்க்கை நிகழ்வுகளைப் பற்றி கூறுகின்றன. பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை தவிர மற்ற நூல்களும், எட்டுத்தொகையில் பதிற்றுப்பத்தும், புறநானூறும் மன்னர் பற்றிய கதை சார்ந்த செய்திகளைச் சொல்கின்றன. இச்செய்திகளே தொன்மங்கள் எனப்படுகின்றன. இத்தொன்மங்கள் உவமைகளாகவும் வந்துள்ளன.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகையை ஆய்வுக் களமாகக் கொண்டிருப்பதால் இவற்றுள் அரசர் தொன்மங்கள் உவமைகளாக இருபத்து நான்கு இடங்களில் வந்துள்ளதை அறியமுடிகிறது. சங்க இலக்கியத்தில் அரசர் தொன்மம் உவமையாக நூல்களில் இடம்பெற்ற அளவுகள் கீழ்க்காணும் வரைபடம் மூலம் எளிதாக விளக்கப்பட்டுள்ளது.

## அரசர் தொன்ம உவமை விளக்கப்படம்




புறநானூற்றில் பழமரபுக் கதைகள் அதிகமாகப் பயின்று வருகின்றன எனலாம். புறநானூற்றில் அரசர்களின் இயல்பு, அவர்களின் கொடைத் திறம், வீரம், அரசனின் முன்னோர் சிறப்பு ஆகியவை கூறப்படுகின்றன. இவற்றுடன் தவறு செய்யும் அரசனுக்கு நல்வழி அறிவுறுத்துவது, அவனது பகைவர் நாட்டினை எண்ணி அதனால் புலவர் இரங்கி அரசனுக்கு அறிவுரை கூறுவதுபோலப் பாடியுள்ளமையும் காணப்படுகின்றன. அன்றைய காலக்கட்டங்களில் சேர சோழ பாண்டியர் எவ்வாறு ஆண்டனர்? அவர்களின் கடமை எப்படி இருந்தது? போன்ற அனைத்து வினாக்களுக்கும் விடை புறநானூற்றில் உள்ளது எனலாம்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை காரிக்கிழார் பாடிய பாடல் (புறம். 6) மன்னனை வாழ்த்திப் பாடுவதாக உள்ளது. பாண்டியனின் ஆட்சி எல்லையாக வடதிசையிலுள்ள இமயத்திற்கு வடக்கிலும், தென்திசையில் கன்னியாற்றிற்குத் தெற்கிலும், கிழக்குத் திசையில் சகரரால் தோண்டப்பெற்றுக் கரையை மோதும் கடலுக்குக் கிழக்கிலும், மேற்குத் திசையில் தொன்மையாய்

முதிர்ச்சியுற்ற கடற்பரப்பின் மேற்கிலும், கீழுள்ள நிலம், வான், சுவர்க்கம் என்ற மூன்றும் சேர்ந்து அடுக்கிய முறையில் முதலாவதாக உள்ள நீர்நிலையிலிருந்து உயர்ந்து தோன்றும் நிலத்திற்குக் கீழேயும் மேலமைந்த கோ உலகிற்கு மேலேயும் விளங்குகின்ற அடங்காத அச்சமும் புகழும் உன்னுடையதாகட்டும் என்கிறார் புலவர்.

இப்பாடலில் சகரரால் தோண்டப்பட்ட கடலுக்குக் கிழக்கிலும் என்ற வரிகளில் சகரன் எனும் அரசனின் தொன்மம் இடம்பெற்றுள்ளது.

**சகரர் (கதை) தொன்மம்**

*சகரன் எனும் அரசன் மகாகீர்த்தியுடன் சக்கரவர்த்தியாய் வாழ்ந்தான். சகரன் தனது குரு அவுரவருடைய உத்தரவின்படி தாலசங்கர்கள், யவணர்கள் முதலிய பகைவர்களை வென்று அவர்களுக்கு மொட்டை யடித்து அனுப்பினான். அசுவமேத யாகங்கள் பல செய்தான். இந்த யாகம் வெற்றி பெற வேண்டுமானால் சகரனால் ஏவப்பட்ட குதிரை மூவுலகையும் சுற்றி வரவேண்டும். அப்படி வந்துவிட்டால் சகரனை யாராலும் வெல்ல முடியாது. இந்திரன் அப்படி நடந்துவிடக்கூடாது என்பதற்காக சகரனின் குதிரையைப் பாதாளத்திலுள்ள கபிலமுனியினுடைய ஆசிரமத்தில் கட்டி வைத்துவிட்டான். சகரனுக்கும் சுமதிக்கும் பிறந்த அறுபதினாயிரம் பிள்ளைகள் அக்குதிரையைத் தேடி வந்தனர். பூமி எங்கிலும் தேடினர். குதிரைக் கிடைக்கவில்லை. பூமியைச் சுற்றிலும் தோண்டினர்.*[34]

*அந்த சகரனுடைய பிள்ளைகளால் இந்தச் சமுத்திரமானது நிரூபிக்கப்பட்டது. அந்தச் சகரனுடைய பிள்ளைகளால் இந்தச் சமுத்திரமானது நிருமிக்கப்பட்டது.*[35]




இத்தொன்மம் பாண்டியன் மன்னன் புகழுக்கு கருவியாக வந்துள்ளது. இங்கு உவமையாக வரவில்லை என்றாலும், பாண்டியனுக்கும் சகரனுக்கும் உள்ள ஒற்றுமைக்குப் பொருத்தமாக உள்ளதால் எடுத்தாளப்பட்டுள்ளது என்பதைக் கீழ்க்காணும் மேற்கோளைச் சான்றாகக் காட்டலாம்.

***இப்பாண்டிய மன்னன் அக்காலத்தில் நிலவிய அரசர் பலரையும் புறங்கண்ட பெருவீரன் அரசர்க்குரிய பல வேள்விகளை முடித்துப் பெருமை எய்தியவன்.***[36]

சகரனும் தாலசங்கர்கள், யவணர்களைப் புறங்கண்டவன். அசுவமேத யாகம் நடத்தியவன். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பல யாகங்கள் நடத்தினதால் இப்பெயர் பெற்றான் என்று வரலாறு கூறுகிறது. ஆக பாண்டிய மன்னனின் இயல்புகளுக்கு ஏற்ற இயல்புகள் கொண்டவன் அரசன் சகரன் என்பதால் பாண்டிய மன்னன் சிறப்பை உயர்த்திக் காட்டும் நோக்கத்தில்

இச்செய்தி எடுத்தாளப்பட்டுள்ளதாகக் கருத வாய்ப்புள்ளது. பாண்டிய மன்னனின் ஆட்சி எல்லையைக் குறிப்பிடும்போது, புலவர் மிகத் திறனாக பாண்டியனின் இயல்புக்கு ஒத்த இயல்புகொண்ட சகரர் தொன்மத்தை குறிப்பிடுவது பொருத்தமாக அமைந்துள்ளது.

அடுத்ததாக அமையும் புறநானூற்றுப் பாடல்கள் (36, 37, 39, 46) சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவனைப் புகழ்ந்து மாறோகத்து நப்பசலையாரும், கோவூர் கிழாரும் பாடுகின்றனர். இப்பாடல்களில் புறாவின் துயர் போக்கத் தன் தசை கொடுத்த சிபியின் மரபில் வந்தவனே என்று சோழமன்னனை சிறப்பாகச் சொல்கின்றார் புலவர்.

**சிபியின் வரலாறாவது:** சோழர் குல அரசருக்கு சிபி முன்னோடியாகத் திகழ்ந்தான் என்று அறியமுடிகிறது. ***சந்திர குலத்திலே சிபி எனப் பெயர் கொண்ட மன்னன் ஒருவன் உளனென்பது புராண இதிகாசங்களால் அறியப்படுகிறது. அவன் யயாதியின் மக்களுள் ஒருவனாகிய அணுவின் வழியில் வந்த உசிநரன் புதல்வனாவான். சிபி சூர்யக் குலத்தவனென்றும் சோழர்களின் முன்னோனென்றும் சங்கத்துச் சான்றோராலும் நல்லிசைப் புலவர்களாலும் இடைக்காலத்தே தோன்றிய செயங்கொண்டார், சேக்கிழார், கம்பர், ஒட்டக்கூத்தர் முதலிய புலவர் பெருமக்களாலும் பலவிடங்களில் கூறப்படுகின்றான். ஆதலின் சூரிய குலத்துச் சிபியும் வேறு சந்திரகுல சிபியும் வேறு என்று கொள்ளுதல் வேண்டும். பல அரசர்கள் ஒரே பெயர் தரித்திருப்பதைப் புராணங்களிற் காணலாம்.***

***சங்க இலக்கியங்களில் சோழர் குல முன்னோரின் மாட்சியை விளக்க நேர்ந்தபோதெல்லாம் சிபி என்ற மன்னன் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றான். இவ்வேந்தர் பெருமானைக் குறித்து மகாபாரதத்தில் கூறப்பட்டிருக்கிறது தர்மபுத்திரர் பேரறிவாளரான பாட்டனாரைப் (பீஷ்மர்) பார்த்து அடைக்கலம் புகுந்த உயிரைப் பாதுகாத்தலினால் உளதாம் பயனை வினவ, பீஷ்மர் சிபியின் கதையைக் கூறுகிறார்.***[37]

மகாபாரதத்தில் சிபி பற்றி பேசப்பட்டிருக்கிறது எனில் சிபிச் சக்கரவர்த்தி மகாபாரதத்திற்கு முன்னோ, அல்லது அதே காலத்துவனாகவோ இருந்திருக்கலாம். **இவன் வனத்திலிருக்கையில் தேவர் இவனது தவத்தைச் சோதிக்க இந்திரன் வேடனாகவும், அக்னி தேவன் புறாவாகவும் உருவடைந்து அரசன் காண வேடன் புறாவைத் துரத்தி, நேராகப் புறா அரசனிடம் அபயமடைந்தது. அரசன் வேடனை நோக்கி வேறு இறைச்சி தருகிறேன். இதை ஒழிக என வேடன் உடன்படாது இதனைத் தராது மறுக்கின், அப்புறாவின் நிறையுள்ள உன்னுடம்பின் இறைச்சி தருக என, அரசன் மகிழ்ந்து அதன்படி ஒரு துளையிட்டு அதில் புறாவை நிறுத்தித் தன்னுடலின் இறைச்சி முழுதும் அறுத்திட்டனன். இடுந்தோறும் புறவு இட்ட தட்டு தாழ்ந்தவர உடம்பில் வேறு மாமிசம் இல்லாமையால் அரசன் தானே துளையில் ஏறத் தேவரிருவருங் களித்து அரசனுக்கு தரிசனந் தந்து உடலிற்றசை வளரச் செய்து சுவர்க்கம் அளித்தனர்.**[38]

இப்படிப்பட்ட பெருமையையுடைய சிபிச் சக்கரவர்த்தியின் மரபில் வந்தவனே என்று சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடுகிறார் நப்பசலையார். எப்படிப்பட்ட வல்லமை படைத்த அரசர்களையும் போரில் அழிக்க வல்லவன். சோழனின் செயல் நஞ்சை உடைய பாம்புகூட அஞ்சும்படி பெரிய மலையின் பிளவுகளில் இடிதாக்குவது போல விளங்கும் என்கிறார்.

இப்பாடலில் சோழனின் வீரமும் அவன் பகைவரை வெல்லும் செயல்கண்டு பாம்பு கூட அஞ்சும் என்று கூறிவிட்டு சிபியின் வழித்தோன்றலே என்கிறார். சோழன் கொடைத் திறமைக்கோ, தன்னிடம் அடைக்கலம் தேடி வந்த உயிர்க்கு சோழன் ஆதரித்ததற்கோ வள்ளலான சிபியின் தொன்மம் உவமையாக வரவில்லை. சிபியின் பரம்பரையில் வந்தவனே என்று கூறிவிட்டு சோழனின் வீரத்தைப் பற்றிக் கூறுகிறது பாடல். சிபி என்று குறிப்பிடும்போது கருணை உள்ளத்திற்கு எடுத்துக்காட்டாகும் எனலாம். இப்பாடல்(புறம். 37) வெண்மையான

வேலுடன் சினங்கொண்ட தானையை உடையவனுமான சோழனின் வழித் தோன்றல் என்கிறார். ஆக சிபியைக் கருணைக் குணத்திற்கு கூறுவதை விடுத்து சோழமன்னனின் வீரத்திற்கு உவமையாக கூறுகிறார் புலவர்.

அடுத்த பாடலிலும் (39) சோழனை இதே நப்பசலையார் பாடுகிறார். புறாவின் வருத்தத்தைப் போக்க துலாக்கோலில் தானே ஏறிநின்ற சோழன் (சிபி) வழித்தோன்றலே அதனால் இரப்பவர்க்குத் தருதல் உன்னுடைய இயல்பின்றிப் புகழ் அல்ல என்று பாடிய புலவர் சோழனின் வள்ளல் தன்மைக்குக் காரணமே சிபிச் சக்கரவர்த்தியின் மரபில் வந்ததால் என்று கூறுகிறார். இதே பாடலில் (புறம். 39) விண்ணில் அவுணர்களால் அமைக்கப்பட்ட அரண்களைச் சோழ மன்னன் ஒருவன் அழித்தான். அப்படிப்பட்ட மரபில் வந்த கிள்ளி வளவனின் போரில் வெல்லும் வீரம் இயல்பாக உள்ளது என்கிறார். ஆக ஒருவனின் குணத்தை நிர்ணயிப்பது அவனது பரம்பரை ஆகும் என்று கூறுவதற்காகப் புலவர் சிபி பற்றிய தொன்மங்களை உவமையாக்கியுள்ளதாகக் கருதலாம்.

மற்றுமொரு பாடலில் (புறம். 46) சோழன் கிள்ளி வளவன், மலையமான் மக்களை யானைக் காலால மிதித்துக் கொல்ல உத்தரவு இட்டான். இதைக் கண்ட புலவர் கோவூர்க்கிழார் புறாவின் துயர்துடைத்த சிபியின் மரபில் வந்தவனே! மெல்லிய தலையையுடைய இச்சிறுவரோ யானையைக் கண்டதும் அழுகையை மறந்தனர். மகிழ்வுடன் யானைக் கண்டு ரசித்தனர் என்று கூறுகிறார். இப்பாடலில் ஐந்தறிவு கொண்ட புறாவுக்கு அடைக்கலம் தந்த சிபியின் மரபில் வந்துவிட்டு, மலையமான் குழந்தைகளை யானைக் காலால் மிதித்துக் கொல்லும்படி ஆணையிடுவது உனக்கு அழகா? என்று மறைமுகமாக கேட்பதாகக் கொள்ளலாம். சோழனின் செயல் விரும்பத்தக்கதன்று என்பதைச் சுட்டிக்காட்ட இப்பாடலில் சிபியின் தொன்மம் பயன்படுத்தப்பட்டுள்ளதாகக் கருத இடமுள்ளது.

சோழ மன்னனின் வீரம், கொடைப் பண்பு முதலியவற்றுக்கும் கொடுமையான செயல்களை (புறம்பும்) அவன் செய்யாதிருக்கவும் சிபிச்

சக்கரவர்த்தியின் தொன்மம் பாடலில் எடுத்தாளப்பட்டுள்ளது எனலாம். ஒரு அரசனின் வீரச்செயலுக்கும் விரும்பத்தகாத செயலுக்கும் சிபியின் தொன்மத்தைக் கூறி அரசனுக்கு அறிவுரை கூறும் வழக்கம் இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தானைத் தாமப்பல் கண்ணனார் பாடிய பாடலிலும் (புறம். 43) சிபி மன்னன் தொன்மம் பேசப்படுகிறது.

மாவளத்தானும் கண்ணனாரும் வட்டாடினர். வட்டுக்காய்கள் காணாமற் போனதால் கோபங்கொண்ட சோழன் காய்களைப் புலவர் மீது வீசினான். புலவர், 'நீ என்னை வருத்தினாய், புறாவின் அல்லல் தீர்த்த சோழன் மரபில் வந்தவனில்லை' என்றார். இதனால் தன் தவறை உணர்ந்து மாவளத்தான் வருந்தினான். அவன் வருத்தத்தைக் கண்டு புலவர் தவறுக்கு வருந்துவது நின் குடியின் சிறப்பு. நீ சோழ மரபினனே என்று வாழ்த்தியதாகப் பாடல் அமைந்துள்ளது.

இப்பாடலிலும் சோழ மன்னனின் நற்குணம் அவன் புறாவின் துன்பம் துடைத்த சிபியின் மரபில் வந்ததால்தான் மன்னனான உனக்கு நற்பண்புகள் அமையப்பெற்றுள்ளன என்று குறிப்பாக உணர்த்த இத்தொன்மம் பயன்பட்டிருக்கிறது எனலாம். பொதுவாக புறநானூற்றில் பேசப்பட்ட சோழ மன்னர்களின் நற்பண்புகளின் அளவு கோலாக அந்நாட்களில் சிபிச் சக்கரவர்த்தியின் தொன்மம் இருந்து வந்திருக்கிறது எனலாம்.

மற்றுமொரு புறநானூற்றுப்பாடலில் (233) வேள் எவ்வி எனனும் சிற்றரசனை வெள்ளெருக்கிலையார் பாடுகிறார்.

> ***பா அடி யானை பரிசிலர்க்கு அருகாச்***
> ***சீர்கெழு நோன்தாள் அகுதைக்கண் தோன்றிய***
> ***பொன் பினை திகிரியின் பொய்யாகியரோ*** (புறம். 233: 2-4)

இப்பாடலில் பரந்த அடியினையுடைய யானையைப் பரிசிலர்க்குக் குறைவில்லாமல் கொடுக்கும் சிறப்பினையும் வலிய முயற்சியையும் உடையவன்

அகுதை என்னும் வள்ளல். **மதுரையில் இருந்த ஒரு வள்ளல் ஏற்பார்க்கு யானை கொடுப்பவன். போர் வல்லன் இவனைப் புகழ்ந்த புலவர் கபிலர்**[39] என்று அகுதை மன்னன் குறிப்பிடப்படுகிறான். வேள் எவ்வி என்ற சிற்றரசன் போர்க்களத்தில் எதிரிகளால் மார்பில் வேல் பாய அவன் இறந்தான். புலவர் வேள் எவ்வி மேல் கொண்ட பிரியத்தால் புலவர் அகுதை எனும் வள்ளலிடம் பொன்னால் ஆன சக்கரம் இருந்தது. அகுதை மன்னனை யாரும் வெல்ல இயலாது என்ற கருத்து நிலவியது. ஆனால் ஒரு போரில் அகுதை இறந்து போனான். அதனால் அவன் வைத்திருந்த பொன் சக்கரத்தின் புகழும் பொய்யானது. அதுபோல எவ்வி மறைந்தான் என்று செய்தியும் பொய்யாகப் போகட்டும் என்கிறார்.

இப்பாடலில் அகுதை மன்னனின் தொன்மம் உவமையாக வந்துள்ளது. வேள் எவ்வி வள்ளல்தன்மையுடையவன். **ஒரு வேளாளனாகிய வள்ளல் வெள்ளெருக்கிலையார் என்னும் தமிழ்ப் புலவராற் பாடல் பெற்றவன். தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியனால் வெல்லப்பட்டவன்**[40] என வேள் எவ்வி பற்றி குறிப்பிடப்படுகிறது.

அகுதை போல வேள் எவ்வி வள்ளலாக இருந்தவன். இருவரும் புலவரால் பாடப்பட்டிருந்தனர். அகுதை மதுரையில் இருந்த வள்ளல் என்று வரலாறு கூறுகிறது. அகுதை போரிட்டு மாண்டான். வேள் எவ்வியும் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியனால் வெல்லப்பட்டான் எனும்போது அகுதையும், வேள் எவ்வியும் போர்க்களத்தில் மாண்டனர் என்பதை அறிய முடிகிறது. அதனால் வேள் எவ்விக்கு அகுதையை உவமையாக்கியது பொருத்தமானதாக அமைந்துள்ளது எனலாம்.

புறநானூற்றுப் பாடல்களுக்குப் பிறகு அரசர் தொன்மம் உவமையாக பயன்பட்டுள்ளது சிறுபாணாற்றுப்படையில் எனலாம். சிறுபாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் நல்லியக்கோடன் எனும் சிற்றரசன். இவ்வரசனிடம் பரிசு பெற்றுத் திரும்பும் சிறுபாணன் ஒருவன், வழியில் கண்ட வறுமை நிலையிலுள்ள பாணனை இவ்வரசனிடம் ஆற்றுப்படுத்துகிறான்.

நல்லியக்கோடன் சிற்றரசன் மட்டுமல்ல சிறந்த வள்ளலாக இருந்தான் என இப்பாடல்களில் சிறப்பிக்கப்படுகிறது. வறுமையில் உழன்று தன்னை நாடி வருபவர்களுக்குத் தேரையும், குதிரைகளையும், வெள்ளை எருதுகளையும், பாகனோடு யானைகளையும், அணிகலன்கள் முதலியவற்றையும் அளிக்கும் வள்ளல் இந்நல்லியக்கோடன் ஆவான். **சிறுபாணாற்றுப்படை எனும் இச்சிறந்த நூல் ஓய் நானாட்டு நல்லியக்கோடன் என்னும் வள்ளலைப் புகழ்ந்து பாடப்பட்டதாகும். இவன் இப்போதுள்ள திண்டிவனத்தைச் சார்ந்ததும் முற்காலத்தில் ஓய்மானாடு என வழங்கப்பட்டதுமான நிலப்பகுதியை ஆண்ட குறுநில மன்னனாவான். இவன் மாவிலங்கை எனும் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு செங்கோல் செலுத்திய ஓவியர் என்னும் அரசர் குடியில் தோன்றியவன். இவ்வள்ளல் கடையெழு வள்ளல்களுக்குப் பின் தான் ஒருவனே வள்ளன்மையால் அவர்களுக்குச் சமமாக விளங்கிப் பெரும்புகழ் பெற்றவன். வரிசையறிதல், வரையாது கொடுத்தல் முதலிய பரிசிலர் விரும்பும் பண்பு நலம் உடையவன்.**[41] நல்லியக்கோடன் வள்ளன்மையில் சிறந்து விளங்கியதால் நல்லூர் நத்தத்தனார், வள்ளல்கள் எழுவரையும் இவனுக்கு உவமையாகச் சொல்கிறார்.

வள்ளல்கள் எழுவராக பாரி, ஓரி, காரி, ஓய், அதிகன், நள்ளி, பேகன் முதலியோர் ஆவர். வள்ளல்தன்மை என்ற பண்பை கூறும் விதமாக நல்லியக்கோடனுக்கு இவ்வள்ளல்கள் உவமையாக வந்துள்ளனர்.

வள்ளல்களின் பாரி தன் தேரைத் தடுத்த முல்லைக் கொடிக்கு, தன் தேரையே கொடுத்தான். பேகனோ குளிரால் வாடும் மயிலுக்கு இரக்கமுற்றுப் போர்வையைத் தந்தான். ஆக, மனிதரல்லாதவற்றுக்கும் (முல்லைக்கொடி, மயில்) கொடையளித்த பாரியும், பேகனும், தன்னை நாடி வந்தவர்க்கு அருளும் நல்லியக் கோடனுக்கு உவமையாக்கியிருப்பது நல்லியக்கோடனின் வள்ளல் தன்மை மிகச் சிறப்புடையது என்ற எடுத்துக்காட்டுவதின் நோக்கமாக இவர்கள் (பாரி, பேகன்)

உவமை வரிசையில் இடம்பெற்றிருக்கலாம்.

அதியமான் தனக்குக் கிடைத்த அரிய சக்தியுடைய நெல்லிக்கனியைத் தான் உண்டு தனக்கு ஆயுளை கூட்டிக் கொள்ளலாமல், ஔவைக்கு கொடுத்தத் தன்னலமற்ற பண்பாளன் எனலாம்.

ஆய் எனும் வள்ளல் கூட தனக்குக் கிடைத்த ஒளிமிக்க நீலமணியினையும், நாகத்தால் தாம்பெற்ற கலிங்கத்தையும் விருப்பத்தோடு இறைவனுக்குக் கொடுத்தான். இவர்கள் இருவரையும் நல்லியக்கோடனுக்கு உவமையாக்கி யிருப்பது, அவனை உயர்த்திச் சொல்வதற்கு எனலாம். ஏனெனின் உவமையின் விதிப்படி, 'உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும்' (பொருளதிகாரம் - உவமையியல் - நூற்பா. 8) உவமையும் பொருளும் படிப்பவர், கேட்பவர் ஏற்குமளவுக்கு ஒத்து இருக்க வேண்டும். தமக்குத் தோன்றியவற்றை-யெல்லாம் உவமையாகக் கூறாது எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்புடையன என உலகத்தார் ஒத்துக் கொள்ளத்தக்கவற்றை உவமையாகக் கூறுதல் வேண்டும் என வெள்ளை வாரணனார் அந்நூற்பா விளக்கத்தில் கூறுகிறார். இதை வைத்து ஆராயும்போது நல்லியக்கோடனின் கொடைத் தன்மைக்கு உவமையாக மிக உயர்ந்த தன்னலமற்ற கொடைச் சிறப்புடையவர்கள் ஆய், அதியமான் ஆகியோர் கூறப்படுவது நல்லியக்கோடனுக்குச் சிறப்பைச் சேர்க்கின்றது.

நல்லியக்கோடன் தன்னிடமுள்ளவற்றைத் தன்னை நாடி வருபவர்களுக்கு ஈந்தான். ஆனால் ஆயும், அதியமானும் தமக்கு எதிர்பாராதவிதமாகக் கிடைத்த அரிய சக்திபடைத்த நீலமணியையும், கலிங்கத்தையும், நெல்லிக்கனியையும் பிறருக்குக் கொடுத்தனர். இன்னும் சொல்லப்போனால் தன்னிடம் எதையும் நாடி வராதவர்களான இறைவனுக்கும், ஔவைக்கும் நீலமணியையும், நெல்லிக்கனியையும் ஈந்தது. மிகச் சிறந்த வள்ளல்தன்மைக்கு சிறந்த எடுத்துக்காட்டு எனலாம். ஆயும், அதியமானும் நல்லியக்கோடனுக்கு உவமையாக வந்திருப்பதின் நோக்கம் என்னவெனில், **ஒரு செய்தியைச் சொல்லும்போது**

*அதனைக் கேட்பவர் நன்றாக, தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகவும், ஒரு பொருளை எழுதும்போது அதைப் படிப்பவர் மனத்தில் அப்பொருள் நன்றாகப் பதிய வேண்டும் என்பதற்காகவும் சொல்பவரும் எழுதுபவரும் உவமையைக் கையாளுகின்றனர். உவமை என்பவள் ஒரு திறம்பட்ட நடிகை அவள் பல்வேறு கோலம் புனைந்து இலக்கியம் என்ற அரங்கில் பாங்குற நடிக்கக் கூடியவள் என்று பரிதிமாற் கலைஞர் கூறுவார்.*[42]

மேற்கண்ட கருத்துக்கேற்ப நல்லியக்கோடனின் வள்ளல்தன்மையை செம்மையாகக் கூறப் புலவர் வள்ளல்களின் தொன்மத்தை உவமையாகக் கையாண்டிருக்கின்றார். இவ்வள்ளல்களில் நல்லியக்கோடனின் ஒத்த சிறப்பியல்புகள் கொண்டவர்களாக காரி, நள்ளி, ஓரி போன்ற வள்ளல்களைக் குறிப்பிடலாம். இவர்கள் மூவரும் இரவலர்க்கு வேண்டிய அளவு கொடை அளித்தவர், தன்னை நாடி வந்தவர் மனம் மகிழ அவர் இல்லத்திற்கு இயன்ற பொருள்களைக் குறிப்பறிந்து நல்கியவர், குரிய மலைகளை உடைய நாடுகளைக் கூத்தாடுவார்க்குக் கொடுத்தவர். இவர்களைப் போலவே நல்லியக்கோடனும் கொடை வழங்கியவன் என்று இச்சிறுபாணாற்றுப்படையின் பாட்டுடைத் தலைவன் நல்லியக்கோடனின் சிறப்புகள் சொல்லப்பட்டுள்ளன. அதோடு நல்லியக்கோடனுக்கு உவமையாக கடையேழு வள்ளல்களின் தொன்மம் பயன்படுத்தியது ஒரு மன்னன் தன்னை நாடி வருபவர்க்கு மட்டுமல்லாது, புலவரிடத்தும் இசைக் கலைஞர்களிடத்தும், அஃறிணைப் பொருள்களிடத்தும் இரக்கம் காட்டுதல், இறைவனிடம் பக்தி செலுத்துதல், தன்னலமற்ற பண்புடன் இருத்தல் போன்ற பண்புகள் அரசனுக்கு இருக்க வேண்டும் என்று வலியுறுத்துவதற்கும் அத்தகைய மன்னர்கள் அக்காலத்தில் இருந்தனர் என்பதை எடுத்துக்காட்டும் நோக்கமாகவும் வள்ளல்களின் தொன்மங்கள் உவமையாக வந்துள்ளன எனலாம்.

பதிற்றுப்பத்து இலக்கியம் சேர அரசர்களைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற இலக்கியமாகும். இதன் நான்காம் பத்தில் காப்பியாற்றுக் காப்பியனார் எனும் புலவர் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் எனும் சேர மன்னனைப் புகழ்ந்து பாடுகிறார். பாடல் வரிகளாவன,

**தூங்கு எயிற் கதவம் காவல் கொண்ட**

**எழூஉ நிவந்தன்ன, பரேர் எறுழ் முழவுத் தோள்** (31: 18-20)

என்று அமைந்துள்ளது. இப்பாடலில் வண்டன் எனும் ஒரு சோழ மன்னனின் தொன்மம் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளது. தேவர்களுக்கு அஞ்சித் தம்மை பாதுகாத்துக் கொள்ள அசுரர்கள் அமைத்த மூன்று அரணங்களை வண்டன் எனும் சோழன் அழித்தான். அரணங்கள் என்பது கோட்டைகள் என்று அகராதியில் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. 'அரணங்களை அழித்த பருத்த வலிமையுடைய முழவினை ஒத்த தோள்களை உடையவனும், புகழைத் தன்னிடத்தே நிறுத்தியவனும், பல்வகைச் செல்வங்களை உடையவனுமாகிய வண்டன் என்ற கொடை வள்ளலைப் போன்றவன் நீ' என்று புலவர் சேர மன்னனை வாழ்த்துகிறார்.

சேரமன்னனின் சிறப்பைக் கூற மேற்கண்டத் தொன்மம் உவமையாக எடுத்தாளப்பட்டதின் நோக்கத்தை ஆராயும்பொழுது கீழ்காணும் கருத்துகள் அறியப்படுகின்றன.

1. மன்னன் என்பவன் கொடைக்குணம் மட்டுமின்றி வீரத்திலும் சிறந்து விளங்க வேண்டும் என்பது.

2. மன்னர்களின் தோள் வலிமை, வீரம் வானுலகத்திலுள்ள தேவர், அசுருடன் ஒப்புமைப்படுத்தப்பட்டிருப்பது அக்கால மன்னர்களின் வீரத்தின் சிறப்பைக் காட்ட எனலாம்.

3. சேரனைப் புகழ்ந்து பாட சோழ மன்னனை உவமையாக்கியிருப்பது புலவர்களைப் பொறுத்தவரை சிறந்த மன்னர்கள் யாராயிருந்தாலும் சேர, சோழ, பாண்டியர் என்று பாகுபாடு பாராமல் புகழ்ந்து பாடப்படுவர் என்பது.

புலவர் தொன்மைத்தை உவமையாகக் கையாண்டதின் மூலம் மேற்கண்ட கருத்துகளை அறிய முடிகின்றது எனலாம்.

சேரமன்னரின் வீரத்திற்குச் சிறப்புச் சேர்க்க சோழமன்னன் என்று பொதுவாக குறிக்கப்பட்டுள்ளது. தூங்கெயில் எறிந்த தொன்மம் உவமையாகப் புறநானூறு (39), சிறுபாணாற்றுப் படை (80-81) ஆகிய நூல்களிலும் தொடிதோட் செம்பியன் என்ற பொதுப் பெயரில் குறிப்பிடுகிறது. புறநானூற்றைத் தவிர பதிற்றுப்பத்து, சிறுபாணாற்றுப் படை, இவற்றில் சேர மன்னனுக்கும், சிற்றரசனுக்கு உவமையாகச் சோழ மன்னர் தொன்மம் உவமையாக்கப் பட்டிருப்பது சிறப்பு எனலாம். சேர மன்னன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கு உவமையாகச் சோழ மன்னனின் தொன்மம் உவமையாக வந்ததின் நோக்கம் புலவரின் பரந்துபட்ட மனம் என்று கூறலாம். அக்காலத்துப் புலவர்கள் சாதனை படைத்த மன்னர்கள் அனைவரையும் புகழும் குணமுடைவராயிருந்தனர் எனபது தெரிகின்றது. சேரர்களும் சோழர்களைப் போலவே போரில் வென்று நாட்டை ஆண்டனர். ***தூங்கெயில் எறிந்த செம்பியன் சிறந்த வீரன் என்பது சங்க காலப் புலவர் கருத்து. இவனை நினைவூட்டித் தம் சோழ அரசர்க்கு வீரவுணர்ச்சி ஊட்டல், அப்புலவர் வழக்கமாக இருந்தது.***[43]

வீரத்தை சிறப்பாகக் கூற இத்தூங்கெயில் எறிந்த அரசர் தொன்மம் உவமையாக வந்துள்ளது என்று அறிய முடிகிறது. சோழ மன்னன் போன்று சேரன் களங்காய் நார்முடிச் சேரலும் தன் ஆட்சிக் காலத்தில் போரில் வெற்றி கண்டவன் என்பது கீழ்க்காணும் கருத்தாகத் தெரிகிறது என்பது ***நார்முடிச் சேரல் நெடுமிடல் அஞ்சியை வென்று அவனது நாட்டை கைப்படுத்திக் கொண்ட*** வரலாறு

உள்ளது. இவ்வரசன் காலத்தில் இவனுடைய தலைநகரில் போர் அவை (Military Academy) இருந்ததாக கூறப்படுகிறது. போர் துறைகளாவன மற்போர், விற்போர், வாட்போர், வேற்போர், மழுப்போர், தேர், குதிரை, களிறுகளை ஊர்தல் முதலியனவாம்.[44]

சோழர், சேரர் என்று பாகுபாடு பாராமல் வீரனான சேர மன்னனுக்கு இன்னொரு வீரனான சோழ மன்னனின் தொன்மம் உவமையாக வந்ததின் நோக்கத்தை ஆராயும்போது, எந்த அரசர் என்றாலும் வீரத்தோடு சிறப்பாக ஆண்டிருந்தால் அவன் மற்ற அரசர்களக்கு உவமையாவான் என்பதை மன்னர்களுக்கு அறிவுறுத்தும் பொருட்டு புலவர் இத்தொன்மத்தைக் கையாண்டிருக்கலாம். அதோடு புலவருக்குச் சேரர், சோழர் என்ற பாகுபாடு கிடையாது. நல்ல செயல்கள் எங்கிருப்பினும் உவமையாகக் கூறப்பட்டு உயர்த்தப்படுவர் என்பதை பாடல் மூலம் அறிய முடிகிறது.

மதுரைக்காஞ்சியின் பாட்டுடைத் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். மன்னனுக்கு நிலையாமைக் கருத்துகளை கூறுவதற்காக மாங்குடி மருதனார் பாடியது இந்நூலாகும். பாண்டிய மன்னனுக்குப் பற்று நீங்கி வாழ்தலே வீடுபேறு அடையச் சிறந்த வழி என்று கூறவந்த புலவர் (202-204). பாண்டியனின் சிறப்பைக் கூறுகிறார். ஒரு பொய் கூறுவதால் தேவருலகத்தை அடையும் பேறு கிட்டுவதாயினும் அதனை விரும்பாதவன் தேவர்கள் பகைவராய் ஆனாலும் பகைக்கு அஞ்சாதவன். தென்திசை நிலத்தில் உள்ள மலைகள் எல்லாம் நிறையும்படி வாணன் என்ற சூரன் வைத்துள்ள சீரிய பொருள் திரளைப் பெறுவதாயினும் பிறர் கூறும் பழி நமக்கு வருமென்று நீ விரும்பமாட்டாய் என்று புலவர் பாடுகிறார்.

இப்பாடலில் வாணாசுரனின் தொன்மம் உவமையாக வரவில்லை எனினும், பாண்டிய மன்னனின் பண்பைப் படிப்பவர் எளிதில் புரிந்து கொள்ளக் கருவியாக

இத்தொன்மம் வந்துள்ளது எனலாம். வாணாசுரன் பல சாஸ்திரங்களைப் பெரியவர்களிடம் கேட்டு வருகையில் சிவலிங்க மகிமையையும், சிவ பூஜா விசேஷங்களையுங் கேட்டு சிவபூஜை செய்ய விரும்பி சிவபெருமானை நோக்கிப் பலநாள் தவஞ் செய்தனன். இவன் தவத்திற்கு வந்த சிவபெருமான் வேண்டிய வரமளித்தார். வானாசுரன் சிவ பூசை செய்து பல கோடி காலம் எல்லாப்போகங்களையும் அனுபவித்தான்.[45] தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பல சிற்றரசர்களை வெற்றி கொண்டவன் தலையாலங்கானம் எனும் இடத்தில் ஏழு அரசர்களுடன் போரிட்டு வெற்றி கண்டவன் என்று வரலாறு கூறுகிறது. இவன் சமணரைப் பேணியவன். இவனைப் பற்றிய செய்திகள் மீனாட்சிபுரம் தாமிழிக் கல்வெட்டுகளால் அறியப்பெறுகின்றன. வானநூல் அறிஞரான நந்தி என்னும் சமணப் பெரியாருக்கு இந்த நெடுஞ்செழியன் மலைக்குகையில் கற்படுக்கைகளைச் சமைத்துக் கொடுத்தான் என்ற செய்தியை இக்கல்வெட்டால் அறிய முடிகிறது.[46] இம்மேற்கோளின்படி பாண்டிய மன்னன் சமண சமயத்தை ஆதரித்தவன் என்பது புலனாகின்றது.

சமணக் கொள்கையில் முக்கியமானது ஆசை கூடாது என்பது. அதன்படி இப்பாண்டிய அரசன் ஆசையற்றவனாக இருந்திருக்கலாம். கெட்ட வழியில் நடக்காமல் ஒழுக்கத்தை கடுமையாகக் கடைப்பிடிப்பவர்கள் சமணக் கொள்கையைப் பின்பற்றுபவர்களாக இருந்துள்ளனர். பாடலில் புலவர் கூறுவதுபோல வாணாசுரனின் செல்வம் கிடைத்தாலும் பிறர் பழி ஏற்காதவன் என்ற கூற்று பாண்டிய மன்னனின் கொள்கைச் சிறப்பைக் காட்ட இத்தொன்மம் பயன்பட்டிருக்கலாம்.

தமிழர் பண்பாட்டின் கருவூலமாக இருப்பது அக இலக்கியங்கள் எனலாம். புற இலக்கியங்கள் அரசருக்கும், வாழ்வியல் நெறிகளுக்கும் வழிகாட்டுகிறது. அக இலக்கியம் களவு பற்றியும், களவு வாழ்க்கையின் நெறிமுறைகள் பற்றியும், கற்பு

வாழ்வு பற்றியும், கற்பு வாழ்வில் ஆடவர், மகளிரின் கடமைகள் பற்றியும் வழிகாட்டுகிறது எனலாம். உலக வாழ்க்கை என்பது இல்லறத்தை தன்மையை நிலைக் களமாகக் கொண்டது. இல்லறம் என்பது கற்பு வாழ்க்கையாகும். இவ்வாழ்க்கையில் ஆணும், பெண்ணும் பின்பற்ற வேண்டிய நெறிகளை இலக்கியம் கூறுகிறது. இச்சங்க இலக்கியங்களில் இடம்பெற்ற அகத்திணை நூல்களின் மூலம் தமிழர் பண்பாட்டை அறிவதோடு, அன்றைய வாழ்வில் நடைபெற்ற நிகழ்வுகளையும் அறியமுடிகிறது எனலாம்.

இந்த அக இலக்கியத்தில் அரசர் தொன்மம் உவமையாக வந்திருப்பது நற்றிணையில் (216) மட்டும் எனலாம். அதுவும் ஒரு பாடலில் மட்டும் இடம்பெற்றுள்ளது. தலைவன் மேல் கொண்ட அன்பால் பரத்தை கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. தலைவனை அடைய முடியாவிடினும், அவர் ஊரில் இருக்கும்போது அவரைக் கண்டு மகிழ்ந்த பரத்தை, தலைவன் ஊரைவிட்டுச் சென்றதற்கு வருந்துகிறாள். கண்ணில் விழுந்த தூசியை கைவிலக்குவது போல தான் கொண்ட துன்பத்தைத் தலைவர் போக்காவிடினும் அவர் இல்லாத ஊர் பெருந்துன்பத்தைச் செய்கிறது. கணவனை இழந்த திருமாவுண்ணி (கண்ணகி) தன் மார்பகத்தை அறுத்து எறிந்தாள். இச்செய்தி கேட்டவர்கள் கேட்ட அளவிலே விட்டுவிடுவர். ஆனால் அவள் மேல் உண்மையான அன்பு உடையவர் மட்டும் அவள் நிலைக்கு வருந்துவார்கள். அதுபோல தலைவன் பிரிவால் தலைவி வருந்தினாலும், தன்னைப் போல துயரம் கொண்டிருக்கமாட்டாள் என்று கூறுவதாகப் பாடல் முடிகிறது. அப்பாடலாவது

***ஏதிலாளன் கவலை கவற்ற***
***ஒரு முலை அறுத்த திருமாவுண்ணிக்***
***கேட்டோர் அனையர் ஆயினும்***
***வேட்டோர் அல்லது பிறர் இன்னாரே*** (நற். 216: 7-10)

இப்பாடலில் கண்ணகியின் தொன்மம் உவமையாக இடம்பெற்றுள்ளது பொருத்தம் எனலாம். ஆனால் ஒரே ஒரு முரண்பாடு கண்ணகியை உவமை காட்டி தலைவிப் பாடுவதாகப் புலவர் கூறவில்லை. ஒரு பரத்தை பாடுகிறாள். கண்ணகியும் தலைவனை இழந்து நிற்கிறாள். பரத்தையிடமும் தலைவன் இருக்கவில்லை. அயலான் செய்த செயலால் கண்ணகி வருத்தம் மேலிட மார்பகத்தை அறுத்து எறிந்தாள். பரத்தையின் வாழ்விலும், விதி செய்த செயலால் தலைவனை இழந்து வருந்தி வாடுகிறாள். பரத்தையின் துயரத்தினை நன்கு விளக்கும் முகமாகப் புலவர் திருமாவுண்ணி தொன்மத்தை உவமையாக எடுத்தாண்டுள்ளார் எனலாம்.

## தொகுப்புரை

இந்த இயலில் இதிகாசத் தொன்மங்கள் புராணத் தொன்மங்கள், பழமரபுக் கதைகள் (அரசர் தொன்மங்கள்) இவை உவமையாகப் பயன்பட்டதின் நோக்கங்கள் ஆராயப்பட்டன. இதிகாசம் எனும் போதும் மகாபாரதமும், இராமாயணமும் ஆகும். இவ்விதிகாசங்களின் நிகழ்ச்சிகள் புற இலக்கியத்திலும் அக இலக்கியத்திலும் உவமையாகப் பயன்பட்டுள்ளது. புற இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவனுக்கும், குறிப்பிட்ட இடத்தில் காணப்படும் காட்சிக்கும் கொடைத் தன்மைக்கும் விளக்கமாக இதிகாசத் தொன்ம உவமைகள் பயன்பட்டுள்ளன. அக இலக்கியத்தில் சூழலுக்கு உவமையாக வந்து களவு வாழ்க்கையின் தன்மையை எடுத்துக்காட்ட இதிகாச உவமைகள் பயன்பட்டுள்ளன.

புராணத்தொன்மங்கள் சிவன், திருமால், முருகன் எனப் பிரிக்கப்பட்டு புற, அக இலக்கியத்திற்கு உவமையாக வந்துள்ளன. இதுவும் அரசருக்கும், களவு வாழ்க்கையில் சூழலுக்கும், தலைவனின் சிறப்பைக்கூறும் நோக்கமாகவும் பயன்பட்டுள்ளது. அதிலும் சிவன் பற்றிய தொன்மங்கள் உவமையாக வரும் பொழுது சிவனின் திருவிளையாடல்களை மையமாகக் கொண்டு உவமையாகப்

பயன்படுகிறது. சிவன் தொன்மம் உவமைகளாக அதிக அளவில் கலித்தொகையிலும், மிகக் குறைந்த அளவாக சிறுபாணாற்றுப்படையிலும் வந்துள்ளன.

அரசனின் சிறப்புக்கும், அவன் பண்புக்கும் சிவனின் முக்கண்ணும், சிவன் முப்புரம் எரித்தலும் (புறநானூற்றில்) உவமையாக வந்துள்ளன. புறநானூற்றைப் பொறுத்தவரை உவமையாகப் பாண்டியன் இலவந்திகைக்கும் அதியமானுக்கும் சிவன் தொன்மம் வந்துள்ளது. கலித்தொகையில் சூழலுக்கும், ஏறு தழுவுதலுக்கும் உவமையாக்கப்பட்டுள்ளது.

திருமால் தொன்மம் உவமையாக மன்னனின் சிறப்புக்கு வந்துள்ளது. பெரும்பாலும் திருமால் தொன்ம உவமைகளில் பலராமன் தொன்மம் அதிகம் வருகிறது. பொதுவாகப் புராணத் தொன்மங்களான சிவன், திருமால், முருகன் ஆகிய தொன்மங்கள் புற இலக்கியத்தில் பாட்டுடைத்தலைவனுக்கும் அக இலக்கியத்தில் சூழலுக்கும் தலைவனுக்கும் உவமையாக வந்துள்ளன. அரசர் தொன்மங்கள் பெரும்பாலும் புற இலக்கியத்தில் உவமையாக வந்துள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. ஒப்பியல் இலக்கியம், க. கைலாசபதி, ப. 109.
2. புதிய கோணம் (இலக்கியக் கட்டுரைகள்), அ.ச. ஞானசம்பந்தன்
3. வியாசர் விருந்து, ராஜாஜி, வீட்டும பருவம், முதற்போர்ச் சருக்கம், வில்லிபாரதம், ராஜகோபாலாச்சாரியார், பக். 18, 19.
4. வில்லிபாரதம், டாக்டர் ஜெகத்ரட்சகன், ப. 308.
5. பக்தி இலக்கியக் கொள்கை, முனைவர் சிவ. மங்கையர்க்கரசி, ப. 73.
6. தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், கார்த்திகேசு சிவத்தம்பி, ப. 44.
7. அபிதான சிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 72.
8. மேலது, ப. 659.
9. சங்க இலக்கியம் ஒரு கண்ணோட்டம், டாக்டர் பு. பாலாஜி, வி.பு. புருஷோத்தமன், ப. 26.
10. அபிதான சிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 825.
11. தசாவதாரம், ஏ.எஸ். வழித்துணை ராமன், ப. 136.
12. பக்தி இலக்கியக் கொள்கை, முனைவர் சிவ. மங்கையர்க்கரசி, ப. 60.
13. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 285.
14. மேலது, ப. 1050.
15. மேலது, ப. 1047.
16. மேலது, ப. 1280.
17. சங்ககாலச் சோழ வேந்தர்கள், க. சண்முகசுந்தரம், ப. 126.

18. பத்துப்பாட்டு மூலமும் உரையும், உரையாசிரியர், பொதுவன் அழகன், ப. 29.

19. மேலது, ப. 294.

20. நீங்களும் சுவையுங்கள், தெ.பொ.மீ., ப. 71.

21. சங்கத் தமிழர் வாழ்வியல், மு. சண்முகம்பிள்ளை, ப. 156.

22. ஸ்ரீகந்தபுராணம், ரா. சரஸ்வதி, ப. 138.

23. தமிழ் இலக்கியக் கொள்கை, க.த. திருநாவுக்கரசு, ப. 64.

24. தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் - அரசியல், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு.

25. மேலது, பக். 192, 193.

26. மேலது, ப. 366.

27. சங்கத் தமிழர் வாழ்வியல், மு. சண்முகம்பிள்ளை, ப. 292.

28. மேலது, பக். 295, 299.

29. செந்தமிழ் அகராதி, ந.சி. கந்தையா, ப. 217.

30. தமிழ்நாட்டு வரலாறு, பேரா. காவ்யா சண்முகசுந்தரம், பக். 790, 791.

31. முருகன் சாட்சி, டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், ப. 100.

32. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 949.

33. தெய்வீக கதைகளும் கலைகளும், எம். நாராயண வேலுப்பிள்ளை, ப.10.

34. பாவம் தீர்க்கும் பாகவதம், பக்த சிரோன்மணி திருமருகல் சிங்கார வேலனார், பக். 165, 166.

35. ஸ்ரீமஹாபாகவதம, வேணுகோபாலாச்சார்யரால் மொழிபெயர்க்கப்பட்டது, ப. 705.

36. பாண்டியர் வரலாறு, டி.வி. சதாசிவ பண்டாரத்தார், ப. 7.

37. சோழர் சரித்திரம், ந.மு. வேங்கடசாமி நாட்டார், பக். 26, 27.

38. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 644.

39. மேலது, ப. 7.

40. மேலது, ப. 1519.

41. சங்க இலக்கியம், சிறுபாணாற்றுப்படை, புலவர் கோ. வில்வபதி, பக். VIII, X.

42. இலக்கிய மணிகள், புலவர் அரங்கநடராசன், ப. 47.

43. தமிழ்நாட்டு வரலாறு, தொகுப்பாசிரியர் பேரா. காவ்யா சண்முகசுந்தரம், ப. 486.

44. சேரர் வரலாறு, அ. சிதம்பரனார், திருமந்திரமணி துடிசைக்கிழார், பக். 68, 69.

45. அபிதானசிந்தாமணி, சிங்காரவேலு முதலியார், ப. 1075.

46. சங்க காலத் தமிழக வரலாறு, மயிலை சீனி வேங்கடசாமி, ப. 157.

# தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள்

காலந்தோறும் மனிதக் கூட்டத்தின் எண்ண வேறுபாட்டுக் கூட்டு முயற்சியில் உருவானது தொன்மம் எனலாம். மனிதனின் சிந்தனை வளத்தின் வீச்சை தொன்மம் கொண்டு அறியலாம். வாய்மொழியாக இருந்த தொன்மம் சங்க இலக்கியத்தின் வழியாகப் படிப்பறிவுள்ள மக்களைச் சேர்ந்தது. ***பழமரபுக் கதைகள் பெரும்பாலும் இல்பொருட் கதைகளே! கற்பனையே அவற்றின் அடிப்படை. ஆயினும் மனிதனது சில சிந்தனைகள், இலட்சியங்கள், நம்பிக்கைகள் ஆகியவற்றின் திரண்ட உருவச் சின்னமாக அவை மிளிர்கின்றன. உலகின் பல பகுதிகளில் வாழும் புராதன மக்களிடத்தும் பழமரபுக் கதைகள் நிலவுகின்றன.***[1] மேற்கண்ட கூற்றுப்படி பழமரபுக் கதைகள் கற்பனை என்று வைத்துக் கொண்டாலும், இவை மனிதருக்குக் கூறும் செய்திகள் எவை எவை என்று ஆராய்ந்து நோக்கினால் வியத்தகு செய்திகள் கிடைக்கப் பெறுகின்றன.

இவ்வியலில் தொன்மம் அறிவுறுத்தும் செய்திகள், தொன்மம் வழி உணரும் அக்கால மனிதர்கள், தொன்மம் வழி அறியும் அறம் இல் செய்திகள், தொன்மம் காட்டும் அறிவியல் செய்திகள் மற்றும் மூவகைத் தொன்மங்களின் (இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள்) பயன்பாட்டு வேறுபாடுகள் ஆகியவை ஆராயப்படுகின்றன.

### தொன்மம் அறிவுறுத்தும் செய்திகள்

வாய்மொழிக் கதைகளாகப் பேசப்பட்ட தொன்மம் மனிதன் அறிவு வளர்ச்சி பெற்று இலக்கியம் படைத்தபோது உத்தியாகப் பயன்பட்டது. இத்தொன்மம் இலக்கியத்தில் ஒரு காட்சியையோ, செய்தியையோ விளக்க முற்படும்பொழுது

எளிதாகப் புரிந்து கொள்வதற்குப் பயன்படுகின்றது. இத்தொன்மத்தின் வழி அன்றைய காலக்கட்டத்தில் நடந்த நிகழ்வுகளைத் தெரிந்து கொள்வதோடு இதன்வழி அறிவுறுத்தப்படும் கருத்துகள் பலவும் தெரிய வருகின்றன. தொன்மம் நல்ல விளைவுகளை ஏற்படுத்தக் கூடிய கருத்துகளை வெளியிடத் துணை செய்கிறது.

சான்றாக நீதியை நிலைநாட்ட இராமாயண, பாரதத் தொன்மங்கள் உதவுகின்றன எனலாம். இராமாயணம் ஒருவனுக்கு ஒருத்தி என்று வாழும் பண்பாட்டை உணர்த்துகிறது. பாரதம், வஞ்சகர் அழிவர் என்று பாண்டவர்க்கு வஞ்சம் இழைத்த கௌரவர் போரில் மாண்டு போன கதையைக் கூறுகிறது. தங்களை வஞ்சகமாய்ச் சூதில் வென்றதால், திரௌபதியைச் சபையில் அவமதித்தார்கள். பீமன் பாரதப் போரிலே துரியோதனன் தொடையைப் பிளந்ததும் துச்சாதனன் நெஞ்சைப் பிளந்த நிகழ்வும் தவறு செய்தால் பின்பு அழிவு ஏற்படும் என்று இலக்கியம் வழி உவமையாக வந்து நினைவூட்டுகின்றது.

மக்களிடையே பக்தி உணர்வு மேலோங்க தொன்மம், ஒரு கருவியாகப் பயன்படுகின்றது எனலாம். கலித்தொகையில் (104: 57-59). "புரிமேற் சென்ற நூற்றுவர் மடங்க" என்ற வரிகளில் தொழூத்தோற்றத்திற்கு உவமையாகப் பாரதத்தின் இடம்பெற்ற குருசேத்திரப் போர்க்களத்தைக் காட்டுகிறார் புலவர். அதுவும் எவ்வாறு சொல்லப்படுகிறது என்றால் நூற்றுவர் தோல்வி அடையுமாறு வரிந்து கட்டப்பெற்ற வலிமை படைத்த வில்லினை உடைய பாண்டவர்கள் போரிட்ட போர்க்களம் போலிருந்தது என்கிறார். தொழூத்தோற்றம் போர்க்களம் போன்று குருதியும், அடிப்பட்ட உடல்களும் கிடந்தன என்றால் படிப்பருக்கு எளிதாய் புரிந்துவிடும். ஆனால் புலவர் குருசேத்திரப் போர்க்களத்தில் யார் தோற்றனர்? யார் வெற்றி பெற்றனர் என்பதைக் கூறி பாரதக் கதையை ஒரு வரியில் புலப்படுத்தியது சிறப்பு.

இதே கலித்தொகையில் (101: 30-32) எருதின் தோற்றத்திற்கு அசுவத்தாமா, சிகண்டி தலையைத் திருகிய தோற்றம் உவமையாக கூறப்படுகிறது. இவ்வுவமை யிலிருந்து அறியப்படும் உண்மைகள் இரண்டு:

ஒன்று: தன் தந்தையைக் கொன்றவனைப் பழி வாங்கிய செயலிலிருந்து தன் தந்தை மேல் அசுவத்தாமன் கொண்டிருந்த பாசம்.

மற்றொன்று அன்றைய காலகட்ட மக்கள் அனைவரும் பாரதக் கதையை அறிந்திருந்தனர். அதனால் தவறு செய்தால் தண்டனைக்கு உள்ளாக வேண்டும் என்று மேலும் மேலும் தொன்மம் கூறும் கருத்தை மக்களிடையே பதிவு செய்ய முயன்றுள்ளனர். **பழமரபுக் கதை அல்லது புராணம் இது ஓர் ஆதிகால அறிவுப்பூர்வமான வெளிப்பாடு எனலாம். இயற்கையைப் பார்த்து அதன் போக்குகளில் சிந்தனைப்பட்டு அவ்வியற்கையை விளக்கும் நோக்கத்தில் வெளிப்படுவது எனலாம். இயற்கைக்கும் மனிதனுக்கும் உள்ள அறிவுத் தொடர்பில் உருவாகும் புராணங்கள் கால மாற்றங்களுக்கேற்ப சடங்குகளுடன் நீதி விளக்கங்களுடன் பெருகிவிட்டன எனலாம்.**[2] இவ்வாறு பெருகிய தொன்மம் வெறும் உவமையாக மட்டுமே வருவதில்லை. உவமையாகப் பயன்படுத்திய அக்கால மக்களின் ஆழ்மன உணர்வுகள் இவை என்று கூறலாம்.

சிறுபாணாற்றுப்படையில் நல்லியக்கோடனின் கொடைச்சிறப்பைக் கூற, கடையேழு வள்ளல்களை உவமையாகக் கூறியதன் மூலமாக அறிவுறுத்தும் செய்திகளாவன:

அரசன் வீரனாக மட்டுமல்ல கொடைக்குணத்துடன் விளங்க வேண்டும் என்றும் அக்கால அரசர்களில் பெரும்பான்மையினர் அவ்வாறே நடந்துள்ளனர் என்பதும் புலனாகிறது.

உயர்திணையான மனிதருக்கு மட்டுமல்லாது அனைத்து உயிர்களுக்கும் அஃறிணைப் பொருள்களுக்கும்கூட உதவ வேண்டும் என அறிவுறுத்தும்பொருட்டு பேகன் மயிலுக்குப் போர்வை கொடுத்ததும், முல்லைக்குப் பாரி தேர் ஈந்ததும்

கூறப்படுகின்றன எனலாம். அதுமட்டுமல்லாது தன்னலமற்ற குணம்வேண்டுமென அதியமான் ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்தது தொன்மம்வழி அறிவுறுத்தப்படுகின்றது.

மகளிருக்குக் கற்பு இன்றியமையாதது என அறிவுறுத்தும்பொருட்டு அகலிகைத் தொன்மம் பரிபாடலில் (9: 50) செய்தியாக வந்துள்ளது. கற்பின் சிறப்பான சான்றாகச் சீதையும், அக்கற்பு தவறினால் ஏற்படும் இன்னல்களின் குறியீடாக அகலிகையும் தொன்மமாக இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளனர். அகலிகைத் தொன்மத்தில் அகலிகையுடன் இந்திரன் தொடர்புபடுத்தி காட்டப்படுகிறான். சங்ககாலத்திலும், சிலப்பதிகார காலத்திலும் இந்திர வழிபாடு இருந்துள்ளது என இலக்கிய வழி அறியலாம். ஆனால் அதன்பிறகு இந்திர வழிபாடு வழக்கொழிந்து போனதற்குக் காரணம் அகலிகைத் தொன்மத்தின் பாதிப்பாக இருந்திருக்கலாம். அதனால் இந்திரன் கடவுள் நிலையிலிருந்து கீழிறக்கப் பட்டிருக்கலாம். இதன்மூலம் மனிதர்களின் மன ஓட்டம் தெளிவாகிறது. மனித வாழ்க்கை வளத்திற்கு நலம்சேர்ப்பது விஞ்ஞான அறிவு என்றால், வாழ்க்கை நலத்திற்கு உதவுவது மெய்ஞ்ஞான உணர்வாகும். இம்மெய்ஞ்ஞான உணர்வை வழுவாது உண்டாக்குவது தொன்மத்தின் தன்மையாகும். மனிதன் வழிபாடு மூலமே மெய்ஞ்ஞானத்தை அடைய முடியும் என்பது ஒரு முறை. அவ்வழிபாட்டின் வழியே மனிதன் மெய்ஞ்ஞான உணர்வை நோக்கி நகருகிறான்.

தெய்வ நம்பிக்கை மனிதனைத் தவறு இழைப்பதிலிருந்து தடுத்துவிடும். இத்தெய்வ நம்பிக்கையை வளர்க்க கடவுளர் தொன்மம் உதவுகின்றது. சிவன், திரிபுரம் எரித்தமையும், முருகன் சூரபத்மனை அழித்தமையும் ஆகும், தீயவற்றை அழிப்பது தெய்வ அவதாரத்திற்கான காரணம் என்பதாகப் புராணங்கள் கூறுகின்றன. மனிதனுக்குத் துன்பம் நேரும்போது தெய்வம் துணை வரும் என்பதைக் கூறும் காரணிகளாகத் தொன்மம் விளங்குவது கீழ்க்கண்டவாறு பட்டியலிடப்படுகிறது.

1. விடத்தைத் தான் உண்டு சிவன் பிறரைக் காத்தல்.

2. மார்க்கண்டேயனைக் காக்கும் பொருட்டு சிவன் கூற்றுவனைக் காய்தல் எ.கா. கலித்தொகைப் (101: 24-26) பாடல்.

3. முருகன் சூரனை வென்று அதன் பொருட்டு தர்மத்தை நிலைநாட்டுதல்.

4. திருமால் அவுணர் ஒளித்த சூரியனை மீட்டல் (எ.கா.) புறநானூறு (174: 1-5).

5. திருமால் ஆநிரைகள் மழையிலிருந்து காப்பாற்ற மலையைக் குடையாகப் பிடித்தல்

6. திருமால் பிரகலாதனைக் காக்க நரசிம்ம அவதாரம் எடுத்தல்

போன்றவற்றைக் குறிப்பிடலாம். இதில் சங்க இலக்கியத்தில் பேசப்படும் தொன்மங்களுடைய கடவுளர்களாகச் சிவன், முருகன், திருமால் குறிப்பிடப்படு கின்றனர். மனிதர்களின் மனத்தில் தெய்வீக ஆற்றலைப் பதிய வைக்க இது போன்ற புராணங்கள் உதவுகின்றன. அதோடு கடவுளர்களும் மனிதனைப் போன்று வாழ்ந்ததை விளக்கும் சான்றுகளும் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. அவை:

1. மனிதர்கள் போலவே தெய்வத்திற்கும் பகைவர் உண்டு. அதற்காகப் போரிட்டு வென்ற நிகழ்வு குறிப்பிடப்படுகிறது. எடுத்துக்காட்டாக சூரன்- முருகன் போரிட்டது, திருமால் மல்லரைக் கொன்றது, அரசர்குலத்தை அறுத்த (திருமாலின் அவதாரமான) பரசுராம அவதாரம், திருமால் குதிரைமுக அரக்கனை அழித்தது ஆகியவை ஆகும்.

2. மனிதரைப் போல கடவுளர்களுக்கும் மனைவி இருந்ததாகத் தொன்மம் சுட்டுகின்றது. எடுத்துக்காட்டு

   1. முருகன் - தெய்வானை - வள்ளி திருமணச்செய்தி

   2. சிவன் - உமை பற்றிய செய்தி

   3. திருமால் - திருமகள் பற்றிய செய்தி

3. மனிதர் பிறப்புபோல கடவுளர் பிறப்பு அமைந்திருத்தல். எடுத்துக்காட்டு:

1. முருகன் பிறப்பு - பல இடங்களில் இலக்கியத்தில் கூறப்படுகின்றது.

2. திருமால் பிறப்பு சில அவதாரங்களில் குறிப்பிடப்படுகின்றது.

உலக வாழ்'க்கை இயல்புகளைப் போன்று தெய்வ வாழ்க்கைச் சுட்டப்படும் காரணத்தை ஆராய்ந்தால், மனிதனைக் கடவுளர்களுக்கு நெருக்கமாக கொண்டு செல்லவே மனித வாழ்வைப் போல கடவுள் வாழ்வும் சித்தரிக்கப்படுகிறது. கூடவே கடவுளைப் போல தீமையை எதிர்க்கவும், பிற உயிர்களிடத்தில் அன்பு செய்யவும் மனிதனுக்குக் கற்றுத்தர மனித வாழ்வைப் போன்று கடவுள் வாழக்கைச் சித்தரிக்கப்படுகிறது எனலாம். இவ்வாறு வாழும் மனிதன் கடவுளுக்கு ஒப்பாவான் என மறைமுகமாகக் கூறுவதற்குக் கூட மனிதர் வாழ்வுபோல கடவுள் வாழ்வும் சித்தரிக்கப்பட்டிருக்கலாம். புராணம் கூறும் கருத்துகளை கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.




மனிதனின் அச்சஉணர்வு வழிபாடு ஏற்படக் காரணமாகியது. இயற்கை யானது இடி, மழை, அலைகடல் புயல் என்பன மனிதனுக்குப் பய உணர்வை உண்டாக்கின. மனிதன் தன்னைக் காத்துக் கொள்ள தன்னைவிட ஆற்றல் கொண்ட இயற்கையை வழிபடத் தொடங்கினான் எனலாம். இவ்வாறாக

தொடங்கிய இயற்கை வழிபாடு பின்பு மரங்களையும், நாகத்தையும் வணங்க ஆரம்பித்த பழக்கம் உருவ வழிபாட்டிற்கு வித்திட்டது என்று கூறலாம். புராணங்கள் தோன்றி கடவுளர் கதைகளையும், அவர்கள் பற்றிய செய்திகளையும் தந்தன. இப்படியாகச் சைவம், வைணவம் என்ற பிரிவுகள் ஏற்பட்டன. புராணத் தொன்மத்தைப் பொறுத்தவரை உண்மையோ? புனையப்பட்டதோ என்பது ஒருபுறமிருக்க, இப்புராணங்கள் மனிதனுக்குத் தன்னம்பிக்கையை வளர்க்க உதவி செய்கின்றன எனலாம். புராணத் தொன்மங்கள் செய்தியாகவும் (பரிபாடல்) வந்து கடவுள் பற்றிய கருத்துகளை அறிவுறுத்துகின்றன. இலக்கியத்தின் மூலம் கூறப்படும் கடவுளர் (சிவன், திருமால், முருகன்) தொன்மங்களில் இம்மூன்று கடவுளர்களான சிவன், திருமால், முருகன் போன்றவர்களின் தொன்மச் செய்திகளில் அதிகமான செய்திகளாக வருவனவற்றை சற்றேறக்குறைய எண்ணிக்கையில் காட்டப்படுகின்றது. இந்த எண்ணிக்கை பேரா. வே. அண்ணாமலை அவர்களின் “சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம்” என்ற நூலை அடிப்படையாகக் கொண்டு அமைந்த எண்ணிக்கையாகும்.

***சிவன் பற்றியவை***

*முப்புரம் எரித்த தொன்மம் - 9 இடங்களில் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.*

*மிடறு - 10 இடங்களில் இலக்கியத்தில் வந்துள்ளன.*

*சடை - 8 இடங்களில் இடம்பெற்றுள்ளன.*

***திருமால் பற்றியவை***

*அடிமுடிச்சிறப்பு - 13 இடங்களில் வந்துள்ளன.*

*மார்பு - 15 இடங்களில் பேசப்படுகின்றன.*

*நேமி - 14 இடங்களில் வந்துள்ளன.*

*பலராமன் - 12 இடங்களில் வருகின்றன.*

***முருகன் பற்றியவை***

*வேல் - 35 இடங்களில் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.*

வேள் (முருகன்) - 20 இடங்களில் வந்துள்ளன

முருகன் - 27 இடங்களில் வந்துள்ளன

முருகன் பிறப்பு - 12 இடங்களில் வந்துள்ளன

சூரனை வெல்லுதல் - 20 இடங்களில் வந்துள்ளன

இதிலிருந்து அறியப்படுபவை யாதெனின் சங்ககாலத்தில் முருக வழிபாடு அதிகமிருந்துள்ளது. மற்ற கடவுளர்களோடு ஒப்பிடும்பொழுது அதிகமாகப் பேசப்பட்ட கடவுளர் செய்திகளில் முருகன் பற்றிய செய்திகள் அதிகமா இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

சிவன், திருமால் அங்கம் பற்றிய செய்திகள் போன்று முருகனுக்கு அதிகமாகப் பேசப்படவில்லை. சிவ வழிபாடு தொன்மையான வழிபாடாக இருந்தாலும் சிவன் பற்றி அதிகமாகப் பேசப்பட்ட செய்திகளாக மூன்றைத் தான் குறிப்பிட முடிகின்றது. இம்மூன்று கடவுளர்களின் முக்கிய தொன்மமாக முப்புரம் எரித்தல் (சிவன்), பலராமன் அவதாரம் (திருமால்), சூரனை வெல்லுதல் (முருகன்) போன்றவை இலக்கியத்தில் பேசப்படுகின்றது. **மனிதனது விருப்பத்திற்குத் தகுந்தவாறு, அவனைப் போன்றே ஒத்தத் தன்மையோடும் ஆனால் அதே நேரத்தில் இயற்கையை மிஞ்சும் ஆற்றலோடும் படைக்கப்பட்டிருக்கும் தொன்மத்தில் வரும் கதைமாந்தர்களால் மனிதனோடு பகைமை கொண்டாடும் இயற்கையினும் மேலான எல்லாம் வல்ல சக்தி நிறைந்த தனிப்பட்ட ஒரு சமூகத்தைப் படிப்படியாகக் காட்சியளவில் காட்டிவிட முடிகிறது. இந்த உண்மையில்தான் தொன்மத்தில் (Myth) வரும் கடவுள் அல்லது வீரத் தலைவனின் இன்றியமையாமை அடங்கியிருக்கிறது.**[3] இக்கூற்றுப்படி தொன்ம இலக்கியத்தின் நோக்கமாக அறிவுறுத்தலும், மகிழ்வித்தலுமாய் இரண்டைக் கூறலாம். அறிவுறுத்தும் செய்தி மகிழ்வைத் தருவதற்குத் தொன்மம் ஒரு கருவியாய்ப் பயன்படுகின்றது. மகிழ்விப்பதோடு பல

அரிய செய்திகளை, வாழ்வியல் உண்மைகளைத் தொன்மம் கூறுகிறது என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

**தொன்ம உவமை வழி உணரும் அக்கால மனிதர்கள்**

தொன்ம உவமைகள் கருத்துகளை எளிதாகப் புரிந்துகொள்ள உபயோகப் படுத்தப்படுகின்றன. இன்றும் வாழ்வியல் பேச்சு வழக்கில் கூடத் தொன்ம உவமை தொடர்ந்து கொண்டிருக்கிறது எனலாம். இதற்குச் சான்றாகக் கீழ்கண்டவாறு கூறப்படுகின்றன.

| பேச்சு வழக்கு | தொன்மம் |
|---|---|
| 1. நீ பெரிய அரிச்சந்திரன் (உண்மை பேசுபவரைப் பார்த்து) | அரிச்சந்திரன் |
| 2. தூக்கத்தில் கும்பகர்ணன் (அதிகம் தூங்குபவரைப் பார்த்து) | கும்பகர்ணன் |
| 3. பெரிய பாரி வள்ளலோ (பொருள் தருபவரைப் பார்த்து) | பாரி |
| 4. அவன் சகுனி வேலை பார்ப்பான் (சூழ்ச்சி செய்பவரைப் பார்த்து) | சகுனி |

இப்படியாக மனித வாழ்க்கையோடு பிணைந்துள்ள தொன்மம் சங்க இலக்கியத்தில் உவமையாக வந்த வழியும், செய்தியாக வந்த வழியும் பலதரப்பட்ட மனிதர்களைப் பற்றியும், தெய்வம் பற்றியும் அறிவதற்கு வழி செய்கிறது. சான்றாக, நற்றிணையில் (216) ஒரு பாடலில் தலைவனைப் பிரிந்த பரத்தை துயரற்றுக் கூறியதைக் குறிப்பிடலாம். அயலான் ஒருவன் செய்த செயலால் தோன்றிய கவலை வருத்திட, மார்பகம் ஒன்றனை அறுத்த திருமாவுண்ணியின் துயரம் பற்றிக் கேட்டறிந்தவர்களைவிட, அவளிடம் உண்மையான அன்புடையவரே வருந்துவர். அங்ஙனமே தலைவன் பிரிவால் தலைவி வருந்தினும் தான் படும் துயரம் அவள்

கொண்டிருக்க முடியாது என்பதாக உள்ள பாடலில் திருமாவுண்ணி என்ற பெயரில் கண்ணகி குறிப்பிடப்படுகிறாள். சிலப்பதிகாரக் காலத்திற்கு முன்னரே சங்க இலக்கியத்தில் கண்ணகித் தொன்மம் பேசப்பட்டுள்ளது.

முன்னோருக்குப் பெருஞ்சோறு படைத்த உதியன் சேரலாதனை அகநானூறு கூறுகிறது. புறநானூறு உதியன் பாரதப் போரில் ஈடுபட்டிருந்த படை வீரர்களுக்கு உணவளித்தான் என்று கூறுகிறது. இரு அரசர்களும் ஒருவர் என்றும், வெவ் வேறானவர் என்றும் கருத்துகள் உள்ளன என்றாலும் இவ்விரு இலக்கியங் களிலிருந்தும் தமிழ்நாட்டு மன்னர்கள் பிறருக்கு உணவளித்தும், இறந்த முன்னோர்களின் ஆத்மாவைக் குளிரவைக்க படையிலிட்டனர் எனவும் அறிய முடிகிறது. அரசர்களும் சடங்கு சம்பிரதாயங்களை முறையாகக் கடைபிடித்தனர் என்பது புலப்படுகிறது. அரசனின் கடமைகளில் ஒன்றாக பிறர் பசியைப் போக்கியது இத்தொன்ம மூலம் அறியமுடிகிறது. சான்றாக சிறுபாணாற்றுப் படையில் நல்லியக்கோடன் அவ்வாறு வள்ளல்களுக்கு இணையான கொடைவள்ளலாக இருந்துள்ளான்.

அதேபோல தன்னலமற்ற போக்கு அரசர்களிடமிருந்துள்ளதற்கு அதியமான் ஔவை தொன்மம் ஒரு சான்றாகும். தொன்மம் வெளிப்பட உவமையைக் கருவியாகக் கொண்டிருந்துள்ளனர் அக்காலக் கவிஞர்கள். அதோடு பக்தி நெறியை வளர்க்க இலக்கியத்தின் மூலம் கடவுளர் தொன்மம் வழிவகைச் செய்கிறது. இதற்கு எடுத்துக்காட்டாகப் பரிபாடலில் இடம்பெற்ற கடவுளர் செய்திகளைக் கூறலாம். அப்பரிபாடலில் சிவன் தொன்மம், முருகன் தொன்மம், திருமால் தொன்மம் கூறப்பட்டுள்ளன. இதன்மூலும் அதற்கு இணையாக சைவமும் வைணவமும் இருந்துள்ளன என்பது தெரியவருகிறது. அன்றைய சமுதாயத்தினரின் வெறியாடல் போன்ற நம்பிக்கைகளை நிச்சயிக்கும் வகையில் தொன்மம் பெரும்பங்கு வகிக்கின்றது. நடந்த செய்தியாக மக்களுக்குக் கொண்டு செல்லும்பொழுது அன்று நடந்த வரலாறு தெரியவருகின்றது. எடுத்துக்காட்டாக

பாண்டியன் இலவந்திகை பள்ளி துஞ்சிய நன்மாறன் தன்னை நாடி வந்த புலவருக்குப் பரிசில் கொடாது போயினான். புலவருக்கு வரையாது கொடுத்த வேந்தரிடையே பரிசில் கொடாத மன்னரும் இருந்துள்ளனர் என்பதற்குப் பாண்டியன் இலவந்திகை ஒரு சான்றாவான். இதுபோன்ற செய்திகள் பலவற்றைத் தொன்மம் மூலம் அறியமுடிகிறது.

புராணங்கள் பக்தி உணர்வை மக்கள் மனதில் மேலும் வளர்க்க உதவுகின்றன. மதப்பாகுபாடுகள் புராணக் காலத்தில் இல்லை என்று கூறலாம். பழங்காலத்தில் பக்திநெறியை வளர்த்தலும் அறம், பொருள், இனபம், வீடு ஆகியவற்றை அடைதலுமே படைக்கப்பட்ட மனித உயிர்களின் நோக்கமாக இருந்துள்ளது. இன்றளவும் இறை பக்தி அழியாமல் இருப்பதற்கு அன்றைய தொன்மங்களே காரணம் எனலாம். இலக்கியம் மூலமாக மேலும் மேலும் தொன்மச் செய்திகள் மக்கள் மனதில் பதிவு செய்யப்பட்டதால் மரபு ரீதியாகத் தொன்மம் மனித வாழ்வோடு பிணைந்துள்ளது. ஆகவே இன்றைய காலகட்டத்திலும் மக்கள் ஆன்மீகப் பாதையிலிருந்து விலகாமல் வாழ்கின்றனர் எனலாம்.

பக்தி இலக்கியம் பல்லவர்காலப் பகுதியிலே செழித்து வளர்ந்தது என வரலாறு கூறுகிறது. இந்து மதம், சமண பௌத்த ஆதிக்கத்தை ஒடுக்க எழுந்ததாகக் கூறப்படுகிறது. இந்து மதத்தின் காரணிகளாக இதிகாசம் புராணம் பயன்பட்டன எனலாம். இதன் விளைவாக சமணம், பௌத்தம் மறைந்தன. வேற்று மதம் இல்லாது போனாலும் சைவம், வைணவம் என இரு பிரிவுகளாக உண்டாயின. புராணங்கள் தோன்றிய இடம் தமிழகம் என்பதற்குச் சான்றாக, ***புராணம் என்பது இந்திய மண்ணில் ஒரு முக்கியமான நூல்வகை. புராண எழுத்துக்கு முன்னோடி நிலம் தமிழ் நிலமே. தமிழில் இருந்த மிகப் பழைய புராணங்களே பின்னாளில் வடமொழியில் பாடப்பட்டன.***[4] மேற்கண்ட இக்கூற்றுப்படி புராணங்களுக்கு தமிழ்மொழியே முன்னோடி என்பதால், தமிழனின் பரிணாம வளர்ச்சியில் தொன்மம் பெரும்பங்கு வகித்துள்ளது எனலாம். புராணங்கள், இதிகாசங்கள், சமய நூல்களாக இருந்தாலும் மனிதர்கள் பற்றியும் தேவர், கடவுளர்

பற்றியும் கூறுகின்ற தொன்ம நூல்களாகும். இத்தொன்மம் கற்பனை என்றாலும் அது மனிதனுக்குச் சிறப்புச் சேர்க்கிறது. விலங்கிலிருந்து வந்த மனிதனின் அறிவு வளர்ச்சியின் ஆதாரம் வாய்மொழியாக வந்த இத்தொன்மமாகும் எனலாம்.

சங்க இலக்கியத்தில் காணும் தொன்மம் வழி உணரப்படும் மனிதர்களும் அவர்களின் பண்புகளும் கீழே பட்டியலில் இடப்படுகின்றன.

| வ. எண் | தொன்மம் காட்டும் மனிதர்கள் | அறியும் பண்புகள் |
|---|---|---|
| 1. | யயாதி | மனித வாழ்க்கை முழுதும் சின்றின்பம் என்பது துன்பத்தைத் தரும் |
| 2. | இராவணன் | ஆணவம் அல்லல் தரும் |
| 3. | துரியோதனன் | பேராசை அழிவைத் தரும் |
| 4. | அகலிகை | கற்புநெறி தவறக்கூடாது |
| 5. | வீமன் | பலம் மனிதனை எதிரிகளிடமிருந்து காக்கும் |
| 6. | உதியன் சேரலாதன் | மன்னனின் கடமை உணவளித்தல். மன்னனே என்றாலும் பித்ரு கடன் செய்யும் கடமை. |
| 7. | சிபி மன்னன் | உயிர்மேல் பரிவு காட்டுதல் |
| 8. | தூங்கெயில் எறிந்த தொடி தோட்செம்பியன் | அரசர்கள் வானுலகில்கூட வலிமை உடையவர்களாக இருந்துள்ளனர் |
| 9. | கடையேழு வள்ளல்கள் | கொடைக்குணம் |
| 10. | அசுவத்தாமன் | தந்தைமேல் கொண்ட அன்பு |
| 11. | துச்சாதனன் | அண்ணன் போன்று அநீதி இழைத்து அழிந்தவன் |
| 12. | அர்ச்சுனன் | விற்போரில் வல்லவன் |
| 13. | திருமாவுண்ணி | கற்பிற்கு ஓர் உதாரணம் |
| 14. | திரையன் | இறைவனுக்கு ஒப்பாகக் கூறப்பட்டவன் |

| வ. எண் | தொன்மம் காட்டும் மனிதர்கள் | அறியும் பண்புகள் |
|---|---|---|
| 15. | அகுதை (பொன்திகிரி) | அன்றைய காலக்கட்டத்திலும் மூடநம்பிக்கையை நம்பினர் என்பது தெரிகிறது. |
| 16. | இராமன் | பொறுமை |
| 17. | சீதை | வலிமையான மனம் |
| 18. | வாணன் | சூரர்களில் அதிக செல்வம் உடையவன் |
| 19. | பாண்டியன் | நீதிவழுவா நெறிமுறையுடன் அவப்பெயருக்கு அஞ்சுபவன் |
| 20. | சகரர் | விடாமுயற்சி |
| 21. | சிவன் | தீயவற்றை தெய்வம் ஏற்காது; நல்லவர்களுக்கேத் துணை நிற்கும். |
| 22. | திருமால் | |
| 23. | முருகன் | |
| 24. | பலராமர் | கடவுளுக்கு உறவாகக் கூறப்பட்டவர் |
| 25. | கம்சன் | கடவுளையே அழிக்க நினைத்த குணம் |
| 26. | மாபலி | செருக்கு |
| 27. | பரசுராமர் | அரசர்களை அழித்தவர் தந்தையின் சொல் தட்டாத பண்பு |
| 28. | அர்த்தநாரீஸ்வரர் | பெண்ணிற்குச் சம பதவி கொடுத்த பண்பு |
| 29. | மார்க்கண்டேயர் | உண்மையான பக்தி |
| 30. | மணிமிடற்றோன் | தன்னலமற்ற குணம் |

ஆகியவை தொன்மம் வழி அறியும் பாத்திரங்களாகவும், அவர்கள் வழி அறியும் பண்புகளாகவும் வாழ்க்கைக்குத் தேவையான பாடமாகவும் எடுத்துக்கொள்ளலாம்.

சங்ககாலச் சமுதாயத்தின் நடைமுறைகளைக் காட்டும் காலக் கண்ணாடியாகத் தொன்மம் இருந்துள்ளது எனலாம். அன்றைய காலக்கட்டத்தில்

மத இனப்பாகுபாடு மனிதரிடையே இல்லாது இருந்துள்ளதைத் தொன்மம் மூலம் அறிய முடிகிறது. இந்து மதத்தை நிலைநிறுத்தும் பணியைப் புராணத் தொன்மங்கள் செய்தன என்றால் பழங்காலத்தில் இந்து மதமே மக்களால் பின்பற்றப்பட்டிருக்க வேண்டும்.

தொன்மத்தைப் பொறுத்தவரை சீரிய கருத்துகளையும், கடவுள் பற்றிய செய்திகளைக் கூறினாலும், சமய பிரிவினைக்கு இடமில்லாது இருந்துள்ளதை, சங்க இலக்கியம் மூலம் அறியமுடிகிறது. சிவன், முருகன், திருமால் வழிபாட்டுடன் கொற்றவை எனும் பெண் தெய்வ வழிபாடும் இருந்துள்ளது. ஆனால் மற்ற தெய்வங்களிலிருந்து கொற்றவை வழிபாடு சற்று வேறுபட்டுள்ளது. இக்கொற்றவை வழிபாடு போரில் வெற்றி பெறுவதற்கும், போரில் வென்றதுக்குமான வழிபாடாக இருந்துள்ளது.

**அயிரை பரைஇ ஆற்றல்சால் முன்போடு**

(பதிற்றுப். மூன்றாம் பத்து பதிகம். 8)

என்று பதிற்றுப்பத்தில் இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் அயிரை மலையிலுள்ள கொற்றவைக் கடவுளைத் தன் குலத்துள்ளார் செய்து வந்த வழிபாடு கெடாமல் தானும் வழிபட்டு ஆற்றல்மிக்க வலிமையோடு ஆண்டான் என பாலைக் கௌதமனார் பாடுகிறார்.

**பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித் தாங்கு** (கலி. 89: 8)

என்று கலித்தொகை கூறுகின்றது. இப்பாடலில் தலைவன், தலைவிக்குள் ஊடல் நிகழும் பொழுது தலைவி கூற்றாகக் கொற்றவைக்குப் பேய் நொடி சொல்வது போல நின் வஞ்சக வார்த்தைகளை வீணாகச் சொல்லி வருத்தாதே கொள் என்கிறாள் தலைவி. அக்காலத்தில் கொற்றவைக்குப் பேய் நொடி சொல்லுதல் என்ற ஒரு வழக்கம் இருந்துள்ளது அறியலாம். நொடி என்பது, ***இரகசியமாகச் சொல்லல், விடுகதை சொல்லல்*** போன்ற அர்த்தங்களைக் கொண்டுள்ளன.

ஆக கொற்றவை வழிபாடு இருந்துள்ளதை இந்த இரு சான்றுகள் மூலம் அறிய முடிகிறது. போர் விரைவில் முடிய கொற்றவையை வேண்டுதல் நெடுநல்வாடை (166-168)யில் இடம்பெற்றுள்ளது. இதுதவிர பெண் தெய்வ வழிபாடு அக்காலத்தில் இருக்கவில்லை என்ற செய்தி புலப்படுகிறது.

மற்ற தெய்வவ வழிபாடுகளில் (சிவன், திருமால், முருகன்) கொற்றவை வழிபாடு பின்வருங்காலங்களில் அத்துணைச் சிறப்புப் பெறாமல் போனதற்குக் கொற்றவை பற்றிய புராணக் கதைகளோ, செய்திகளோ மக்கள் மத்தியில பதிவு செய்யப்படாதது காரணமாக இருக்கலாம். இலக்கியம் மூலம் அறியமுடிகிறது. அதனால் கொற்றவை வழிபாடு குறைந்து போய் பிற்காலங்களில் கொற்றவை காளி என்ற பெயரில் காவல் தெய்வமாக ஆக்கப்பட்டிருக்கலாம்.

இராமாயணத்தில் ஒரு காட்சி இராவணனின் தங்கையான சூர்ப்பனகையின் மூக்கை இலக்குவன் அறுத்தெரிந்தான். இதைக் கம்பர்,

***இளையானே இவளை நெடுஞ்செவியொடு மூக்கு அரிந்தான்*** (116)

என்பார். தொல்காப்பியம் மெய்ப்பாட்டியலில் ஒன்றாக உறுப்பறை (அங்கத்தை அறுத்தல்) இடம்பெற்றுள்ளது. ஒருவரை அவமானப்படுத்தவும், தவறு செய்தவரைத் தண்டிக்கவும் உறுப்பை அறுத்தல் என்ற நிகழ்வு நடைபெற்றிருக் கிறது. இராமன் மேல் காமமுற்று அவனைத் தன் மணாளன் ஆக்கிக் கொள்ள சூர்ப்பனகை பேராசை கொண்டாள். அதனாலேயே இலக்குவனால் மூக்கு அறுக்கப்பட்டு தண்டிக்கப்பட்டாள் என இராமாயணம் கூறுகிறது. இவ்வழக்கம் பிற்காலத்தில் அரசர்களிடையேயும் இருந்துள்ளது. ***1063–1070களில் ஆண்ட முதலாம் வீரராசேந்திரன் பற்றிய மெய்க்கீர்த்தி செங்கை மாவட்ட மணிமங்கலம் கோவிலில் உள்ளது. இதில் வீரராசேந்ரின் மேலைச் சாளுக்கியரோடு போர் புரிந்தான். தன்னை எதிர்த்த ஆகவமல்லனின் சேனையை அழித்ததோடு அவனது சேனாதிபதியாகிய சாமுண்டராயன் தலையை அறுத்தான். அவனது மகளாகிய இருகையன் தேவி நாகலை***

***என்பவளை முகத்தோடு மூக்கு வேறாக்கினான்.[6]*** இவ்வாறாகத் தொன்மம் சில நிகழ்வுகளுக்குக் காரணமாக இருந்துள்ளது என்பதற்கு மேற்கண்ட செய்தி சான்றாகும்.

### தொன்மம் வழி அறம்இல் செய்திகள்

'அறம்' என்பது மனிதனுக்கு மனிதன், காலத்திற்குக் காலம் மாறுபடக் கூடியது. அன்றைய காலகட்டத்தில் அறமாகப்பட்டது இன்று அறம்இல் நிகழ்வாகத் தோன்றும். சங்க இலக்கியத்தில் தொன்மம் உவமையாக வந்தவற்றில் சில அன்று அறமாக இருந்தவை இன்று மாறுபட்ட கருத்தாக தோன்றுவதைத் தொன்மம்வழி அறம்இல் செய்திகளாக இத்தலைப்பின் கீழப் பட்டியலிட்டுக் காட்டப்படுகின்றன.

மனிதனைப் பக்தி நெறிக்குள் கூட்டிவரத் தொன்மம் பெரிதும் உதவியது எனலாம். தொன்மம் கூறும் அறக்கருத்துகள் மனிதனைப் பண்படுத்தியது என்று கூற முடியும். தொன்மத்தை ஆராய ஆராயப் பல கருத்துகள் கிட்டுகின்றன. மனித வாழ்விலிருந்து தொன்மத்தைப் பிரிக்க இயலாது. ***தொன்மம் அற்ற ஒரு நடைமுறை வாழ்வில் இக்கால மனிதன் ஆர்வம் கொள்வதானது சமாளிக்க முடியாத அளவிற்குக் குறிக்கோள் அற்ற குழப்பமான வாழ்விற்கு இட்டுச் செல்லும் என்று தொல்படிவத் திறனாய்வாளன் கருதுகிறான். கிரேக்கத் தொன்மங்களில் மக்களுக்கிருந்த நம்பிக்கை தகர்க்கப்பட்டதால் கிரேக்க கலாச்சாரமே அழிந்துபட்டது. தொன்மச் சூழலே ஒரு நாகரிகத்தைப் பாதுகாக்கவல்லது.[7]*** இக்கூற்றுப்படி தொன்மம் சமுதாயத்திற்கு இன்றியமை யாதது என அறிய முடிகிறது. தொன்மம் மனிதகுலத்திற்கு பண்பாட்டைப் புகட்டும் பெட்டகமாய் இருந்துள்ளது. எனினும் சில தொன்மங்கள் இன்றைய கால கட்டத்தில் மனதில் ஏற்படுத்தும் வேறுபட்ட உணர்வுகளை கீழ்க்கண்டவாறு விளக்கத்துடன் காணலாம்.

1. பாரதப் போரில் தன் தந்தையைக் கொன்ற சிகண்டியின் தலையை அசுவத்தாமன் திருகிக் கொன்றான் என்ற தொன்மம் முல்லைக்கலியில் (101:

30-32) வந்துள்ளது. இத்தொன்மம் ஏறுதழுவுதல் காட்சிக்கு எருதின் சீற்றத்திற்குப் பொருத்தமான உவமையாக வந்துள்ளது. எருதின் சீற்றம் அசுவத்தாமன் கோபத்திற்கு உவமையாக வந்தாலும் அசுவத்தாமன் செயல் நியாயத்திற்குப் புறம்பாகத் தோன்றுகிறது எனலாம். இரவில் தூங்கிக் கொண்டிருக்கும் சிகண்டியின் மீது திடீர்த் தாக்குதல் நடத்தி அவனைக் கொன்றது அறமற்ற செயலாகத் தோன்றுகிறது. அக்காலத்தில் தந்தையைக் கொன்றதால் மகனுக்கு ஏற்படும் சினம் நியாயம், அநியாயம் பார்க்காமல் சிகண்டி தலையைத் துண்டித்தது நியாயமான ஒன்றாக இருந்துள்ளது. எதிரி அறியாவேளையில் அவனைத் தாக்குவது வீரனுக்கு அழகல்ல என்றாலும், அறத்திற்கு மாறுபாடாக இந்நிகழ்வு நடந்துள்ளது.

இதேபோன்று வீமன் தொன்மம் (கலி: 52: 1-5) என்னவென்றால் பாரதப் போர்க்களத்தில் வீமன் - துரியோதனனின் போர் நடக்கின்றது. காட்டில் நடக்கும் யானை - புலி சண்டையில் மோதிக் கொண்டதற்கு மேற்கண்ட பாரதப் போர்க்கட்சி உவமையாகக் கூறப்படுகின்றது. துச்சாதனனின் நெஞ்சை வீமன் பிளந்து கொன்ற தொன்மம் (கலி. 101: 18-20) மற்றொரு பாடலில் ஏறுதழுவுதலில் எருதுக்குப் பொருத்தமான உவமையாக வந்துள்ளது.

துரியோதனனும் துச்சாதனனும் வீமன் உள்ளிட்ட பாண்டவருக்குப் பல கெடுதல்கள் செய்ததைப் பாரதம் கூறுகின்றது. துரியோதனனும், துச்சாதனனும் அழிக்கப்பட வேண்டியவர்கள்தான் என்றாலும் வீமன் துரியோதனனின் தொடையில் அடித்துக் கொன்றான். துச்சாதனன் நெஞ்சைப் பிளந்தான் என்ற சொற்கள் படிப்பவர் நெஞ்சில் வன்முறை கருத்தைப் பதிவு செய்யும். ஆனால் அன்றைய போர் மரபுப்படி எதிரியை உடம்பில் எங்கு அடித்தால் அவனை வீழ்த்தமுடியும் என்ற வழக்கம் இருந்துள்ளது. அக்காலத்தில் போர் அறமாக இருந்தது இன்று வன்முறைக்கு வித்திடும் கருத்தாகத் தோன்றுகிறது.

யயாதி தொன்மைத்தை (கலி. 139: 33-37) மடலேறும் தலைவனுக்கு உவமையாக அத்தலைவன் கூற்றாகப் புலவர் இயற்றியுள்ளார். கதைப்படி

சாபத்திற்கு ஆளாகி முதுமையடைந்த யயாதி சிற்றின்ப விருப்பத்தால் தன் மகனின் இளமையைத் தான் வாங்கிக் கொண்டு தன் முதுமையை மகனுக்குக் கொடுக்கிறான். பின்பு சிற்றின்பப் பற்று நீங்கி இளமையைக் கொடுத்து தன் முதுமையை மகனிடமிருந்து பெற்று தவம் செய்து வீடுபேறு அடைகிறான். இத்தொன்மம் தன் சிற்றின்ப விருப்பத்திற்காக மகனின் இளமையை வாங்கிய சுயநலமிக்க தந்தை என்ற எண்ணத்தைப் பதிவு செய்தாலும், அக்காலத்தில் இளமையைத் தந்து முதுமையைப் பெற்றக் கொள்வது சாத்தியமாகவும், தந்தையின் விருப்பத்திற்குத் தமையன் உதவுவது அறமாகவும் இருந்துள்ளது. இதற்குச் சான்றாக பரசுராமன் தொன்மத்தைக் காட்டலாம். 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்பதற்கேற்பத் தந்தை கூறிவிட்டதால் தாயின் சிரசை வெட்டி வீழ்த்திய செய்தி புராணத்தில் உள்ளது. ஆக அக்காலத்தில் தந்தையின் விருப்பம் எதுவாயினும் அதை மகன் நிறைவேற்றவது அறமாக இருந்துள்ளது.

3. முருகன் தொன்மம் இரு மனைவியர் கோட்பாட்டை உணர்த்துகிறது. முருகனின் முதல் மனைவி தெய்வானை என்றும், இரண்டாவது மனைவி வள்ளி என்றும் புராணம் கூறுகின்றது. அதிலும் திருமுருகராற்றுப்படை (6: 100-102), பரிபாடல் (19: 95, 14: 2, 22), நற்றிணை (82: 4-5) போன்ற இலக்கியங்கள் வள்ளி பற்றிக் குறிப்பிடுகின்றன. திருமுருகாற்றுப்படையில் வள்ளி - தெய்வானை குறிப்பிடப்படுகின்றனர். புராணங்களைப் படைத்த அன்றைய சமூகத்தில் ஓர் ஆண் பல மனைவியரைக் கொண்டிருந்ததுது அறத்திற்குட்பட்ட செயலாக இருந்துள்ளது. இராமாயணத்தில் இராமர் தொன்மம்தான் ஒருவனுக்கு ஒருத்தி எனும் பண்பாட்டைக் கூறுகிறது. இராமனின் தந்தையாகிய தசரதனுக்கு மூன்று மனைவிகள் (சுமத்திரை, கைகேயி, கௌசல்யை) அது தவிர பல மனைவிகள் இருந்ததாக இராமாயணம் கூறுகின்றது. பலதார மணம் புரிந்த சூழலில் படைக்கப்பட்ட புராணத்தில் கடவுளருக்கு இருமனைவிகள் என்று காட்டப்பட்டுள்ளது. அன்றைய காலக்கட்டத்தில் இது நடைமுறைப் பழக்கமாக

இருந்திருந்தாலும் இன்று ஒருவனுக்கு ஒருத்தி என்ற சட்டத்திற்குள் வாழும் மனிதனுக்கு அவை அறத்திற்குப் புறம்பாகத் தோன்றுகின்றன.

4. சேர மன்னனின் சீற்றத்திற்கு ஆளான நாடு பெரிய காடாகி அழிவுற்று ஒழிந்தது. முருகன் சினங்கொண்டழித்த ஊர் போலாயிற்று என்று ‘முருகு உறழ முன்பொடு கடுஞ்சினம் செருக்கிப் பொருத யானை’ (நற். 225) எனப் பாடல் வரி கூறுகிறது. மேற்கண்ட பாட்டில் சேரமன்னன் போர்புரிந்து வெற்றி பெற்றதற்கு முருகன் தொன்மம் உவமையாகியுள்ளது பொருத்தம் எனலாம். போர்புரிவதும், போரில் எதிரி நாட்டை அழிப்பதும்அரசனுக்குள்ள அறமாக இருந்துள்ளது. இதில் முருகன் சினங்கொண்டழித்த ஊர் எனும் போது கடவுளுக்கும் சினம் வருவதும் ஊரை அழிக்கும் வன்முறையும் சுட்டப்படுவது புறம்பான கருத்து என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கிறது. ஆனால் புராணக்கருத்துப்படி முருகன் பிறப்புக்குக் காரணமே சூரபன்மனை வதம் செய்வது என்று கூறப்படுகிறது. மற்றவர்களைத் துன்பத்திற்கு ஆளாக்கிப் பல கெடுதல்களைச் செய்த சூரபன்மனை அழிப்பது அவசியமாகின்றது. கெடுதல் புரியும் சூரனை அழிக்க வந்த முருகனை மன உணர்வுகளுக்கு (சினம்) அப்பாற்பட்ட கடவுளை, அரசனுக்கு உவமை காட்ட வேண்டி முருகன் சினம் கொண்டழித்த ஊர் என்ற கருத்து மாறுபட்ட எண்ணத்தை தோற்றுவிக்கிறது.

இலக்கியம் என்பது இலக்கு நோக்கி இயம்புவது என்ற கருத்துக்கேற்ப உலகத்தையே புரட்டிப் போட்ட ஐந்து நூல்களையும், நூலாசிரியர்களையும் ஆய்வறிஞர்கள் வரிசைப்படுத்தியுள்ளனர். அவை

| வ.எண் | நூல் | ஆசிரியர் |
|---|---|---|
| 1. | பிரின்சிபியா | ஐசக் நியூட்டன் |
| 2. | தாஸ் கேபிட்டல் | கார்ல் மார்க்ஸ் |
| 3. | கனவுகளின் விளக்கம் | சிக்மன் பிராய்ட் |
| 4. | உயிர்களின் தோற்றம் | சார்லஸ் டார்வின் |
| 5. | ஹாம்லெட் | வில்லியம் ஷேக்ஸ்பியர் |

போன்ற நூல்கள் மனிதர்களை நெறிப்படுத்தியுள்ளன என்று உலக வரலாறு கூறுகிறது. சமுகத்தை மாற்றி அமைக்க இலக்கியத்தால் முடிந்திருக்கிறது. அதன்வழி தொன்மம் கூறும் செய்திகள் மனிதனை நெறிப்படுத்துகின்ற அறத்தைப் போதிக்கின்றன. இக்காலக்கட்டத்திலும் அறத்திற்கும் புறம்பான நிகழ்வுகள் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன என்றாலும் இத்தகைய அறம்இல் செய்திகளை காலங்காலமாய் பயின்று வந்த தொன்மம் வழி வந்துள்ள இங்கு கண்டுணரப்பட்டது.

## தொன்மம் காட்டும் அறிவியல் செய்திகள்

கற்கால மனிதனிடையே நாகரீகம் நுழைந்து, வேட்டையாடிப் பிழைத்த மனித சமுகம் மெல்ல மெல்லப் பயிரிட்டு வாழவும், பகிர்ந்து வாழவும் அறிந்தபோது தொன்மம் தோன்றியிருக்க வேண்டும். வாய்மொழியாகப் பேசப்பட்டவை சங்ககாலத்தில் எழுத்துரு பெற்றதென்றால் தொன்மம் சங்ககாலத்திற்கு முன்னரே தோன்றியிருக்க வேண்டும் என்ற கருத்து உண்டாகிறது.

இவ்வாறான தொன்மம் புராணங்களாக, இதிகாசங்களாக வெளிப்பட்ட பொழுது அவற்றிலிருந்து பெறப்பட்ட செய்திகள்தான், அடுத்து வந்த காலக்கட்டத்து மனிதனின் அறிவியல் கண்டுபிடிப்பானது எனும் செய்தி வியக்கச் செய்கின்றது. இன்றைய அறிவியல் கண்டுபிடிப்புகளின் முன்னோடி அன்றே மனிதனால் படைக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தொன்மம் வழி அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் உள்ள சில தொன்மங்கள் இன்றைய அறிவியல் தொழில்நுட்பத்தை அன்றே எழுத்துவடிவில் சொல்லியுள்ளன. அவையாவன:

1. முருகன் பிறப்பு — வாடகைத் தாய் முறை
2. சீதையை இராவணன் ஆகாயமார்க்கமாகக் கவர்ந்து சென்றது — விமானம்

3. அரக்குமாளிகை நெருப்புக்குள்ளானபோது பாண்டவர் தப்பியது — சுரங்கப்பாதை

4. யயாதித் தொன்மம் — சோதிடவியல்

5. போர்களில் பயன்படுத்திய அஸ்திரம் — அணுஆயுதம்

இதுபோன்ற செய்திகள் பண்டைய கால மனிதனின் அறிவுநுட்பத்தை எடுத்துக் காட்டுகின்றன. மேலும் விளக்கமாக மேற்கண்ட செய்திகளைக் கூறலாம். சீதையை இராவணன் கவர்ந்து கொண்டு ஆகாயத்தில் பறந்து சென்றதைக் கம்பர்,

> ***. . . . . . . . . . . . . உயர் தோள் வலியால்***
> ***கீண்டான் நிலம், யோசனை கீழொடு மேல்***
> ***கொண்டான் உயர் தேர்மிசை, கோல் வளையாள்***
> ***கண்டாள்; தனது ஆர் உயிர் கண்டிலளால்;***
> ***மண்தான் உறும் மின்னின் மயங்கினளால்;***
> ***விண்தான் வழியா எழுவான் விரைவான்***

(கம்பராமாயணம்: ஆரண்யகாண்டம்,
இராவணன் சூழ்ச்சிப்படலம், 72, 73)

ஆக விமானத்தைக் கண்டுபிடிக்க வித்திட்டவன் தொன்மக்கால மனிதன் எனலாம். மேலும் ***இன்று புவியிலிருந்து வானிற்கு விரைந்து செல்லும் விண்கலன்களை இறைக்கோட்பாடுடைய பக்தியாளர்கள் அன்று வானரதம் என்னும் பெயரில் பயன்படுத்தினார்கள் என்பதைத் தமிழ் கிரேக்கப் புராணங்கள் தெளிவுபடுத்துகின்றன.***[8] இம்மேற்கோளின்படி இதிகாசம் மட்டுமல்ல புராணத்திலும் விமானம் கண்டுபிடிப்பிற்கு வித்திடப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.

அடுத்ததாகப் பஞ்சபாண்டவர்கள் தங்கி இருந்த அரக்கு மாளிகை துரியோதனன் சூழ்ச்சியால் நெருப்புக்குள்ளானது. இச்சூழ்ச்சியை முன்னமே

அறிந்துகொண்ட பஞ்சபாண்டவர் பூமிக்கடியில் பாதை அமைத்துத் தப்பித்தனர் என்று மகாபாரதம் கூறுகின்றது. இந்நிகழ்விலிருந்து சுரங்கப்பாதை அமைக்கும் தொழில் நுட்பத்தை அன்றே அறிந்திருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

மற்றொரு மகாபாரதத் தொன்மமான யயாதி தொன்மம் வழி சோதிட விஞ்ஞானம் மறைமுகமாய் ஒரு கருத்தைக் கூறுகிறது. யயாதி முதல் மனைவி இருக்க, மற்றொரு பெண்ணை மணந்து கொண்டான். இதன் காரணமாக முதல் மனைவியின் தந்தையான சுக்கிரரின் கோபத்திற்கு ஆளாகி, முதுமை அடையும் சாபத்தைப் பெற்றான். யயாதி தொன்மத்தின் இச்செய்தி எவ்வாறு சோதிட அறிவியலுக்குத் தொடர்புடையதாக அமைகிறது என்றால் ***களத்திரகாரகன் என ஜோதிடத்தில் திருமண இல்லற சுகமளிப்பவன் சுக்கிரன். காதலுணர்வு அதற்கான சக்தி தரும் கிரகம் சுக்கிரன். சுக்கிரன் நீசமானால் ஆண்மைக் குறைவு, இளமை போதல் உண்டாகிறது. சுக்கிரன் ஆட்சி உச்சம் பெற்றால் ஒருவருக்கு உடலில் சக்தி, இளமை ஆகியவற்றைத் தருகிறது.***[9]

இந்த சோதிட விதிக்கேற்ப யயாதி, சுக்கிரரின் கோபத்திற்கு ஆளாகி முதுமை பெற்றான். இல்லற சுகத்தை அனுபவிக்க முடியாமல் துன்புற்று, மற்றவர் இளமையை பெறும் சாபவிமோசனத்தைப் பெற்றுத் தன் மகனின் இளமையைப் பெற்றான் என்று தொன்மம் கூறுகிறது. இவ்வாறான யயாதி தொன்மத்தை தலைவியுடன் இல்லற வாழ்வை மேற்கொள்ள அவளை மணமுடிக்க விரும்பும் தலைவன் மடலேறும் தறுவாயில் கூறும் கூற்றாகப் புலவர் பாடலை இயற்றியுள்ளார். சுக்கிரரின் கோபத்திற்கு ஆளான யயாதியை சுக்கிரன் ஆட்சி உச்சம் பெற இருக்கும் தலைவனுக்குப் புலவர் உவமையாக்குகிறார்.

முருகன் பிறப்பிற்கும், வாடகைத் தாய் முறையில் குழந்தை பிறப்பதற்கும் உள்ள ஒற்றுமைகள் பின்வருமாறு அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன.

| எண் | வாடகைத் தாய் முறை பிள்ளைப்பேறு | முருகன் பிறப்பு |
|---|---|---|
| 1. | ஆணின் உயிரணுவை பெண்ணின் கருவில் வைப்பதற்கு முன் தக்க வெப்ப நிலையில் வைத்திருப்பர் | சிவனிடமிருந்து பெறப்பட்ட உயிரணு முனிவர்களால் வேள்வித்தீயில் இடப்பட்டது |
| 2. | ஆணினுடைய உயிரணுவை மனைவி அல்லாத வேறு ஒரு பெண்ணின் கருப்பை யில் செலுத்துவர் | சிவனின் உயிரணு மனைவி யாகக் கூறப்படும் உமை அல்லாத கார்த்திகைப்பெண் களால் கருவில் தாங்கப்பட்டது |
| 3. | உறவுமுறையோர் அல்லது தோழி வாடகைத் தாய் ஆகமுடியாது. | கார்த்திகைப் பெண்கள் வானில் உறைகின்றவர்கள் எனப் புராணம் கூறுகிறது. இவர்களுக்கும் சிவன் - உமைக்கும் உறவு பந்தம் இருந்ததாகப் புராணத்தில் குறிப்பில்லை. |
| 4. | திருமணமானவர்களே வாடகைத் தாயாக ஆக முடியும். | கார்த்திகைப் பெண்கள் முனிவர்களின் மனைவியர் என்ற குறிப்பு புராணத்திலும் பரிபாடலிலும் காணப்படு கிறது. |
| 5. | தியாக மனப்பான்மையும் குழந்தைப் பெற்றபின் அதனைப் பிரியும் மனவுறுதி உள்ளவராக இருக்க வேண்டும் | சரவணப் பொய்கையில் ஆறு தாமரை பூக்களில் குழந்தையை விட்ட அக்கார்த்திகைப் பெண்கள் குழந்தையை சிவன் - உமையிடம் சேர்ப்பித்து மறைந்ததாகக் கந்தபுராணம் கூறுகிறது. |

அறிவியல் முன்னேற்றம் என்று இன்று பெருமைப்பட்டுக் கொள்ளும் செய்திகளை அந்நாளிலேயே மனிதன் எழுத்தில் பதிவு செய்துள்ளான். இன்று அறிவியல் தொழில் நுட்பத்தில் முன்னேறி வருவதற்குத் தொன்மங்களும் இவ்வகையில் காரணமாகின்றன. வேதாந்த ஞானி ஸ்ரீ அரவிந்தர், ***தற்கால விஞ்ஞானத்தாலும் புரிந்துகொள்ள முடியாத அரிய விஞ்ஞான உண்மைகள் வேதத்தில் உண்டு*** என்று கூறியுள்ளதை ஈண்டு இணைத்து நோக்கலாம்.

மகாபாரதம் இராமாயணம் போன்றவற்றில் காட்டப்படும் போர்ச் செய்திகள் மற்றும் புராணங்கள் குறிப்பிடும் பிரம்மாஸ்திரம் உபயோகப் படுத்தியதை இலக்கியம் வழி அறிய முடிகிறது. இன்றைய விஞ்ஞான உலகில் அணு ஆயுதம் என்று சொல்லப்படுவதும் அக்கால பிரம்மாஸ்திரமும் தன்மையில் ஒன்று எனக் கொள்ளலாம். பிரம்மாஸ்திரத்தின் பண்புகள் என்ன என்று ஆராய்ந்தால், ***It is believed that Brahmastra was created by him (Brahma) for the purpose of upholding Dharma and Satya, to be used by anyone who wished to destroy an enemy. The target, when hit by Brahmastra would be utterly destroyed.***

***The weapon also causes severe environmental damage. The land where the weapon is used becomes baran for cons and all life in and around that area ceases to exist. Women and men become infertile. There is severe decrease in rainfall and the land developes cracks like in a drought.***[10] மேற்கண்ட ஆங்கிலச் செய்தியின் பொருளாவது ***பிரம்மசாஸ்திரம் என்பது தர்மத்தையும், சத்தியத்தையும் நிலைநாட்ட பிரம்மாவால் உண்டாக்கப்பட்டது என நம்பப்படுகிறது. இந்த அஸ்திரத்தை யார் வேண்டுமானாலும் தன் எதிரியை அழிக்க உபயோகிக்க முடியும். பிரம்மசாஸ்திரம் தாக்கினால் அடியோடு முழுவதும் அழிந்துவிடும். இந்த அஸ்திரம் சுற்றுச் சூழலில் மிகுந்த பாதிப்பை ஏற்படுத்திவிடும். எங்கே இந்த பிரம்மாஸ்திரம் பயன்படுத்தப்படுகிறதோ அவ்விடம் வீணாக***

***பயன்படாத நிலமாகிவிடும். அவ்விடத்தைச் சுற்றியுள்ள மற்ற இடங்களி லிருக்கும் மனித வாழ்க்கையும் முடிவுக்கு வந்துவிடும். ஆண்களும் பெண்களும் வம்ச விருத்தி அற்றுப் போவர். மழை இல்லாது போகும். பூமி பிளவுபட்டு பஞ்சம் வந்த பூமியாக வறண்டு விடும்*** என்பதாகும்.

இப்பிரம்மாஸ்திரத்தை இராமன் இராவணனுடன் போர் புரிந்தபோது இறுதியாக உபயோகித்தான் என்று இராமாயணம் கூறுகிறது.

இலட்சுமணன் இதே போரில் பிரம்மாஸ்திரத்தை பயன்படுத்த முயன்ற போது இராமன் தடுத்து, ***இப்பிரம்மாஸ்திரத்தை சுய விருப்பத்திற்காக உபயோகிக்கக் கூடாது. மனிதகுலத்திற்கு உபயோகமாகவும், நல்லது செய் வதற்கு மட்டுமே உபயோகிக்க வேண்டும்*** என்று கூறியதாக இராமாயணம் கூறுகின்றது.

இதே போன்று மகாபாரதத்தில் குருசேத்திரப் போரின்போது அங்கு நடந்த நிகழ்வுகளை, அரண்மனையில் இருந்து கொண்டு திருதராட்டினனுக்கு விதுரன் கூறினதாகப் பாரதம் இயம்புகிறது. இச்செய்தி அன்று ஞானசிருஷ்டி என்று கூறப்பட்டது. இன்று இதுதான் செயற்கைகோள் மூலமாய் நேரடி ஒளிபரப்பு எனச் சொல்லப்படுகிறது. இதற்கு முன்னோடி அன்றே பாரதத்தில் சொல்லப்பட்டு விட்டது. செயற்கைகோள், நேரடி ஒளிபரப்பு என்ற சொற்கள் அன்று பயன்படுத்தப்படவில்லை. எனினும் இன்றைய அறிவியல் முன்னேற்றம் என்று கூறபவை அன்றே செயலாக்கப்பட்டதாக தொன்மங்களில் எளிமையாய்க் கையாளப்பட்டுள்ளன.

மகாபாரத நிகழ்வுகள் கற்பனை அல்ல என்பதற்குச் சான்றாக ***மகாபாரதத்தில் இடம்பெற்ற இடங்கள் அகழ்வாராய்ச்சி மூலம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக கவுரவர்கள் பாண்டவர்களை***

*உயிருடன் கொளுத்த நினைத்த அரக்கு மாளிகை பெய்ராடர் ராஜஸ்தானில் உள்ளது. அஸ்தினாபுரம் மீரட் மாவட்டத்தில் உள்ளது.*[11] ***(Amongst the principal sites associated with the Mahabharata Story mention be made of Hastinapura (Meerut Dist., U.P.), Barnawa (ancient varna vata Meerut Dist. U.P.) Where the Gauravas attempted to burn alive the Pandavas in a lac house).***

மேற்கண்ட கருத்துப்படி நோக்கினால், பாரதம் என்பது நடந்த வரலாறாக இருக்கலாம். இவ்வரலாற்றின் அனுபவங்களை வழிவழியாய் மக்களிடையே தொன்மம் என்ற பெயரில் பதிவு செய்துள்ளதாகக் கருதலாம். ஆகவே தொன்மம் என்பது மகாபாரதத்தைப் பொறுத்தவரை புனையப்பட்டது என்ற கருத்தில் உண்மையுள்ளதென கருதுவதற்கில்லை.

இலக்கியங்களில் பெருமளவில் உவமைகளாகக் கையாளப்பட்டுள்ள தொன்மங்களில் மிகப் பிரபலமானது மகாபாரதமாகும். ஏராளமான அளவில் இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அன்று வாழந்த தமிழன் கைக்கொண்டிருந்த வாழ்க்கை முறை அறிவியல் அடிப்படையில் அமைந்திருந்தாகப் புலப்படுகிறது. இன்று புழக்கத்திலுள்ள அறிவியல் சார்ந்த நிகழ்வுகள் அன்றே பேசப்பட்டிருந்திருக்கிறது. நடந்ததாகவும் கூறப்பட்டிருக்கிறது என்று கூறலாம்.

தொன்மங்களான புராணங்கள், இதிகாசங்கள், பழமரபுக் கதைகள் இம்மூன்றினுடைய பண்புகளும், இவை இலக்கியத்தின்வழி பயன்பட்ட விதத்தில் கொண்ட வேறுபாடுகளும் கீழே அட்டவணையிடப்படுகின்றன.

## தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள்

| எண் | புராணங்கள் | இதிகாசங்கள் | பழமரபுக் கதைகள் |
|---|---|---|---|
| 1. | இறைத்தன்மையை புலப்படுத்துகிறது. | நீதியை நிலை நாட்டு கின்றன. | அரசர்களின் சிறப்பைக் கூறுகின்றன. |
| 2. | அறநெறிக் கருத்துகளைப் புகட்ட கூறும் கதை | நல்லதை மட்டுமல்ல கெட்டதையும் கூறி மனி தனைப் பண்படுத்துவது. | நம் நாட்டு அரசர் சிறப்பைக் கூறி பெருமிதம் கொளச் செய்வது. |
| 3. | தெய்வச் சார்புடையது | தெய்வத்தோடு உறவாடியவர்களைப் பற்றியது. | மன்னர் சார்புடையது. |
| 4. | அறிவுக்கு அப்பாற்பட்டது | யதார்த்த நிலையைக் கூறுவது. | நடந்த வரலாறு கூறுவது. |
| 5. | தலைமைப் பாத்திரம் உள்பட ஆண் தெய்வம் பற்றியே பேசுகிறது. | நிகழ்வுகளுக்குப் பெண் பாத்திரம் காரணமா கின்றது. | பெண்பாத்திரம் அவ்வள வாகப் பேசப்படவில்லை. இருவர் குறிப்பிடப்படு கின்றனர் (எ.கா.) ஔவை, திருமாவுண்ணி |
| 6. | சமயத்தை வலுப்படுத்து கிறது | சமயச்சார்புடையது. | ———— |
| 7. | கடவுளரின் அவதாரம், திருவிளையாடலைக் கூறுகிறது. | வாழ்க்கை நியதிகளையும், சில அறிவியல் அடிப் படை ஆதாரங்களையும் கூறுகிறது. | அரசியல் நியதிகளைக் கூறுகிறது. |
| 8. | எதிர்மறை கருத்துகள் இல்லை. | அறம்இல் கருத்துகள் உண்டு. | எதிர்மறை அறம்இல் கருத்துகளுக்கு இடமில்லை. நாட்டின் பண்டைய வரலாறு. |

| எண் | புராணங்கள் | இதிகாசங்கள் | பழமரபுக் கதைகள் |
|---|---|---|---|
| 9. | வீரத்தையும் கருணை யையும் அடிப்படையாகக் கொண்டது. | சூழ்ச்சியும் வீரமும் கதைக் களமாக அமைகின்றது. | வீரத்தையும் கொடையை யும் அறிவுறுத்துகின்றன. |
| 10. | தனித்தன்மை பெற்றது. | புராணத்தொடர்புடையது. (எ.கா.) பாரதத்தில் கடவுள் கிருஷ்ணன் துணை நிற்பது. | புராண இதிகாச சார்புடை யது. (எ.கா.) அரசர்களை கடவுளருக்கும் இதிகாச பாத்திரங்களாடும் கூறுகிறது. |
| 11. | கடவுள் கடவுளாக வாழ்ந்த வரலாறு. | கடவுள் அவதாரம் எடுத்து மனிதரோடு வாழ்ந்த வரலாறு | அரசன் கடவுளோடு ஒப்புமை கூறுவது. |
| 12. | சினம் எனும் மெய்ப்பாடு வெளிப்படுகின்றது | வஞ்சம் சினம் இவற்றை வெளிப்படுத்துகின்றது. | வீரத்தை நிலைநிறுத்து கின்றது. |
| 13. | அறிவியல் செய்திகள் சில உண்டு. | அறிவியல் செய்திகள் பல உண்டு. | அறிவியல் செய்திகள் இல்லை. |
| 14. | குணங்களை விளக்கும் மூலப்படிவங்கள் இல்லை. | பண்புநலனை விளக்கும் மூலப்படிவங்களுண்டு. (எ.கா.) கொடைக்கு கர்ணன், அறத்துக்கு தருமன், தூக்கத்திற்கு கும்பகர்ணன், கற்புக்கு சீதை, கண்ணகி, சூழ்ச்சி செய்வதற்கு சகுனி என்பர். | பண்புநலனுக்கு சான்றாகக் காட்டுதல் உண்டு. (எ.கா.) வள்ளல் - பாரி. |
| 15. | பெயர்க் குறியீடுகளாக வந்து விளக்கும். (எ-கா.) முக்கண்ணன் | பண்புக் குறியீடுகளாக வந்து விளக்கும். (எ.கா.) ஏகபத்தினி விரதன் - ராமன், தீய அறிவுரைக் கூறுபவரைக் கூனி என்றுக் கூறுதல் | குறியீடாக வருவதில்லை. |

| எண் | புராணங்கள் | இதிகாசங்கள் | பழமரபுக் கதைகள் |
|---|---|---|---|
| 16. | தமக்கும் அப்பாற்பட்ட சக்தி உள்ளது என்ற நம்பிக்கை வளரக் காரணமாகின்றது. | நல்லது கெட்டதை பகுத் துணர வழி செய்கின்றது. | வாழ்ந்த வரலாற்றைக் கூறுகிறது. |
| 17. | பண்பாட்டை வளர்க்க பக்தி உதவுகிறது. | பண்பாட்டை வளர்க்கவும் பண்பாட்டிற்கு ஏற்றக் கருத்து இல்லாததாகவும் வரும். (எ.கா.) திரௌபதிக்கு ஐந்து கணவர்கள் என்றது. | அரசர்களுக்கு இலக்கண மாய் வருகின்றன. |
| 18. | வீரத்திற்கும் களவிற்கும் எடுத்துக்காட்டாக விளங்கியது. | பெரும்பாலும் களவில் உள்ளுறையாக வரும். | நேரிடையாகச் சொல்லப் பட்டவை. |
| 19. | மானுட சமுதாயத்திற்கு ஆறுதலும் ஊக்கமுமூட்டி இயக்கும் காரணியாகச் செய்லபடுகின்றன. | மனிதனின் பல்வேறு குணாதிசயத்தைக் காட்டுகின்றன. | இலட்சியங்களுக்குச் சான்று காட்டி நிற்கின்றன. |
| 20. | குறிப்பிட்ட சமயத்தை மக்கள் மனதில் ஆழமாய்ப் பதிவு செய்பவை | ஆரியக் கருத்துகளைப் பதிவு செய்ய உதவின. | சத்திரிய தர்மத்தை வலி யுறுத்தின. |
| 21. | மனதில் மேலான எண்ணங் களைக் கற்பனை பண்ணு வதற்கே புராணம் படைக்கப் பட்டன. | கெட்ட குணங்கள் உடைய பாத்திரங்களும் சுட்டப்பட்டன. | சிறப்பு மட்டுமே சொல்லப் படுகின்றன. |
| 22. | மனிதனின் செருக்கான செயல்களை கடவுளரின் திருவிளையாடல் மூலம் அறிவுறுத்துவன (எ.கா.) இராவணன் செருக்கால் இமயமலையைத் தூக்க | வாழ்க்கைக் கூறுகளை விளக்குந்தன்மையுடையன. | மனித அனுபவத்தை அடிப் படையாகக் கொண்டவை. |

| எண் | புராணங்கள் | இதிகாசங்கள் | பழமரபுக் கதைகள் |
|---|---|---|---|
| | முயல, அதை சிவன் தன் பெருவிரலால் அழுத்தியதால், இராவணனின் கரங்கள் மலைக்கு அடியில் மாட்டிக் கொண்டது. | | |
| 23. | இக்கால இலக்கியத்தின் குறியீடாகவோ படிம மாகவோ வருவதில்லை. | இக்கால புதுக்கவிதை இலக்கியத்தில் குறியீடாக படிமமாக பயன்படு கின்றது. (எ.கா.) நவீன இராவணன்மார்களோ சீதைகளைப் பக்குவமாகக் கடத்திச் செல்கிறார்கள் திருமணம் செய்துகொண்டு (மு. மேத்தா) | ———————— |
| 24. | உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் போன்றவற்றை கூறுகின்றன. | பழைய வரலாற்றை விரித்துக் கூறுபவை. | ———————— |
| 25. | பெண் தெய்வம் அதிக அளவில் குறிப்பிடப்பட வில்லை. | பெண் மையப் பாத்திர மாக இருந்தாலும் முதன்மையாகக் கூறப் படவில்லை. | பெண் பற்றிய செய்தி இல்லை. |

## தொகுப்புரை

வாய்மொழி இலக்கியமாகப் பேசப்பட்ட தொன்மம் இலக்கியத்தில் உவமையாக வந்துள்ளது கதை நிகழ்வுகளை உவமையாக்கிய சங்கப்புலவர்களின் நோக்கம் இலக்கியத்தை எளிதில் புரிந்து கொள்வதற்கும், அவ்விலக்கியக் காட்சியின் தன்மையைச் சரியாக மக்கள் மனதில் பதிவு செய்வதற்கும்

உதவியுள்ளன. தொன்மத்தை உவமையாக்கியதன் மூலமாக மனித சமுதாயத்திற்கு பல செய்திகளைத் தந்துள்ளனர்.

தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள் என்ற தலைப்பிலான இந்த நான்காம் இயலின் மூலம் அறிய வரும் கருத்துகளாவன:

1. மனித இனம் நல்வகையில் அறத்தைக் கடைப்பிடிக்க, தொன்மம் இலக்கியம் வழியாக மனிதனுக்கு வழிகாட்டுகின்றது.
2. இதிகாசம், புராணம் ஆகிய தொன்மங்கள் ஒட்டுமொத்தமாய்க் கூறும் செய்தி கெட்ட செயல் அழிவைத் தரும் என்பது.
3. அரசர் தொன்மங்களைக் கூறும் பழமரபுக் கதைகள் அரசர்களின் சிறப்பைக் கூறுகின்றன.
4. கடவுளர் தொன்மங்கள் அசுரர்களை அழிக்கும் நிகழ்வுகள் மூலம் கடவுள் மனிதனை ஆபத்திலிருந்து காப்பார் என்ற நம்பிக்கையை மறைமுகமாய் ஊட்டுகின்றது எனலாம்.
5. உருவ வழிபாட்டிற்குத் தொன்மம் பெரிதும் உதவுகின்றது. (எ.கா.) கடவுளர்களின் நிறம், ஆயுதம், உடல்உறுப்புகள், ஆடை போனற் குறிப்புகள் கொடுக்கப்படுவதால்.
6. இக்கால மனிதர்களுக்கும் தொன்மம் உவமையாக இன்றளவும் பேசப்படுகிறது.
7. அறச் செயல்கள் சில அறம்இல் செயல்களாக நோக்குவதற்கு தொன்மம் வகை செய்கிறது. (எ.கா.) பழிக்குப்பழி வாங்குதல் : அசுவத்தாமன் - சிகண்டி
8. கடவுளர் தொன்மம் மூலம் கெட்டதை அழிக்க உயிரை வதம் செய்வது தருமம் என்பது (முருகன் சூரனை வதம் செய்வது, திருமால் அசுரரைக் கொல்லுதல்) புராணம் வழி கூறப்படுகிறது.

9. தொன்மம் அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு முன்னோடியாக இருந்துள்ளது. அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டவைதான் இக்காலத்தில் அரிய அறிவியல் கண்டுபிடிப்பாகக் கூறுப்படுகின்றன என்பது தொன்மம் வழி அறியப்படுகின்றது.

10. புராணம், இதிகாசம், பழமரபுக் கதைகள் என்ற இம்மூன்று வகைத் தொன்மங்களின் தன்மை,பயன்பட்ட விதம், கூறும் கருத்துகள் இவற்றுக்குள் வேறுபாடுகள் உள்ளன. பெயரளவில் மூன்றும் தொன்மமே. என்றாலும் மூன்றினுக்குமுள்ள வேறுபாடுகள் ஆராய்ந்து அறியப்பட்டுள்ளன. இப்பயன்பாடு மனிதனுக்குப் பதிவு செய்யப்பட்ட விதத்தை அடிப்படையாகக் கொண்டு கூறப்பட்டவை ஆகும்.

## அடிக்குறிப்புகள்


1. ஒப்பியல் இலக்கியம், க. கைலாசபதி, பக். 109, 110.
2. தமிழில் காப்பியக் கொள்கை, முதற்பகுதி, ப. 13.
3. தொன்மத் திறனாய்வு, முனைவர் க. பஞ்சாங்கம், ப. 61.
4. தமிழும் சமுதாயமும், முனைவர் சு. சௌந்தர பாண்டியன், ப. 381.
5. வின்சுலோவின் தமிழ் - ஆங்கில அகராதி, ப. 700.
6. சங்கத்தமிழ் இன்பம், முனைவர் கா. பெ. சந்திரசேகரன், ப. 50.
7. பக்தி இலக்கியக் கொள்கை, முனைவர் சிவ. மங்கையர்க்கரசி, ப. 83.
8. இலக்கியமும் அறிவியலும், பதிப்பாசிரியர் முனைவர் இராம. சுந்தரம், முனைவர் செ. பழனிச்சாமி, முனைவர் சா. கிருட்டினமூரத்தி, ப. 114.
9. புராணங்களின் புதிய பார்வை, ஸ்வாமி, ப. 63.
10. Wikipedia, Internet.
11. Mahabharata Myth and Reality Differing view, S.P.Gupta, K.S. Ramachandran, P. 53.

# முடிவுரை

'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - நோக்கும் போக்கும்' என்ற தலைப்பில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. இந்த ஆய்வு நான்கு இயல்களைக் கொண்டது. அவை:1. உவமைகள் - தொன்ம உவமைகள் - பயன்பாட்டுச் சிறப்புகள், 2. தொன்ம உவமைப் பயன்பாடுகள் - நோக்கம், 3. தொன்ம உவமைகளின் போக்குகள், 4. தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள் ஆகியவை ஆகும்.

தொன்மம் செய்தியாக வரும்பொழுது தரும் செய்தியைவிட உவமையாக வரும்பொழுது பல தகவல்களைத் தருகிறது. புலவர் தான் சொல்ல வந்த கருத்தை மக்களிடையே செம்மையாகப் பதிவு செய்யத் தொன்மத்தைப் பயன்படுத்தி யுள்ளார். அக்கால நடைமுறையைத் தொன்மம் வழி அறிய முடிகிறது. இலக்கியத்தின் மூலம் நற்கருத்துகளை மனித சமுதாயத்திற்கு அறிவுறுத்துவது தொன்மம் வழி சாத்தியமாகின்றது. நல்லது செய்தால் நல்லதும், அல்லது செய்தால் கெட்டதும் நடக்கும் என்று மனிதனுக்குப் புகட்டத் தொன்மம் கருவியாகின்றது. கடவுளர்களின் கதைகளைக் கூறி இலக்கியச் சுவையைத் தொன்மம் கூட்டுகின்றது. அதோடு வாழ்க்கைத் தத்துவங்களுக்கு விளக்கமாகவும் தொன்மம் விளங்குகிறது. தொன்ம உவமை, சாதாரணமாகக் கூறும் உவமையிலிருந்து வேறுபட்டு நிற்கின்றது.

தொன்ம உவமைகளைச் சங்க இலக்கியத்தில் புலவர்கள் பயன்படுத்தியதின் நோக்கம் ஆராயப்பட்டது. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரைப் புலவர்கள் பாடுபொருளையும் பாடலின் இடம்பெறும் பாத்திரங்களையும் வெளிப்படுத்தத் தொன்மத்தை உவமையாகக் கையாட்டுள்ளனர். தொன்மத்திற்கும் பாடு

பொருளுக்கும் உள்ள பொருத்தப்பாட்டை ஆராய்ந்து புலவர்கள் தொன்மத்தை சங்கப் பாடல்களில் உவமையாகக் கையாண்டுள்ளனர்.

தொன்ம உவமைகளின் வகைகளாக இதிகாசம், புராணம், பழமரபுக்கதைகள் என பிரிக்கப்படுகின்றன. இதிகாசம் எனும்போது அது இராமாயணம், மகாபாரதம் ஆகும். புராணத் தொன்மங்களில் சிவன், திருமால், முருகன் போன்ற கடவுளர்களின் பிறப்பும் திருவிளையாடல்களும் உவமைகளாக வந்துள்ளன. பழமரபுக் கதைகளாகிய அரசர் பற்றிய நிகழ்வுகளும் உவமைகளாக வந்துள்ளன.

இராமாயணம், மகாபாரதம் என்ற இரண்டில் மகாபாரத நிகழ்வுகளே சங்க இலக்கியத்தில் அதிகமாக உவமைகளாகப் பயன்பட்டு வந்துள்ளன. இராமாயணத்தைப் பொறுத்துவரை சீதையை இராவணன் கவர்ந்து சென்ற நிகழ்வும், இராமன் இலங்கை மேல் போர் தொடுக்க ஆலோசனை செய்த நிகழ்வும் உவமைகளாக வந்துள்ளன. ஒன்று புறத்திணையில் உவமையாகவும், மற்றொன்று அகத்திணையில் உவமையாகவும் வந்துள்ளன. இராவணன் பற்றிய தொன்மம் அகத்திணையில் உவமையாக வந்துள்ளது. மகாபாரதத்தைப் பொறுத்தவரை, போர்க் காட்சிகள் பெரும்பாலும் உவமைகளாக வருவதோடு, மகாபாரதப் பாத்திரங்களும் உவமைகளாக வந்துள்ளன. அகம், புறம் என்ற இரண்டிலும் உவமைகளாக மகாபாரதத் தொன்மங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

புராணத் தொன்மத்தைப் பொறுத்தவரை சிவனின் திருவிளையாடல்களே உவமைகளாக வந்துள்ளன. அகம், புறம் இரண்டிலும் சிவன் தொன்மம் உவமைகளாகப் பயன்பட்டுள்ளன. சிவன் முருகன் உறவுமுறையும் உவமைகளாக வந்துள்ளன. சிவன் தொன்மத்தைப் பொறுத்தவரை பெரும்பாலும் அக இலக்கியத்திற்கு உவமையாகியுள்ளது.

திருமால் தொன்மம் திருமாலின் அவதாரங்களை அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியத்தில் உவமைகளாகப் பயன்பட்டுள்ளன. திருமால் பலராமன்

உறவுமுறை கூறியும் உவமைகளாக வந்துள்ளன. திருமால் தொன்மத்தைப் பொறுத்தவரை கிருஷ்ணாவதாரமே அதிகளவில் வீரத்திற்கும், காதலுக்கும் உவமையாக வந்துள்ளது.

முருகன் தொன்மம் அதிக அளவில் உவமைகளாகச் சங்க இலக்கியத்தில் பயன்பட்டுள்ளன. அகம், புறம் இரண்டிலும் உவமைகளாக வந்துள்ளன. முருகன் தொன்மம் மூலமாக அக்கால வழக்கங்கள் அதாவது வெறியாடல், பலி சிதறுதல் போன்றவற்றை அறிய முடிகின்றது. வீரத்திற்கு உவமையாக முருகன் தொன்மம் அதிக அளவில் வந்துள்ளன. முருகனின் பிறப்பு சித்தரிக்கப்படுகிறது. முருகனின் அறுபடை வீடு எனும் முருகன் குடிகொண்ட கோவில்கள் பேசப்படுகின்றன. அதிலும் முக்கியமாகத் திருச்சீரலைவாய், திருப்பரங்குன்றம் என்ற இரு தலங்களும் உவமைகளாக வந்துள்ளன. முருகன் சூரபன்மனை வதம் செய்த நிகழ்வு அதிகமான அளவில் உவமைகளாக வந்துள்ளன. முருகனுக்கு மட்டுமே மனிதரைப் போன்று பிறப்பு, இரு மனைவியர், திருமணம், சூரனோடு சண்டையிட்டு வெற்றி பெறுதல் போன்ற செய்திகள் உவமைகளாக சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

கடவுள் என்பவர் (சிவன், திருமால், முருகன்) தீயவற்றை அழித்து மக்களைக் காக்கும் சக்தி என கடவுளர் தொன்மங்கள் வலியுறுத்துகின்றன. இவை மனிதன் தீய செயல்கள் செய்வதைத் தவிர்த்து நல்லவை செய்ய அவனை வழிப்படுத்த மறைமுகமாய் உதவுகின்றன.

தொன்ம உவமைகளின் போக்கு என்பதில் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்ட தொன்ம உவமைகள் எவ்வகைப் போக்குகளைக் கொண்டது என ஆராய இலக்கியப் போக்கு, உணர்ச்சிப் போக்கு, சமூகப் போக்கு என்று பகுக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டுள்ளன.

தொன்ம உவமைகள் இடம்பெற்ற பாடலின் நடைநயம் ஆராயப்பட்டுள்ளன. ஓரே தொன்மம் (சிபி தொன்மம்) எவ்வாறு வேறுபட்ட நடை

நயங்களைக் கொண்டது என ஆராயப்பட்டன. இந்நடை நயங்களைக் கூற உருவகம், எதுகை, மோனை, படிமம், குறியீடு ஆகியவை பயன்படுத்தப் பட்டுள்ளன.

தொன்ம உவமைகளின் பயன்பட்டில் வெளிப்படும் உணர்ச்சிப் போக்கு, தொல்காப்பியம் கூறுகின்ற மெய்ப்பாடுகளை அடித்தளமாகக் கொண்டு ஆராயப்பட்டன. இளிவரல் எனும் மெய்ப்பாடு தவிர மற்ற மெய்ப்பாடுகளைத் தொன்மம் வெளிப்படுத்துகின்றது. தொன்மம் கதையை மட்டும் கூறாமல் மனிதன் அடையும் உணர்ச்சிகளுக்குத் தளமாக உள்ளதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

தொன்ம உவமைகளின் பயன்பாட்டில் அவை வெளிப்படுத்தும் சமூகப் போக்கு ஆராயப்பட்டுள்ளது. அக்காலப் புலவர் வாழ்க்கை, சமூகப் பழக்கம், அரசர் மாண்பு, போர் மரபு, அரசர்களின் வீரம், கொடைத் திறன் போன்றவை தொன்மம் கொண்டு அறியப்பட்டுள்ளன.

தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள் என்ற தலைப்பில் இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் போன்ற இம்மூன்று தொன்ம உவமைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகள் ஆராயப்பட்டுள்ளன. தொன்மப் பாத்திரங்கள் உணர்த்தும் கருத்துகள், மனித சமுதாயத்திற்கு அவை பயன்படும் முறைகள் போன்றவை கண்டறியப்பட்டுள்ளன. தொன்மம் உணர்த்தும் அறச் செய்திகள் மனிதனை மேம்படுத்துகின்றன. மனித வாழ்விற்குப் பல நல்ல கருத்துகளைக் கூறும் தொன்மம் சற்று மாறுபட்டு நோக்கினால் அத்தொன்மக் கருத்துகள் அறம்இல் செய்திகளாகவும் தோன்றுகின்றன. அதற்கான சான்று களுடன் விளக்கப்படுகின்றன. இக்காலத்தில் கண்டுபிடிப்பாகக் கூறப்படும் அறிவியல் வளர்ச்சி அன்றே வித்திடப்பட்டதைத் தொன்மம் மூலம் அறியமுடிகிறது. அவை சான்றுகளுடன் காட்டப்பட்டுள்ளன. இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் கூறும் தொன்மங்களின் பயன்பாட்டின் வேறுபாடுகள் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன.

‘தொன்மம்’ இலக்கிய வழி உவமைகளுக்கு உறுதுணையாக இருப்பதுடன் அவற்றை ஆராய ஆராயப் பல செய்திகளைத் தந்து மனிதவாழ்விற்கு வழிகாட்டுகின்றன. ஆனால் அதே சமயத்தில் அறம்இல் செய்திகளையும் தருகின்றன. அவை கூறும் அறம்இல் செய்திகளைத் தவிர்த்து மற்ற தொன்மச் செய்திகள் மனிதனுக்கு ஆக்கத்திற்குப் பயன்படுகின்றன எனலாம். தமிழ் இலக்கியத்தின் புதையல் ‘தொன்மம்’ எனலாம். இத்தொன்மத்தைக் கொண்டு அக்கால மனிதரையும் காலச் சூழலையும் தீர்மானிக்க இயலுகின்றது. தொன்மம் காட்டும் முன்னோர்களின், அறிவுக் கூர்மை, திறம் ஆகியவை பெருமிதம் கொள்ளச் செய்கின்றன.

இத்தொன்மங்களை அடிப்படையாகக் கொண்டு உளவியல் பற்றி ஆராயலாம். இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் இவற்றைத் தனித்தனியே ஆய்வு செய்யப்படலாம். கதை வடிவில் உள்ள தொன்மம் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இதேபோலத் தொன்மம் தரும் செய்திகள் என்ற தலைப்பில் ஆய்வுகளை மேற்கொள்ளலாம்.

## துணைநூற் பட்டியல்

முதன்மை நூல்கள்


1. **அகநானூறு**, உரையாசிரிய முனைவர் இரா. செயபால் தலைமைப் பதிப்பாசிரியர்கள் முனைவர் அ.மா. பரிமணம், முனைவர் கு.வெ. பால சுப்பிரமணியன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., ஏப்ரல் 2004.
2. **கலித்தொகை**, உரையாசிரியர் அ. விசுவநாதன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., ஏப்ரல் 2004.
3. **கலித்தொகை**, சக்திதாசன் சுப்ரமணியன், பதிப்பாசிரியன் செம்பியர் அன்பு வெளியீடு, மார்ச் 88.
4. **கலித்தொகை வசனம்**, ந.சி. கந்தையாபிள்ளை, ஒற்றுமை ஆபீஸ், 1941.
5. **கலித்தொகை, நச்சினார்க்கினியருரையும் திரு.பொ.வே. சோம சுந்தரனார் விளக்கமும்**, கழக வெளியீடு, ஜனவரி 1973.
6. **கலித்தொகை**, மா. இராசமாணிக்கனார், வள்ளுவர் பண்ணை, மார்ச் 1958.
7. **கலித்தொகை**, சி.வை. தாமோதரம்பிள்ளை, 1887.
8. சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம் (பகுதி 1, 2), வே. அண்ணாமலை.
9. **பரிபாடல்**, உரையாசிரியர்கள் முனைவர் பெ. சுப்பிரமணியன், முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன், முனைவர் அ. தட்சிணாமூர்த்தி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., ஏப்ரல் 2004.
10. **பத்துப்பாட்டு வசனம்**, ந.சி. கந்தையாப்பிள்ளை, 1935.
11. **பத்துப்பாட்டு**, உரையாசிரியர் இரா. மோகன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., மூன்றாம் அச்சு, பிப்ரவரி 2007.
12. **பத்துப்பாட்டு மூலம்**, உ.வே. சாமிநாதய்யர், 1931.

13. **புறநானூறு**, உரையாசிரியர்கள் முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன், முனைவர் அ. விசுவநாதன், முனைவர் வி. நாகராசன், முனைவர் இரா. ஆரோக்கிய சாமி, முனைவர் க. திலகவதி, முனைவர் வெ. சத்திய நாராயணன், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட், மூன்றாம் அச்சு, பிப்ரவரி 2007.

14. **புறநானூறு மூலமும் உரையும்**, உரைஆசிரியர் ஞா. மாணிக்கவாசகன், உமா பதிப்பகம், இரண்டாம் பதிப்பு டிசம்பர் 2005.

15. **நற்றிணை**, உரையாசிரியர் முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட்., முதல் பதிப்பு, ஏப்ரல் 2004.

**துணைநூல்கள்**

16. **அபிதான சிந்தாமணி**, ஆ. சிங்காரவேலு முதலியார், ஏசியன் எஜுகேஷனல் பப்ளிகேஷன்ஸ், 1982.

17. **இந்துமதம், மறைபொருள் தத்துவ விளக்கம்,** தொகுப்பாசிரியர் கவிஞர் அகில், திருமகள் நிலையம், செப். 2004.

18. **இலக்கிய மணிகள்**, புலவர் அரங்க. நடராசன், அகத்தியர் அச்சகம், 2005.

19. **இலக்கியத் திறன்**, டாக்டர் மு. வரதராசன், பாரி நிலையம், மறுபதிப்பு 2007.

20. **இலக்கிய விளக்கம்**, டாக்டர் வ.சுப. மாணிக்கம், மணிவாசகர் பதிப்பகம், பிப். 1972.

21. **இலக்கியமும் அறிவியலும்**, பதிப்பாசிரியர் முனைவர் இராம. சுந்தரம், முனைவர் செ. பழனிச்சாமி, முனைவர் சா. கிருட்டினமூர்த்தி, அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகம், 2008.

22. **உலக சமயங்கள்**, இந்து சமயம், ப. முத்துக்குமாரசாமி, ஸ்ரீமீனாட்சி அம்மன் பப்ளிகேஷன்ஸ், ஆகஸ்ட் 1996.

23. **ஒப்பியல் இலக்கியம்**, க. கைலாசபதி, குமரன் பப்ளிஷர்ஸ, 1999.

24. **கட்டுரை வளம்,** சி. பாலசுப்பிரமணியன், பாரி நிலையம், இரண்டாம் பதிப்பு, 1968.

25. **கந்தபுராணம்,** ரா. சரஸ்வதி, 1974.

26. **கம்பன் புதிய பார்வை,** அ.ச. ஞானசம்பந்தன், வானதி பதிப்பகம், ஆகஸ்ட் 1984.

27. **சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே,** டாக்டர் ச. அகத்தியலிங்கம், மணிவாசகர் பதிப்பகம், டிசம்பர் 1997.

28. **சங்க இலக்கியம் ஒரு கண்ணோட்டம்,** டாக்டர் பு. பாலாஜி, வி.பி. புருஷோத்தமன், நாகு வெளியீடு, 2001.

29. **சங்க இலக்கியம் (சிறுபாணாட்டுப்படை),** புலவர் கோ. வில்வபதி, பழனியப்பா பிரதர்ஸ், 1983.

30. **சங்க இலக்கிய ஒப்பீடு, இலக்கியக் கொள்கைகள்,** தமிழண்ணல், டாக்டர் இராம. பெரியகருப்பன், மீனாட்சி புத்தகநிலையம், அக்டோபர், 1975.

31. **சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள்,** டாக்டர் மு. பொன்னுசாமி, இந்து பதிப்பகம், டிசம்பர் 1990.

32. **சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள்,** டாக்டர் பொன்மணி வைரமுத்து, திருமகள் நிலையம், ஜூன் 2002.

33. **சங்ககாலச் சோழ வேந்தர்கள்,** க. சண்முகசுந்தரம், 1997.

34. **சங்ககாலத் தமிழக வரலாறு, பகுதி 2,** மயிலை. சீனி வேங்கடசாமி, எம். வெற்றியரசி, 2003.

35. **சங்கத் தமிழ் இன்பம்,** முனைவர் கா.பெ. சந்திரசேகரன், சேகர் பதிப்பகம், 2006.

36. **சங்கத் தமிழர் வாழ்வியல்,** மு. சண்முகம்பிள்ளை, 1997.

37. **செந்தமிழ் அகராதி,** ந.சி. கந்தையா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1999.

38. **சேரர் வரலாறு,** அ. சிதம்பரனார், திருமந்திரமணி துடிசைக்கிழார் கழக வெளியீடு, 1962.

39. **சோழர் சரித்திரம்,** ந.மு. வேங்கடசாமி நாட்டார், நாட்டார் பதிப்பகம், நான்காவது பதிப்பு 1956.

40. **டி.கே.சி.யின் திறனாய்வுப் போக்கு,** பேரா. ந. பாலமுருகன், கொங்கு அச்சகம், நவம்பர் 1983.

41. **தசாவதாரம்,** ஏ.எஸ். வழித்துணை ராமன், ஸ்ரீஇந்து பப்ளிகேஷன்ஸ், மூன்றாம் பதிப்பு, மார்ச் 2003.

42. **தமிழ் இலக்கியக் கொள்கை, பகுதி 4,** க.த. திருநாவுக்கரசு, கல்லாடம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

43. **தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும்,** கார்த்திகேசு சிவத்தம்பி, மக்கள் வெளியீடு, மூன்றாம் பதிப்பு, டிசம்பர் 2001.

44. **தமிழ் நாட்டு வரலாறு, சங்ககாலம் – அரசியல்,** தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாடு பாடநூல் நிறுவனம், 1983.

45. **தமிழ்நாட்டு வரலாறு,** பேராசிரியர் காவ்யா சண்முகசுந்தரம், காவ்யா வெளியீடு, 2008.

46. **தமிழ் இலக்கணப் பேரகராதி,** பொருள் - அணி - பண்டித வித்துவான் தி.வே. கோபாலையர், தமிழ் மண் பதிப்பகம், 2004.

47. **தமிழ் மொழியகராதி,** ந. கதிரைவேற்பிள்ளை.

48. **தமிழில் காப்பியக் கொள்கை, முதற்பகுதி,** தமிழ்ப் பல்கலைக் கழகம், 1985.

49. **தமிழும் சமுதாயமும்,** முனைவர் சு. சௌந்திரபாண்டியன், பாரதி புத்தகாலயம், டிசம்பர் 2001.

50. **திரு.வி.க. தமிழ்க்கொடை,** திரு.வி.க., தமிழ்மண் பதிப்பகம், 2006.

51. **தெய்வீக்கதைகளும் கலைகளும்,** எம். நாராயணவேலுப்பிள்ளை, செந்தில் பதிப்பகம், டிசம்பர் 1985.

52. **தொன்மவியல் கட்டுரைகள்,** முனைவர் யாழ். சு. சந்திரா அறிவுப் பதிப்பகம், ஏப்ரல் 2009.

53. **தொல்காப்பியம், பொருளதிகாரம், தொகுதி 2,** முனைவர் தமிழண்ணல், மணிவாசகர் பதிப்பகம், செப்டம்பர் 2003.

54. **தொன்மத் திறனாய்வு,** முனைவர் க. பஞ்சாங்கம், அன்னம் வெளியீடு, டிசம்பர் 2005.

55. **நாவலர் சோமசுந்தர பாரதியாரின் நூல் தொகுதி 2**

56. **நீங்களும் சுவையுங்கள்,** தெ.பொ. மீனாட்சி சுந்தரம்பிள்ளை, மூன்றாம் பதிப்பு 1988.

57. **பக்தி இலக்கியக் கொள்கை,** முனைவர் சி. மங்கையர்க்கரசி, திருமகள் நிலையம், ஜூன் 2004.

58. **பஞ்சாங்கம் கட்டுரைகள்,** நவீன இலக்கியக் கோட்பாடுகள், காவ்யா வெளியீடு, டிசம்பர் 2008.

59. **பத்துப்பாட்டு மூலமும் உரையும்,** உரையாசிரியர் பொதுவன் அடிகள், 2009.

60. **பல்சுவைப் பாடல்கள்,** கவிஞர் செம்பை சேவியர், கதிரவன் அச்சகம், மார்ச் 1993.

61. **பாவம் தீர்க்கும் பாகவதம்,** பக்த சிரோன்மணி திருமருகல் சிங்கார வேலனார், அருணோதயம், 1985.

62. **பாண்டியர் வரலாறு,** டி.வி. சதாசிவ பண்டாரத்தார், கழக வெளியீடு, 1972.

63. **புதியகோணம் (இலக்கியக் கட்டுரைகள்),** அ.ச. ஞானசம்பந்தன், கங்கை புத்தக நிலையம், மே 1997.

64. **புராணங்களின் புதிய பார்வை,** ஸவாமி, விகடன் பிரசுரம்.

65. **மன அமைதிக்கு இந்துமதத் தத்துவங்கள்,** யோகி ஞான சிரஞ்சீவி, சுகமதி பிரசுரம், டிசம்பர் 2002.

66. **முருகன் காட்சி,** டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், மூன்றாம் பதிப்பு, பாரி நிலையம், 1985.

67. **நற்றிணை,** உரையாசிரியர் முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.) லிட், முதல் பதிப்பு, ஏப்ரல் 2004.

68. **வியாசர் விருந்து,** ராஜாஜி, தமிழ்ப் பண்ணை, மே 1946.

69. **வில்லிபாரதம்,** டாக்டர் ஜெகத்ரட்சகன்

70. **வின்சுலோவின் தமிழ் - ஆங்கில அகராதி,** ஏசியன் எஜுகேஷனல் சர்வீசஸ், மறுபதிப்பு, 1979.

71. **Wikipedia,** the free encyclopedia, Internet.

72. **Mahabharata, Myth and Reality differing view,** S.P. Gupta, K.S. Rama Chandran, Delhi, 1976.

# சங்க இலக்கியத்தில் தொன்மங்களின் நோக்கும் போக்கும்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் (பிஎச்.டி.)
பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்
மு. கோமதிவள்ளியம்மை




நெறியாளர்
முனைவர் சூ. நிர்மலாதேவி எம்.ஏ., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் (ஓய்வு)
சமூகவியல் கலை மற்றும் பண்பாட்டுத் துறை
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113

2011

# முடிவுரை

'சங்க இலக்கியத்தில் தொன்மங்கள் - நோக்கும் போக்கும்' என்ற தலைப்பில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. இந்த ஆய்வு நான்கு இயல்களைக் கொண்டது. அவை:1. உவமைகள் - தொன்ம உவமைகள் - பயன்பாட்டுச் சிறப்புகள், 2. தொன்ம உவமைப் பயன்பாடுகள் - நோக்கம், 3. தொன்ம உவமைகளின் போக்குகள், 4. தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள் ஆகியவை ஆகும்.

தொன்மம் செய்தியாக வரும்பொழுது தரும் செய்தியைவிட உவமையாக வரும்பொழுது பல தகவல்களைத் தருகிறது. புலவர் தான் சொல்ல வந்த கருத்தை மக்களிடையே செம்மையாகப் பதிவு செய்யத் தொன்மத்தைப் பயன்படுத்தி யுள்ளார். அக்கால நடைமுறையைத் தொன்மம் வழி அறிய முடிகிறது. இலக்கியத்தின் மூலம் நற்கருத்துகளை மனித சமுதாயத்திற்கு அறிவுறுத்துவது தொன்மம் வழி சாத்தியமாகின்றது. நல்லது செய்தால் நல்லதும், அல்லது செய்தால் கெட்டதும் நடக்கும் என்று மனிதனுக்குப் புகட்டத் தொன்மம் கருவியாகின்றது. கடவுளர்களின் கதைகளைக் கூறி இலக்கியச் சுவையைத் தொன்மம் கூட்டுகின்றது. அதோடு வாழ்க்கைத் தத்துவங்களுக்கு விளக்கமாகவும் தொன்மம் விளங்குகிறது. தொன்ம உவமை, சாதாரணமாகக் கூறும் உவமையிலிருந்து வேறுபட்டு நிற்கின்றது.

தொன்ம உவமைகளைச் சங்க இலக்கியத்தில் புலவர்கள் பயன்படுத்தியதின் நோக்கம் ஆராயப்பட்டது. சங்க இலக்கியத்தைப் பொறுத்தவரைப் புலவர்கள் பாடுபொருளையும் பாடலின் இடம்பெறும் பாத்திரங்களையும் வெளிப்படுத்தத் தொன்மத்தை உவமையாகக் கையாட்டுள்ளனர். தொன்மத்திற்கும் பாடு

பொருளுக்கும் உள்ள பொருத்தப்பாட்டை ஆராய்ந்து புலவர்கள் தொன்மத்தை சங்கப் பாடல்களில் உவமையாகக் கையாண்டுள்ளனர்.

தொன்ம உவமைகளின் வகைகளாக இதிகாசம், புராணம், பழமரபுக்கதைகள் என பிரிக்கப்படுகின்றன. இதிகாசம் எனும்போது அது இராமாயணம், மகாபாரதம் ஆகும். புராணத் தொன்மங்களில் சிவன், திருமால், முருகன் போன்ற கடவுளர்களின் பிறப்பும் திருவிளையாடல்களும் உவமைகளாக வந்துள்ளன. பழமரபுக் கதைகளாகிய அரசர் பற்றிய நிகழ்வுகளும் உவமைகளாக வந்துள்ளன.

இராமாயணம், மகாபாரதம் என்ற இரண்டில் மகாபாரத நிகழ்வுகளே சங்க இலக்கியத்தில் அதிகமாக உவமைகளாகப் பயன்பட்டு வந்துள்ளன. இராமாயணத்தைப் பொறுத்துவரை சீதையை இராவணன் கவர்ந்து சென்ற நிகழ்வும், இராமன் இலங்கை மேல் போர் தொடுக்க ஆலோசனை செய்த நிகழ்வும் உவமைகளாக வந்துள்ளன. ஒன்று புறத்திணையில் உவமையாகவும், மற்றொன்று அகத்திணையில் உவமையாகவும் வந்துள்ளன. இராவணன் பற்றிய தொன்மம் அகத்திணையில் உவமையாக வந்துள்ளது. மகாபாரதத்தைப் பொறுத்தவரை, போர்க் காட்சிகள் பெரும்பாலும் உவமைகளாக வருவதோடு, மகாபாரதப் பாத்திரங்களும் உவமைகளாக வந்துள்ளன. அகம், புறம் என்ற இரண்டிலும் உவமைகளாக மகாபாரதத் தொன்மங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

புராணத் தொன்மத்தைப் பொறுத்தவரை சிவனின் திருவிளையாடல்களே உவமைகளாக வந்துள்ளன. அகம், புறம் இரண்டிலும் சிவன் தொன்மம் உவமைகளாகப் பயன்பட்டுள்ளன. சிவன் முருகன் உறவுமுறையும் உவமைகளாக வந்துள்ளன. சிவன் தொன்மத்தைப் பொறுத்தவரை பெரும்பாலும் அக இலக்கியத்திற்கு உவமையாகியுள்ளது.

திருமால் தொன்மம் திருமாலின் அவதாரங்களை அடிப்படையாகக் கொண்டு சங்க இலக்கியத்தில் உவமைகளாகப் பயன்பட்டுள்ளன. திருமால் பலராமன்

உறவுமுறை கூறியும் உவமைகளாக வந்துள்ளன. திருமால் தொன்மத்தைப் பொறுத்தவரை கிருஷ்ணாவதாரமே அதிகளவில் வீரத்திற்கும், காதலுக்கும் உவமையாக வந்துள்ளது.

முருகன் தொன்மம் அதிக அளவில் உவமைகளாகச் சங்க இலக்கியத்தில் பயன்பட்டுள்ளன. அகம், புறம் இரண்டிலும் உவமைகளாக வந்துள்ளன. முருகன் தொன்மம் மூலமாக அக்கால வழக்கங்கள் அதாவது வெறியாடல், பலி சிதறுதல் போன்றவற்றை அறிய முடிகின்றது. வீரத்திற்கு உவமையாக முருகன் தொன்மம் அதிக அளவில் வந்துள்ளன. முருகனின் பிறப்பு சித்தரிக்கப்படுகிறது. முருகனின் அறுபடை வீடு எனும் முருகன் குடிகொண்ட கோவில்கள் பேசப்படுகின்றன. அதிலும் முக்கியமாகத் திருச்சீரலைவாய், திருப்பரங்குன்றம் என்ற இரு தலங்களும் உவமைகளாக வந்துள்ளன. முருகன் சூரபன்மனை வதம் செய்த நிகழ்வு அதிகமான அளவில் உவமைகளாக வந்துள்ளன. முருகனுக்கு மட்டுமே மனிதரைப் போன்று பிறப்பு, இரு மனைவியர், திருமணம், சூரனோடு சண்டையிட்டு வெற்றி பெறுதல் போன்ற செய்திகள் உவமைகளாக சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

கடவுள் என்பவர் (சிவன், திருமால், முருகன்) தீயவற்றை அழித்து மக்களைக் காக்கும் சக்தி என கடவுளர் தொன்மங்கள் வலியுறுத்துகின்றன. இவை மனிதன் தீய செயல்கள் செய்வதைத் தவிர்த்து நல்லவை செய்ய அவனை வழிப்படுத்த மறைமுகமாய் உதவுகின்றன.

தொன்ம உவமைகளின் போக்கு என்பதில் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்ட தொன்ம உவமைகள் எவ்வகைப் போக்குகளைக் கொண்டது என ஆராய இலக்கியப் போக்கு, உணர்ச்சிப் போக்கு, சமூகப் போக்கு என்று பகுக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டுள்ளன.

தொன்ம உவமைகள் இடம்பெற்ற பாடலின் நடைநயம் ஆராயப்பட்டுள்ளன. ஒரே தொன்மம் (சிபி தொன்மம்) எவ்வாறு வேறுபட்ட நடை

நயங்களைக் கொண்டது என ஆராயப்பட்டன. இந்நடை நயங்களைக் கூற உருவகம், எதுகை, மோனை, படிமம், குறியீடு ஆகியவை பயன்படுத்தப் பட்டுள்ளன.

தொன்ம உவமைகளின் பயன்பட்டில் வெளிப்படும் உணர்ச்சிப் போக்கு, தொல்காப்பியம் கூறுகின்ற மெய்ப்பாடுகளை அடித்தளமாகக் கொண்டு ஆராயப்பட்டன. இளிவரல் எனும் மெய்ப்பாடு தவிர மற்ற மெய்ப்பாடுகளைத் தொன்மம் வெளிப்படுத்துகின்றது. தொன்மம் கதையை மட்டும் கூறாமல் மனிதன் அடையும் உணர்ச்சிகளுக்குத் தளமாக உள்ளதும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

தொன்ம உவமைகளின் பயன்பாட்டில் அவை வெளிப்படுத்தும் சமூகப் போக்கு ஆராயப்பட்டுள்ளது. அக்காலப் புலவர் வாழ்க்கை, சமூகப் பழக்கம், அரசர் மாண்பு, போர் மரபு, அரசர்களின் வீரம், கொடைத் திறன் போன்றவை தொன்மம் கொண்டு அறியப்பட்டுள்ளன.

தொன்ம உவமைகளின் பயன்பாட்டு வேறுபாடுகள் என்ற தலைப்பில் இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் போன்ற இம்மூன்று தொன்ம உவமைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகள் ஆராயப்பட்டுள்ளன. தொன்மப் பாத்திரங்கள் உணர்த்தும் கருத்துகள், மனித சமுதாயத்திற்கு அவை பயன்படும் முறைகள் போன்றவை கண்டறியப்பட்டுள்ளன. தொன்மம் உணர்த்தும் அறச் செய்திகள் மனிதனை மேம்படுத்துகின்றன. மனித வாழ்விற்குப் பல நல்ல கருத்துகளைக் கூறும் தொன்மம் சற்று மாறுபட்டு நோக்கினால் அத்தொன்மக் கருத்துகள் அறம்இல் செய்திகளாகவும் தோன்றுகின்றன. அதற்கான சான்று களுடன் விளக்கப்படுகின்றன. இக்காலத்தில் கண்டுபிடிப்பாகக் கூறப்படும் அறிவியல் வளர்ச்சி அன்றே வித்திடப்பட்டதைத் தொன்மம் மூலம் அறியமுடிகிறது. அவை சான்றுகளுடன் காட்டப்பட்டுள்ளன. இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் கூறும் தொன்மங்களின் பயன்பாட்டின் வேறுபாடுகள் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன.

‘தொன்மம்’ இலக்கிய வழி உவமைகளுக்கு உறுதுணையாக இருப்பதுடன் அவற்றை ஆராய ஆராயப் பல செய்திகளைத் தந்து மனிதவாழ்விற்கு வழிகாட்டுகின்றன. ஆனால் அதே சமயத்தில் அறம்இல் செய்திகளையும் தருகின்றன. அவை கூறும் அறம்இல் செய்திகளைத் தவிர்த்து மற்ற தொன்மச் செய்திகள் மனிதனுக்கு ஆக்கத்திற்குப் பயன்படுகின்றன எனலாம். தமிழ் இலக்கியத்தின் புதையல் ‘தொன்மம்’ எனலாம். இத்தொன்மத்தைக் கொண்டு அக்கால மனிதரையும் காலச் சூழலையும் தீர்மானிக்க இயலுகின்றது. தொன்மம் காட்டும் முன்னோர்களின், அறிவுக் கூர்மை, திறம் ஆகியவை பெருமிதம் கொள்ளச் செய்கின்றன.

இத்தொன்மங்களை அடிப்படையாகக் கொண்டு உளவியல் பற்றி ஆராயலாம். இதிகாசம், புராணம், பழமரபுக் கதைகள் இவற்றைத் தனித்தனியே ஆய்வு செய்யப்படலாம். கதை வடிவில் உள்ள தொன்மம் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இதேபோலத் தொன்மம் தரும் செய்திகள் என்ற தலைப்பில் ஆய்வுகளை மேற்கொள்ளலாம்.